13

உ

ஓம் தத்ஸத்.

ஸ்ரீ தாண்டவமூர்த்திகள் அருளிச்செய்த

# கைவல்ய நவநீத

## மூலமும்,

திருவாம்பூர்

தஞ்சாவூர் சுவாமிகளென்னும்

## ஸ்ரீ வெங்கடாசலசுவாமிகளியற்றிய

சிற்றுரையும்.



இவை,

தஞ்சைக் கல்யாணசுந்தரம் பாடசாலை

உதவி உபாத்தியாயர்

மகா-ள-ள-ஸ்ரீ **R. R.** சுவாமிநாதராவ் அவர்களாற்

பரிசோதிக்கப்பெற்று,

வடகால்

மகா-ள-ள-ஸ்ரீ சச்சிதாநந்த நாடாரவர்களால்

தஞ்சை

ஸ்ரீ வித்தியாவிநோதினி முத்திராசாலையில்

பதிப்பிக்கப்பெற்றன.

**1915.**





ஓம்.

சிவமயம்.

# உரைப்பாயிரம்.

## விநாயகர்வணக்கம்.

முந்தை வேத முறைப்பட முற்றிடத்
தந்த வியாதன் றவத்திற் கிரங்கியே
யெந்தை வெற்பி லெழுது மிபமுகன்
சிந்தை வெற்பினுந் தீட்டு முளையினை. (க)

## நாகநாதன்றுதி.

ஏக நாத னிமையவர் நாதனற்
போக நாதன் பொருவி லருளுடைப்
பாக நாதனற் பைந்தொடி யாழூர்வாழ்
நாக நாத னலந்துதித் தாற்றுவாம். (௨).

எல்லாநாமேயெனவருளுமிறையோனருளைப்பெற்றார்தாம்
பொல்லாரெனினும்புழுவெனினும்பொருவரமரர்முடிக்கணியா
யல்லாதார்களெவரேனுமனுவுமியற்றற்கமையாதா
லெல்லாஞ்செயற்குச்சிவனருளையேற்றற்கன்றிபாற்றுண்டோ.

## நடராஜன்றுதி.

ஆடுநினதுதிருக்கூத்தையமரர்க்கதிபரறிவதன்றித்
தேடும்புலியும்பாம்புமேதேறித்தேறிகக்கண்களித்த
வீடேபுரியுநின்பாதம்வேண்டாநீயேயருள்செய்யின்
றேடாதருளுமென்பாலேதேடியடையுந்திருநடத்தோய். (௪)

## சமயவல்லிதுதி.

இமையோரெல்லாமடிவணங்குமெந்தைபெருமானின்னொருபா
லமையாவன்பாலமையுமெனினடியேனினதுவடிக்குடியா
யமையாதகற்றலருளன்றேயன்னையுயிர்க்குநீயாகச்
சிமையமலைக்குமகளானதிருவேசமயவல்லியே. (௫)

### சுந்தரவிநாயகர்துதி.

தந்திமுகத்தோன்றாள்வணங்கத்தாழாதுயர்வரென்றெடுத்து
முந்தமொழிந்தமறைமொழியுமுடியர்மறையின் பொருளாகச்
சிந்தைமகிழத்தந்தையுநின்செம்பொற்பாதம்போற்றியதால்
வந்தவிடுக்கணகன்றதென்றாலெனக்கேன்செவ்விவாராதே. (௬)

### குமாரக்கடவுள்வணக்கம்.

கருத்தமனத்துச்சூரனெனுங்கல்லுமெனதுமனக்கல்லுந்
திருத்தமில்லாமாவேருந்தீயேன்மனத்துமாவேரும்
பொருத்தமுறவேகளைந்தமரர்பொருமலகற்றியென்னுள்ளிற்
பொருத்தமுறுமர்ப்பொருமறனைப்போக்கும்பெரியபெருமானே.

### வாதராயணர்துதி.

பெருமாநிலத்துப்பெரியரெலாம்பிரிக்கமாட்டாதகன்குழையக்
கருமாலகற்றுந்திருமாலேகாக்குங்கடவுளென்றதனால்
வருமாமயக்கமகற்றிநானுமறையோடைந்துமொருங்கியற்றித்
தருமாலவைக்குச்சூத்திரமுந்தரிக்கும்வியாதன்றாள்வாழ்க. (௮)

### பாடியகாரர்துதி.

முன்மொழிந்ததுமைதனக்குமோனன்றனதுதிருவாக்கைத்
தன்னைநிறுப்பான்றன்றேன்றித்தரணியுள்ளார்தாமயங்கிச் [து
சொன்னசொன்னதனிச்சூழ்ந்துடைத்துப்பேதந்தனைத்துடைத்
பன்னற்கரியசூத்திரத்தைப்படித்தானுரையுமவன்வாழி. (௯)

### பாடியத்துதி.

பிறவியறுக்குமருந்தெனினும்பெரியவமரர்தமக்கன்றி
மறவராகுமவுணருக்குமனிதர்விலங்குபுட்குதவா
பிறவியறுக்குமருந்தவர்க்கேபெரியபொருளையுதவிக்கெடு
மறவராகும்வாதியர்க்குவழங்காப்பாடியமும்வாழி. (௰)

### பதுமபாதர்முதலியசந்தானசாரியர் துதி.

வேதக்கனியாய்த்திரண்டதொருவியன்சூத்திரச்சுவையைப்
போதவடிவாஞ்சங்கரனேபொசித்துமுமிழ்ந்தபொற்சேட
நீதமாகவுண்டதொருவிமலபதுமபாதர்முதல்
வேதகர்வார்த்திகர்தாள்வித்தியாரணியர்தாட்சேர். (௧௧)

## நூலாசிரியவணக்கம்.

ஆண்டவ னவனென்னை யாண்டவ னவனுரை
பூண்டவர் பூசுரர் பூண்டவர் மற்றிலர்
மாண்டதோர் தமிழினு மாண்பொருண் முழுதையும்
வேண்டியு ரைத்தரு டாண்டவ ராயனே. (௧௨)

## உரையாசிரியரினாசிரியபரமாசிரியர்முதலியோரின் வணக்கம்.

பொன்பூத்தபுரிசடையான்பொன்கோதங்கும்
கொன்பூத்தகங்கைக்குலமகளாங்காவிரிசூழ்
மின்பூத்த கொண்மூவிழைவயராவெங்நாட்டிற்
றென்பூத்தசோணாட்டிற்றிருவகலாவாலவனம். (௧)

அருந்தவருமமரர்களுமந்தணருமானினமும்
பொருந்துதலாற்புவிமகட்கோர்பொன்னாடாய்ப்புகழ்நிறீஇ
விருந்தருத்திமனைமாட்சியின்புற்றுமிருமகாராய்
பொருந்தாதபெரும்பதமும்பொருந்துவதங்கரணியாம். (௨)

அங்ககருமரியையெனுநன்னகருமணிபேறாக
மன்னியமாசெம்புமன்னாதமுனிமாடேசார்வாய்த்
தன்னுருப்பெற்றயலகற்றித்தான்வாழ்ந்ததபோநிதியன்
மன்னுபெரிராமதேசிகனென்னமதிப்பமேலோர். (௩)

நாணாடிப்புரிதவமுநல்லறமுமோருருவேயெனநன்றாகத்
தாணாடியிராமபதந்தான்பெற்றபேறெனக்குத்தந்ததாதை
யாணாடும்பொருள்வடிவாஞ்சிங்கபெருமாளெனும்பேரானமூவர்
தாணாடியுளத்தமர்ந்ததன்மையினாலுரையினையான்சாற்றுவேனே.

துரியங்கடந்தபரஞ்சோதித்துரியாதீதத்தமர்பொருளே
யரியமறைக்குமகம்புறத்துமமர்ந்தென்னகத்துநிறைபொருளே
சரியையாதிமூன்றகன்றுஞ்சாதனங்கணான்கினருக்
கரியாயிராமனாயானமன்னாதனிருதாள்கள் போற்றி (௫)

ஓம்.

பரப்பிரஹ்மணேநம:

# கைவல்லிய நவநீதம்

சிற்றுரை.

## பாயிரம்.

### கடவுள்வாழ்த்து.

பொன்னில மாதராசை பொருந்தினர் பொருந்தா ருள்ளந்
தன்னிலந் தரத்திற்சீவ சாக்ஷிமாத் திரமாய் நிற்கு
மென்னிலங் களினு மிக்க வெழுநில மவற்றின் மேலா
நன்னில மருவு மேக நாயகன் பதங்கள் போற்றி. (௧)

இந்நூல் கருதிற்றியாதோவெனின்? சீவப்பிரமைக்கியத்தை யென்க. என்னை, "நித்தமுமதுநீயாகுநீயதுவாகுமென்னு மர்த்தமுமகண்டமென்றே யகிபதவைக்கியங்காட்டு" மென்பனவற்றா லென்க. பிரஸ்தானத்திரயங் கூறிய விவ்விடயத்தை யிவர் கூறியதற்குக் காரணமியாதோவெனின்? இதற்கு விடை மேற் சிறப்புப்பாயிரவொழுக்கங் கூறியவிடத்துக் கூறுது மென்க. ஆண்டே யிந்நூற்படலவகை கூறுகின்றனவுங் கூறுவா மென்க.

இனி இச்செய்யுட் கருதிய தியாதோவெனின்? இந்நூன் முட்டுப் படாது தானெடுத்துக்கொண்ட கரும மினிதுமுடிதற்பொருட்டுக் கடவுள் வாழ்த்துக் கூறலை யென்க. என்னை? இவர் கனவிற்சுழுத்தியிலை வாய்க்கும் பெரும்பேறுடைய ரன்றோ? அங்ஙனமாக மங்கலங் கூறி யிடரொழித்துக் கோடலெனின்? அற்றேயாயினு மான்றோராசாரம் பாதுகாத்தற்பொருட்டும் மாணுக்கர்க்கறிவுறுத்தற்பொருட்டும் வழிநூன்மரபுபற்றி யங்ஙனம் கூறுகின்றா ரென்க. அவ்வாழ்த் தெத்துணைப்பகுதியது? இதி லிவரேற்ற தெப்பகுதியதெனின்? வழிபடுகடவுட்பக்கத்ததெனவுமேற்புடைக்கடவுட் பக்கத்ததெனவு மிருபகுதிய தவ்வாழ்த்து. இவ்விரண்டையு மிவர்சரித்து

இதுமுதன் மூன்றுகவியானு மேற்புடைக்கடவுட்பக்கத்தைச் சாமவேத
மஹாவாக்கியப்படிக் கூறத்தொடங்கி மேலுபதேசித்து நிறுத்துமுறையாற்
றொம்பதவிலக்கியார்த்தத்தைத் தனதுவடிவமாக முந்தக்காண்கின்று
றென்க.

(இதன் பதப்பொருள்) பொன்—போற்றி கலங்கலுந் தெளிதலுமா
கிய நீர்நின்றென்று நிழல்வடிவவாகாயமாயு மதற்கதிஷ்டானமாயும் வேறாயு
நிற்கு மகாகாயம்போல விம்மூவாஞ்சயுற்றோரு முறாதாருமாகிய விவர்களதந்
தக்காரணங்களிற் பிரதிவிம்பித்த சீவர்களாயு மவர்க்கதிஷ்டானமாயும் வேறா
யுமுள்ள சாட்சிமாத்திரமாயு நிற்பான், அன்றியும், ஜயமினி பதஞ்சலி கபி
லர்முதலானோராற் கூறப்பட்ட பல வீட்டுநிலங்களினு மிக்கன சுபேட்சை
முதலிய ஞானநில மேழுமாம். அவ்வேழினுந் துரியநில மேலானது. அதை
மருவியு நிற்பன். அத்தகைய வொருவனாகிய விறைவனது திருவடிக வெம்
மைக் காக்கக்கடவன, என்றவாறு.

வடநூல்விதிப்படி மைந்தனைக் கூட்டி ஈடணை மூன்றாகப் பெரும்பா
லாருங் கூறியிருப்பினுஞ் சிறுபான்மையர், பெண்விழைந்து பின்செலினுந்
தன்செலவிற்குன்றாமை, கண்விழைந்து கையுறினுங்காதல்பொருட்கின்மை,
மண்விழைந்து வாழ்நாண் மதியாமை யிம்மூன்று; நுண்விழைந்த நூலவர்
நோக்கு” எனவும், “பொன்னை மாதரைப் பூமியை நாடிடேன்” என்பன
முதலாக நல்லாதனாருந் தாயுமானாருங் கூறிய தமிழ்நடைபற்றி யிவரும்
பொன்னிலமாதராசை யெனவுங் கூறினா ரென்க. இஃதுணராது, நிலத்திற்
குரிமையுடைய மைந்தரை நிலமென்ற தாகுபெயர் என வடமொழிப்பொரு
ளுக்கியையப் பொருள்கூறுவாரா யாகுபெயரிலக்கணங் கூறப்புகுந் திடர்ப்
பட்டுப் பொருளுரைத்துச் சொற்குணம் வாவாபோயினா ரென்க. இவரி
டைப்பட்டசொல்லன்றித் ‘தொன்றுறையுரைப்பனவாகுபெயரே’ என்பத
னையும், வடமொழியினும் பூமி, க்ஷேத்திரமுதலிய சொற்கள் புத்திரனை
யாண்டு முணர்த்தாமையி னிதனையு முணர்ந்திலர்போலு மென்க. அன்றி
யிவனிலத்திற்குமாத்திரமுரிமையுடையவனாயின், பொன்னிற்கும்வீட்டிற்கு
முரிமையுடையா னியாவரோ போலு மென்க. இவனேயெனி னெண்டு மாகு
பெயர் கூறுவார்போலு மென்க. இனி, ஆசைபொருந்தார் எது தீவிரவை
ராக்கியமுதித்தோரையுங் கழித்துநின்ற தீவிரதரவைராக்கியருள்ளும் சஞ்
ஞானவானென்போனையீண்டுக் குறித்துநிற்றலி னதிவியாத்தி யவ்வியாத்தி
களு மின்றென்க. உள்ளம் பால்பகாவஃறிணைப்பொதுவியற் பெயர். சாக்ஷி
வடநூன்முடிபாயப் பன்மை யுணர்த்திற்று. இனி, உள்ள மொன்றே சாக்ஷிக்
குஞ் சிதாபாசனுக்கு மிடையே நின்று நிரையே யுபாதியும் விசேடணமுமா
மென்க. இவை மேல்விரித்தலி னீண்டுக் கூறிற் புனருத்தமாமென்க. பொரு
ள்களுக்கேற்ப உபமானம் விரிக்கப்பட்டது. இங்ஙன மன்றி யவச்சேதவாத

மா யுவ்மானத்தை விரித்துப்பொருள்கோடல், இதில் சீவசாக்ஷி என்பதமை யாலையானும், மேல் 'சின்மயவடிவின்சாலை சித்துப்போற்புத்தித்தோன்று' மென்னு மாசிரியர்கருத்திற்கு முரணு மென்க. சீவசாக்ஷி உம்மைத்தொகை. இனிச் சீவசாட்சி பிரமமேயாயினும், மாயோபாதிக்ஞக்குச் சாட்சியாதலை யொழித்தற்கும், அந்தக்கரணத்தை விசேடணமாகக் கொள்ளாமையாற் கருத்தாவாதலை யொழித்தற்கும், 'மாத்திர' மென் றடைதந்தா ரென்க. கருமமுதலியவை ஞானத்திற்குப் பரம்பரையாச் சாதனமன்றி நேரே வீட்டிற்குச் சாதனமாகாமையின், 'எந்நிலங்களினு மிக்க வெழுநில' மெனவும், ஞானபூமியேழும் நேரேவீட்டிற்குச் சாதனமாயினும் உலகத் தோற்றர வொன்றினின் ெறான்றிற் குறைவுபட்டு எழாவதில் வீடு(ஆன்மா) தெள்ளிதாய் விளங்கலி 'னவற்றின் மேலாநன்னில'மெனவுங்கூறினா ரென்க. எந்நிலமென்ற தினவெதுகை. 'எந்நிலங்களினுமிக்க' என்றமையால் 'எழு நிலம்' ஞானபூமி யேழு மாயிற்றென்க. கருமமுஞ் சாதன மென்ப தும்மை யாற் றழுவப்பட்டது. இது மேற்கூறுதலான் விளங்கு மென்க. இனி, 'நன் னில' மென்றது சீவனுக்கு மறைப்பைச் செய்து பவத்துன்பைத் தந்த வாவ ரணப்பிணிக்கு மருந்தாகலி னென்க. நற்று ளென்றாற்போலும். நிலம் போன்றதைநில மென்ற துருவகம். தாங்கி மேலுய்த்தலி னென்க. மருவுதல் தான்றன்வடிவாய் நிற்றல். சுபேட்சைமுதலியவேழின் பெயர் நிடக்கை முறையிலக்கணம், பயன்முதலியவு மிந்நூலீற்றிற் கூறுமிடத்திற் காண்க. 'ஏகநாயக'னென் றது சான் றுச்சாக்ஷிய மிறந்து நிற்பவனை யென்க. நன்னிலத் தில் மருவுவ னவனாகலி னென்க. அன்றி, மும்மூர்த்திமுதலிய பலகாரியவடி வங்களுக்குக் காரணனாகிநிற்பவனை என்பாரோலோவெனின், அப்பொருளுக் கேற்ற பதங்களிதிலின்மையானும், அது வருஞ்செய்யுளாற் பெறப்படுத லினானு மீண்டுக் கூறல் கூறியதுகூறலா மென மறுக்க. அன்றியு மிக்கவி யையே மூன்றுபதமாகப் பிரித்து ஏகநாயக னென்பதை ஐக்கியமாக் கூறு வார் விருத்திக்கார ரவர்கூற்று மிஃதேயா மென்க. மேல்வருவனவு மன்ன குணகருமங்க ளான்மாவினிடத்துப் பெறுதலின்மையானுஞ், சமசத்தை யன்மையானும் 'எந்நிலங்களினுமிக்க வெழுநில மவற்றின்மேலா நன்னி லம்' என்பனவற்றை யேகநாயகனுக்கு விசேடணமாகக் கூறுத லசம்பாவித மென்று விடுக்க. இது, 'குணவிசேடங்கூடாமலிருக்கையாலே' என்பதனால் விளங்கும். அற்றேல், 'சாட்சிமாத்திரமாய்நிற்கு' மென்றமை யாது? 'எந் நிலம் ......மேகநாயகன்' என விசேடணவிசேடியமாகத் தோன்றக் கூறி யதியாது கருதியோவெனின், அற்றன்று. அறியாமையறிவுகளுக்குச் சாட் சியாய் நின்ற தானே யவையிறந்துநின்ற னவிற்சழுத்தியின்கண்ணும் விதேகமுத்தியிலக்கண்ணு முள னென்பது தோன்றற் கென்க. சாட்சி பிரமமே யாகலி னேகநாயக னென்றார்.

"புருடனென்றுரைசெயப்படுவது பரிபூரணமாகியபோதம்" என்றசுருதியால், நிற்கும் மநுவு மேகனுயக னென்றுயர்திணையாண்பாலாற் கூறினுரென்க. பதங்க னென்றது தானுதாரவதிட்டாத்தன்மைகளாய் நிற்றலையென்க. காத்தல், தான் பிரமமென் றுய்ந்தறிந்த நிலையிற்றிரியாதிருத்தலைச் செய்தல். சிவன், சாக்ஷி, பதங்கன் போற்றியெனப் பேதபாவமாகக் கூறியிருக்க விங்ஙன மபேதமாகப் பொருள்கூறுவது பொருத்தமாமோ வெனின்? சீவனது சொரூபஞ் சாட்சியைத் தவிர வமையாமையானு மச்சாக்ஷியாகிய வதிஷ்டானத்தை யுணர்தலே மெய்யுணர்தலானு மவ்வுணர்ச்சியை யகலாதிருத்தலே வீடுபேறு மென்பது சுருதிசம்மதமாகலிற் பொருத்தமா மென்க. உள்ளத்தன்னிற் 'சிவன்' எனத் துவம்பதவாச்சியமும் 'சிவசாக்ஷி' என வப்பதவிலக்கியமுங் கூறப்பட்டன. எம்மை, தோன்றுநின்ற செயப்படு பொருள். (க)

ஈன்றளித் தழிக்குஞ் செய்கைக் கேதுவா மயனுய் மாலா
யான்றவீ சனுமாய்த் தானே யனந்தமூர்த் திகளாய் நிற்கும்
மூன்றமுத் தனுமா யின்பப் புணரியா தவனுய் நாளுந்
தோன்றிய விமல போத சொரூபத்தைப் பணிகின் றேனே. (உ)

இக்கவியாற் றற்பதவிலக்கியார்த்தத்தைப் பூரணமாகக்
காண்கின்றார்.

(இ-ள்) ஒடுங்கிய தன்னிடத்தினின்று மீண்டுண்டாக்குங்காலத்திற் றன்னில் வேறல்லவாகிய காரியவுலகங்களுக் குபாதானகாரணனுன தானே, அன்றியு மம்முத் யவற்றின் முத்தொழிற்கு மபின்னநிமித்தகாரணனுகியும், அன்றியு மம்முத் தொழிற்கருத்தான மும்மூர்த்திகளாயு மவர்களி னுட்பிரிவான பலமூர்த்தி வடிவங்களாயு நிற்கும்.நிற்பினும் வேதங்கள் கூறிய நித்தியமுத்தனுமாகியும் நித்தியானந்தவாரியி லுதயமாகு ஞானசூரியனுகியுமனுதியே தோன்றிவிளங்கிய மலமற்ற வறிவுருவா யுள்ளதை யானிரண்டற்ற பூரணமாகச் சிந்திக்கின்றேன். எ-று.

ஏகாரமிரண்டனுள் முன்னது தேற்றமும் பிரிநிலையும், பின்னதசையுமாம். 'தானே' என்ற தேற்றத்தா லுபாதானமும், தானே எது என்றதாலபின்னநிமித்தகாரணமும் பெறப்பட்டன. படவே நிமித்தோபாதானம் வேறென்பார் கொள்கைய மறுத்தவாருயிற்று. இதற்குச் சுருதி, "பன்னு காரணமொன்றில்லை படைக்குமுன் படைக்கவேண்டு மென்னுலீலையினுற் றுனேவினைத்தகாரணமதாகி" என்ற வாசிட்டேபப்பிர்ம்மணமும், "மண்ணும் மனைவானும் மனைபவையும் வேறுயே, யெண்ணுமளவறிவின் செயலிவனைப்பெறவிசையுங் கண்ணென்றிடவருகாரண மொன்றே யமலமதா

லெண்ணுமறிவுருவை யிசையாநிற்பதெவ்விடமும்'' எனவும்,'' மனைநின்றவ னொருகாரணம்வர சேதனம்வேறு-நினையும்படியிலதாதலினிலையாயுளதறிவி -லனகாரணமறிவாயினு மனைவாநிகரன்றோ-நினைமண்ணொடு நிகரானவை தனையேகொடுசெயுமால்'' எனவும் வருவன. இவ்வுபநிடதவாக்கியங்களுக்கு முரணுது பொருள்கூறல் பொருத்தமுடைத்து. ஆன்றவென்ப, நீசனுக் கடையாய்நிற்றலி, னவனே யந்தரியாமியெனக் கொள்க. ஆன்ற=அமைந்த. அமைதலெண்குணங்களா னிறைதல். இஃதே யிவர்க்கு மாட்சிமையென்க. அனந்தமூர்த்திகளாய் நிற்றல், ஈசானன், சங்கர்ஷணன்முதலிய வவாந்திர பேதம். இம்மூவரு மனந்தமூர்த்திகளாய் நிற்றல் பக்தானுக்கிரகத்தா லெ ன்க. இக்கூற்றைப் பதினெண்புராணத்தாலு முணர்க. இங்ஙனமன்றி, ஈசுர ஜிரியக்கு எனக்கூறின், அவை மும்மூர்த்திசத்தத்திற்குப் பொருளன் மையி, னது கருத்தன்று. ஆனந்தமென்ற வடைப்பன்மைக்கியைய வடை கொளியும் பன்மையாக் கொண்டாம். புராணக்கொள்கையான முத்தொழி ற்குரியமூவர்பெயராற் கூறினேனும், வேதசம்மதம் நிமித்தகாரண னொரு வனேயென்பார், செய்யும் என்னும் வினைமுற்றுவாய்பாட்டா னீற்ந்த மெ னவும், ' பூன்றமுத்தனுமாயின்பப் புணரியாதவனு ' யெனவு மொருமைப் பாலாற்கூறினு ரென்க. இதனுற் காரியப்பிரமம் பலவாதலுங் காரணப்பிரம மொன்றாதலும் பெறப்பட்டன.

இப்பெற்றி, காரியப்பிரமங்க ளௌபாசிக மென்றுங், காரணப்பிரம முபாசிய மெனவுங் கொள்ளற்கென்க. இவ்வாறே காழிக்காசும், ' படைத் தளித்தழிப்ப மும்மூர்த்திகளாயினை' எனவும், '' மூர்த்திகள் மூவர்களென் ன மாலயரனும் நான்முகனும்-முக்குணத்தான் மூவுலகு முறைபிறழாவண் ணங்-காத்தழித்துப்படைத்துவருங் கருமுகில் செம்பவளக் கனகமெனுந் திருமேனிக்காரணனுயகரோ'' எனத் தத்துவராயசுவாமிகளுங் கூறியதூஉங் காண்க. இம்மூவரு மீனுதல்முதலிய கருமங்கள், மேற் சிருட்டிகூறுமிடத் திற் காணப்படும். வணங்குதலாகிய காயத்தின் றொழில் மனத்திற்காதற் குதாரணம், ''அன்பு-மண்டியநெஞ்சினில் வணங்கி வணங்கார்போல மந்திரி யார் மேன்மையுடன் வந்துநின்றார்'' எனவரும் வாதவூரடிகள் புராணம். யானும், மனமுந் தோன்று வெழுவாயுங் கருவியுமா மென்க. முன்னும் பின் னும் வந்தமையும் வருபவையு மிவ்வாறே கொள்க. புகன்றவென்பது பூன்ற வென விகார மாயிற்று.

' அயனும் மாலாய்........மூர்த்திகளாய்நிற்றும், பூன்ற .......புண ரியாதவனும் ' என்பன மாயையாலாக்கப்பட்ட காரியவிசிட்ட சேதனங்க ளை. 'விமலபோத சுவரூப' மென்றது காரணமான மாயாவிசிட்டசேதனத் தையென்க. அன்றிப்,' பூன்றமுத்தனுமாயின்பப்புணரியாதவனு ' யென் றதைக் காரணமான மாயாவிசிட்டசேதன மெனவும், 'விமலபோதசொரூப'

மென்பதைசுத்தசேதனமெனவுங் கொள்ளினு மமையு மென்க. இதனை, மேல் விரித்துக் கூறுமிடத்திற் காண்க. இவை நிரையே தற்பதவாச்சிய விலக்கியங்களெனக் கொள்க. (உ)

எவருடை யருளா லியானே யெங்குமாம் பிரம மென்பாற்
றவருடைப் புவன மெல்லாங் கற்பிதமென் றறிந்து
சுவரிடை வெளிபோ லியானென் சொரூப சுபாவ மானே
னவருடைப் பதும பாத மனுதினம் பணிகின் றேனே (௩)

இக்கவியா லசிபதார்த்தத்தைத் துவிதமறத் தமது வடிவமாகக் காண்கின்றவாற்றுற் குருதுரியத்தையு மவ்வாறு காண்கின்றார்:—

(இ-ள்) துவம்பதலக்ஷியார்த்தகூடஸ்தனை யானே தற்பதலக்ஷியார்த்த பரிபூரணப்பிரம மானேன், அப்பிரமசொரூபமான வென்னிடத்திற் பலவேறுவகைப்பட்ட காரியகாரணப்பிரபஞ்சமெல்லாம் பாரமார்த்திகசத்தை யன்மையாற் கனவுபோலக் கற்பிக்கப்பட்டதென்று யாவரருளாலகத்தி லிருந் தறிவிக்க வவ்வருளா லறிந்து, சுவரான் மறைபடுதற்போற் காணினுந் தானதனு ணிறைந் திருந் ததற்கிடங்கொடுத் தியல்பா யதற்கு வேறாயிருக்கு மாகாயம்போல, வக்கற்பிதப்பிரபஞ்சங்களான் மறைவுபடுதல்போற் காணினு நாத னுணிறைந்திருந் தவற்றிற் காதாரமாய் வேறு மென தியல்பாய சொரூபமாகி, யானே யிருக்கின்றேனோ, வப்படிப்பட்டவரே வெளிவந்த வப்பாசொரூபாது தாமரைமலர்போன்ற செய்ய பாதங்களை யானிடைவிடா தெப்போதுஞ் சிந்திக்கின்றேன். எ-று.

உடையவிரண்டுங் கடைக்குறை. எங்குமெனத் தேசத்தைக் கூறவே, காலமும் பொருளுங்கூட்டி, இம்மூன்றுபரிச்சேதரகிதரு மாகலிற் பரிபூரண மென்றதெனக்காண்க. புவனமெனக் கூறினமையி னதற்கினமாகிய தனுகாணபோகங்களையு மிவைகட்குக் காரணமான மாயையுங் கூட்டி, யிருவகைப் பிரபஞ்சமெனக் கூறினும். அன்றிப் புவனம் எல்லாம் என்றதை யும்மைத் தொகையாக்கிப், புவனமும், எல்லாமென்றது ஒழிந்தபோகந் தனுகாணமு மிவைகட்குக் காரணமுமெனக் கூறினு மமையும். உவமானத்திற் கேற்ப வுபமேயங்களை விரித்துக் காண்க. சுபாவசொரூபமாதல் கண்டபூஷணநியாயமாய்த் தனதியல்பை யுணர்தல். இதன் விரிவை விருத்திப்பிரபாகாத்தி னெட்டாவது பிரகாசத்திற் காண்க. குருதுரியம் மனவாக்கிற் கெட்டாமையால், எவர் எனவினவி அவரென விடுத்தார். அன்றி, எவர் என்றது நிர்த்தேசவசனமு, மவரென்றது பிரதிநிர்த்தேசமுமாமென்க. உ-ம் "அருந் தவாமறையந்தமாமகோசரந்தனினீ-இருந்தவாறறிவித்தவாறெங்ஙன மிசைப்பேன்" என்பது, அருணீரிற்றேன்றி அடியார்பருவங்கண் மேலர்தலானுஞ்,

செய்மைக்கணாதன் ஞானமணம்வீசுதலானும், அறிவுடையா ரங்ஙனிருந்து மம்மணங்கண்டடைந்து முடிமேற்சூடலானு,மறிவிலா ரண்மைக்கணிருந்து மந்நலம்பெறக் காட்டாமையானும், நோக்குவோருக் கின்பநிறைந்திருத்தலாற் றண்ணென்றுஞ்செய்ய,தாய்க் காணவினியதாதலானுஞ், சத்தினிறைவாதலான் வாடாத்தன்மையுங் களைபடாத்தன்மையு மாதலானும், பதுமபாத மென்றார். இவற்றை யுவமானத்திலுங் கொள்க. உவமானமுவமேய மொருநோக்கன்றி,யிங்ஙனம் பலபடக்கூற லுவமத்தொகையாகலினென்க. பதுமபாதம் வடநூன்முடிபாகலி னியல்பாயிற்று. அனுதினம்பணிதல், சீவன்முத்தித்திசையுள்ளளவு மதற்கு விலட்சணமான சுகத்தை யடைந்திருத்தல். உ-ம் ' துட்டமார்தடைகண் மூன்றுந்தொடராமற் சொரூபஞான-நிட்டனாயிருப்பாயாகினீசெய்யு முதவியாமே' எனவரு மாசிரியவசனம். 'ஆவல்செய்தெனதாக்கையுள்ளளவு நின்னடியா-ரேவல்செய்வதே' எனக் கூறலு மொன்று. முன்னிரண்டு கவிகளிலுஞ் ' சாட்சிமாத்திரமாய் நிற்கும் ' ' தானே யநந்தமூர்த்திகளாய் நிற்கு' மெனத் துவம்பததத்பதார்த்தங்களைச் சிந்தித்தமையானும், இதில் ' யானேயெங்குமாம் பிரம' மென்றமையானு மசிபதத்தை முக்கியசமானாதிகரணத்தாற் றனது வடிவமாகக் காணுமுகத்தா லாசிரியரது துரியசொரூபத்தையவ்வாறாகச் சிந்தித்தவாறாயிற்று. உ-ம். கூறிய 'அருந்தவாமறை' என்றதனுற் காண்க. 'யானே' என்ற தேற்றேகாரத்தான் முக்கியசமானாதிகரணங்கொள்ளப்பட்டது. ஏனையவேகாரங்களசை. இம்மூன்று செய்யுள்களாலும் வஸ்துநிர்த்தேசரூபமங்கலங் கூறப்பட்டது. இனி, இவ்வாழ்த்து இம்மங்கலரூபமாய தென்னையெனின்? ' வாழ்த்தியல்வகையே நாற்பாற்கு முரிய' என்ற வாசிரியர் தொல்காப்பியர் கூறிய கட்டளையில், புறநிலைவாழ்த்தொழிந்த, 'வாயுறைவாழ்த்தேயவையடக்கியலே-செவியறிவுறூஉவெனவவையோரன்ன' என்றவற்றுள், முன்னிலைவாழ்த்தாகிய வாயுறைவாழ்த் திஃதாகாமையின், கட்டளைமறுப்பாமெனின், நன்றுவினவினாய். என்னை? கடவுளென்பது வழிபாடுடைமையானு, மேற்புடைமையானு, மிருவகை யென்று முன்னர் நிறீஇயவற்றுள் வழிபடுகடவுள் முன்னிலைக்கண்ணதன்றி, ஏற்புடைக்கடவுளங்ஙனமாகுகவெனக் கட்டளையின்மையினென்க. யாண்டையது கட்டளையின்மை? கடவுளென்பதுதானே? அயலோ? எனக் கடாநிகழ்தலின் எனின், அறியாது கடாயினாய். என்னை? கடவுட்கயலாய்த் தானொருபொருளாகுங்காற், பிறப்பிறப்பு முதலியதுக்கமுண்டா மென்றுமக்கடவுட் பரிபூரணத்திற் கஃது குறையென்று, மக்கடவு டானாகுங்காலவை நீங்குமென்றுங், கருதுதல் வேதக்கட்டளை யென்க. ஆகலி னன்றே, அவ்வேதப் பொருளுணர்ந்தோரும் 'அகரமுதல வெழுத்தெல்லாமாதி-பகவன் முதற்றேயுலகு' என்ற விக்கட்டுரைக்கு மாறுபொருள் கூறாதிருந்தற் கன்றே. ' எப்பொருளெத்தன்மைத்தாயினுப்பொருள்-மெய்ப்பொருள்

காண்பதறிவு' எனவும் வரையறுத்துக்கூறினு ரென்க. இதற்கு மெய்யுரை கண்ட பரிமேலழகியாரு மிக்கடவுள்வாழ்த்தை ஏற்புடைக்கடவுள்வாழ்த் தென்றார், 'சிவமாக்கியெனையாண்ட' வென்றார் கடவுள்வாய்க்கேட்டோரு மென்க. (ங)

என்னுடை மனதுபுந்தி யிந்திய சரீரமெல்லா
மென்னுடை யறிவினாலே யிரவிமுன் னிமமே யாக்கி
யென்னுடை நீயுநானு மேகமென் றைக்கஞ்செய்ய
வென்னுடை குருவாய்த்தோன்று மீசனை யிறைஞ்சினேனே ()

இதிற் றிருவருட்கோலத்தை நமஸ்காரருபமங்கலத்தால் வணங்குகின்றார்:—

(இ-ள்) இன்னதுதேகந் தேகியிவனென வுணராமையால், என்னுடையதாகவிருந்து துன்புறுத்திய தேகமுத லவித்தையீருய வனைத்து மூலமைமூடித் துன்புறுத்திய பனி என்றாழ்க்கதிரின்முன்பட நிலைஇத் துன்பந்தாரா தொழிதல்போல, வவாளித்ததனாலுண்டாகிய வெனதறிவின்முன் னியானுமெனதுமாக நிலைஇத் துன்பந்தாராதவண்ணஞ்செய்தும், செய்ததுமன்றி யாசாரியனாக வென்னையுடைய நீயும், மாணக்கனாக வுன்னையுடைய யானுமாகத் தோன்று மிவ்வேறுபாடுகளுபாதிவயத்தன வாதலா லவைகளைக் களையநின்ற தொன்றேயென் றென்ருய வத்துவிதத்தை யுணர்த்துதல் செய்யும்பொருட் டெனது பக்குவத்தளவாக மானுடச் சட்டைசாத்தி யெனக்குக் குருவாகி யெழுந்தருளிய பரம்பொருளை யான் வாக்குக்காயங்களா னிறைஞ்சினேன். எ-று.

என்னுடை நான்குங் கடைக்குறை. எகாரமூன்றனுள், முதலது தேற்றமன்றிப் பிரிநிலையுமாம். இடையது தேற்றம். ஈற்றதசை. 'மனத்தை யடக்க மனத்துணையன்றி பினைத்துணையில்லை' என்றபடி, யிவரு மென்னுடை யறிவினாலே என்றார்.

என்னுடைய மனதுபுந்தியெனக் கூறினு, மினம்பற்றி யவை பக்குவத்தளவா யானெனநிற்றலி, னியானென்பதுங் கொண்டாமென்க. இது அவாய்நிலையுமாம். மனம்புந்தியிந்திய மென்றமையாற் சூக்குமவுடலுஞ், சரீரமென்றமையாற்றூலவுடலு, மெல்லாமென்றமையாற் காரணவுடலுங் கூறப்பட்டுத் துன்பந்தருபவையாகிய விவற்றையே களைந்தா ரென்பதாயிற்று. உ-ம் ' மொய்யுடனேயென்னின் மூவெழு நரகுமஃதே-வெய்யவன் றயாரமேனு மெய்யையா னென்னல்வேண்டா-மையமில்கேள்வி நல்லோ ரறைவரோ வனைத்தாமூனுங்-கையுறத் தின்பரேனு நாய்ப்பிணங்க வரார் நீசர்'' என்றவாசிட்டோபாக்கியானம். இவ்வாறன்றி, எல்லாமென்ற

தற்குச், சிருட்டியாதிய வீச்சுரவபிமான மீருயவைகளையுங் கொண்டா, லவை சீவனதாருவதாகிய கிழமைப்பொருள்படாமையானும், பஞ்சதசியி லவை களைதலை யுடன்படாமையானும், பந்தத்திற் கவை யேதுவன் றென் றமையானும், நேத்திரமுதலிய நிகிலப்பிரபஞ்சத்தி னத்தியாசமு மான்மா விலுண்டெனினும், பிரமசைதன்னியத்திற் சர்வபிரபஞ்சத்தினத்தியாச முண்டாவதன்றித், துவம்பதத்தி னிகிலப்பிரபஞ்சத்தி னத்தியாச மின்று. ஓரேபதார்த்தத்தி லொருதருமவிசிட்டத்தி னத்தியாச் முண்டாவதன்றி, மற்றொரு தருமவிசிட்டத்தி னத்தியாச முண்டாவதில்லை. இத்தன்மை யான வற்புதமகிமை யவித்தையினிடத் துள்ளது. எங்ஙனமெனின்? பிராமணத்தன்மைமுதலிய தருமவிசிட்டமாகிய சரீரத்தின்றூதான்மிய வத்தியாச மான்மாவி லுண்டாயிருக்கிறதல்லது, சரீரத்தன்மை விசிட்டசரீரத்தினத்தியாச மான்மாவி லுண்டாவதில்லை. இதனானன்றே, அறிஞனு, நானந்தணன், நான்மனுடன், என்றித்துணையே விவகரிக்கின்றனனன்றி, நான் சரீரம், என விவகரிக்கின்றில னென்க. இவ்வுத்தியனுபவங்களாலு மது கருத்தன்று. இரவி ஆகுபெயர். இரவிமுன் பட்டபனி, தனதுசத்தி கெட்டுக் குளிர்முதலியதுன்பந் தாராதொழிதல்போல, எனதறிவின்முன் பட்ட தூலாதிகள் சத்தியத்தன்மைகெட்டு, நிலையாமையாற், றுபத்திரய துன்பந் தாராதொழிந்தன வென்பார், 'இரவிமுன் னிமமேயாக்கி' என்றூர். இதற்கு மபாவமாகப் பொருள்கூறின், செகத்து சோபாதிக மாதலால், கயிற்றரவு முதலியனபோ லத்தியந்தநிவர்த்தி கூடாமையி, னுபமானமும் பொருளு மாறுபடுமாகலா, லவ்வுரை போலி யென்க. ஈண்டு நிலையாமை யநிர்வசநீயமாதல். இக்கருத்தை, சீவன்முத்தி விதேகமுத்தி கூறுமிடத் திற் காண்க. ஆதியாத்மீக மொழிந்த விரண்டுங் கௌணமாக வுட னெண்ணப்பட்டன. 'பிரமவித்துப்பிரமமே' யென்னுஞ்சுருதியால் நானும் என்றூர். நான் நீ என்ற வேறுபாடுக ளுபாதியால்வந்தன வென்பதற்கு உ-ம், 'நத்வேவாஹம் ஜாது நாஸம் நத்வம் நேமே ஜநாதிபா:॥ நசைவ நபவிஷ்யாம: ஸர்வே வயமத: பரம்॥' என்ற கீதாவாக்கியத்திற்குரைத்த பாஷியத்தாற் காண்க. இதன்விரிவை மேல் மஹாவாக்கியங் கூறுமிடத்துணர்க. என்னுடைய குரு வென்ற பிரிவடை, 'அருவனுயினு மன்பர்க் குருவனுய்-வருவனென்பது மாமறை சொல்லுமே' என்றபடி, பிறர்க்கன்றூதலின், பிறிதோடியையு நீக்கியவிசேடணம். 'ஆக்கி' என்ற பிறவினைவிசேடணத்தா லாசிரியனு லன்றித் தன்னையுணரக் கூடா தென்பதாம். உ-ம் 'எண்ணிலாக் கல்வியானு மிலங்கிய கேள்வியானுந்-திண்ணிதா மதியினுலுந் தெளியவா ராதுநீர-நண்ணிய ஞானிதானே யந்தருள்செய்யின் ஞானக்-கண்ணினுற் காணலாகுங் கரத்திலாமலகம் போல' என்ற சுருதிப்பொருள். இறைஞ்சுவே னென்னுது 'இறைஞ்சி

னேன்' என்றிறந்தகாலத்தாற் கூறியது,எண்ணில்காலமாக யான் வழிபட்டது மிச்சற்குருவையே யென்னு மிகுதியினு லென்க. இன்னு, மிம்மிகுதி தோன்றல், 'என்னுடைகுருவாய்த் தோன்றுமீசனே' என்றதனுனு முணர்க. குருவே ஈசனென்பதற் குதாரணம் 'ஈச னிங்கருள் செய்ய வந்திருக்கிற விடமவன் றிருமேனி' என்னுஞ் சுருதி யென்க. (ச)

அந்தமு நடுவுமின்றி யாதியுமின்றி வான்போற்
சந்தமு மொளிரு ஞான சற்குரு பாதம்போற்றி
பந்தமும் வீடுங்காட்டப் பரந்தநூல் பார்க்கமாட்டா
மைந்தரு முணருமாறு வஸ்துதத்துவஞ் சொல்வேனே. (ரு)

**சாற்று மனுபந்தசதுட்டயநூற்த-விடயஞ்சம்பந்தம் பயனதிகாரிகள் என்பனவே, வேதாந்தநூற்குப் பாயிரங் கூறவேண்டுவனவாயினு, மிது சார்புநூலாய்ப் பிராகிருதமாதலி னித்தமிழ்நடைபற்றி, ஆக்கியோன்பெயரும், நூல்வந்தவழியும், எல்லையும், நூற்பெயரும், காரணமுமாகிய பிறபாயிரவுறுப்புங் கூறப் புக்கு, இக்கவியி லதிகாரியும், விடயமும், காரணமுங் கூறுகின்றூர்:—**

(இ-ள்) முதலு, நடுவு, மீறுமின்றிய வான்போல வித்தன்மைகளொன்றுமின்றி, எக்காலு மொளிருதலையுடைய ஞானமயமான வெனது சற்குருசுவாமிகளினது பாதங்களைவாழ்த்தி, பந்தவிலக்கணத்தையும், வீடணரும் வழியினிலக்கணத்தையு, மக்களுக்குக் காட்டுவான், அநந்த சாகைகளாகவிரிந்த முதனூலை யாராய்ந் தவற்றின்பொருளை யறிய, விரிந்தவுணர்வு விரகிலாமக்களு மப்பொருளை எளிதிலுணருந்தன்மையை யிந்நூலாற் சுருக்கிப், பொருளின துண்மைகூறுமுகத்தா லியான் கூறுவேன். எ-று.

ஆயின், சந்தேகந்தெளிதல் கூறலன்மையின், குன்றக்கூறலாமெனி, னற்றன்று. இத்தத்துவத்தையே வேறோராற்ருல் விளக்கலி, னென்க. ஏகாரமீற்றசை-'அந்தமுநடுவுமின்றி யாதியுமின்றி' என்ற சாமானியதருமம், நையாயிகர்மதம்பற்றி வானிற்குஞ்சென்றன. 'முகுந்தனன் றரனுமன்று நாலுதிசைமுகனுமன் றவர்தமூலமே-புகுந்தது' எனவும், 'மருவியெங்குமுற நின்றபொரு ளின்று புவிமேல்வடிவு கொண்டுவருகின்ற தெனவந்துமொழிவர்' எனவும், வருவன. ஞானமே திருவடியென்பதற் குதாரணம். 'சீவர்களிடத்தி லருட்சிவபத்தி திருந்தியதுறவு மெய்ஞ்ஞான-மாவவோ ருருவாம்பரம சற்குரு' எனினு மமையு மென்க-இவ்வாறு, குருவையனுவதித்துக்கூறியது, சுட்டின்பொருட்டு. வீடு ஆகுபெயர். இலக்கணத்தாலன்றித் தன்மை கூறலாகாமையி னென்க. உபசார மென்பாரு முளர்.

சத்துரு உண்மை கூறுமாசிரியன்: குருவென்றவளவிலே, அஞ்ஞானத்தைக் கெடுக்கு ஞானவடிவினரென்பது விளங்கவும், சத் என்னுமடை தமக்கிய லா வப்பெயர்பூண்ட ராமானுஜர், மத்துவர்முதலிய போலியாசிரியரையும், கருமதற்பரராய் தாங்களே யெல்லாங்கற்றவ ரென்றிருக்கின்ற பெருமித முடைய மூடரையும் விலக்கற்பொருட்டு வந்த தென்க. இதனை, லவகை வேறுபாடுகளையும், யுத்தி தருக்க வனுமானங்களான் வேறுபிரித்துக் காட்டுவோரே யாசிரிய ரென்பது பெறப்பட்டது. பரந்தவென்னும் பெய ரெச்சத்தை செயப்பாட்டுவினையாக்கிக், கருத்தாவை வருவித்துரைக்கின், ‘வேதம் பௌருஷேய’ மென்பது கெட்டு, நையாயிகர்கொள்கையாய் முடியு மெனவிடுக்க. அற்றாயின், ஒருகாலத்தானானு, மற்றொருகாலத்தரியாலு, மிப்படியே, பிரமன், இந்திர, னிருடிகள் முதலானோராலும் வெளிப்பட் டதாகக் காண்கின்றதே யெனின்? அற்றன்று. பூர்வ கற்பத்திலுள்ளபடி நினைத்து வெளிப்படுத்தினதன்றி, யவர்களாற் புதிது கற்பித்ததன்றென்க. அன்றியுஞ், சுவதப்பிரமாண மப்பிரமாணமாகு மென்க. ஈண்டு, நூலென் றது, வேதவேதாந்தங்கண்முதலிய பரவித்தைகளை யென்க. நூல் காரண வாகுபெயர். பார்க்கமாட்டா வென்ற வெதிர்மறையானே மந்தரென்பது போதரலான், மந்தரென்பது மிகையென்க. இதனாற் பன்னூலுளதாகவு, மிதுகூறற்கே துயிர்களிடத்திரக்க மென்பது, மிதுபயன்படுதலுந் தொகுத் துக்கூறப்பட்டன. விரிவு வருஞ்செய்யுளா லுணரப்படும். ஈண்டுப், பார்க்க மாட்டாமைந்த ரென்றது, தவத்தாற் பாவமற்றவராய்ச், சாந்தியாதிகுணங் களையடைந்து, சீவன்முத்திச்சுகமொன்றிலேயே விரும்புமிருப்புடைய வையந் தோன்று வுளத்தினராகிய வுத்தமாதிகாரியன்றித், தாமதகுணத்தி னரல்லரெனக்கொள்க. இதனை, லதிகாரி கூறியவாறாயிற்று. இனி, பார்க்க மாட்டாமைந்தருமென்ற உம்மையை,யாக்கவும்மையாக்கிக்,கூரியமதியுடை யோருங் காண்கவென்று கூறினு மாமென்க. வத்துதத்துவம், பொருளி னுண்மை யென்றாதலின், பொருளல்லவற்றைப் பொருளென்றுணரு மருள்போலாது, ‘எப்பொரு ளெத்தன்மைத்தாயினு, மப்பொருண் மெய்ப் பொருள் காண்பதறிவு’ என்பதூஉஞ், சுருதியாகலி, னத்துவிதப்பிரமமே, யிந்நூற்கு விடயமெனக் கொள்க. வண்ணங்க ளெல்லாமுடைய வடிகளை வாழ்த்துதலி, னிந்நூ லினிதுளளிதாய் முடியு மென்பது கருதிக் கூறுவே னென்றானன்றித் தற்புகழன்று. இது நுதலிப்புகுத லென்னு முத்திய மாம்.

(ரு)

படர்ந்த வேதாந்தமென்னும் பாற்கடன்முகந்து முன்னூற்
குடங்களி னிறைத்துவைத்தார் குரவர்களெல்லாங் காய்ச்சிக்
கடைந்தெடுத் தளித்தேனிந்தக் கைவல்ய நவநீதத்தை
யடைந்தவர் விடயமண்டின் றலைவரோ பசியிலாரே. (சு)

நூல்வந்தவழிமுதலிய வேனைய பாயிரவிலக்கணங்களை யிதிற் கூறுகின்றார்: —

(இ-ள்) வீடொன்றனையே கருதிய வுபநிடதங்களுங், கீதைகளுஞ், சூத்திரங்களுமாகிய பாற்கடற்கண் முகந்து, சுகர், வாமதேவர்முதலிய தொல்லாசிரியர், தஞ்ஞானசாத்திரமாகிய குடங்களிற் பலவாக முன் னிறைத்துவைத்தார்; அவையும் ஞானோபாசனைகள் கலந்திருத்தலி, னெனது ஞானசிரியர் முன்னாக வவற்றைக்கேட்டலாகிய காய்ச்சுதலைச் செய்து, காய்ச்சியதை மனனமென்னு மளவைகளா லளத்தலாகிய கடைதலைச் செய்து, அதனுலென்னறிவிற் றிரண்டத்தை வீடுபெயத்தலால் கைவல்லிய நவநீதமென்னும் பெயரிய நூலாகக் கூறியவதிகாரியைக் கருதியீந்தேன். ஈந்தவிதைப் பெற்றிதிற்கூறிய வத்துவிதப்பிரமத்திற் கலப்போர், நிரதிசயாநந்தத்தை நுகர்ந்து, பசிபோன்றதாகியவவா வறுத லொருதலையாதலாற் பொருளின்பமென்னு மண்ணை நுகர்ந்து, பிறப்பிறப்பாகியபிணியிற்பட்டு வருந்தமாட்டார். எ-று.

ஏகாரம் தேற்றம்; ஓகார மெதிர்மறை. படர்தல், கருதுதலென்பதைச் சிலப்பதிகாரம் வேனிற்காதை கஅ-ம் அடியில், 'படருமாலை' என்பதற்கு, நினைவுமிகுமாலை யென்றா ரடியார்க்குநல்லாருமென்க. முன் பரந்தா லென்றிருத்தலா லிவ்வாறு கூறினும்.அன்றிப், படர்ந்த என்றதைச் சாமானியதருமமாக்கிக், கடல்போற் பரந்துள்ள வேதாந்த மெனினு மொக்குமென்க. ஈண்டுப் படர்தல் சுட்டின்பொருட்டு. முன்னூல்கள் பரந்திருத்தலேயன்றி, யாழ்ந்த பொருளினையுடையனவா யங்கங்கொண்டறிய வல்ல வந்தணர்க்கேயன்றி, யேனையோருக்கும் பயன்படாமையி, னதுகருதிச், சுகராதியோர் தொகுத்துக்கூறிய நூல்களு, மிக்காலத்துச் சில்வாழ்நாள், பல்பிணிச், சிற்றறிவினையுடைய வேனையோருக்கு மியலாமைகருதி, எளிதி லரியபொருளை யுணரத் தந்தே னென்பார், 'படர்ந்த நவநீதத்தை' எனவும்; 'பாற்கடல், குடமெனவு முருவகித்தும், நவநீதத்திற்குவமேயமாக்கியுங் கூறினர். இதனால், பிரஸ்தானத்திரய முதனூ லெனவும், வழிநூல் சுகராதியோர்கூறிய தெனவு,மிது சார்புநூலெனவும் பெறப்பட்டன. வித்தியாரண்ணியசுவாமிகள் முதலியோர்கூறிய பஞ்சதசிமுதலியவும் வழிநூ லெனினு மொக்கும். இங்ஙனமன்றிச், சூத்திரத்தை யான்றோர் முன்னூலென் றேற்றலானும், பாடியம் வார்த்திகநூ லன்மையானு, மவை வழிநூலென்றல் பொருத்தமுடைத்தன்று. வேதாந்த முபலக்கணம். நவநீதத்தை யுண்பதற்குப் பசியிலாமையைப் பயனாகக் கூறினமையான், விடயமண்டின்றற்குப், பிறப்பிறப்பாகிய பிணிமுதலியவும் வருவித்தாம். பசிபோன்ற வவாவைப் பசியென்றது, தொழிலுவமஉருவகம்; உள்ளேவருத்துதலால். அவாவாற் பிறப்பிறப்பென்பதற் குதாரணம், 'அவாவென்ப

வெல்லாவுயிர்க்கு மெஞ்ஞான்றுந்-தவாப் பிறப்பீனும் வித்து' என்பது. அதனீக்கத்தால்வீடென்பதற்கு உ-ம்.'வேண்டுங்கால் வேண்டும்பிறவாமை மற்றது-வேண்டாமை வேண்ட வரும்' எனவும், வாசிட்டம், 'பிறப்பெனுமாயைக் கரையதா யெங்கும்பிறிவறு பெரும்பொருடோன்றி-லிறப்புறு மாயைக்கிச்சையே வடிவாமிதனுடை நாசமேவீடு-சிறப்பில்சங்கற்பஞ் சிதைந்திடி லதுதான்றேய்ந்திடுஞ் சித்தெனுங்கதிரோன்-புறப்படிவிதய விசும்பில்வாதனையாம் பொங்கிருள்போமெனப் புகல்வாய்' எனவும், 'இஞ்ஞானபதமே பூமிகவும்புந்தியெய்தினர்க்கல்லதுதோன்றாவிவற்றையெய்தி-லஞ்ஞான மிலேச்சனேயெனினுந்தேகியதேகியெனினு முத்தனையமில்லை-மெய்ஞ்ஞான மென்பதுதான் மனத்தின் கட்டுவிடுத லிதுபெறலிதுவே வீடுபேறும்-பொய்ஞ்ஞானங்கானலினீர் முதலாமோகம் பொய்யெனப்போமடமையும் பொய்யென்னிற்போமே' என வருவனவற்றாலுங் காண்க. விடயம் மண்போன் றனுபவிப்போர்க்குப் பிறப்பிறப்பு முதலியநோயையுந், தாபத்திரயமுதலிய துன்பத்தினையும் பயத்தலால் மண் எனவும், இக்கைவல்யங்,கோபாலச்சிறுவனுண்ட கண்ணனூட்டப்பட்டவெண்ணெய் பிறவிநோயைத் தீர்த்துச், சுவர்க்கவின்பத்திற் சேர்த்ததுபோலத், தன்னையனுபவிப்போர்க்கு, அந்நோயையுந் துன்பையு மொழித்து,நிரதிசய வின்பந் தருதலால், நவநீதத்திற்குவமேய மாக்கினர். கைவல்லிய மாகுபெயர். கைவல்லியநவநீதமென்பது, புருடவியாக்கிரமென்பதுபோலப் பின்மொழியொப்பென்னு முவமோத்தரபத கருமதாரயன். இவ்விலக்கண மறியா துரையாளரெல்லோருமிதனை, வெவ்வேறாகக் கண்ணழித்து, இடர்ப்படுபவென்க. விரிவஞ்சி மறுக்கிலம். இவ்வாறே, யிந்நூலுக்குக் கூறிய முன்னுரை முற்று மென்க. அடைத லிலக்கணை. இந்நூற்கூறியதற் குதாரணம் விரித்துக்கூறி னமையானும், பெயர்முதலிய பிற பாயிரவுறுப்புங் கூறின்மையானு, மிது கூறியதுகூறல ன்று. 'படர்ந்தவேதாந்த .....கடைந்தெடுத்தளித்தே' னென்றதால் நூல்வந்தவழியும், இந்தவென் றிவ்வியாப்பைச் சுட்டிக்கூறினமையால், தமிழ்ச்செய்யுளாகியவிது வழங்குந் தமிழ்நாடென்று கருதப்படுதலின், நூல் வழங்குநிலமும், கைவல்லிய நவநீத மெனவே பெயரும், இப்பெயர் காரணத்தாற் பெற்றது. இப்பெயர், தன்பொருளை யுணர்த்தற்குக் கருவியாகிய விந்நூலுக்காய், காரணகாரியமாய், நூலும்,நூலிற் கூறப்படும் பொருளு மொருவாற்றா லொற்றித்து நிற்றலால் சம்பந்தமும், பசியிலாரெனவே, பசி நீங்கலாகியபயனுங் கூறியவாறு காண்க, ஆக்கியோன்பெய ரிந்நூ லீற்றிற் கூறப்படு மென்க.

பாயிரமுடிந்தது.

## நூல்.

### முதலாவது,

# தத்துவவிளக்கப்படலம்.

முத்தனை வேங்கடேச முகுந்தனை யெனையாட் கொண்ட
கத்தனை வணங்கிச் சொல்லுங் கைவல்ய நவநீதத்தைத்
தத்துவ விளக்கமென்றுஞ் சந்தேகந் தெளித லென்றும்
வைத்திரு படலமாக வகுத்துரை செய்கின்றேனே (௧)

இனி, நூல்கூறப்புக்கவர் வழிபடுகடவுள் வணக்கங்கூறி,யிந்நூலித்திறனுக, நிறீஇக்கூறுவேனென் றுத்தேசிக்கின்றார். வ்வாறத்தியாயங்கூறுமிடத்தும் வணங்கலை வில்லிபுத்தூரார் பாரதத்தும், கம்பராமாயணத்துங் காண்க

(இ-ள்.) நித்தியமுத்தனை, வேங்கடேசனென்னுந் திருநாமமுடைய முகுந்தனை, என்னை யடிமையாக வாட்கொண்ட விறைவனைக், காயத்தால் வணங்கிச் சொல்லுகின்ற கைவல்லிய நவநீதமென்னும், பெயரிய விந்நூலைத் தத்துவவிளக்க மென்றுஞ், சந்தேகந்தெளித லென்று மிருபடலமாக வகைப்படுத்துப், பெயர்வைத்து, வகைப்படுத்திய விவ்விரண்டனையு நிரைபட விரித்துரைக்கின்றேன். எ-று.

சீவன்முத்தன், விதேகமுத்தனென விசேடியாமையா, னித்தியமுத்தனென்றும். நித்தியமுத்த னியல்பாகப் பாசங்களை நீக்கிநிற்பவன். இவ்வாறுநிற்ற லாசிரியனுக்குப் பொருந்தாமையி, னிவ்வணக்கம் வழிபடுகடவுளதேயாமென்க. இனி, 'முத்தனை வேங்கடேச...கத்தனை' என்பன, வொருபொருளையே விசேடித்து நிற்றலாற், செயப்படுபொருள் பலவு மல்ல. திருமாலைக் குபாசனமூர்த்தியா யிருப்பதன்றி,யிரணியகருப்ப ராதலானு,மிலக்குமிபதி யாதலினாலுங், காப்பில் முற்படக் கூறுஞ் சிட்டாசாரத்தானு மிவ்வணக்கங்கூற லமைவுடைத்து. இது நமஸ்கார ரூப மங்கல மென்க. தத்துவ மான்மாவி னதார்த்தசொரூபம். விளக்கல்-வெளிப்படுத்தல்; சந்தேகம்-ஐயம்; தெளிதல்-நீங்கல். ஆகலி, னிவ்விரண்டுங், காரணக்குறியாற் பெற்ற பெயரென்க. இவை வகுத்துக்காட்டல். மேல்வருவன விரித்துக் கூறலென்க. (௧)

நித்தியா நித்தியங்க ணிண்ணயந் தெரி விவேக
மத்திய விகபரங்கள் வருபோகங் களி னிராசை
சத்திய முரைக்கவேண்டுஞ் சமாதியென் றாறு கூட்ட
முத்தியை விரும்புமிச்சை மொழிவர்சா தனமிந் நான்கே. (௨)

நிறுத்தமுறையாற், றத்துவத்தை விளக்கப்புகுந்து, அது பெறுதற் குரிய வதிகாரியின் சிறப்பிலக்கணங்களை, யின்றியமையா வியல்பிற்றக லின் முன்ன ரிது முதன் மூன்றுகவிகளாற் கூறுவா ரிதி லவ் விலக்கண வகையைத் தொகைப்படக் கூறுகின்றார்:—

(இ-ள்) நித்திய அநித்தியங்கள் நிர்ணயம்=இவ்விரண்டி னிலைமை யை, தெரிவிவேகம்=தெரியத்தக்க விவேகம், ஒன்று; மத்திய இகபரங் கள் வநுபோகங்களில் நிராசை, இரண்டு; மத்தியம்=இகத்திற்கடை, பரம், மேலும், பாதாளம் கீழு மாகலின், சத்தியம் உரைக்கவேண்டும். அவ் வுண்மை நிலைபெற வாசிரியனால் விரும்பும், சமம் ஆதி என்று ஆறு கூட் டம்=சமம், தமம் என்பன வாதியாக் கூறுமாறன்றொகுதி, மூன்று; முத்தியை விரும்பும் இச்சை, இத்துடன், நான்கேசாதன மொழிவர்: இவ் வத்தியான்மசாத்திரஞ் சிரவணஞ்செய்யுமதிகாரிக்கு நான்குமே சாதன மமையுமென்று மொழிவராசிரியர். எ-று.

ஏகாரம், கருமமும் சிரவணமுதலிய் வேண்டிய சாதனங்களினின்றும் பிரித்தலின், பிரிநிலை ஏகாரமாயும்,வருஞ் சிரவண மனன முதலியவைகட்கு முன்னர்வேண்டப்பட்டிறந்த பல்லூழிகாலங்களி லியற்றியவவாவற்ற நற்ற வத்தின்பேறு யடையப்பட் டீண்டைக் கின்றியமையாமையுமாய் நிற்பனவு மிவையேயென் றுறுதிப்படலி னவ்வேகாரத் தேற்றமுமாமென்க. மொழி பவர் சூத்திரக்காரர், பாடியக்காரர், வார்த்தீகர் முதலானோ ரென்க. (உ)

சமந்தமம் விடல் சகித்தல் சமாதானஞ் சிரத்தையாறுஞ்
சமமகக் கரணதண்டந் தமம்புறக் கரணதண்ட
மமர்தரு கருமம்பற்று றறுத்தலே விடலென்றுகும்
மமர்செயுஞ் சுகதுக்காதி யனுபவிப்பது சகித்தல். (ங)

சமாதியேன் றுறுகூட்டம் என்றவற்றின் பெயரு மிலக்கணங்களுங் கூறுபவர் நான்கி னிலக்கண மிதிற் கூறுகின்றார்.

(இ-ள்.) சமம், தமம், விடல், சகித்தல், சமாதானம், சிரத்தை ஆறும்=சமாதியென்று முன்றொகுத்துக் கூறியவற்றின்வகையும், பெயரு மிவ்வாறுமாம்; இனி யுவற்றி னிலக்கணம்:—மனம் விடயங்களை நினையாம லொறுக்கப்படல், சமம் என்ற சாதனத்திற் கிலக்கணமாம்; ஞானேந்திரி யங்க டன்றன்விடயங்களைக் கவரச்செல்லாது தகைதல், தமம் என்ற சாத னத்திற் கிலக்கணமாம்; அமைந்த கருமங்களின் பயன் றன்னைத் தொடரா மைக் கக்கருமங்களைப் பற்றறக் களைதல், விட லென்னுஞ் சாதனத்திற் கிலக்கணமாம்; மயக்கத்தைத் தரத்தக்க முன்செய்த நல்வினை, தீவினைக ளின் பயனுகிய வின்பதுன்பங்க ளிப்போது வரின் விலக்க லாகாமையி

னவைகளில் மகிழ்ச்சி வாட்டங்க ளடையாமல் ஒத்தமனத்தோ டனுபவிப்பதே, சகித்த லென்னுஞ் சாதனத்திற் கிலக்கணமாம். எ-று.

அமர்தரு கருமம், வருணாச்சிரமத்திற் கேற்றதாக விதித்த கருமம். இக்கருமப்பயன், செய்தோரைத் தொடர்ந்து, சென்றடைந்து, பிறப்பிறப்பைத் தருதலா, லவற்றைக் களைக என்றதற்குக் காரணத்தோடு பயனும், மேல், கைதவங்களைச் சாத்திரஞ் சொல்லுமோ என்றவிடத்தில் விரித்துக் கூறுகின்றார். ஆச்சிரமி நால்வருக்கும் கருமம் விதித்திருப்பினு, மாக்கவொழுக்கம் ஒழித்தவொழுக்க மென்ற விரண்டனு ளாக்கவொழுக்க மில்லறத்தான் பால தாதலின் "ப்ராஹ்மண: க்ஷத்ரியோவாபி வைஶ்யோவா ப்ரவ்ரஜேத் க்ருஹாத்" என்றது அந்தணன், அரசனுங்கூட வல்லது வணிகனுந் துறக்கவில்லை என்பதாகலின், இல்லம்விடுத லில்லுடையானுக்கே யாதலி னேற்புழிக்கோடலா, லிவ்விதி யில்லறத்தான்பாலதே யென்க. இக்கருத்தும், மேலான விம்மனைவி மக்களர்த்த வீடணைகண் மூன்றிற் போனவன் என்ற நூலாசிரியர் கருத்தா லென்க. மமர் செய்தல், செய்காரியந் தவிர் காரிய மறியாது மயங்கவைத்தல். மம்மர், மமர் எனவாயது விகாரம். சுகமுந் துக்கம்போல வருந்தவைத்தலி னுடன்களைந்தார். உ-ம், "மன்னுத சுக நிலைமை மாணத்தின்பாத்திரமாம் வானுன்போல-வின்னுத தில்லை" என்னுஞ் சக்கிரவர்த்தித் திருமகன் றிருவாக்கு. (௯)

சிரவணப் பொருளைத்தானே சித்தஞ் சிந்திக்கு மாறு
சரசமாய் வைக்கு மித்தைச் சமாதான மென்பர் மேலோர்
பரமசற் குரு நூலன்பு பற்றலே சிரத்தையாகும்
வரமிகு சமாதியாறு வகையுஞ் சொற்பொருளிதாமே. (க0)

ஏனைய விரண்டு சாதனங்களி னிலக்கணங்களைக் கூறி முடிக்கின்ற ரிதில்:—

(இ-ள்) விடயங்களினின்று மீண்ட சித்தம் வீட்டிற்கு நிமித்தகாரணமாகிய கேட்டற்பொருளையே சிந்திக்கும்வழியில் வருந்துதலின்றி, நிலைபெறுத்தும்படியான விதுவே, சமாதானத்திற் கிலக்கணமாம்; மேலான வாசிரியரிடத்து, மத்தகைய நூலினிடத்து மன்பைச் சேர்த்தலே, சிரத்தைக் கிலக்கணமாம்; இவ்விரண்டு சாதனங்களினுடன் மேலான சமமுதலிய வாறின் றொகுதியாக முற்கூறிய சொற்களுக் கருத்த மிவையாகுமென்பர் முதுக்குறையாளர். எ-று.

சொற்பொரு ளென்பதை யனைத்திற்குங் கூட்டுக. ஈண்டுப் பொருளிலக்கணம் என்க. சிரவணகாலத்தில், விடயத்தை சித்தஞ் சிந்தித்தவழி

கேட்டபொருளு நிலையுதலின்றிக் கருதியபொருளும் பெறுதலின்றி இருமை யுங் கெடுமாகலின், சிரவணப்பொருளைத்தானே எனத் தேற்றேகாரங் கொடுத்துக்கூறினர். இன்னு மிவ்வேகாரத்தானே, 'ஊனமிலா ஞான நூல் விசாரத்தாலே யுயர்வீடு நண்ணுமென லுண்மையன்றே, என்ற வாசி ட்ட வாக்கியப்படி கருமம், பத்தி, யோக முதலிய பிறிது சாதனங்களால் வீடுண்டாகா வென்பது ஒருதலை யாகலி,னிவ்வேகாரம் பிரிநிலையுமாம்-ஏனை யவேகாரங்களும், தானு மசைகள். இத்தையென்பதி லைகாரஞ் சாரியை. 'பரமசற்குரு' என்றது, போதகாசிரியன் முதலியோரை விலக்கற்பொ ருட்டு வந்தவடை யென்க. மேலான நூ லென்னுவழி, நூல் பலவற்றினுஞ் சென்று மயங்கு மென்க. இதற்குதாரணம் 'வழிபடு மிதனைவிட்டு மற்றுள நூல்களென்னுங்-குழிகளிற்புரண் டஞ்ஞானக்குணத்தினுற் பிறப்போற் கெல்லா--மொழிவரவொருவர் செய்தற்குரித் தன்றாய்த்தானே யுண்டாங்-கழிதலிற் பரமவின்பங் கற்பங்களாலுங் கூடா' எனவும் 'கற்கக் கசடறக் கற்பவை' எனவும் வருவன. அன்போடு பற்றுதல் செய்யாவிடின், 'துற வற மனையறஞ் சீர் தூய்மை கற்கல்வி நல்லோ-ருறவொடு மகங்கடான மொ ண்டவம் விரதம்பூசை-யறிவிவை யனைத்துமில்லை யாதரவில்லை யாயிற்-பெறுவன மெய்வருத்தம் பெரும்பொருளழிவு மாகோ' என்பதாக முடியு மென்க. இவ்வாறு மொரு சாதன மென்பது தோன்ற, முடிந்தது முடித்த லென்னு முத்தியால் சமாதி யாறு வகையாஞ் சொற் பொரு ளிதாமே என வுங் கூறினா ரென்க. இவற்றின் விரிவைத் திருப்புகழ், திருக்குறண் முத லியவற்றிற் காண்க. இங்ஙன், மிம்மூன்றுஞ் சாதனத்திற் கிலக்கணம் விரித்துக்கூறவே, யேனைய சாதனங்களுக் கிலக்கண மவ்வவற்றி லமைந் தமை யுணர்க வென்க. (ய)

சாதனமின்றி யொன்றைச் சாதிப்பாரு லகிலில்லை
யாதலாலிந்த நான்குமடைந் தவர்க்கறி வுண்டாகு
நூதனவிவேகி யுள்ளி னுழையாது நுழையுமாயிற்
பூதசென்மங்கள் கோடி புனிதனும் புருடனுமே. (கக)

அதிகாரிக்குக் கூறிய சாதனங்க ளின்றியமையாமையை யுவமான முகத்தாற் கூறியவற்றி னும்பயனும், அப்பயன் பெறுமைக்குக் காரண மும் பெற்றா நுமையும், பெறுமையு மிதிற் கூறுகின்றார்:—

(இ-ள்) பொதுவுஞ் சிறப்புமாகிய காரணங்க ளின்றிக் காரியத்தை யாக்கிக்கொள்பவ ருலகி லொருவரு மில்லை. இதுபோல, ஞானமு மிச் சாதனங்களின்றிப் பிறவா தாதலாற், கூறிய சிறப்புக்காரணமாகிய நான்கு சாதனங்களையும் பெற்றோர்க்கே யாசிரியர் கூறு மஹாவாக்கியார்த்தஜன் னிய ஞானமான வகண்ட பிரமாத்மவைக்கிய ஞானமுண்டாகு, முண்டா

லேயே மோட்சமுண்டாம். இங்ஙனமின்றி, யிச்சாதனங்க ணிரம்பாத புதிய விவேகியின் மனதி லவ்வர்த்த மாசிரியர் கூறுதலாற் செல்லாமையா லஞ் ஞானமு, மதன் பயனான மோக்ஷமு முண்டாகா. இங்ஙனம், வரையறுத் துக் கூறுத லென்னே, அச்சாதனங்களைப் பயக்கும் புண்ணிய வினையை யிம்மையிலே புரியாத வொருவனிடத்தே கூறிய ஞான முண்டாகக் கண் டோமே? யெனின்-அங்ஙன முண்டாமாயின், அது வவன் செய்த விறந்த பல்லூழி காலத்தி னற்றவத்தி னவாவறுதியின் பயனான சித்தசுத்தி யுடையவனா யிருப்பன். அன்றியு, மப்படி யுண்டாகப் பெற்றவனே புருட னென்னுஞ் சொல்லுக்கிலக்கியனாவன். எ-று.

வினையோ ரல்ல ரென்பது குறிப்பெச்சம். உலகிற் காரணகாரியங்க ளளவின்மையிற் பொதுவாய்பாட்டாற் கூறினா ரென்க. நான்கென்னுந் தொகைகொடுத் தோதிய தெஞ்சாமைப்பொருட்டு. ஈண்டுப் பொதுக்கார ணம், காலந், திக்கு, இறை, நியதி, மக்கட்டன்மை முதலிய பிறவுமாம். இத னைவிட்சேபமெல்லா முத்தியிற் கூட்டுகிற்கு மென்றதனாற் கொள்க. பயனு க்குப் பயனு முண்மையான வீடுங் கொண்டாம். நூதன விவேகியாவான் கருமி. என்னை? யெனின், பிறவிகடோறுந் தேகமே தானென்றும், விடயங் களை நுகர்தலேயின்பென்றுங் கருதி யவற்றிற் சுழன்று வருந்துவோ னெ டுங்காலத்தின்பின்ன ரிறைவ னருளாலுந் தானறியாது செய்த புண்ணியப் பேற்றினாலு மிவ்வுட லியா னன்றென்றும், விடயங்களை நுகர்த லின்பன் றென்று, மறுமை யுண்டென்று, மதற்கேற்ற நல்வினைகளைச் செய்வே னென்றுங் கருதி யவை யியற்றற்குரிய வருணாச்சிரமத்தி னளவாய்க் கருமத் தையே பற்றிநிற்போ னவனாதலி னென்க. இவனையு மொருசா ரதிகாரி யென வொப்பி யப்போது ஞானமின்றி நிற்றற் குதாரணம். வேதாந்த சூடாமணி "மற்றுமுன ரைவ ரொருவர்க் கொருவ ருயர்வா-யடைந்தவதி காரிக ளங்கவர் கருமிமுமுட்சோ-டளையு மப்பியாசி யனுபவியுடனாருடன்," "மூடமொடு தன்சாதி கருமமேபற்றி முத்தனா மவனூறு பிறப்பினி லொண்கருமி" என, வதிகாரி தொகையுட் படுத்து மிலக்கணங் கூறியு மப்போது ஞான மில்லாமைக்கு மூடமென்றடைகொடுத் தோதிய வாற்றா னுங் காண்க. இனி 'நுழையாது' என்பதை, நுழையாவே எனப் பாடங் கொண்டு செய்யா வென்னும் வாய்பாட்டதாகிய மறைப்பயனிலைய இந்த நான்குமென்னு மெழுவாய்க் காக்கி, புதிய விவேகியின் மனதி லச்சாதனங் களானுந் தோன்றா, தோன்றுமேல் எனக் கூறலு மொன்று. உ-ம் "மே லாஞ் சதுட்ட சாதனங்கண் மேவி நிறைந்தபேர்க் குரைக்கின்-மேலாமது ளாமெனத்திடமாய் விளங்கு மவையிலார்க்கு-மேலாம்பரமன் மாண்மழுவாய் விளங்கியுரைத்தும் விளங்காது-மேலாஞ் சாதனங்கள்வர மேவவேண்டுஞ் சாதுசங்கம்" எனவும், "சரிதை கிரியர் யோகபதத்தின் முற்றிச் சாத

னங்க ணிறைந்தவர்க்கே சாற்றல்வேண்டும்" எனவும் கூறு மத்துவித வுண்மை வாசிட்டமுதலியவற்றானு முணர்க. (கு)

இவனதிகாரி யானே னிந்திரியங்க ளாலும்
புவன தெய்வங்களாலும் பூதபௌதிகங்க ளாலுந் [மிப்
தவன மூன்றடைந்து வெய்யிற்சகித்திடாப் புழுப்போல்வெம்
பவமறு ஞானதீர்த்தம் படிந்திடப் பதறினனே. (கஉ)

இந்நூலுக்குரிய வதிகாரி யிவராவா ரென்பதை யவர்க்குரிய சிறப் பிலக்கணங்களாகிய சாதனங்களைக் கூறும்வாயிலாற் கூறி, யத்தகை யார் மே லின்னது செய்வலெனக் கூறுபவரோ ரதிகாரியின் வரலாறு போற் றொடங்கி யவன் செய்யுஞ் செயல்களைக் கூறுவா னச்சாதனத்தி னவாந்திரபயனாகிய தாபத்திரயத்தைத் தாபமாகக்கண்டவ னதினீங்கி மேலான வின்ப மடையக் கருதுகின்றனனென் றிதிற்கூறுகின்றார்:—

(இ-ள்) அதிகாரியானேன்=இதிற்கூறு மான்மவித்தைக்கு அல்லது, ஆன்மவித்தியா விசாரத்திற் கதிகாரி யென வாயினேன்; இவன்=கூறிய சாதனங்களை யுடையவனே என்றவாறு.

தேற்றேகார மெஞ்சியது. (இவன்மேற் செய்யுஞ் செயல்) இந்திரியங் களாலும்=ஆதி ஆத்மீகத்தினாலும்; இந்திரியம் ஆகுபெயர்-இவையே சரீர மாக நிற்றலினென்க. புவன தெய்வங்களாலும்=புவனங்களிலுள்ளவிவை களுக் கதிதேவதைகளாலும், அல்லது புவனங்களுக்கு அதிதேவதைக ளான வருணன் முதலிய தேவதைகளாலும்; பூதபௌதிகங்களாலும்= பூதங்களாகிய பௌதிகங்களாலும்; பூதங்கள், வியாக்கிராதி துஷ்ட மிரு கங்கள், துஷ்டர்முதலியோரு மீண்டுக் கொள்க. இவைகாரணமாக வருந் தன்மை பௌதிக மென்பர். மூன்று தவனம் அடைந்து=இவை காரண மாக வாராநின்ற மூன்று வெப்பத்தினையும் வெப்பமென வடையப்பெற்ற வனாய்; வெய்யில் சகித்திடாப் புழுப்போல் வெம்பி=வெய்யிலின் வெப் பத்திற் காற்றாதவருந்தி; நிழல் நீர் தேடும் புழுவைப்போல வெப்பமுற்ற வனாய் வற்றால் வருந்தி, பவமறு ஞானதீர்த்தம் படிந்திடப் பதறினனே =அவ்வெப்பத்தைப் பயத்தற் கேதுவாகிய பிறவியை யறுக்கத்தக்க ஞான மாகிய புண்ணியநீரில் மூழ்க விரைந்தனனே. எ-று.

உயிர்கட்குப் பொதுவாகிய தாபத்திரய மிவனுக்குமாத்திரந் துன்ப மாகக் காட்டியனவு மேனையோர்க் கது காட்டாமைக்கேது கூறிய சாதன ங்க ளுடைமையு மின்மையுமா மென்க. இதனா னிவனதிகாரியானனென்று சுட்டிக்கூறி, தவன மூன்ற டைந்து, என்றார்; ஞானதீர்த்தம் படிந்திடப் பதறினன் என்ற திதற்குப் பரிகார மென்க. இங்ஙனமே, “மடமையொடு வாழ்கின்ற வாழ்வி னிசர்மனைதொறு மோட்டிரா துழல்கைவரிசையாகு,

மடர்தனகட்புறவு பரதேசந்தீர்த்தமாச்சிரம மெய்வருத்தமனைத்தினுனுந்-தொடருதவியில்லை மனவருத்தத்தாலே தூயபதமுறு முத்தித்துவாரபாலர்-கடவகுணங் கேட்டியுயர் சாந்திவந்தாற் காதலுந்துன்பமுங் கதிர்முன் கங்குல்போற் போம்" என விருவ ரிலக்கணமுங் கூறினர் வசிட்டரு மென்க. "நன்றறிவரிற் கயவர் திருவுடையர் நெஞ்சத் தவலமிலர்" என்றது முதுமறை. துன்பந் தருபவையாகிய விவற்றைத் துன்பென்றதாகு பெயர். இனித்துன்பந் தருபவையாகிய விவ்வாதியாத்மீகாதிகளைக் களையாது பிறவியை யொழிக்கக் கருதியது பிறவியே யவற்றிற்கு முதற்காரணமாகலி னென்க. இனிக் காரணங் கெடுமேற், காரியங்களொருவர் கெடுக்காதுங் கெடுமென்க. இங்ஙனமன்றிக், காரியமாத்திரத்திற் களையத் துணிவோர், நீர்பெருகும்வழியைவிட்டுப் புறம்பேயணைகோலு மடவோர்போலு மென்க. வெம்பியென்பதை யுவமானத்திற்குங்கூட்டி ஞானதீர்த்தம் படிந்திட வென்றமையா லுவமானத்திலு நீருநிழலுங் கூட்டினு மென்க. இதன் விரிவை வாசிட்டம், விசாரசாகர முதலியவற்றிலுங் காண்க. 'பவமறு ஞானதீர்த்த' மென்றமையா, விஞ்ஞானம், பரஞானத்தினும் வேறு யபர ஞானமென்று யதையடைந்தோர்க்குப் பவமறுமையி, னிப்பவமறுத விதற்கு விசேடமாயிற்றென்க. இவ்வாறே, 'ஆகமவிதங்க ளறிவா ரபர மறிவார்-யோகமொ டுறங்குமவரே பரமுணர்ந்தார்' எனவும் 'புராணமிதிகாச மெவையின் பொருளனைத்தின்-பிராணனறியா துளவிடயத் திவைபிதற்றே' என்வும் 'சிவனடியே சிந்திக்குந் திருப்பெருகு சிவஞானம்-பவமதனை யறமாற்றும் பாங்கினி லோங்கிய ஞான-முவமையிலாக் கலைஞானமுணர்வரிய மெய்ஞ்ஞானந்-தவமுதல்வர் சம்பந்தர்தா முணர்ந்தா ரந்நிலையில்' எனவும், 'மன்னநீ காணநான் முன்காட்டிய வடிவைநெஞ்சா—லுன்னல்வாய்மொழிகளாலே யுரைத்தல்செய் பவர்களெல்லா-மென்னலாற் பிறிதொன்றெய்தா ரியாரினு நல்லாரிங்கு—சொன்னவாரன்றி மற்றையவர் கடந்துறையுங் கேளாய்" எனவும் 'உரைசெயற்கரிதாய் நெஞ்சினுணர் விடப்படாதா யெங்கும்-புரையறக்கலந்து போக்குவரவின்றிப் பொலிந்த வொன்றை-யாசமற்றி யாரோவென்னி லன்னிய மென்னலாமோ' எனவும் வருநிகமாகமவாக்கியங்களாலு முணர்க வென்க. தாபத்திரய மூன்றையுந் தவனமாகக் கொண்டமையி னிதனைத் தீர்த்தற்கு ஞானத்தைத் தீர்த்தயாக வுருவகித்தார்; தாபத்தைத் தீர்த்தல் நீரன்றி யமையாமையி னென்க. இனிப் பதறுவிழல், சூரபன்மனுக்குக் காசிபர் கூறியும், திருதராட்டிரனுக்கு ஸநத்ஸுஜாதர் கூறியும், பயன்படாமைபோல வுண்டாகிய விராகமக்கினமுற்று அதன்பயனைப் பயவா தென்க. பதறுத லெமக்கித்துன்ப மெவ்வாற்றால் வந்ததோ? இது நீங்குமுபாய மியாங்கருதியதோ? பிறிதோ? இதுவாயினிதனை யறிவிக்கவல்லா ரியாவரோ? அவரையா னெவ்வாற்று லெங்ஙனஞ்

சென்றடைவேன்? என்பனவாதிய சிந்தித்தலாகிய கவலை மிகுதி யென்க. பதறினா னென்பதற் குதாரணம், அஞ்ஞவதைப்பரணி, "தெருளுறுங் கவலை பலவுணர்ந் தொருசிறி தலம்பிறவா-தருளுறுங் குருபரனிருந் திட மறிய வென்றெழுமே' எனவும், வாசிட்டம் 'இந்நிலையுளதாவேனா முன தியம் பாராவேனா-மந்நிலை யையமின்றி யகங்காரமின்றி யானே-துன்னாற மாட்டேன் செய்வதேதெனிற் சோறும் வேண்டே-னன்னய நீரும் வேண்டே னலம்பெறுந் துகிலும்வேண்டேன்' எனவும் வருவன. இவ்வாறு துறந்தே வீடடையவேண்டுமோ வெனின்? இதற்குச் சமாதானஞ், சந்தேகந்தெளிதற்படலத்தில் வருணாச்சிரமவிசாரஞ் செய்யுமிடத்திற் காண்க வென்க. இவன் விவேகியாகலின், பவமறுதற்கு ஞானமே யேதுவெனக் கொண்டு ஞானபூமி எழனுள் முதற்பூமியாகிய விதனை யாசரித்தவனாகலி, னிவன் ஞானசாரனாயிற்று. (௬)

ஆனபின் மனைவிமக்க ளர்த்தவீ டணைகண் மூன்றிற்
கானவர் வலையிற்பட்டுக் கைதப்பியோடு மான்போற்
போனவன் வெறுங்கையோடே போகாதவண்ணஞ் சென்று
ஞானசற் குருவைக்கண்டு நன்றாக வணங்கினானே. (௧௭)

அங்ஙனந் தீவிரமுற்றவன் றன்கருதியவதனைப் பெறுதற்குத்தடையாய மனைவி முதலியவற்றைத் துறந்துந் துணையாயவாசிரியனைத் தேடிச்சென்றடைந்தது முதலியவற்றை யிதிற்கூறுகின்றார். இத்துறவு விவிதிஷா சன்னியாசமேயாயினும் வருணாச்சிரமம் விரித்துக்கூறுமையி னிதனைச் சந்தேகந்தெளிதற்படலத்திற் கூறுதலா லாண்டுணர்க:—

(இ-ள்) ஆனபின்=தீவிரமுற்றதின்பின் ; கானவர் வலையிற்பட்டுக் கைதப்பியோடுமான்போல்=வேடரார்த்த வலையிற் சிக்குண்டு, மவர் கைப்பற்றிக்கொல்வதற்குமுன்னே தன்னைப் பிணித்த வலையை யறுத்து, அவர் கைப்படா துயிர்பிழைத்துத், தனக்குச்சார்பாய மற்றொரு காட்டைத் தேடி,விரைந்துசெல்லு மானினைப்போல;மனைவிமக்கள் அர்த்தம் ஈடணைகள் மூன்றிற்போனவன்=ஆகிய விவ்வீடணாத்திரயத்திற் சிக்குண்டுங் காலனார் கைப்பற்றிக் கொல்வதற்குமுன்னர், தன்னைப் பிணித்தவற்றை யகத்தே யறுத்தாற்போலப் புறத்தேயுமறுத் தக்காலனார் கைக்ககப்படாது பிழைத்தாசிரியனைத்தேடியோடுபவன்;வெறுங்கையோடேபோகாதவண்ணஞ்சென்று=வெற்றென்ற கையோடுசெல்லாது, தான் றேடிச்செல்லு மாசிரியனுக்கு வேண்டுவன விவையென்றுகருதி யவர்க்காவனவுந், தமக்கிடன்றனவுங் கைப்பற்றிச் செல்லும்விதத்தாற் சென்று; ஞானசற்குருவைக் கண்டுநன்றாக வணங்கினான்=அங்ஙனஞ்சென்ற தான் றன்னாற் றேடப்பட்ட ஞானாசிரியர் தவத்திற்குரிய வோருத்தமமானவிடத்தி லெழுந்தருளியிருப்ப, வவர்குணங் குறிகளைக்கண்டு, இவர்தா னமது பவத்துன்பை

யொழிக்கவல்ல நல்லாசிரியனென்பதை மனத்தாலுணர்ந்து, தனக்குச் சித்தசுத்திமுதிரவு மவர்க்குக்கருணையுண்டாகும்பொருட்டுக் கைப்பற்றியவற்றை யவர்க்காக்கி, யாப்தமங்கமுதலிய பணிகளைச்செய்து நின்றான். எ-று.

ஏகார மிரண்டு மசைகள். மனைவிமுதலியவை யியமனார்துணை யென்பதற்கு உ-ம், "காதென்று மூக்கென்றுங் கண்ணென்றுங்காட்டியென் கண்ணெதிரே-மாதென்று சொல்லிவரு மாயைதன்னை மறலிவிட்ட-தூதென்றெண்ணுமற் சுகமென்று நாடித்தீர்ப்புத்தியை-யேதென் றெடுத்துரைப்பே னிறைவா கச்சியேகம்பனே" எனவும் "எம வாதனைக் கயிற்றுத் தூண்டிலுக் கிறையுமாவார்" எனவும் வருவன. ஏடணை=விருப்பம்; அது பொருளுக்காகுங்கா லாகுபெயர். உள்ளேயறுத்தோனுக் கப் புறம்பே நிற்குமெனலுத்தமாதிகாரியி னிலக்கணமன்று. சனகனுதியோரைக் கூறுவோர்க்கு அந்நிலை யனைவர்க்கு மொப்பமுடியாமையின், ஒருவாறு தழுவிக்கூறப்பட்டது. இதனை "இல்லறமதனி விருந்துளோனிடத் திருப்பினுஞான மிரும்பிற்—புல்லியமா ரெத்தின மெனப் பொலியு" மென வொருசார் தழுவியேகூறினர் துறவிற்காசாகிய குமாரதேவரு மென்க. போனவன் என்ற திறந்தகாலச்சரிதமாகலின்வழுவன்று. அவர்க்காவனவும் தமக்கியன்றனவும் பத்திர புட்ப பலாதிகளே யாமென்க. என்னை? அவர், சருவ காமாப்தராகலானு, மிவன் றுறந்தோனுகலானு மென்க 'ஆய்ந்தலர்கரங்கொண்டேகி', என்றார் பிறசான்றோருமென்க. விஞ்ஞானத்தின்பொருட்டு ஆசிரியனையடைக சமிதாதி கைப்பற்றி என்பன சுருதிப்பொருள். உத்தமாதிகாரியுஞ் சின்னாட் பணிபுரிகவென் றிருத்தலி னிவ்வாறு கூறினும். இதுதானெடுத்துமொழிதலென்னுமுத்தி. அன்றி, உரையிற் கோடலென்னுமுத்தியெனினுமாம். இதனை, விசாரசாகரத்திலுள்ள சுபசந்ததியின் வரலாற்றாலும் ஸ்ரீ குமாரதேவசுவாமிகளின் சரிதத்தாலு முணர்கவென்க. (எ)

வணங்கிநின் றழுதுசொல்வான் மாயவாழ்வெனுஞ் சோகத்தா
லணங்கினே னையனேயென் னுள்ளமே குளிரும் வண்ணம்
பிணங்கிய கோசபாசப் பின்னலைச் சின்னமாக்கி
யிணங்கிய குருவேயென்னை யிரட்சிக்கவேண்டு மென்றான். (கசு)

அடைந்திவ்வாறு பணிபுரிபவனெருநா ளாசிரியர் தன்னிடத் தருட்கண்வைத்தலு மதுகாரணமாகத் தனது குறையைக் கூறுகின்றனென்றிதிற் கூறுகின்றது:—

(இ-ள்) வணங்கி நின்றழுது சொல்வான்=அவ்வாறு பணிசெய்து வருபவனை யாசிரியர் ஒருநாற் கருணையோடு கடைக்கண்சாத்தலு, மதனையுணர்ந்த மாணுக்க னின்றோடு நமதுகலி யகன்றதென் றுவகையங் கடலின்மூழ்கிக் குறையிரக்கும் பருவமு மிதுதானென்று கருதித், தனி

ரப்பை யனுதரவு செய்யாமைப்பொருட் டவாதுபாதத்தில் வணங்கி யெழுந்து, கூப்பிய கரங்களோடு நின்று, கண்ணீர்பெருக்கிச் சொல்லாநின்றனன்; ஐயனே, இவ்விளி குறையிரப்போர் கூறு முலகவழக்கு. மேல் வருபவையு மன்ன. இணங்கிய தருவே = இதுகாறு மெனது பக்குவநோக்கி யிப்போ தென்னிடத்துக் கருணைவைத்து யான்கூறுங் குறையைக் கேட்டற் கிணங்கிய வெனதாசிரியரே, யொன்று கூறுவன் கேட்பீரென்ன, வதற்கவர், நீ யாதுகாரணம்பற்றி நம்மிடத் தடைந்தனையோ வக்கருத்தைக் கூறுகவென்று கூற; மாயவாழ்வு எனுஞ் சோகத்தால் உணங்கினேன் = பொய்யான வுலகவாழ்க்கையை மெய்யென்று கருதியதனு லுண்டாகுந் தாபத்திரயஞ் சுட, வச்சோகத்தா லுள்ளம் வாடுத லடைந்தேன்; என்னுள்ளமே துளிரும் வண்ணம் = என்னுள்ளத்தி லுண்டான வவ்வாட்டந் தீர்ந்து குளிர்ச்சியடையும் விதமாக; பிணங்கிய கோசபாச பின்னலை சின்னம் ஆக்கி = ஒன்றிற்கொன்று மாறுபட்டதாகி யவ்வாட்கைக் கேதுவான விடயங்களைக் கவராநின்ற கோசம்போன்ற வாசையாகிய சிக்கினை யறுத்துத் துகளாக்கி; என்னை இரட்சிக்கவேண்டும் என்றான் = உமதடிமையாகிய வென்னை யத்துக்கத்தினின்றுங் காக்கக் கருணைகூரு மிதுவே யெனது விண்ணப்ப மென்றான். எ-று.

சகத்துத்தோன்றி யழியுந் தன்மையதென்பான், மாயவாழ்வு என்றான். இங்ஙனமன்றி, யுல கனிர்வசநீயமென் றுணர்ந்தா னென்பாரங்ஙன முணர்ந்தார்க்குமேல் விசாரம் வேண்டுவ தின்மையி னது கருத்தன்று. இங்ஙனமொருவா றுலகை வநித்தியமெனவுந் துக்கமெனவுங் கண்டு துறந்தானேனுந் தா னித்தன்மைய னென்றுந், தனக்குப் பிறப்பிறப்பு முதலிய துன்பங்க ளித்தா லுண்டாயிற் றென்று, மிவை நீங்கியமோட்ச மித்தன்மைத் தென்றும், யா னறிந்திலே னென்பான் மாயவாழ்வெனுஞ் சோகத்தா லுணங்கினேன் எனவும்; என்னையும் பிறவியையு மறிவித்து நீக்க வேண்டுவதை நீக்கி, வீட்டிற் சேருமென்பான் 'கோசபாசம்...யிரக்ஷிக்கவேண்டும்' எனவுங் கூறினான். இதனாற் றுக்கநிவர்த்தியு, மானந்தப்பேறும், வினாவினா னென்றவாறாயிற்று. இதுவே முன் னாரதர் முதலானோ சனற்குமாரர் முதலானோரிடத்தும் வினாவியது மென்க. உள்ளம் வேறு தான் வேறாக விருப்பினு மதனோடுந் தாதான்மியமடைந்துநின்று துக்கத்தையடைதற்கு மிது நீங்கிக் குளிர்தற்கு மிதுவே காரணமாய் நிற்றலின், 'உள்ளமே துளிரும் வண்ண' மென்றான். உ-ம். 'மனநிறைந்திடி லமுதமாய் நிறைந்திடும் வையம்' எனவரும். பிணங்குதல், விடய மொன்றிற் கொன் றுயர்வு தாழ்வாக நிற்றல். கோசம் = உறை, அல்லது மறைப்பு. கோசபாசம் முவமைத்தொகை. இவ்வாசையையென்னாலறுக்கக்கூடவில்லை

வென்பான், பாசப்பிணைலச் சின்னமாக்கி யென்றான். 'இணங்கிய தநு' என்றமையா லருட்கண்ணோக்கங் கொண்டா மென்க. (அ)

அன்னதன் சிசுவையைய னைமீன் பறவைபோலத்
தன்னகங் கருதிநோக்கித் தடவிச்சன்னதி யிருத்தி
யுன்னதுபிறவி மாற்றுமுபாய மொன்றுண்டு சொல்வேன்
சொன்னது கேட்பாயாகிற் றொடர்பவந் தொலையுமென்றான்

இதுகாறுமவ்வதிகாரியின் சரிதங்கூறி மேலாசிரியர் சரிதங்கூறுப்பவ ரவ்வாறு வினவிய மாணக்கனை யவ ரபயஞ்செய்தின்து பிறப்பிறப்ப றதென் றெண்ணற்க நஞ்சொல்வழி நிற்றியே லென்ற றென்றித்திற் கூறுகின்றர்:—

(இ-ள்) அன்னதன் சிசுவை= பிறவிப்பிணிக் கஞ்சித் தன்னைச் சரணடைந் தது நீங்கு முபாயங்கேட்டுத் தன்முன்னாக நிற்குமவனை; ஐயன் சன்னதி யிருத்தி= தன்முன்னாக விருக்கச்செய்து; ஆமை மீன் பறவை போல தன் அகம் கருதி நோக்கி தடவி= கரையில்விட்ட தன்முட்டை குஞ்சாகும்படி யாமை கருதுதல்போ லவனுக் காவரணநீங்கி யான்மானுபவ முண்டாகுக வெனத் தனது சுத்தாந்தக்கரணத்தாற் றியானித்தும், நீரில்விட்டமுட்டை யவ்வடிவை யொழித்துக் குஞ்சாகும்படி மீ னோக்குவது போல விவன் றன்னை யந்தக்கரணசகித வாபாசனாகக் கருதிய கருத்தொழித்து ஆன்மவியல்பை யடைந்து சுபாவசொரூபனாகத் தனது திருபா நோக்கம் வைத்தும், வலிய வண்டகக்கட்டு நீங்கித் தன்னுருவாக்கப் பரிசத் தாற் குஞ்சுண்டாக்கும் பறவைபோல விவன் றேகந் தானென விருக்கும்படி யதைத் தனதாகப்பெறத் தனதுகையாற் றடவியுங் கூறுவது; உன்னது பிறவி மாற்றும் உபாயம் ஒன்று உண்டு சொல்வேன், சொன்னது கேட்பாய் ஆகில்= கூறியதை யொருமைப்பட்ட மனத்தோடும் பிறழ்ச்சியின் றிக் கேட்டுண்மை விளங்கி யவ்வழி யொழுகவல்லையாயின்; தொடர் பவந் தொலையும் என்றர்=நின்னை யனுதியாகத் தொடர்ந்துவந்த பிறவியானது நீங்குமப்போதே யென்றருளினர். எ-று.

உவமானமு முவமேயமு நிரனிறைப்பொருள். கருதி நோக்கித் தடவி யலவ சாமானியதருமம். நீ வருந்தும் பவம் பெரிதேயாயினுஞ் சில்லுபா யத்தா னீங்குமாதலி னஞ்ச லென்பார்,"உன்னது...ுண்டுசொல்வேன்" என்றார். உ-ம். சிவஞானபோதம். 'புணரிசடந்து போகவிரகி லெனுமொழி பொழுதுபுலம்பியாவிபுதல்வ னிறுமுனம்-மூணாவெனு மங்கமேருமறிஞ ரகல்வ றென்றுரையை வழங்கி நாத னுவகையருளுமே' எனவரும். இன்னம் பொருள்கூறுவிடிற் சம்பிரதாய விருத்தமாம், சொன்னது கேட்பாய்

கில் என்றது செல்பம், விதண்டை முதலிய துர்வாதங்களை யொழித்து, யான்கூறிய துனக்குப் போதமாம்படி சுவானுபவசாத்திரத்திற் கொத்த தான வாதத்தாற் கேள், என்றதை யெண்க. உ-ம். "ஆனதர்க்கத்தான் மானத்தாற் குரவனருளினு லனுபூதியதனுன்-ஞானமெய்ப்பொருளை யறிந்திடுமவரே நலம்பெறு முத்தரானவர்கள்" என்பது சுருதிப்பொருள். (கூ)

தொடர்பவந் தொலையுமென்று சொன்னதைக் கேட்டபோதே
தடமடு மூழ்கினுன்போற் சரீரமுங் குளிர்ந்துள்ளாறி
யடருமன் பொழுகுமாபோ லானந்தபாஷ்பங்காட்டி
மடன்மலர்ப் பாதமீண்டு வணங்கிநின் றீதுசொல்வேன். (கஉ)

துன்பந் தருபவையாயுந், தன்னு னீக்கக்கூடாததாயு முள்ள பவ நீங்கற் குபாயமுண்டென்ற வாசிரியர் திருவாக்காலுண்டாகிய வின்பின் றன்மையை யிதிற் கூறுகின்றார்:—

(இ-ள்) தொடர் பவந் தொலையும் என்று சொன்னதைக் கேட்ட போதே = தன்னை யனுதியாகத் தொடர்ந்து வந்துந், தன்னு னீக்க வரியதுமான கொடிய பிறப்பிறப்பு முதலானவை, நாஞ் சொல்லுந் தந்திரத்தைப் பிறழ்ச்சியின்றிக் கேட்டுணர்வாயாகில், இலேசாக மீண்டு வாராமற் போமென் றுபதேசித்த வுபதேசத்தைக் கேட்டவக்கணமே; தடமடு மூழ்கினன் போல் = செல்வழி மாறுபட்ட பதிகன் நெடுந்தூரஞ் சுரவழிச் செல்ல, வவ்வெப்பத்தான் மெய்வருந்தி, நாவுலர்ந், தவ்வா றரிதிற் கடந், தப்பான் மருதம்புக்கு, அங்குள்ள நன்னெறிக்கட் செல்லும் பதிகனை வினுஅயவனு லுணர்த்தப்பட்டதோர் மடுக்கண் மூழ்க, வதனுற் றன் மெய்வெப்பமு, முள்வாட்சியு நீங்கி, யுள்ளும் புறனுத்துத் தட்ப முற்றுன்போல; சரீரமும் குளிர்ந்து உள் ஆறி = தாபத்திரயத்தா லுண்டென்று முற்கூறிய சரீரதாபமும் நீங்கி, புறம்புங் குளிர்ந்து, இதுகாரணமாக வுள்ளுங் கொண்டிருந்த வெப்பு நீங்கிக், குளிர்மையடைந்து; அடரும் அன்பு ஒழுகும் ஆபோல் = அடைந்த வக்காரணத்தாற் றன்னு ளதிகரித்த வாசிரியரிடத் துண்டான வன்பான துள்ளடங்காது பொங்கிப், புறம்பே யொழுகுகின்ற தன்மையைப்போல; ஆனந்த பாஷ்பம் காட்டி = ஆனந்தக் கண்ணீரை வெளிவிட்டு; மடல் மலர் பாதம் மீண்டு வணங்கி நின்று ஈது சொல்வான் = இரவியைக் காண வவிழ்ந்த விதழையுடைய தாமரைமலரின் மணங் கமழ்வு போன்ற மென்மையதானதாயும், புதிய வானந்த மணங் கமழப்பட்ட பாதங்களை மீண்டொருகாலும் வணங்கி, மீண்டெழுந்து நின்று, கூப்பிய கையோடு மேற் சொல்லுமாறு சொல்லத் தொடங்கினுன். எ-று.

சொன்ன தாகுபெயர். சரீரமு மென்ற வும்மை யெண்ணும்மை. இதனை மனத்திற்குங் கூட்டுக. இஃதுணராதா ரிதனை யிறந்தததழீஇய வெச்ச வும்மை யென்பர்; நீரின் மூழ்குவோருக்குச் சரீர முன் குளிர்ந்து, மனம் பின் குளிருதலை யுணராதா ரென்க. யாவரானு, மெக்காலு, மெவற்றானு, நீங்காதோ வென்று வருந்துவோனுக்கு, நீக்குவோரு, நீங்குங் காலமும், நீக்குங் கருவியு மாகிய வவை கண்டமையா, லப்பிறப்பு முதலியவை யொழித்தான் போன்றாயினு னென்பார், சரீரமுங் குளிர்ந் துள்ளமாறி என்றார். இது, பிரியமோதம், பிரமோத மென்றவற்றான், பிரமோத மொழிந்த தாகலி, னிதனையு மின்பின்பாற் படுத்துக் கூறினார். இனிப், பிறவிநீக்க மொருதலை யென்னுந் துணிவுபற்றியதெனினு மமையு மென்க. உவமேயத்திற் கேற்ப வுவமானம் விரிக்கப்பட்டன. மலர் விரிதலுக்கு, மின்பிற்கு மாகலி னாகுபெயர். ஈண்டு மலர், தாமரைமலரைக் கருதிற்று. அதுவே பாதங்கட் குவமானமாக நிற்றலி னென்க. (௧0)

சொன்னது கேட்கமாட்டாத தொண்டனானுஞ் சுவாமி
நின்னது கருணையாலே நீரென்னை யாளலாமே
யுன்னது பிறவிமாற்று முபாயமொன் றுண்டென்றீரே
யின்னதென் றதைநீர்காட்டி யீடேற்றல் வேண்டுமென்றான்.()

இயற்கைக் குணஞ் சோதித்த வாசிரியருக்குத் தன்னுண்மை விளக்கிக் கூறுவேனென்ற வவ்வுபாய மருளுக வென்று மாணாக்கன் வேண்டுகின்றான்:—

(இ-ள்) சுவாமி, நீர் சொன்னது கேட்கமாட்டாத் தொண்டன் ஆனாலும்=தேவரீர் சொல்லும் பொருள்களை யுள்ளவாறு கேட்டு, அதன் வழி யொழுகு நுட்பமதி யில்லாதவனே யாயினும்; நின்னது கருணை யாலே என்னையாளலாமே=உமது பெருங் கருணையா லியான் செல் வழி செல்லவிடாது, என்னை நல்வழியிற் றடுத்தாளுத லும்மாற் கூடுமே; ஆதலா லினி, உன்னது பிறவி மாற்று முபாயம் ஒன்று உண்டு என்றீரே, நீர் அதை இன்னது என்று காட்டி ஈடேற்றல் வேண்டும் என்றான்=தேவரீ ரவ்வுபாயத்தை யித்தன்மைத்து வென்பதாகத் தெரிவித்துத், தெளியச் செய்து, யானிற்குந் துன்பக் கடலினின்றுங் கரையேற்றக் கருணைகூரு மென்றனன். எ-று.

சொன்ன தாகுபெயர். ஏகார மூன்றனு ளீற்ற தசையு, மேனையவை தேற்றமு மாம். நீர், நின்னது ஒருமைப்பால் பன்மைப்பாலாய துயர்வின் கண் வந்த பான்மயக்கம். அரசன்போற் பணித்தற் குரியீர் நீவிராகலி னென்பது பிறழ்ச்சியுணர்ச்சியை மாற்றுக வென்பான், 'சொன்னது கேட் .......யாளலாமே.' என்றான். (௧௧)

அடங்கிய விருத்தியானென் றறிந்தபின் செறிந்தமண்ணின்
குடம்பை யுட்புழுமுன் னூதுங்குளவியின் கொள்கைபோலத்
தொடங்கிய குருவுமான்ம சொரூபமே மருவவேண்டி
யுடம்பினுட் சீவனைப்பார்த் துபதேச மோதுவாரே. (௧௮)

சொல்லாலுஞ் செயலாலு மாணுக்க னதிகார முணர்ந்த வாசிரிய னவன் மெய்யுணருமாறு அருளத் தலைப்பட்டார்:—

(இ-ள்) அடங்கிய விருத்தியான் என்று அறிந்தபின்=உள்ளும் புறனுஞ் செய லடங்கினவ னென்பது செய்து வந்த பணியாலு, மிகக்கூறிய பணி மொழிகளாலு, நன்குணர்ந் ததன்பின்; செறிந்த மண்ணின் குடம்பையுள் புழுமுன் ஊதும் குளவியின் கொள்கைபோல=இப் பிரமரகீட நியாயம் போல; ஆன்மசொரூபமே மருவவேண்டி=பிராந்தியினா லவனுக்குண்டாகிய வனான்ம புந்தி யொழிந்து, தன் சொரூபத்தையே யியல்பாக வவனடைய விரும்பி; உபதேசிக்கத் தொடங்கிய குருவும்=கருணையாற் போதிக்கத் தொடங்கிய வாசிரியரும்; உடம்பினுட் சீவனைப் பார்த்து உபதேசம் ஓதுவார்=எவ்வா றுபதேசிக்கின்றனரோ வெனின்? அவனை பாவனா வடிவமாக வந்த வுடலை யதிட்டித்து நின்ற வாபாசனைப் பார்த் தனுக்கிரகிக்கின்றார். எ-று.

இரண்டேகாரத்துண் முன்னது தேற்றமும், பின்னதசையு மாம். உள்ளே யசாஸ்திரவிருத்தி முதலிய துர்விருத்திகளும், புறம்பே கிரியை முதலிய பிற விருத்திகளு மடங்கினவ னென்பார், 'அடங்கிய.....றறிந்தபின்' என்றார். இவ்விருத்திகளாற் பயனின்றென்பதை, 'அடர்தன நட்புறவு பாதேசந் தீர்த்த மாச்சிரம மெய்வருத்த மனைத்தினாலுந்—துடருதவியில்லை, என்பன முதலாகவரும் பல சுருதி வசனங்களா லுணர்க வென்க. குளவி பரீட்சையி லிறந்ததையும், வசப்படாததையு மொழித்துப், பிழைத்து வசப்பட்டுள்ளதைமாத்திர மெடுத்துத் தன்னுருவாக்குதல் போல, விவரும் 'அலானறிவிலான் சிந்தனைத் துயர்கெடச் சித்தைச் சேர்ந்துளா' னென்ற விரு திறத்தினனல்ல னென்பதை யியற்கைகுணஞ் சோதித்து, முன்னே பின்னே யாவையுமாம் பிரமநீயென் றுபதேசிக்கத் தொடங்கினா ரென்பார், 'அடங்கிய விருத்தியா னென்றறிந்து' எனக் கூறினா ரென்க. சாபாசவந்தக்கரணவுபகிதமான விசேடசொரூப மவன தியல்பாதலி, னவ்வந்தக்கரணவிசிட்டசொரூபமான கற்பித சீவனுக்கு அவ்விசேட சொரூபத்தோடு தாதான்மியவைக்கிய முண்டாகும் பொருட்டு, இக்கற்பித வடிவத்தை யொழித்து, அவ்வேதார்த்த சொரூபத்தைத் தரிசிப்பார் என்பார், 'ஆன்மசொரூபமே மருவவேண்டி யுடம்பினுட் சீவனைப்பார்த் துபதேச மோதுவாரே' எனவுங் கூறினார்.

'எண்ணுறு பெருங் குணத்திராமன் றன்மய னெண்ணுற' என்ற வாசிஷத்தா விவரு 'மான்ம சொரூபமே மருவ' வென்றார். இக்கருத்தை மேல் மஹாவாக்கியங் கூறுமிடத்துக் காண்க. ஈதொழிந்த வுபதேச மந்த கூடாங்குல நியாயமென்க. இதனைச் சூடாமணி யுரையிலுங் காண்க. உபதேசத்தொடக்கத்தி லுடல் பொருளாவிகளைத் தத்தஞ்செய்தலு, மிச்சிலுண்டலு மொருசாராசிரியர் மரபாயினு, மிவ்வாசிரியரது பெருவழக்கன்மையானும், பாடியகாரர் முதலாயினோ ரேலாமையாலு, மிவளுங் கூறிற்றில ரென்க.　　　　(சஉ)

வாரா யென்மகனே தன்னைமறந்தவன் பிறந்திறந்து
தீராத சுழற்காற்றுற்ற செத்தைபோற் சுற்றிச்சுற்றிப்
போராத காலநேமிப் பிரமையிற் றிரிவன்போத.
மாராயுந் தன்னைத்தானென் றறியுமவ் வளவுந்தானே.(கக)

தலைப்பட்டா நுத்தமாதிகாரியாதலி, னவன் பவங்கெடுதந் கேதுவாகிய முடிவாம் விசாரங் கூறின், பயன்படுமென்று கருதி, யகம்பிரமாஸ்மி என்னு மஹாவாக்கியத்தா லவ னான்ம சொரூபத்தை, உத்தேச, மிலக்கணை, சோதனை யென்னு மூன்றோடு மிரண்டு கவிகளால் விளக்கத் தொடங்கி, யிதி லப்பவம் வந்ததற்குக் காரணமு, மதுநிற்குங் காலவளவுங் கூறி, நிறுத்துமுறையா லுத்தேசமுங்கூறி, யுடம்போடு புணர்த்தி, யிலக்கணமு முடன் கூறுகின்றார்:—

(இ-ள்) வாராய் என் மகனே = இவ்விளி வணங்கி நின்றானைத் தன் முன்னாக விருத்திய குறிப்பு. இனி, இதனானே யான் சொல்லு மவ்வுபாயத்தைப் பராமுகமின்றிக் கேட்பாயாக வென்றமைத்து என்றபடியுமாம். தன்னைமறந்தவன் = ஆன்ம சொரூபத்தை மறந்தவன். (இக்காரணத்தால் வேறான வாபாசனு மாயினான்.) ஆனவளவில், போராத கால நேமிப் பிரமையில் திரிவன் = பிரமஞானமன்றி யிவ்வாபாசனை தானழியாத காலமாகிய சக்கிரத்தினது சுழற்சி தன்னைச் சுழற்ற வதிலகப்பட்டு, அத்துடன் றானுஞ் சுழலாநிற்பன்; எப்படியெனின்? தீராத சுழல்காற்று உற்ற செத்தை சுற்றி சுற்றி திரிவதுபோல் = இதுபோல வென்க; ஈண்டு சாமானிய தருமம், தன்னிலை தவறுதலுஞ், சுழலுதலுமாம். சீவனுக்குச் சுழற்சிப் பிறப்பிறப்பான் மேற்கீழ்ப் போதலும், வருதலுமாம். போராத காலநேமி என்றது போலவே, வாசிட்டத்தும் 'இறப்பிலா விந்தமோகம்' எனவும், 'ஆயபிரம முன்னளவு மந்தமாயைக் கழிவில்லை' எனக் குமாரதேவருங் கூறினாராயினர். அவ்வாறலையுதலு, மவ்வப்பிறவிகளிற் செய்த நிட்காமபுண்ணிய முதிர்ச்சியா லப்பிறப்பிறப்பு துன்பமென்று தோன்ற,

தோன்றவே யின்மைப்க்கருத, கருதவே யஃதெதத்தால் வருமென்றாராய, ஆராயவே யஃது அனைத்தான தொழிலறுதியாகிய வான்ம விசாரத்தான் வருமென்னும் வேதமொழிகொண்டு; போதம் ஆராயும் தன்னை தான் என்று அறியும் அவ்வளவும் தானே = அவ்விசாரஞ் செய்யுந்தன்னை யான் மாவென்று அப்பிரதிபந்தாபரோட்சமாகக் காணுங்காலத்தளவேயாம். எ-று.

அப்பாற் றிரியா னென்ப தெஞ்சியது. ஏகாரம் தேற்றம். தானிடைச் சொல். தன்னை யுணராமையாற் பிறப்பிறப்பும் அவை நீங்கத் தன்னையே யுணரவேண்டுமென்பதற்கு உ-ம். பிரமகீதை: "பொற்பொருள் புதைத்து புவியிற் புலனிலார்போய், நிற்பினு நடிப்பர்கணி நித்தமுலகத்தோர், தற் பொருள் சுழுத்திதனிலுற்று மதுதானே, யற்ப மறிகிற்றில ரயர்ச்சி வலி யையோ" எனவும், வாசிட்டம்: "சொரூபம் விட்டகலல்மோகம் வேறு சொல்லிடமுன்பின் பில்லை" எனவும் வருவனவற்றாற் காண்க. இனிப், பிறந்திறந் துழல்வதற்குப் பல காரணங்களு முளவேனுங் காலஞ்சிறந்த 'காரணமாய்' நின்று துன்புறுத்துவதாதலி னதனையே யீண்டுக் கூறினா ரென்க. இதற்கும்—'துப்புடையன், விவிதமாந்தோற்றமுள சகங்களினுற் சுற்றிச்சுற்றி, வைப்புடைய வவற்றவற்றும் பெருங்கற்பம் பலகாலும் வட் டஞ்செய்யும்' எனவும், 'படைப்பதுங் காலந்தானே படைத்தவை யாவுந் துடைப்பதுங் காலந்தானே' எனவும் வரும் வாசிட் டோபாக்கியானங்களா லறிக. ஈண்டு காலங் கருமவிசிட்டம். தன்னைத்தானென்றுணர்தல், 'அகம் பிரமமென்றுணர்தல்'. இஃதுத்தேசமாகக் கூறிய வாக்கியம். இம் மதத்தையே விசாரசாகரக்காரரு மேற்றன ரென்க. போதமாராயுந்தன்னை என்று போதத்தைக் குறிப்பித்தமையா லான்மாவின் சொரூபம் போத மென்று இலக்கணங் கூறியவாறுமாயிற்று. (௧௯)

தன்னையுந் தனக்காதாரத் தலைவனையுங் கண்டானேற்
பின்னையத் தலைவன்றானாய்ப் பிரமமாய்ப் பிறப்புத்தீர்வ
னுன்னைநீ யறிவாயாகி லுனக்கொரு கேடுமில்லை
என்னைநீ கேட்கையாலே யீதுபதேசித் தேனே. (௨௦)

இதிற் சோதனையை யாதவாறு தொகுத்துக் கூறுகின்றார்:—

(இ-ள்) தன்னையும் = அங்ஙனங் கற்பிதனான சீவனான தன்னையும்; தனக்கு ஆதாரத் தலைவனையும் = அச்சீவனுக்கு விசேடாதாரமான கூடஸ்த னாகிய முதல்வனையும்; கண்டானேல் = முறையே யவ்விருவரையு மாரோப வதிஷ்டானங்களாகப் பேதித்து இலக்கணங்களோடு முன்னதாகக் காண் பானாயில்; பின்னை அத்தலைவன்தானாய் = அவ்வுணர்ச்சியின் பின்னாரோ பங் கற்பிதமாதலி னது தானன்றென்று மதற்கதிஷ்டானமான கூடஸ்த

னுண்மை யாதலி னதுவே தானென்றுமாய்; பிரமமாய்=அதன் பின்னசு் கூடஸ்தனுன தானே பரிபூரணப் பிரமமென்றுமாய்; பிறப்புத்தீர்வன்= இக்காட்சியான் முன் மறைத்த வஞ்ஞான நீங்குவது காரணமாகத் தனது பிறப்பை யொழிப்பன்; ஆதலி னிவ்வுபாயமன்றி மற்றொன்றானு மொரு வனு மொருக்காலும் தனது பிறப்பை யொழிக்கானென்பது கருத்து; உன்னை நீ அறிவாய் ஆகில்=இங்ஙனமிருத்த வினிக்கூறிய சோதனையின் படி யுன்னுண்மையைச் சோதித்தறிவாயாகில்; உனக்கு ஒரு கேடும் இல்லை=கூறியபடி யுனக்கு வருவதொரு கேடு முண்டாகாது, இங்ஙன மாகவே சுகப்பிராப்தியு முண்டாகு மென்பதுமாம்; என்னை நீ கேட்கை யாலே=எம்மைத் தஞ்சமாக வடைந்து நீ பிறப்பை யொழிக்கு முபாயம் வினவினமையால்; ஈது உபதேசித்தேனே=வேதாந்தாங்கமாயு மான்றோ ரனுபவமாயும், யுத்திக்கொத்ததாயுமுள்ள விவ்வரிய பொருளை நினக்குப தேசித்தே னித னுட்பந் தெரிந்துகொள். எ-று.

இவற்றிற் கிவ்வாறன்றி வேறுவேறாகப் பொருளுரைத்திடர்ப்படுப. தஞ்சமாகவடைந்து வீடுவேண்டி நின்றோனுக்கே யிவ்வுபதேசமருளவேண்டு மென்பதற் குதாரணம், 'நல்ல காதல்செய் நண்பனுமா யெமை, யல்லதி யாவு மறியலை யாதலாற், சொல்லன் மேயினன்' என்ற பகவான்றிருவாக்கு வருமாறு. (௧௭)

என்னைத்தான் சடனுயுள்ளத் தெண்ணியோ சொன்னீரையா
தன்னைத்தா னறியாமாந்தர் தரணியி லொருவருண்டோ
பின்னைத்தா னவர்களெல்லாம் பிறந்திறந் துழலுவானே
னின்னைத்தா னம்பினேற்கு நிண்ணய மருளுவீரே. (௨௧)

கூறியவனுபவம் பொதுவாயிருந்தும் பிறப்பறுமையின் சிறப்பாக்கக்கூறிப் பிறப்பொழியு மென்று கூறியதை யத்திறத்திடனுதலி னிதை யொழித்தருளுக வென்று மாணாக்கன் வினவுகின்றான்:—

(இ-ள்) ஐயா என்னைத்தான் சடனு யுள்ளத்து எண்ணியோ சொன் னீர்= என்னை யித்துணை யறிவிலியா யுமது திருவுள்ளத் தெண்ணியோ, 'உன்னை நீயறி' என்ற விவ் வுபதேசத்தை யருளினீர்; தரணியில் தன்னை தான் அறியா மாந்தர் ஒருவர் உண்டோ=யானேயன்றி யிவ்வுலகின்கண் மக்களா யுள்ளா ரனைவருந் தம்மைத் தாமென்றறியாதா ரொருவரேனு மில் லையே; இங்ஙனமாக, பின்னை அவர்கள் எல்லாம் பிறந்து இறந்து உழல் வான் ஏன்=அறிந்தபின்னரும் (அனுதியே யறிந்திருக்கவென்றபடி) அச் சிவர்கள் பிறந்திறந்து சுழன்று வருந்துங் காரணமென்னை? நின்னை நம் பின ஏற்கு நிண்ணயம் அருளுவீர்=உம்மைச் சிவமாக நம்பின வடிமைக்

குத் தானென்றறித விவ்வாறே விதற்கு வேறே வந்நிச்சயத்தைத் தெளிவு பெறத் திருவருள் புரிவீராக. (எ-று)

ஏகார மீற்றசை. நீர் நின்னை. ஒருமைபன்மைமயக்கம். ஐயா நீர் என்பது மதூ. தன்னை என்பது ஒவ்வொரு சீவரிடத்துஞ் சென்றியைதலின் பலரீறாய் மாந்த ரென்பதனோடு முடிந்தது. பிறந்திறந் துழலுவதற்குக் காரண 'நான்' என்றறித லில்லாமையாகிய வறியாமையாயி னதற்கு மாறாய வவ்வறித லனைவரிடத்துங் காணப்படலி னந்நுவயவியதிரேகங்களுக்கு மாறுபடலி னவ ரனைவரும் பிறப்பொழிவரே, ஒழிவரெனின் அது முன்னரே முடிவுபெறும், பெருமையானு மிப்போது மதற்கேதுவாக நீர் கூறிய துக்க நிவர்த்தியு மானந்தப்பேறு மியாவரிடத்துங் காணேன், அன்றியுஞ் குரு சாஸ்திரமுதலாக வேதத்திற் கூறிய சாதனங்களும் பயனற்றனவே என்பான், 'தன்னைத்தானறி.........துழலுவானேன்' என்றான். நித்தியாநித்திய விவேகமுடையவனாயினும் பஞ்சகோசங்களைக்களைந்து நின்ற சாட்சி சொரூபந் தானெனத்தெளியா தக்கோசங்களிற் சுகசமுதலிய தாதான்மியமுடையவனாய்மயங்கி வினாவலி னிவ்வினா வறியாவினா. மேல் தேகியாரென்பதனாலு மிது விளங்கும். நின்னைத்தா னம்பினோற்கு நின்னைய மநருளுவீரே என்றது, துன்புற்று வினாயினோற்குக் கூறிய தேவரீர் கருத்து செவ்விதாக வெளிப்படாமையாற் கலக்கத்தின் மேற் கலக்கமாகின்றதாகலி னதையகற்று மென்பதை யென்க. (கரு)

> இன்னது தேகந்தேகி யிவனென வுணர்வன் யாவ
> னன்னவன் றன்னைத்தா னென்றறிந்தவ னருமென்றார்
> சொன்னபின் றேகியா ரித்தூலமல்லாம லென்றான்.
> பின்னது கேட்டவையர் பீடையுநகையுங் கொண்டார் (உஉ)

ஞானவடிவினனாகத் தன்னையறிகவெனக் கூறிய கருத்தைப் பகுத்தறியாது மயங்கியோனுக் கங்ஙன மறியும் விதத்தை யோராற்றற் பகுத்துக் கூறுகின்றார்:—

(இ-ள்) தேகம் இன்னது தேகி இவன் என உணர்பவன் யாவன் = அவ்வாறு வினாயினானை நோக்கிக் கூறுகின்றார்: கருத்தறியா திவ்வாறு வினாவுகின்றாய். என்னை யெனின்? அகமென் றறித லிருவகைத்து. ஒன்று சாமானியம். அது நீ யுணர்ந்தவாறு பொதுவாயறித லவ்வாறறித லறிவன்று. மற்றொன்று, கரசரணாதிய வாகாரமாயிருந் தறுவகை விகாரத்தோடுங்கூடியிராநின்ற வித்தூலசரீரமதனை நித்தன்மைத்தெனவு, மிதனுளிருக்கு மறிவாகிய நிர்விகாரமாகியுமுள்ள தேகியானவ னித்தன்மைய னெனவும் பகுத்தது தற்குரிய விசேட விலக்கணங்களோ டாராய்பவன் யாவனோ, அன்ன

வன் தன்னைத்தானென்று அறிந்தவன் ஆகும் என்றார்; சொன்னபின் = இங்ஙன மாசிரிய ரறியும்வகையை யொருவாறு பகுத்துக் கூறியதின்பின்; இத்தூலம் அல்லாமல் தேகி யார் என்றன் = இத்தன்மையாகவினாயினான், யாதினாலெனின்? ஜெனன முதல் மரணபரியந்தமு மனைவருக்கு மநாதி தொட்டித்தூலத்தினிடத்தே பிராந்திசவத்தியாசமன்றியிதுபோல சூக்கும சரீராதிகளிடத்துள்ள வத்தியாசம் பிரத்தியட்சப்படாமையாலென்க. பின் அது கேட்ட ஐயர் = அவ்வாறு மாணாக்கன் வினாவியதின்பின்ன ரவ்வினாவைக்கேட்ட வாசிரியர்; பீடையும் நகையும் கொண்டார் = அகத்தே துன்பையு முகத்தே நகையு முடையரானார். (எ-று)

ஸ்ரீ கண்ணபிரானு மிவ்வாறு தேக தேகிகளைப் பகுத்தறிதலே முத்தியென்று'க்ஷேத்திர க்ஷேத்திரஞ்ஞ'வத்தியாயத்தி லருளியதனாலு மறிகவென்க. கூறியவா றகமென்றறித லிருவகை யென்பதற்கு, மிவற்றிலொன்று பந்தத்திற்கேது வென்பதற்கு, மற்றொன்றுமோக்ஷத்திற் கேதுவென்பதற்கும் உ-ம். வாசிட்டம்: 'மூவகை யுலகிலிந்த வகங்கார மும்மையென்று, மேவரு மிரண்டு நன்று மிகவுமென் றீனமானமாகும், யாவதுபரமு நாமு மீறில மெய்யலாதோர், பாவனை யிலதென் றோதும் போதமே பரமாங்காரம்.' "செந்நெல்வாலினுஞ் சற்றாகிச் சகங்களுக் கயலாயென்று,மன்னுதுமெனக் கென் போத மற்றையாங் காரமாகு, மிந்நிலை யிரண்டுஞ் சீவன்முத்தர் பாலிருந் திடேற்றித், துன்னரு முத்திநல்குஞ் சுழலுறும் பந்தநல்கா" "காசரா ணுதி மட்டாய் நானிவ னென்று காணுங், திரமது தானேமூன்று மங்காரஞ் செகத்தோர்க்கெல்லா, முரியதா மிகவும்பொல்ல தற்பவமென்னுநச்சு, மரமெழு மூலமாகும் வருந்தியு மொருக்கவேண்டும்" எனவருவன. இத்தூலமல்லாமல் வேறே தேகி யார் என்றதை, இந்திரிய முதலாகப் புருடனீறாகக் கூறு மதஸ்தர்களின் கொள்கையையு முடன்கூட்டி வினாவிய வாறுமா மென்க. இதனை மேற் பஞ்சகோசங் கூறுமிடத்திற் சிறிது விளங்கும்.

பீடையு நகையுங் கொண்டதாவன: யாமுள்ளவா றுணர்த்தவு முணராதனுன்மாவைத்தானென்று கருதி வருந்துகின்றானென்றவன்மாட் டன்புண்டாயது காரணமாக வருமிரக்கத்தினா லுண்டாவது பீடை. இவ்வாறு பொருள் வேறுபாடுகளை யுணர வொட்டாது மறைப்பதாவரண சத்தியன்றோ! இவ்வாவரணந் தனக்கென வோருருவில்லாதிருந்து முளது போலக் காட்டியு முயிர்களைத் தன்னுண்மை யுணரவொட்டாது மறைக்கும் வலிமை பெற்றதன்றோ! வென்னும் வியப்புக்காரணமாகத் தோன்றுவது நகையு மாமென்க. அன்றியும், நகை விளைதற் கேதுவாகிய விடமேட்டனுள் பீடையு மொன்றாதலின், பீடையும், அதனாலாகிய நகையு மெனக் காரணகாரியமாகக் கொண்டு, ஆவரணத்தாற் றன்னுண்மை யுணராது

மயக்குகின்றனவே யிவ்வுயிர்களெல் லாயிர்சண்மாட் டருளுடைமையொன் றாமே கோடலுமொன்று. துன்பகாலத்தி னகையுண்டாதற் குதாரணம்: "இடுக்கண்வருங்கா னகுக வதனை, யடுத்தூர்வ தஃதொப்ப தில்" என்ற முதுமறை. நகை மூன்றனு ளிது முருவலிப்பு. அன்றியும், 'அருமறை சோது மறிவிலான் செய்யும், பெருமறைதானே தனக்கு' என்ற கட்டளைப் படி யிவ்வரியவாக்கியங்களை யறிகிலனே யென்னும் பீடையு மறியாதா னறிந்தான்போன்று கூறினு னென்னும் நகையுமெனக் கோடலு மொன்று. சொன்னபின் றேகியா ரித்தூலமல்லாம லென்ற னென்றது, இல்லை யென்னு மசத்தாவரணமு, மிருந்தாற் கண்டுகொள்வேனே யென்னு மபானுவரணமும் விளங்கிக்கிடந்தமை காண்கவென்க. (௧௬)

> தேகமல்லாமல் வேறே தேகியார் காணேனென்றாய்
> மோகமாங் கனவில்வந்து முளைத்திடு மவனார்சொல்லாய்
> சோகமாங்கனவுதோன்றாச்சுழுத்திகண் டவனார்சொல்லாய்
> ஆகநீ நனவிலெண்ணு மறிவுதா னேதுசொல்லாய். (௨௫)

தேகியைப் பகுத்துக்காட்டுக வென்றனுக்குத் தடத்தவிலக்கணையா லனுபவத்தி லத்தேகியைப் பகுத்துச் சூசகமாகக் காட்டுகின்றார்:—

(இ-ள்) தேகம் அல்லாமல் வேறே தேகி ஆர் காணேன் என்றாய்= நீ கூறிய விவ்வினாவிற்கு விடை கூறாதும்; மோகம் ஆம் கனவில் வந்து முளைத்திடும் அவன் யார்=இத்தூல தேகமே நீயாகி னிது கிடந்துழி கிடக்க நித்திரா மோகத்தா லுண்டாகிய சொப்பன வுலகிற் சென் றாங்குள்ள பொருளைக் கண்டு நின்றானவன்; சோகம் ஆம் கனவும் தோன்றா சுழுத்தி கண்டவன் யார்=துன்பமயமான வக்கனவுந் தோன்றுதலற்ற சுழுத்தி யிற் சென்று அங்குள்ள சூனியத்தைக் கண்டவன் யாவன்; ஆக நனவி லெண்ணும் அறிவுதான் ஏதோ நீ சொல்லாய்=ஆண்டுக் கண்டவற்றைக் கண்டவாறாக சாக்கிரத்தில் வந்தவ் வனுபவங்களைக் கருது மறிவானதுதா னியாண்டையதோ நீயே சொல்லுவாயாக. எ-று.

சொல்லுவாயென்று வினாக்கடோறுங் கூறியது மாணாக்கன் முன் போன் மயங்கிப் பராமுகமாகா தவ்வவ்வினாக்களையு நன்குணர்ந்து விடை கூறு ஞாபகத்தற் றென்க. இவை யறிவினா. "வினாவுஞ் செப்பே வினா வெதிர் வரினே" என்றமையா லிவ்வினாக்கள் விடையின் பக்கலுமாம். இங்ஙனம் பொருள் கொள்ளுங்கால், சொல்லாய் என்றதை முற்றெச்சமாக்கி சொல்லுவா யிங்ஙனங் காணுதலா னீயே தேகியெனப் பொருள் கொள்கவென்க. மயாவென்றதுபோல மோகமென்றது தலைக்குறை.கனவு சுழுத்தி ஆங்குள்ள பொருள்கட்காகலி னதுபேயர். முளைத்தவன் காண்

டலுக்காகலி னுதபெயர். எண்ணும்மை விகாரத்தாற்றொக்கன. சோகம், லந்தி வென்றதுபோல மிகுதிபற்றிய குறியீடு. ஆண்டின்பமு முளதாதலி னென்க. இவ்வவத்தையின் விரிவை மேற்கூறப்படும். இம்மூன்றவத்தை யிலு மாறு தொருதன்மைத்தாக நின்றதே தேகியென் றன்னுவயவியதி கரேகங்களா லான்மா விவற்றிற்குவேறென்பதைச்சூசிப்பித்ததாமென்க. இதனானே யேனைய மதத்தர் கொண்ட வான்ம நின்னைய நின்னைய மன் றென்று மறுத்தவாறு மாயிற்று. என்னையெனின்? சாக்கிரஞ் சொப்பன த்தி லில்லாமையாலும், சொப்பனஞ் சுழுத்தியி லில்லாமையாலு, மச்சுழு த்தி சாக்கிரத்தி லில்லாமையாலு மிவை விபசார முடையன. ஆதலி னிவற்றுட்பட்ட பஞ்சகோசங்களிலொன்றை யான்மா வெனல் பிராந்தி. இவ்விசார மேற் பஞ்சகோச விசாரஞ் செய்யுமிடத்துக் கூறுவாம். இனி, இம்மூன்றிலுமுள்ள வியாவகாரிகம், பிராதிபாசிகஞ் சூன்னிய முதலிய விடயங்களைக்கண்டு மவை மாறுபட்டதுபோலத் தான் மாறுபடாது ஒரு நிலைமைத்தா யறிவுவடிவாயுள்ளதே யான்மாவென நிச்சயிக்கப்பட்ட மையி னென்க. (௧௭)

நனவுகண்டது நான்கண்ட நனவுள நினைவுநீங்கிக்
கனவுகண்டதுஞ் சுழுத்திகண்டதும் வேறொன்றே போற்
றினமனுபவித் தலொக்குந் தெரியவுமில்லை சற்றே
மனதினிலுதிக்கும் பின்னை மறைக்கும தருளுவீரே. (௨௪)

தடத்தவிலக்கணையா லாசிரிய ரநுபவியதைத் தானேநுவா றறிந்த வாறு கூறியு மதிற் றதான்மிய நீங்காமையா லதை நீக்குமுபாயம் வினு வுகின்றன்:—

(இ-ள்) இச்சாக்கிரத்தை யறிந்தது மிதிற் காணப்பட்ட நினைவு நீங்கி வேறொன்றாகக் கனவையறிந்தது, மதுநீங்கிய சுழுத்தியைக் கண்டது நானே. எனக்கவை வேறொன்று போலவே யனுபவிப்பது, நாடோறு மொத்திருக்கின்றதாயினு மவ்வநுபவ னென்கு புலப்படாமையா லென் மன திற் சற்றவ்வநுபவ முதிக்கும் பின் மறைவுபடுகின்றது. ஆதலி னிவ்வநு பவத்தை வேறோருபாயத்தால் வெளிப்பட வருள்வீராக. எ-று.

மாறிவரு மவத்தைகளை நடுநின்றுணர்பவ னுனேயாயினு மிவ்வவத்தை களை யிலக்கணங்களோடு மறிவித்து, மிவ்வவத்தையுடையவர்களையு மவ் வாறே யறிவித்து, மிவற்றிற்கு விலட்சணனுன வென்னையு மவ்வாறறி வித்து, மிவற்றின் பேதந்தெரிய வொட்டாமன் மறைத் ததினியல்பையு மறிவித்து, மிம்மறப்பை யுமது கிருபாபானுவா லொழித்தென்னை யுள்ள வாறு அறிவியுமென்பான், 'சற்றே மனதினி லுதிக்கும் பின்னை மறைக்

து மதநுளுவீரே என்ருனென்க. உ-ம், வாசிட்டம்: "இம்மொழிகளா விமைப்போ திருளாமீள விமைப்போது வெளியாகு மிவ்வாருகி, மைம்மு இலா லற்பமாய் வெய்யிற் சீதம்வந்து வந்துபோகின்ற மழைநாளொத் தேன்" எனவும் "இந்தவடிவா மெனக்கோ ரேதுகாணே னிடர்மனத்தாரு வின் விதையா மகங்காரத்தை, யுந்துவகை யறிகிலெனுந்த வுந்தவோடி வரு மிதனுலுள்ளுடைந்தேன்" எ-ம். வருவன. அவத்தை யென்பது விருத்தியி னபிமானகாலத்தை யாதலின், நனவுள நினைவு நீங்கி என விருத்தியின்பாற் படுத்துக் கூறினனென்க. இஃதையவினு. (கஅ)

*தாலத்தின் மரங்கள்காட்டித் தனிப்பிறை காட்டுவார்போ*
*லாலத்தி னுடுக்கள்காட்டி யருந்ததி காட்டுவார்போற்*
*றாலத்தை முன்புகாட்டி சூக்கும சொரூபமான*
*மூலத்தைப் பின்புகாட்ட முனிவரர் தொடங்கினரே.* (உ௫)

தெய்வகதியனன்றி மற்றையோருக்கு மஹா வாக்கியத்தளவா லான்மஞான முண்டாகா தென்பதைக் கருதி, "வாராயென்மகனே" என்பது தொடங்கி யிதுகாறுங் கூறிய வுபாயங்களாற் றன்னுண்மை யுணராத மாணுக்கனுக்கு வேதாந்தங்கள் கூறியவுழி யிரண்டினுலு மவனைத் தெருட்டற்போருட்டு முன்ன ரவ்வவத்தைக டோன்றற்கிடனுகிய தத்துவங்களி னுற்பத்தி கூறுதலாகிய சிருட்டியை யிதுமுத லிருபது கவி களா லத்தியாரோப வுத்தியைக்கொண்டு கூறத்தொடங்கி, யிக்கவியி லதற்குச் சகாயமாகிய நியாயஞ் சிலவற்றைக் கூறுகின்றார்:—

இது வதுத்துக்காட்டலென்னு முத்தி.

(இ-ள்.) *சாலத்தின் மரங்கள் காட்டி தனிப்பிறை காட்டுதல்* சாகா சந்திரநியாயம். தனிப்பிறை யென்றதனு லேனைய கலை கலவாத மூன்றும் பிறை யெனக் கொள்க வென்க. ஆலத்தி னுடுக்கள் காட்டி யருந்ததி காட்டுதல்: "தூலாருந்ததி நியாயம்" இந்நியாய வுவமானங்களைப்போலத், தூலத்தை முன்புகாட்டி="உன்னது பிறவிமாற்று முபாயமொன்றுண்டு" என்ற வுபாயத்தைத் தூலமாகவுஞ் சூக்குமமாகவு மமைத் திதுகாறு மவற் றிற் றூலமாகிய வுபாயத்தை யவனறியும் வண்ணங் காண்பித்து மதனு லுணராதானுக்கு; சூக்கும சொரூபமான மூலத்தை=மற்றென்ருகிய சூக் கும சொரூபமாகிய மூலத்திலே யுள்ள வுபாயத்தை; பின்பு காட்ட முனிவ ரர் தொடங்கினர்=மே லுணர்த்தும்பொருட்டு ஆசிரியர் தொடங்கினர் எறு.

தாலம்-பூமி, மரங்கள் சினையாகுபெயர். ஆலம் குணவாகுபெயர். ஆலம்-பெருமை. மேல்வரும் யுத்தியை மீண்டுங் கூட்டிமும். முனிவரர்=

மாகநீலருட் சிறந்தோர். ஏகாரமீற்றசை. காட்டுவாரென முன்னிருதர மேற்கோளாகக் கூறியது இலக்ஷணீர்களை யென்க. இந்நியாயங்க டடத்த விலக்கணை. தாட்டாந்தத்திலுந் தூலோபாயஞ் சூக்குமோபாய மென்பன நிரையே தடத்த விலக்கணையுஞ் சொரூபவிலக்கணையுமா மென்க. என்னை யிவ்வாறு கூறியதெனின்? கொழுச் சென்றவழித் துன்னூசி யினிது செல்லுமாப்போல பரூஉப்பொருள் கண்டார்க்கு நுண்பொரு ளினிது விளங்கு மாகலி னென்க. மூலோபாயம்-மூலத்திலேயுள்ள வுபாயமெனப்பொருள் படுதலின் வேதங்களிலேயுள்ள வுபாய மென்றாயிற்று. இதை 'உரைக்கும் வேதாந்தமெல்லா' மென்று மேற் றொடங்கியதனுற் காண்க. இனித், தூலமாயுள்ள பிரபஞ்சத்தை யத்தியாரோபவுத்தியான் முன்னதாகக் காட்டிப் பின்னர் சூக்குமசொரூபமா யப்பிரபஞ்சத்திற்குக் காரணமான பிரமத்தை யபவாதயுத்தியாற் காட்டவென்று கூறலு மொன்று (௧௧)

அத்தியா ரோபமென்று மபவாதமென்றுஞ் சொல்லு
முத்தியாற் பந்தம் வீடென் றுரைக்கும் வேதாந்தமெல்லா
மித்தையா மாரோபத்தாற் பந்தமா மபவாதத்தான்
முத்தியா மிவ்விரண்டின் முந்தியா ரோபங் கேளாய் (௧௨)

அத்தியாரோபாபவாதங்களை வேதாந்தங்கள் கூறியவாறே கூறத் தொடங்கி யவை யவற்றைக் கூறுகின்றதற்குக் காரணமும், பயனுந் தொகுத்துக் கூறித் தூலத்தை முன்னே காட்டுவதாகிய வத்தியாரோபத்தி விலக்கணமுங் கூறத்தொடங்குகின்றார்:—

(இ-ள்) வேதாந்தங்களெல்லாம்=உபநிடதங்க ளனைத்தும், பந்தம் வீடென்று=சீவர்களிடத்தேநின்றும் பந்தமானது விடுத லெத்தாலென்று கருதி; அத்தியாரோபமென்றும் அபவாதமென்றும் சொல்லும் உத்தியால் உரைக்கும்=கற்பித்த விவ்வுத்திகளா லவ்வுபாயத்தைக் கூறுகின்றன; அவற்றுள், மித்தையாம் ஆரோபத்தால் பந்தமாம்=பொய்யாகிய வாரோபத்தினுற் பந்தத்தினியல்பு தோன்றுதலால்; அபவாத யுத்தியால் முத்தியாம்=அபவாதயுத்தியா லுண்மையான முத்தியினதியல்பு தோன்றும்; இவ்விரண்டில் முந்தி யாரோபங் கேளாய்=முன்னரோ யாரோபத்தினது சொரூபத் தன்மையை யாங்கூற நீ கேட்பாயாக. எ-று.

பந்தம் வீடு என்பதை யும்மைத்தொகைநிலைத் தொடராகப் பொருள் கூறின், கூறியதுகூறலாம். அன்றியும், பந்தத்தினது சொரூபத்தை ரச்சுசர்ப்பம்போல வென்று சொரூபாசித்தியைக் கூறுதலன்றி, யான் மாவி லதனைக் கற்பிக்க வேண்டாமையின், கற்பிக்கி னூல்வழக்கோடு மாறுபடலி னது கருத்தன்று. ஆயி, னத்தியா ரோப வுத்திக்குப் பயன் யாதோ வெனின்? உண்மையாகக் காட்டும் பந்தத்தை யின்மையாகக்

கூறலே பயனென்க. இதனை லிப்பந்தம் விடுதலே யிவற்றிற்குப் பயனென்க. வீடு ஆகுபெயர்.

"பந்தத் துருவங் கேட்டுணரிற் பாவீட்டுருவம் மேல்வெளியாம்." எ-ம், "இந்தவிட ருறுமாயை வந்ததெங்ஙன மிறப்பதெங்ஙன்." எ-ம் "விசாரித்தலினிவரும், மூந்தியாரோபங்கேள்." என்றார். என்னை யெனின்? வந்தவாறே யொடுக்கி வீட்டையுணர்த்து நியாயத்தா லென்க. ஈண்டாரோபமென்றது, அத்தியாரோபவுத்தியாற் கூறு மத்தியாசத்தின் சொரூபத்தை யென்க. இதனு லாரோப மாகுபெயர்.

இவ்விலக்கணங்கள் மேல் வருவனவற்றிற்கு மொக்குமென்க. (௨௰)

ஆரோப மத்தியாசங் கற்பனையாவ வெல்லா
மோரோரர்வஸ்துவினை வேறே யோரோர்வஸ்து வெனவோர்த
னருடுபணிமை யோர்த னரன்மை தாணுவிலோர்தற் பேய்த்
தேருடுநீர்மை யோர்தற் றெரியுநீ லிமைவிண் ணோர்தல். (௨௭)

கூறத் தொடங்கிய வாரோபத்தின் பரியாயப் பெயர்களை மேலெடுத்தாளுதற்பொருட்டு விதந்து மதனிலக்கணமுந் திருட்டாந்தமு மிதிற் கூறுகின்றார்:—

(இ-ள்) ஆரோபம் அத்தியாசம் கற்பனை ஆவ எல்லாம்=இப்பெயர்களாற் கூறப்பட்ட பொருளனைத்து மொரு பொருளன வாதலின்; ஓர் ஓர் வஸ்துவினை=உண்மையான வொவ்வொரு பொருளினை; வேறே ஓர் ஓர் வஸ்துவென ஓர்தல்=அதற்கொருவா றொப்புமையுடைய வேறே யொவ்வொரு பொருளாக வுணர்தல்; உதாரணம், நாருடு பணிமை யோர்தல்நரன்மைதாணுவி லோர்தல்=வைகறையிற்பட்ட பழுதையினிடத்துங் கட்டையினிடத்தும் பாம்பின்றன்மையைக் காணுதலும், மகனின் றன்மையைக் காணுதலும்; பேய்த்தேருடு நீர்மை ஓர்தல் விண் நீலிமை ஓர்தல்=தூரத்துவ தோடத்தோடுங் கூடிய கானலிடத்து நீரின்றன்மையைக் காணலும், வெளியுருவான விண்ணினிடத்துக் கருமைத்தன்மையைக் காணலுமாம். எ-று.

ஆரோப முதலியவை யொரு பொருளவாதல் ஒரு பொருளின் பரியாயப் பெயர்களாலென்க. எல்லா மென்றமையால், பிராந்திமுதலியவுங் கொள்க. ஓரோர் வஸ்துவினை வேறே யோரோர் வஸ்துவென வோர்தல் எனப் பாடங் கொள்வதை யந்நிதாக்கியாதியான நியாயவைசேடிக மதானுசாரியரான சிந்தாமணிக்காரர்க்குடன்பட்ட மதமென்று மறுப்பார்க்கு, அவ்வந்நிதாக்கியாதி, 'தோஷ சகித நேத்திரத்தினல்' ரச்சுவி

னது விசுரூபந் தோன்றாமல் ஆரத்துள்ள சர்ப்பரூபமானது தோன்றா நின்றது.

இப்படி யொன்று மற்றொன்றாகத் தோன்றா நிற்பதே யந்நிதாக்கியாதி யென்ப. அஃதெழுவாய்க்கண் ணிற்றலின், இவ்விரண்டாம் வேற்றுமை எழனுருபுப் பொருடந்து நிற்றலி னது கருத்தன் றென்க. இனி, வேறே யோரோர் வஸ்து வென்றதனு லர்த்தாத்தியாசமும், ஓர்தலென்றதனுன் ஞானத்தியாசமும் கொள்க வென்க.

இனி, நாநடு பணிமை யோர்தல் என்று கால முதலியவைகளைக் குறியாது வாளாகூறினும், பிராந்தித்தலத்திற்கு வேண்டு மைந்து காரணங்களுங்கொள்க. அவை, அதிட்டானஞ் சாமானியரூபத்தா லறியப்படலும், அதிஷ்டானமான விசேடரூபத்தா லறியப்படாமையும், வஸ்து ஞானஜன்னிய சமஸ்காரமும், பிரமாத்துரு தோடமும், பிரமேய தோடமும், பிரமாண தோடமு மென்ற விவை யென்க. இவ்விலக்கணங்க ளெல்லாப் பிராந்தித்தலத்து மொக்கு மென்க. இப்பிராந்தியின் சொரூபத்தை மேலபவாத விலக்கணங் கூறுமிடத்திற் சிறிது விரிப்பாம். (உ௧)

இப்படிப் போல நாம ரூபங்க ளிரண்டு மின்றி
யொப்பிலா திரண்டற்றொன்றா யுணர்வொளி நிறைவாய் நிற்கு
மப்பிரமத்திற் றோன்றுமைம்பூதவிகார மெல்லாஞ்
செப்பிய கற்பிதத்தாற் செனித்தவென் றறிந்துகொள்ளே. (உ௮)

தாட்டாந்தத்திற் சேகத்சிருட்டி கூறத்தொடங்கி, 'நற்சிருட்டி முன் சக மெய்ப் பரமாயிற்றென்றுஞ் சிவமதற்குச் சுவகதாதிகளில்லையென் றகண்டஞ் செப்புவதே யுபக்கிரமம்' ஆகலின், பிரமத்திற் கவ்விருதன்மையு மிதிற் கூறுகின்றார்:—

(இ-ள்) இப்படிப்போல=கூறிய ரச்சுசர்ப்ப முதலிய திட்டாந்தங்கள் போல; நாமருபங்கள் இரண்டும் இன்றி=சிருட்டிக்குமுன் காரியப் பிரபஞ்சங்களுக்குரிய நாமமு மவற்றிற் கியைந்த வடிவங்களு மாகிய வவ்விரண்டுந் தன்னிடத்தில்லாமல், ஒப்பும் இல்லாமல்=தன்னைப்போலொத்த வொரு பொருளு மில்லாமல், (சுசாதீகமு மின்றி யென்றபடி); இரண்டும் அற்று=தனக்கிரண்டாவது மில்லாமல் (விசாதீகமு மின்றி யென்றபடி); ஒன்றாய்=அவயவ மின்மையா லொரே வடிவாய் (சுவகதபேதமு மின்றியென்றபடி); உணர்வு ஒளி நிறைவாய் நிற்கும்=ஞானப்பிரகாசமாய்ப் பரிபூரணமாய் நிற்கும்; அப்பிரமத்தில்=அத்தகைய சொரூபசுபாவமாயுள்ள பிரமத்தினிடத்தில்; செப்பு கற்பனையால்=முற்கூறிய வவித்தையா கற்பிதமாகிய வவ்வாரோபமாக; தோன்றும்=கற்பிக்கப்படும்;

ஐம்பூத விகாரங்கள் எல்லாம் சேனித்த என்று அறிந்துகோள்= பொறிக்குக் காட்சியாகிய பஞ்சபூதங்களு மவற்றின் விகாரமான தனுகரண புவனங்களு முண்டாயின வென்று தெரிந்துகொள். எ-று.

முற்றும்மைக ளெஞ்சி நின்றன. ஏகார மீற்றசை. பிராந்தி விடய மெல்லாந் தன தபாவாதிகரணத்திற் றனதவபாசமாதலால், 'இப்படிப் போல' என்று திட்டாந்தத்தைச் சுட்டினதற் கேற்ப 'செப்பு கற்பனை' யென்றுங் கூறினர். என்னை யெனின்? 'நாமரூபங்க ளிரண்டுமின்றி என்றதாற் றனதபாவாதிகரணமும், 'ஐம்பூத விகாரமெல்லாஞ் செனித்த' என்றமையால் தனதவபாசமுங் காண்க வென்க. 'இந்நாம ரூபங்க ளிரண்டு மின்மையே' நந்சிநுட்டி முன் சகமேய்ப் பரமாய தென்க. வினைய துரைக்கிடையிற் காண்க.

பிரகிருதிக்கு முக்குணஞ் சமமாகும்போது பிரதான மென்று, மவ் வியாகிருதமென்று, மதுவே சகத்காரணமென்றுங் கூறுஞ் சாங்கிய மதத் திற் செல்லுதலை நீக்கற்கு 'நாம ரூபங்க ளிரண்டுமின்றி யொப்பிலா' தென்றமையாது, 'இரண்டற் றொன்றாய்' எனவும், பூதவொளியிற் செல் லுதலை யொழித்தற்கு 'உணர்வொளி' எனவும், நையாயிகர் கொள்ளு மாகாசத்தின் வியாபகத்தி னீக்குதற்கு 'உணர்வொளி நிலைறவா' யெனவுங் கூறினரென்க.

ஐம்பூத விகாரமேல்லாஞ் சேனித்த வென்று காரியத்திற் குற்பத்தி கூறி, மாயைக்கது கூறுதொழிந்ததற்குக் கருத்து வருஞ் செய்யுளாற் பெறப்படு மென்க. (உஉ)

அதுதா னெப்படியென்றக் காலநாதியாஞ் சீவரெல்லாம்
பொதுவான சுழுத்திபோலப் பொருந்துமவ் வியத்தந்தன்னி
லிதுகால தத்துவப்பே ரீசனுட் பார்வையாலே
முதுமூல சுபாவம்விட்டு முக்குணம் வியத்தமாமே. (உ௩)

அவ்விலக்கண முடைய பிரமத்திற் கற்பனை சேரத்தினுற்பத்திக்குக் காரணமான பிரகிருதியிற் சீவர்களி னடக்கமு மடங்கி வெளிப்படற் கேதுவான வீசனது பார்வையு, மப்பார்வையின் பயனு மிதிற் கூறு கின்றார்:—

(இ-ள்) அது எப்படி என்றக்கால்= 'செனித்த' வென்று பொதுப் படக் கூறினமையி னச்செனிப்பின் பகுப்பி யாவையோ வென விசாரிக்கு மிடத்தில்; 'அநாதியாம் சீவரேல்லாம்' பொதுவான சுழுத்திபோல= தமக்குப் பொதுவாயுள்ள சுழுத்தியி லச்சீவர்கள் சாக்கிர வாசனையோடு மடங்குந் தன்மையைப்போல; அவ்வியத்தத்திற் பொருந்தும்= பூர்வ காம

கரும வாசனையோடு மப்பிரமாசிரதமாய்த் தமக்குப் பொதுவா யுள்ள மாயையி லடங்குவார்கள்; இது காலதத்துவப்பேர்= இப்படி யடங்குஞ் சமயங் காலதத்துவமென்னும் பெயரினை யுடையது வாகும் (பிரளயகால மென்றபடி); ஈசன் உட் பார்வையால்= அச்சீவர்களின் போக கருமம் பரிபக்குவ மடைய வக்காலங் (சிருட்டிகாலங்) காரணமாக மாயாவிசிட்ட ஞன வீசனுக்குண் ணினைப்புண்டாகி யிவ்வுலகை யாக்குவாமென வகத்தா னோக்க, அந்நோக்களவால்; முதுமூலகுபாவம் விட்டு= அநாதியாய் வருந் தனது சங்கோச தருமத்தை விடுத்து; முக்குணம் வியத்தமாம்= விகாச தருமத்தாற் றன்னிடத்தடங்கிய சீவர்களுக்குத் தனுவாதிகளைக் கொடுக்க மூன்று குணமாகத்தான் வெளிப்படும் எ-று.

தான், தன் சாரியை. ஏகார மிரண்டு மசை. காலமின்றேல் வினைநிகழா தாதலின், 'இது' என்னுஞ் சுட்டை பொருந்தலுக் காக்கினும். ஆகலின் 'காலதத்துவப் பெய' ரென்றதை யதனபிதான மென்றும். இனி, இக் கால தத்துவத்தை யீசனுக் கடையாக்கிக் கூறுவாருமுளர். அங்ஙனங் கால முங் கருமமுந் துணைகூறுவிடின், ஈசனிரபேட்சிக னென்னப் பட்டு பட்சபாத தோட மடைவனென்க. என்னை? சுக துக்கஞ் சீவர்கட் குப் பலவாதலி னென்க. காலத்தைச் சிருட்டிக்குங் கூட்டுக. ஆகலின் காலமு மீசனு மொன்றெனக் கொள்வார் காலவாதியாதலி னது வேத சம்மத மன்றென மறுக்க வென்க. இக்கரும பரிபக்குவமே செகத்தைச் சிருட்டிக்க வீசனுக்கு நினைப்புண்டாக வியஞ்சகமாயிற் றென்க. இவ்வீச னுக் கிலக்கண மேலுணர்த்தப்படுமென்க. சீவர்களுக் கனுதி யென்றடை கொடுத்தமையின், 'முது' என்றதையு மனுதியெனப் பொருள் கொண்டா மென்க. கொள்ளாவிடிற், சீவேசுரருக்குச் சொரூப நிலையுத வின்று. இக்கருத்தை 'பொருந்து மவ்வியத்தந்தன்னில்' என்றதனுலு மறிக வென்க. அவ்வியத்த மனுதியே யின்றேற் பொருந்துத லின்று மென்க.

அன்றியும், சுத்த சைதன்னிய, மீச்சுர சைதன்னியஞ், சீவ சைதன்னி யம், அவித்தை, இவ்வவித்தை சேதனங்களுக்குச் சம்பந்தம், இவ்வைந்திற் குந் தம்மில் வேறுபாடு ஆக விவ்வாறு மனுதி யென்றதற்கு முரணுமென்க பொருந்துதலை யவ்வியத்தத்திற்குங் கூட்டுக. இவ்வவியத்த மியாதனிடத் ததோ வெனின்? அப்பிரமத்தினிடத்த தென்க. என்னை? சத்தியாகலி னென்றைப் பற்றியேநிற்கு மென்க. அற்றாயின், சீவனைப் பற்றியே நிற்கு மெனின், படு மிழுக் கென்னையோ வெனின்? சீவனுக்குச் சொரூப மவ்வவ்வியத்த மன்றிக் கூடாமையி னது கருத்தன் றென்க. ஆயின், சில ரங்ஙனமு மேற்றுளாரே யெனின்? நானஞ்ஞானி யென்னு மனுபவத்தா லங்ஙன மேற்கினு மது வபிமான வாசிரயமன்றி யதிட்டான வாசிரயமாகா தென்க. இதுபற்றியே யப்பிரமத்திற் றேன்று மைம்பூத விகார மென்று

ரென்க. அங்ஙனம் பிரமத்திற் றோன்று மெனக்கூறினு மப்பிரமம் விவர்த்தோபாதானமன்றிப்பரிணாமோபாதான மாகாமையி னிதுபெறற்பொருட்டுப் 'பொருந்து மவ்வியத்தந்தன்னி' லென்றீண்டு விசேடித்துக் கூறினாரென்க. ஆண்டுப்பிரமத்திற் றோற்று மென்றன் மாறுகொளக் கூறலாமே யெனின்? இவ்வவ்வியத்தத்தைச் சத்தியாகவி ஞண் டொன்று படுத்திக் கூறினமையி னன்றென்க. இது மேன் மாயாவிலக்கணங் கூறுமிடத்தின் முடிவுபெறுமென்க. ஆகலின், மாறுகோளக்கூறன் முதலிய குற்றந் தங்க லின்றென்க.

அவ்வியத்தம், அஞ்ஞானம், மாயை, அவித்தை, பிரகிருதி, சத்தி யென்பன வொரு பொருட் சொற்கள். மாயை யவித்தைகட்குச் சிலர் வேறுபாடு கூறுவர். இவற்றை மேலெடுத்தாளுமிடத்திற் பொருள் கூறப்படும். இனி, இப்பிரமம் வியாபகமாயுஞ் சேதனமாயு மிருத்தலின் ரச்சுசர்ப்ப முதலிய சடவஸ்துக்களிற் றோன்றும் பிராந்திப் பொருள் போலப் பல காரணங்களை வேண்டாது அவித்தை யொன்றனையே வேண்டிற் றென்பார் 'அப்பிரமத்திற் றோற்று மைம்பூத விகார மெல்லாஞ் செப்பு கற்பனையாலே செனித்த' வெனக் கூறினா ரென்க. இதனை மேற் கூறு மபவாதமுதலிய யுத்தி விசாரங்களாலு முணரப்படு மென்க. அன்றிப் 'பொருந்து மவ்வியத்தம்' என அவ்வியத்த மொன்றே கொண்டதனு மேற்கப்படு மென்க. (உ௩)

உத்தமம் வெளுப்புச் செம்மை யுரைத்திடுங் கருப்புமாகுஞ்
சத்துவ குணத்திேனாடு ரசோகுணந் தமோகுணந்தான்
சுத்தமோ டழுக்கிருட்டாய்ச் சொல்லு முக்குணமு மூன்று
மொத்துள வேனுந்தம்மு ளொருகுண மதிகமாமே. (௩௰)

"மூதுமூலசுபாவம் விட்டு முக்குணம் வியத்தமாமே" என்ற குணங்கட்குத் திட்டாந்த முகத்தாற் றன்மையு மவற்றி னிலைமையுங் கூறுகின்றார்:—

(இ-ள்) வெளுப்பு செம்மை கருப்பும் ஆகும்= உலகத்துப் பொருள்கள் வெண்ணிற முடையதாயுஞ் செந்நிற முடையதாயுங் கருமைநிற முடையதாயுங் காணப்படும்; அவற்றுள், உத்தமம் வெளுப்பு செம்மை மத்திமம் கருப்பு அதம மாகும் என உரைத்திடும்= இவ்வாறாக வுலகு கூறும்; இவை போல, சத்துவ குணத்தினோடு ரசோகுணம் தமோ குணந்தான்= அப்பிரகிருதியினின் றுண்டாகிய விம்முக்குணங்களும்; சுத்தமோடு அழுக்கு இருட்டாய் சொல்லும்= இம்மூன்று தன்மையையு மக்குணங்களும் நிரையே பெறுமென்ப; சொல்லும் முக்குணமும் மூன்றும் ஒத்துள ஏனும்= அவ்வியல்பி னதாகக் கூறிய வம்மூன்று குணங்களு

மொவ்வொரு சீவனிடத்து மொத்தபடி யிருப்பதாலும்; ஒரு குணம் அதிகம் ஆமே= வினைவசத்தா லொரோ வோர் குணங்களே மேம்பட்டதாக நிற்கும், மற்றவையோ வபாவ மாகாமற் கரந்திருக்கு மென்ற வாறு.

உத்தம மென்று வெளுப்புக் கடை தந்தமையாற், செம்மைக்கு மத்திமமுங், கருமைக்கு அதமமுங் கூட்டப்பட்டன. 'ஒருமொழி யொழிதன்னினங்கொளற் குரித்தே' என்னு மூத்தியா லென்க. இதனானன்றே நாட்டாந்தத்துஞ் சத்துவ முதலியவற்றிற்குஞ் சுத்த முதலியவையையுங் கூறினு ரென்க. சுத்தமோடழுக்கிருட்டு, தன்மையன்றி குணத்திற்குக் குணங் கூறிற்றல ரென்க. ஆயின், திட்டாந்தத்திற்கு முரணுமே யெனின்? அற்றன்று. ஆண்டுந்தன்மை யுணர்த்தி நிற்றலின், தூணைமான மன்றென்ற வாறாயிற்று. சொல்லுதலே, 'முக்குணமு மூன்றுயொத்துள' என்பதனோடு மியைக்க. இங்ஙனஞ் சொல்லுதல். திரவியத் தோற்றத்தின் மறுகணத்தே குண முண்டாமென்னு நையாயிகர் கொள்கை யுடம்பாடன்றென்ற வாறுமா மென்க.

தம்மு ளொரு குண மதிக மாதற் குதாரணம்:" வாழுஞ்சத்துவ மற்றை யவ்விரண்டையு மறைத்துத், தாழமற்றைய விரண்மெத் தமோ குணந்தழைப்பின், வீழுஞ்சத்துவந் தமங்களவ் விரசதம்விளைவி, னூழின் மற்றிவை யிரண்டுந் தொன்று மிக்குளவாம்" எனவரும்.

இப்பிரகிருதியின் முக்குணங்கள் சீவர்களிடத்துத் தோன்றற்கு ஏது மேல் 'குண மிராசத மவித்தை' என்ற விடத்துக் கூறுவா மென்க.(௨௪)

ஒருவழி யிதுவாமித்தை யொருவழிவேறுய்ச் சொல்வர்
மருவு மவ்வியத்தந்தானே மகதத்துவமாகு மந்த
மருண்மக தத்துவந்தா னகங்காரமாகு மென்றுங்
கருவகங் காரமூன்றுய்க் காட்டிய குணமா மென்றும்.(௩௧)

இச்சிருட்டி மற்றேரு வகையாலு முண்டாமென்று இதிற் கூறுகின்றார்:—

இக்கூற்று இடைப்பிறவாலுமாம். அன்றி, இனம்பற்றியெனினு மொக்கு மென்க. என்னை யெனின்? இதுவு மொருவகைச் சிருட்டியாகச் சாங்கியமதத்தர் கொண்டிருத்தலின் பிறனூன் முடிந்தது தானுடன்பட லென்னு மதம்பற்றி யிச்சிருட்டியையுமீண்டுக் கூறலாயிற்றென்க. ஆயினுஞ், சிருட்டி யொரு வகையானன்றிப் பலதிறப்படுமோ வெனின்? மெய் வகையாய பொரு ளொருதன்மைத்தாய் மாறுபடாதே யன்றிப் பொய்ப் பொருட் கவ்வியதி யின்றென்க. அவ்வாறின்றென்றற்கு மேற்கோளுளவோ வெனின்? " வான்முதலா மண்முதலா நீர்முதலாத் தீமுதலா

மற்றவாயுத், தான்முதலா மிப்படியே சிருட்டிதொறு மோரொன்று தலைமையாகும், யான்முதலோ ரயன் சிருட்டி சிலேலையா யுனக்குரைத்தேனிந்தவாற்றான், மேன்முதலா னியமமிதற்கொன் ருகவிலது பலவிதமாய்த் தோன்றும்'' எனவாசிட்டத்தும், "சிலந்தி யுமிழ்ந்து விழுங்குவ தெப்படி தேகத்தை, மலந்தரு கேசவுரோம மதெப்படி மண்ணிற்கே, பலந்தரு மோஷதி யெப்படி யப்படியீசன்பா, லலர்ந்த தடங்கவெறுங் கனவொக்கு மிதாயுங்கால்'' எனவுஞ் சொரூபானந்த சித்தியிலுங் கூறுவன. ஆயின், சூத்திரக்கார ரோராற்றாற் சிருட்டி கூறியதும், பாடியக்கார ரவ்வாறே கருத்துரைத்தது மியாதுகருதியோ வெனின்? மயங்கு மந்த மதியினர்க்கு அம்மயக்கந் தெளிவிப்பான் கருதியே யன்றி, யிதே கடைப்பிடிப்பான் கருதியன்றென்க.

(இ-ள்) இஃதோராறு. மற்றோராற்றானு மிச்சிருட்டி கூறுப. அஃது அப்பிரமத்திற் பொருந்திய வவ்வியத்தந்தானே மகதத்துவ மென்றோ ரவத்தையை யடையு மிவ்விகாரமான மகதத்துவ மகங்கார தத்துவ மென்னுமோ ரவத்தையை யடையு மிவ்வகங்காரதத்துவமே கூறிய முக்குணங்களாகப் பரிணமித்தற்குக் காரணமென்றவாறு.

இம்மகதத்துவாதிகட் கிலக்கண மேலஞ்ஞான பூமி கூறுமிடத்திற் கூறப்படு மென்க.

ஏகாரந் தேற்றம்; தான் அப்பொருளது. கரு வீண்டுக் காரணப்பொருளுணர்த்திற்று. (௨௫)

இக்குணங்களிலே விண்போன்றிருக்குஞ் சிற்சாயை தோன்றும்
முக்குணங்களினுந் தூய்தா முதற்குண மாயையாகு
மக்குணப் பிரமச்சாயை யந்தரியாமி மாயை
யெக்குணங்களும் பற்றுமே தா னிமித்தகாரணமா மீசன் (௩௨)

இனி, இதுமுதற் சீவேஸ்வர ஜெகத் சிருட்டி கூறத்தொடங்கி, யவற்று ளீச்சுர சிருட்டியை முன்னதாகக் கூறத்தொடங்கி யிதிலவ் வீச்சுரனதுபாதியின்றன்மையு, மதிற்றேன்று மடைவு, மப்போ தவனுக்குண்டாகும் பெயரு, மவன் றெழிலுங் கூறுகின்றார்:—

(இ-ள்) இக்குணங்களில்=கூறிய சத்துவ முதலிய மூன்றுகுணங்களிலும்; விண் போன்று இருக்கும்=ஆகாயம் போல நிரம்சமாயும் வியாபகமாயு மிருக்கின்ற; சிற்சாயை தோன்றும்=சித்தினது சாயையானது பிரதிபலிக்கும்; 'அங்ஙன மம்மூன்றினும் பிரதிபலிக்கினும்,' முக்குணங்களினும் முதற்குணந்தூய்தாம்=அப்பிரதிபலனத்திற்கு முக்குணங்களுமேதுவாக விருப்பினு, முதலாவதான சத்துவகுணம் பரிசுத்த மாகுத

லான்; மாயை ஆதும்=மாயை யென்னும் பெயரினுல் விளங்கும்; அக் குணப் பிரமச்சாயை=அம்மாயையிற் றோன்றிய பிரமத்தினது பிரதி பலனத்திற்கு; அந்தரியாமி= அந்தரியாமியென்னும் பெய ரப்போதடை யும்; அடையினும், மாயை எக்குணங்களும் பற்றுதோன்=தனக்கு பாதியான மாயையில் ஏனைய ராசத தாமத குணங்கள் மேலிடாமையா லவை தம்மிடத்தும் பற்றுத லடையாதவனுவன்; நிமித்தகாரணனும் ஈசன்=இத்தன்மையனுதலி னிவனே செகத் சிருட்டிக்கு நிமித்தகாரணனு மென்று முன் சொல்லிய வீச்சுரனு மாகும் எ—று.

இக்குணங்களிலே விண் போன்றிருக்குஞ் சிற்சாயைதோன்று மென் றது சத்திரிநியாய மென்க. அன்றி, தமோகுண நேரே பிரதிவிம்பத் திற் கேதுவாகாவிடினு மதன் காரியமான பஞ்சதன்மாத்திரையின் சத்து வாமிச சமட்டியிற்றோன்று மந்தக்கரணத்திலு மிதன்காரியமான ஞானு காரவிருத்தியிலும் பிரதிவிம்பந் தோன்றலால், காரணகாரிய வொற்றுமை பற்றி யங்ஙனங் கூறினுரெனினு மொக்கும். இவ்வாறுகூறுமிடத்திற் றமோ குண மாதுபெய ரென்க. இனி ராசததாமதங்களாற்றுன் கலக்கப்படாமற் சுத்தமாயிருத்தலின், 'முக்குணங்களினு முதற்குணந் தூய்து' என்றுர். அவைகளாற் கலக்கப்பட்ட சத்துவ மலினசத்துவ மெனப்படும். இது சீவ னுக் குபாதியாகும். இது மேல் 'தேசறுமவித்தை' என்ற விடத்தில் விளங்கு மென்க.

இனி, "மாயை யெக்குணங்களும் பற்றுதோ" னென்றது, ஆவரண விக்ஷேப ரகிதனுதலிற் றனக்கு மறைப்பு மொருவா லதனிக்கமு மின்மை யாற்று னித்தியமுத்தனுயினு னென்றதை யென்க. இங்ஙன மிருப்பது மன்றித் தன்னுபாதியி லெல்லாந் தோற்றலி னவை யனைத்தையு மறிதலி னந்தரியாமியு மாயினுனென்க. இதனு லேனைய வுயிர்களின் கருமங்களை யுங் காமங்களையுங் கண்டு கூட்டுவனுகலி னவ னிமித்தகாரணனு மாயினு னென்க. இம்மாயாப்பிரதிவிம்பனிடத் தித்தன்மையான விபூதிக ளனைத்து மமைதலின், பிரம மசங்க சுத்த சேதனமாய்ச் சகத்திற்குக் கேவலம் விவர்த்தோபாதானமா யச்சகத்திற்குச் சத்தாஸ்பூர்த்தியை மாத்திரங் கொடுத்துநிற்குமெனக் கொள்க. இனி, அக்குணம் 'பிரமச் சாயை யந்தரியாமி' என்றதால், கேவலம் பிரமச்சாயை யந்தரியாமி யன்று பின்னையோ மாயாப் பிரதிவிம்பத்துவவிசிட்ட சேதன மந்தரியாமி யெனக் கொள்க. இங்ஙனங் கூறுவிடிற் பாகத்தியாகவிலக்கண மமையா தென்க. இவ்விலக்கண மேற் சீவனுக்கு மாட்டேற்றுற்கொள்க.

இனி, 'நிமித்த காரணனு மீசன்' என்றுரேனு மிவனுக் குபாதி யான மாயையிற் சகல பிரபஞ்சமு மடங்கி நிற்றலி னம்மாயோபாதிப். பிரதானத்தா லுபாதான காரணமுஞ் சேதனப் பிரதானத்தா னிமித்த காரணமும் பெறப்படலி னபின்ன நிமித்தோபாதான மெனக்கொள்க. இதற்குதாரண முன் பாயிரத்திற்கூறினும். இனி, முன் 'பார்த்தா' னென் றலி னிம்மாயை வெளிப்படற்கு முன்னுள்ள னிமித்த காரணனெனப் படுதலி னீண்டு நிமித்தகாரணனெனக் கூறியது யாதுகருதியோவெனின்? அவ்வியத்த முக்குண வடிவமாய்ச் சங்கோச விகாச தருமத்தையுடைய தாத விற் றன்னிடத்தடங்கிய காரியப் பிரபஞ்ச மீண்டுண்டாகுங் காலத்தி னதன்கருத்தா போக்தா வாகிய சீவனநாதியே யாயினும், ரஜோகுண கற்பிதனென்று கூறியதுபோல விவற்றிற்கு நியாயமகனு நித்தியனே யாயினு முற்பத்தியுடன் கூறப்பட்டதென்க. இக்கருத்தை 'அதுதா னெப்படி யென்றக்கால்' என்ற செய்யுளின் விசேட வுரையிற் பிரகிருதி யின்றன்மை கூறியதிற்காண்க. இதனுல் 'சீவனென்ற தருமமுஞ் செகத் தென்ற நாமரூபாத்மகமு மெவ்வாறு மாயையாற் கற்பிக்கப்பட்டனவோ வவ்வாறே நிமித்த காரணத்துவ முதலிய கலியாண குணங்களு மாயையாற் கற்பிதமன்றி யுண்மையன் றென்றவா' றாயிற்றென்க. இக்கருத்தேபற்றி சிருட்டி கூறுமிடத்திற் 'செப்புகற்பனையாலே செனித்த' வென்று தொ டங்கினு ரென்க. இதன் விரிவை 'பஞ்சதசி, விசாரசாகரம், விருத்திப் பிரபாகர, மெட்டாம் பிரகாச'முதலியவற்றிற் காண்க. எகார மசை (உரு)

ஈசனுக் கிதுசுழுத்தி யிதுவேகாரண சரீரங்
கோசமா னந்தமா குங்குண மிராசத மவித்தை
தேசறு மவித்தைதோறுஞ் சிற்சாயை சீவகோடி
காசமா முயிர்க்கப்போது நாமமும் பிராஞ்ஞனுமே. (௩௩)

இவ்வீசனுக் குண்டாகிய வவத்தை சரீரங் கோச முதலிய சத்துவ குண கற்பித சிருட்டி கூறி முடித்து, நிறுத்துமுறையா லிரசோகுண கற்பிதமான சீவசிருட்டியைக் கூறத் தொடங்கி, யிதில் ஜீவர்களுக்கு அவித்தையிற் பிரதிவிம்பித்த வவசரத்திலுண்டாகிய பெயரையுங் கூறுகின்றார்:—

(இ-ள்.) ஈசனுக்கு இது சுழுத்தியாதும் = கூறிய வீச்சுரனுக்கு இம் மாயாசம்பந்தமான வவசரமே சுழுத்தியவத்தை யாகும்; என்னையெனின்? இம்மாயையிற் சகலமு மடங்கிநிற்றலி னென்க; இதுவே காரணசரீரம் = தனக்குக் காரண சரீரமு மிம்மாயையே, சமட்டி காரணோபாதி யாகலி னென்க; இதுவே ஆநந்தமய கோசமாதும் = நித்தியதிருப்த னுகலி

னென்க; சுட்டை யானந்தமயத்திற்குங் கூட்டுக; ஆகுமென்பது கடை நிலைக் கூட்டு. சத்துவகுண சிருட்டி முற்றியது.

இனி, ராசதகுண சிருட்டி கூறுகின்றது:— ராசததுணம் அவித்தை =அப்பிரகிருதியின் ரசோகுணத்தை அவித்தை யென்ப; என்னை யெனின்? வித்தையா ஞசமாகலி னென்க. தேசு அறும் அவித்தை தோறும் சிற்சாயை சீவ கோடி=ரசோகுணமுந் தமோகுணமுங் கலந்த சத்துவ மாகலின், விளக்கங் குறைந்த வவ்வவித்தைகடோறும் பிரதிபலித்த சித்தினது சாயையானவை யளவிறந்த சீவர்களாகும்; நாசமாம் உயிர்க்கு அப்போது நாமமும் பிராஞ்ஞன் ஆம்=கெடாநின்ற வச்சீவர்கட்கு அவ்வவசரத்திற் பெயர் பிராஞ்ஞனாகும். எ—று.

ஏகார மீற்றசை. இவ்வவித்தைக்கு விளக்கக்குறைவிற்குக் காரண முன்னர்க் கூறினும். இதனை விவ்வுபாதிகதரான சீவர்க ளற்பவறிவுடையவரா யாவரணத்தான் மறைவுபட்டுத் தன்னுண்மை யுணராதா ராயினு ரென்க.

இனி 'யவித்தைதோறு' மென் றவித்தைக்குப் பன்மைப் பொருடரு மிடைச்சொற் றந்து அவ்வவித்தையைப் பன்மையாகக் கூறியது 'அந்தகாரம் போல வவித்தை யொன்றுயு மம்ஸம் நாஞவாயு மிருத்தலைக்' குறித்தென்க. அம்ஸமாவது, அவ்வவித்தையை யுபாதானமாக வுடைய புத்தி வாசனையை யென்க.

இனி, 'அநாதியாஞ் சீவ' ரென்று முற்கூறி யீண்டு, 'நாசமா முயி' ரென்றது மாறுகொளக்கூற லன்றோ வெனின்? அன்று. பிரகாபாவம் போல வநாதியே யாயினு மந்தத்தோடுங் கூடினமையா லென்க. அவ்வந்தமாவது, மேல் விதேகமுத்தி கூறுமிடத்திற் காண்க. ஞேப்திமாத்திரமா யிருத்தலின், 'பிராஞ்ஞ' னென்னப்பட்டது. (உ௭)

அழுக்கொடு பற்றுஞ்சீவர்க் கதுவே யாநந்தகோசஞ்
சுழுத்திகா ரணசரீரஞ் சொன்னவிம் மட்டுமோக [ஞேம்
முழுக்குணத் திரண்டால்வந்த மூலவா ரோபஞ்சொன்
வழுத்துருக்கும வாரோபவழியுநீ மொழியக் கேளாய் (௩௪)

இச்சீவர்களுக்குக் கோச மிதுவென்ன வென்பதூஉம், அவத்தை யிதுவென்ன வென்பதூஉ முதலிய ரசோகுண கற்பனையான சீவசிருட்டியைக் கூறி முடித்து, நின்ற தமோகுணகற்பனையையு மிதிற் கூறத் தொடங்கினர்:—

(இ—ள்.) இவ்வவித்தையே யிச்சீவர்க் கானந்தமயகோசம்; இன்னு மிதுவே சுழுத்தியவத்தை; யிதுவே காரணசரீரமு மாகும். இதுகாறுங்

கூறிய பிரகிருதியின் கவர்படாத விரண்டு குணத்தால் வந்த முதலாவதான கற்பனையைச் சொல்லினோமினி, தாமதகுணத்திலுண்டாகுஞ் சூக்கும கற்பனையையும் யாங் கூறக் கேள். எ-று.

அழுக்குத் தன்மையாற் கூறினாரென்க. அல்லது, அழுக்குப் போன்றதை யழுக்கென் றுவமையாகுபெய ரெனினு மொக்கு மென்க. 'அழுக் கொடு பற்றுதல்,' தனது மலினோபாதியான வவித்தையி லாவரண முண்மையி னதனுற் றமதுண்மை வடிவமான கூடஸ்தசொரூப மறைபட்டு நிற்றலாற், சீவர்களுக்கு அவ்வவித்தையிலு, மதன் காரியமான கிஞ்சித்து வாதிகளிலும் 'யானென' தென்னு 'மகமமதைக' ளுண்டா மென்றஞ்ஞாறு. இக்குணத்தில் ராசதபாகம் பிரதானமாயுந்தாமத சத்துவபாக மப்பிரதானமாயு நிற்கு மென்க.

இனி, விடயங்களின்றியும் விடயங்களைப் பார்க்கினுந் தான் பிரியனாய் நிற்றலின், ஆனந்தமய னெனவும், வாசனைகளை யொடுக்கிக்கொண்டுநிற்றலின், 'சுழுத்தியவத்தை' யெனவும், காரியசரீரத்தை யுண்டாக்கு மியல்பின தாதலிற் காரணசரீர மெனவுங் கூறப்பட்டதென்க. அவ்விரண்டு குணத்திற்கு 'மூழ' வென்றடை தந்தது, தமோகுணம்போற் பிரிவுபடாமனிற்றலா லென்க. வழுத்துதல்=வேதங்கூறல். சூக்குமவாரோப மெனினும், 'ஒருமொழியொழிதன் னினங்கொளற் குரித்தே' என்ற நியாயப்படி தூலமுங் கொள்க. அன்றி, முன்னதாகச் சூக்குமஆரோபமும் பின்னதாகத் தூலவாரோபமு மொழிவாமெனப் பொருள்கொள்ளினுமமையு மென்க. (உஅ)

ஏழமா யாவினோத வீசனா ரருளினாலே
பூமலி யுயிர்கட்கெல்லாம் போகசா தனமுண்டாகத்
தாமத குணமிரண்டு சத்தியாய்ப் பிரிந்துதோன்றும்
வீமமார் மூடலென்றும் விவிதமாந்தோற்றமென்றும். (உகூ)

சூக்கும சிருட்டி கூறத் தொடங்கினா ரதற்குக் காரணங்களும் பிரகிருதியி னுட்பிரிவு மிதிற் கூறுகின்றார்:—

(இ—ள்.) ஏம மாயா வினோத ஈசனார் அருளினாலே= சீவர்களை முத்தியிற் சேரவொட்டாமற் காத்துக்கொண்டிருக்கின்ற மாயையைத் தனக்குச் சத்தியாகவுடை யவனாதலி னதனை விளையாட்டாக நடத்தத்தக்க சருவேசுவரன் (சீவர்களுடைய கரும பரிபக்குவமே யன்றித்) தனது கிருபையினாலும்; பூமலி உயிர்கட்கு எல்லாம்=பொலிவுமிகுந்த (அளவிறந்த வென்றபடி) எல்லா வுயிர்கட்கும்; போகசாதனம் உண்டாக=வினைப்பயன் றுய்த்தற்கேற்ற சாதனங்க ளுண்டாகத் தக்கதாக; தாமத குணம்

இரண்டு சத்தியாய்ப் பிரிந்து தோன்றும்=பிரகிருதியின் றமோகுணமானது இருவகைச் சத்திகளாகப் பிரிவுபட்டு வெளிப்படும்; அவை, வீமம் ஆர்மூடல் என்றும்=சீவர்கட்குப் பயந்தருதற் றனக்குப் பயனாகவு முடையவாவரண சத்தி யெனவும்; விவிதமாம் தோற்றம் என்றும்=பன்மைப்பட விக்ஷேப மென்வு மாம். எ-று.

'ஏமம்' என்றதைத் தவளைத்தத்தா யீசனுக்காக்கின் இன்ப வடிவினனுயு மதனான் மாயையை விளையாட்டாகவு முடையவனெனப் பொருள் கொள்க. இவருக்கிம் மாயை விளையாட்டாக வுடைமையி னிச்சிருட்டியாதிகளாற் றனக்கோர் பயனுமின்றி நின்றதென்பதூஉம் பெறப்பட்டது. இனி, விளையாட்டே யாயினு மருளுடைமையுங் கூறினமையாற் 'கருமமொன்றேசாலு' மென்னு மீமாஞ்சக வேகதேசிகளையு மறுத்தவாறு மாம்.

இங்ஙனந் தனக்குப் பயனின்மையை 'உயிர்கட்கெல்லாம் போக சாதனமுண்டாக' என்றதனாலும் விளங்கும். இனி, 'போகசாதனம்' என்றதை யும்மைத்தொகைநிலைத்தொடராகக்கொள்ளினு மமையு மென்க. ஈண்டுப் போக மென்றது, கரும பலமாக வருஞ் சுகதுக்கங்களை யென்க. சாதன மென்றது, தூல சூக்கும முதலியவைகளை யென்க. ஆவரணம் வீமமாதலை, மேலாவரணத்திற் கிலக்கணங் கூறுமிடத்திற் காண்க. வீமம் ஆகுபெயர். மூடல், தோற்ற மென்பன தொழிற் காரணமாக வந்த பெயர்கள். இவை மொழிபெயர்ப்பு. (உக)

தோற்றமாஞ் சத்திதன்னிற் சொல்லியவிண்ணும் விண்ணிற்
காற்றதாங் காற்றிற்றீயாம் கனலினீர் நீரின்மண்ணும்
போற்றுமிவ் வைந்து நொய்ய பூதங்களென்றும் பேராஞ்
சாற்றுமற் றிவற்றிற்போக சாதன தனுவுண்டாகும். (௩௬)

கூறிய காரணங்களாற் சத்தி யிரண்டினுந் தோற்றமாஞ் சத்திதன்னிற் சூக்கும பூதத்திற்குரிய பெயரு, முண்டாகு மடைவுந், தன்மையு, மவற்றின் காரியமு மிதிற் கூறுகின்றார்:—

(இ-ள்.) வெளி. மீட்டு மீட்டும் பூதங்களின் பெயர் கூறியது கூட்டின் பொருட்டு. மற்று அசைநிலை. நொய்ய பூதங்களென்றது தன்மையாகலின் சூக்குமபூத மென்க 'போக சாதனங்களி லின்ன வின்னதை யின்ன வின்ன சாதனமெனலை' வருஞ் செய்யுட்களிற் காண்க. (௩௦)

ஆகி முக்குண மிப்பூத மடங்கலுங் கலந்துநிற்குங்
கோதில்வெண் குணத்திலைந்து கூறுணர் கருவியர்கு
மோதிய பின்னையைந்து முளம்புத்தி யிரண்டாஞான
சாதனமா மிவ்வேழுஞ் சற்குணப் பிரிவினுலே. (௩௭)

"போக சாதன தனு" என்றது வித்துணை யென்று, மவற்றி லொவ்வொன்று மித்துணை யித்துணைத் தத்துவ முடைய வென்று, மித் தத்துவங்க ளின்ன வின்னதினின் றின்ன வின்ன துண்டாயிற்றென்று, மிவற்றி லின்ன வின்ன தின்ன வின்ன சாதனமென்று, மைந்து கவி களாற் கூறத்தொடங்கி, யிக்கவியிற் சூக்குமசரீரத்திற்குரிய வந்தக் கரண ஞானேந்திரியங்களி னுற்பத்தியு, மவை யின்ன சாதன மென் பதையு மிதிற் கூறுகின்றார்:—

(இ-ள்.) ஆதி முக்குணம் = *பிரகிருதிக்குள்ள மூன்று குணங் களும்*; இப்பூதம் அடங்கலும் கலந்து நிற்கும் = *கூறிய விப்பஞ்சபூதங் களிலுஞ் சம்பந்தித்து நிற்கும்*; கோதில் வெண் குணத்தில் = *அப்படி நிற்கின்றவையுள் ஐந்து பூதத்தினது குற்றமற்ற சத்துவகுணத்தில்*; ஐந்து கூறு உணர் கருவியாகும் = *தனித்தனியாகப் பிரிந்த பங்கைந்தும் ஞானேந்திரியமைந்தாகும்*; பின்னை ஓதிய ஐந்தும் = *சமட்டியாகக் கூறிய வைந்தும்*; உளம் புத்தி இரண்டாய் ஆகும் = *மனம் என்றும் புத்தி யென்று மிரண்டாக வுண்டாகும்*; இவ்வேழும் ஞான சாதனமாம் = *கூறிய வேழு தத்துவமும் விடயங்களை யறிதற் கறிகருவியாகும்*; யாதினா லெனின்? சற்குணப் பிரிவினாலே = *தமோகுணத்தின் சத்துவக் கூற் றினாலென்க*. *எ-று*.

*'ஆதி முக்குண மிப்பூத மடங்கலுங் கலந்து நிற்கு'* மென்றது, *இப்பஞ்சபூதங்க டமோகுணத்தின் பிரிவான விட்சேபசத்தியி* லுண்டான *மை கருதி*, யிவற்றின் *காரியங்கட்கு அறிதற்றன்மை* யாண்டையதென்னு மைய *மகற்றற் கப்பஞ்சபூதங்களிலு* மேனைய *சத்துவ ரஜோ* குணங்களி *னமிச முண்டென்றதற்* கென்க. இங்ஙன மன்றி, 'ஆதி' யென்றதைத் *தமோகுணமெனப்* பொருள்கொள்வா *ரத்தமோகுணம்* விகிர்திரூப மான பிரகிருதியன்றிக் கேவலம்பிரகிருதி *யாகாமையி* 'னாதி' யென்றற் *கது* பொருளன் றென்க. ஆயின், *காரணத்தினின்றாயது காரியத்திற் கின்றே* யெனின்? தமோகுணத்தின் விக்ஷேபபாகத்திலு மேனைய *ராசத தாமதக்கூற்றின் கலப்புண்டென்க.* இதுபற்றியே, முன்னு "*மழுக்கொடு பற்றுஞ் சீவர்*" *என்றாரென்க*. இவ்வாறே *சத்துவ குணத்திற்குங் கொள்க வென்க. கொண்டு, சத்துவத்திற் சத்துவஞ், சத்துவத்தில் ராசதஞ், சத் துவத்திற் றாமதமெனப் பிரிவுபட்டு, நிரையே* விஷ்ணுவாயும், பிரமனாயு, முருத்திரனாயு *நிற்பரென்க.* இங்ஙனமே, *ராசதத்திற் சத்துவம், ராசதத் தில் ராசதம், ராசதத்தில் தாமதமெனப் பிரிந்த மூன்று* வகையிலுஞ் சீவர் கள் *நிரையே* தத்துவஞானி யெனவும், காமக்குரோதபரரெனவும், ஆசு ரசம்பத்துடையாரெனவும் *தோன்றுவார்கள்.* இச்சீவேச்சுரர்கள் ஒவ் வொரு வகையிலு *மளவிறந்த* பிரிவினையுடைய *ராவரென்க.*

இனி, 'வெண்குண' மென்றது முன், "உத்தமம் வெளுப்பு" என்ற தற்கேற்ப வீண்டு மதன்றன்மையாற் கூறியதன்றி, குணத்திற்குக்குணங் கூறிற்றில ரென்க. சத்துவகுண மெனற்பாலதை சற்குணமென்றது விகாரம். சில ரந்தக்கரணவிருத்திகளை நான்காகக் கூறியிருப்பினும், மிவ ரிரண்டாகக் கூறியது பஞ்சபூதத்தின் சமட்டி பாக மாகலா னிதன் பரிணு மத்தைப் பலவாகவுஞ் சிலவாகவும் விரித்துஞ் சுருக்கியுங் கூறு மரபுபற்றி யென்க. இது சமட்டிபாக மாகவே, ஞானேந்திரியம் பஞ்சபூத சத்துவத் தின் வியட்டிபாகமெனக் கொள்க. இதனை, ஐந்துகூறு என்றதனாலுங் கொள்க வென்க. இங்ஙனங் கூறியது தொகை கூறியதே யன்றி, இன்ன வின்ன பூதத்தி னின்ன வின்ன வமிசத்தி லின்ன வின்ன விந்திரிய முண் டாயிற்றென்பதை விரித்துக் கூறிலரோ வெனின்? இது சுருங்கிய நூலா கலின், விரிவை 'சத்தப்பிரகாணம்' 'சூடாமணி' முதலிய சிறுநூல்களிற் காண்க. (ருக)

விராவிய ரசோகுணத்தில் வேறிட்ட வைந்துமைந்தும்
பிராணவா யுக்களென்றும் பெருந்தொழிற் கருமமென்று
பராவிய பெயராமிந்தப் பதினேழு மிலிங்கதேகஞ் [ம்
சுராசுரர் நரர்விலங்காய்த் தோன்றிய வுயிர்கட்கெல்லாம். (ருஅ)

இதிற் பிராணவாயுவுங் கருமேந்திரியங்களு முண்டாம் வகையும் இவை யின்ன சாதன மென்பதூஉ, மிவையுடைய தின்ன சரீர மென்ப தூஉங் கூறுகின்றார்:—

(இ—ள்.) விராவிய ரசோகுணத்தில் பிராண வாயுக்கள் ஐந்தும் = அத்தமசின் ரஜஸின் சமட்டிபாகத்தில் பிராண னபானன் முதலிய வாயுக்களைந்தும்; வேறிட்டவை பெருந்தொழிற் கரும மென்றும் = வியட் டியாகத் தனித்தனியே யெடுத்த பாகத்தில் பெரிய தொழிலைச் செய்யா நின்ற கருமேந்திரிய மைந்து மென்பதாக வுண்டாயின; பராவிய பெய ராம் இப்பதினேழும் = இச்சத்துவ ரசோ பாகங்களி லிப்பெயருடனுண் டாகிய விப்பதினேழு தத்துவங்களுங் கூடியதே; லிங்கதேகம் = சூக்கும சரீர மென்னப்படும்; இது, சுரர் அசுரர் நரர் விலங்காய் தோன்றிய உயிர்கட்கு எல்லாம் ஆம் = தேவர்முதலிய எழுவகைத் தோற்றமாகப் பிறக்கப்பட்ட வுயிர்களனைத்திற்குந் தனித்தனியே யமையும். எ-று.

பெருந்தொழிற் கன்மங்களோடேன் கூறினமையாலும், ரஜோகுண காரியமானவையாலு மிப்பிராணாதிகளுந் தொழிற்கருவியே யாமென்க. இவ்வாயுக்களைப் பத்தாகவும் பதினைந்தாகவுங் கூறுவாரு முளர். இக்கூற்

றைச் ‘சுரேசுராசாரியாரும்,’ ‘வித்தி யாரண்ணிய சுவாமிகளும்.’ விலக்கி னமையா லிவரு மவர் மதம்படக் கூறினரென்க.

“சுராசுரர் நரர் விலங்காய்த் தோன்றிய வுயிர்கட் கெல்லாம்” என்று சிருட்டி கூறாத தூல தேகத்தைக் காட்டி இறந்த காலத்தாற் கூறியது, இத்தூலவுட லுயிர்கட்கு வினைவயத்தா லநாதியே மாறி மாறி வருமாறு போல வச்சூக்குமசரீர மிவ்வாறாகாது முன் கற்பத்திலு மிவ்வாறே யுண் டென்றற் கென்க. அற்றே லிச்சூக்கும சரீரஞ் சீவர்களிடத்திற் றுறைந்து நிறைந்துங் காட்டுவானே னெனின்? நாற்கதிக்க மவத்தை வேறுபட்டு நிற்றலாலு, மூழாலு மென்க. (௩௨)

*இவ்வுடன் மருவுஞ்சீவர்க் கிலங்குதை சதனென்றாகு*
*மிவ்வுடன் மருவுமீசர்க் கிரணிய கருப்பனாகு*
*மிவ்வுட லிரண்டுபேர்க்கு மிலிங்கசூக்கும சரீர*
*மிவ்வுடற் கோசமூன்று மிதிற்கனவ வத்தையாமே.* (௩௯)

முன் சீவர்கட்காமென்ற சூக்கும சரீரமீண்டீசனுக்குமா மென்றார். என்னையெனின்? சத்துவ ரஜோ குணங்களிற் பிரதிவிம்பித்த வீசுரனுஞ் சீவர்களும் வேறுபாதி யுடையவரா யிருத்தலி னிச்சீவர்கட்குப் போல வீசுரனுக்குஞ் சூக்கும தூல சரீரங்கள் வேண்டிநிற்றலாலு, மவை யிவையன்றி யமையாமையானு மிச்சூக்குமாதிக ளிவையோ வேறே வென்னு மைய மகற்றற் கென்க. இதனை மேற் றூலசரீரத்திற்றுங் கொள்க. இனி, இச் சூக்குமசரீரத்தை யடைந்த வவாசத்தி லச்சீவேசுரர்களுக் குண்டாகும் பெயரும், அச்சரீரத்தால் வருமவத்தையுங், கோசங்களு மிதிற் கூறுகின்றார்:—

இலிங்கசூக்கும சரீர மிருபெயரொட்டு. இச்சூக்குமசரீரமே மூன்று கோசமாமாறு: மனம், புத்தி ஞானேந்திரிய மென்றமையை புத்திஞானேந்திரிய மெனவும், மனமும் ஞானேந்திரியமெனவும் பிரித்துக் கூட்டி நிரையே விஞ்ஞானமயன் மனோமயனெனவும், பிராணனையுங் கருமேந்திரியங்களையுங் கூட்டிப் பிராணமயகோசமெனவுங் கொள்கவென்க. இதிற்சரிக்குஞ் சீவருக்கு மீசனுக்குந் திரத்துவ மில்லாமையாற் கனவவத்தை யாயிற்றென்க. ஈசனுக்கஸ்திரத்துவஞ் செகத்துக் கருப்படம்போல செவ்விதாக விளங்காமை யென்க. ஏகார மீற்றசை. ஏனைய பொருள் வெளிப்படை. கூட்டுகள் பயன் கருதியன வென்க. (௩௩)

சூக்கும சகமிம்மட்டுஞ் சொல்லினே மிப்பாற்றால
மாக்குமா ரோபந்தானு மடைவினின் மொழியக்கேளாய்
தாக்குமிவ் வுயிர்க்குத்தூல தனுவும்போகமு முண்டாகக்
காக்குமவ் வீசன்பஞ்சீ கரணங்கள் செய்தான்றனே.(சப)

“ சூக்கும வாரோப வழியு நீ மொழியக் கேளா ” யென்றதை யிது காறுங்கூறி முடித்து, இனித் தூலகற்பனையை மூன்று கவிகளாற்கூறுவா ரதனை யித்தன்மையா லிறை யாக்கினு னென் றிதிற் கூறுகின்றார்:—

(இ-ள்) இதுகாறுங் கூறியது சூக்கும சககற்பனை; இனித் தூல சக கற்பனையை யீச ஞக்கிய விதங் கூறுதும், கேட்பாயாக.

அச்சிருட்டிதா னவ்வுயிர்கட்குப் பொருத்தமாகிய தூலதேகமும் அதற்கியைந்த போகமு மவ்வவர்களுக்குத் தாக்கருதிச் சம்மரித்துச் சிருட் டித்ததுமன்றிக், காக்குந் தன்மையையு முடைய வீசனே யவற்றிற் கேது வாகிய பஞ்சபூதங்களின் கலப்பைச் செய்தனன். எ-று.

தான் அசை; ஏகாரந் தேற்றம். “ தாக்கு மிவ்வுயிர்க்கு ” என்றதை ‘ சூக்கும சரீரத்தோடும் பொருந்து மிவ்வுயிர்கட்கு’ எனக் கூறினு மமையு மென்க. சிருட்டித்ததின்பின் காக்கத்தக்கதாதலின், ‘ செய்யும் ’ என்று மெதிர்காலப்பெயரெச்ச வாய்பாட்டாற் கூறினரென்க. ஆயினிவ்வுயிர் களை யிரண்டு காலத்திலுங் காக்கின்றவனுகலி னிவ்வாறு கூறல் வழுவா மெனின் ? அன்று. வீட்டிற் காப்பது சரணடைந்தபின்னுதலி னமை வுடைத்தென்க. அன்றி, ‘ செய்யுமென்னு நிகழ்கால வாய்பாட்டாற்’ காக்கு மென்பதைக்கொண்டு முக்காலத்தினுமொத் தியல் பொருளாய்ப் பொருளுரைப்பதே யமைவுடைத்து. உயிர்க்கென்றமையால் தனக்கெ னப்படைத்த லின்றென்ற வாருயிற்று. (௯ச)

ஐந்துபூதமும் பத்தாக்கி யவைபாதி நன்னுன்காக்கி
நந்துதன் பாதிவிட்டு நாலொடு நானுங்கூட்ட
வந்தன தூலபூத மகாபூத மவற்றினின்றுந்
தந்தன நான்காந்தூல தனுவண்ட புவனபோகம். (சக)

(இ-ள்.) “ பஞ்சீகரணங்கள் செய்தான்றனே” என்ற நஃதிவ்வா றெ னவிதிற் கூறுகின்றார்:—

(இ-ள்) ஒழிந்த தமோகுண பாகமாகிய வைந்து சூக்கும பூதங்களையு மொவ்வொன்றை யிரண்டிரண்டாகப் பத்தாக்கி, இவற்றி லோர் பாகமாகிய வைந்தைத் தனிநிறுத்தி யேனைய வைந்தை யொவ்வொன்றை நான்கு நான்

காகப் பிரித்துப் பிரிவுபடாத தன்பாதியை விட்டு, ஏனைய நான்கோடு நான்கனையுங் கூட்டத் தூலபூதங்க ளுண்டாயின. இப்பஞ்சீகிருத தூல பூதமாகிய பெரிய பூதத்தினின்றுஞ் சீவர்களுடைய கருமவசத்திற்கேற்ற தூலசரீரங்களும் பலகோடி யண்டங்களு மவற்றி னுட்பிரிவாகிய வளவி றந்த புவனங்களு மளவிறந்த போக வகைகளான நான்கையுந் தரப்பட்டன வெ-று.

பத்தாக்கி யென்ற விலேசாலும், மேல் தோதத்து என்றமையாலும், வேறோராற்றாலு மிப்பஞ்சீகரணத்தை விரித்துக் கூறலுமுண்டு. அதனை விசாரசாகரத் தைந்தாந் தரங்கத்திற் கூறியிருத்தலி னீண்டுக் கூறிற் றிலமென்க. நந்துதல்=மிகுதல். அது ஏனைய பாகம் பிரிந்து கழிந்து நிற்றலி னிப்பாகங் கழியாது நிற்றலென்க. அண்டமும் புவனமு மின்றிய மையாத போகசாதன மாதலி னுடன் கூறப்பட்டன. இவ்வண்ட புவனங் களின் விரிவை திருவருட்பா மெய்ம்மொழிப்பொருள் விளக்கத்திலுங் காண்க. (௩௫)

தூலமே மருவுஞ்சீவன் சொல்லிய விசுவனாகுந்
தூலமே மருவுமீசன் சொலும்விராட் புருடனாகுந்
தூலமே யன்னகோசந் துன்னுஞ்சாக்கிர வவத்தை
தூலகற்பனை யீதென்று தொகுத்தது மனத்திற்கொள்வாய் (௩௬)

இத்தூலதேகத்தை யடைந்த வவசாத்தி லச்சீவேச்சுரர்களுக் குண்டாகிய பெயரு மவத்தையுங் கோசமுங் கூறி யீதிற் சிருட்டியையு முடித்துக் கூறுகின்றார்:—

(இ-ள்.) சொல்லிய தூலமே மருவும் சீவன் விசுவன் ஆகும்= கூறிய வியட்டிதேகத்திற் பொருந்தியதை யபிமானிப்பவனான சீவனுக்கு அவ்வவசரத்திற் பெயர் விசுவனென்றாகும்; சொலும் தூலமே மருவு மீசன் விராட்புருடனாகும்=சமட்டியாகக் கூறிய தூலதேகத்திற் பொருந் தியதை யபிமானிக்கு மீச்சுரனுக்கு அவ்வவசரத்திற் பெயர் விராட் புருட னென்பதாகும்; தூலமே அன்னகோசம்= அவ்வியட்டி சமட்டியான தூலசரீரங்களே யச்சீவேச்சுரருக் கன்னமயகோசமாகும்; துன்னு சாக்கிர வவத்தை = சகல கரண விவகாரங்களும் பொருந்திய சாக்கிராவத்தையு மதனிடமாகும்; தூலகற்பனை யீது என்று = இத்தூல கற்பனை சிருட்டி யிதுவென்று; தோதத்தது = சங்கிரகமாகக் கூறியதை; மனத்திற் கொள் வாய் = மனத்திற் றரித்துக்கொள்வா யெ-று.

'தூலமே மருவுஞ் சீவன்' 'தூலமே மருவு மீசன்' என்று கூறின மையா லபிமானங் கூறினுமென்க. மருவினோருக் கபிமானமில்லாமை

யில்லாமையா லென்க. அன்றியு மவத்தையு மெய்தாதென்க. அங்ஙன மிருவருக்கு மபிமான மிருப்பினு மது வேறுபட்டு நிற்குமென்க. இதனை மேற் காரணோபாதி காரியோபாதிகள் கூறுமிடத்திற் காண்க. ஆண்டே வியட்டி சமட்டியும் பெறப்படலி னேதிரதுபோற்றி யீண்டுரைக்கப் பட்டது.

கூறிய காரணசரீரமுதற் றூலதேகமீறா யவற்றிற்குப் பெயரும் வேறு பலவு முண்டெனினு மவற்றைக் கூறுஞ் சூடாமணி முதலிய நிகண்டு போன்ற நூல்களிற் காண்கவென்க. இந்நூல் விசாரமாகலி னித்துணையே சாலுமென்க. ஈசனுக்கிவை கோசமாய் நிற்றல், தனதுண்மையான தற்பத விலக்கியார்த்தத்தைச் சீவர்களுக்கு மறைத்து வாச்சியமான வந்தரியாமி முதல் விருச்சார்ச்சனையீறா யவற்றை வெளியிட்டுக்காட்டிக்கொண் டோர் கொண்ட கருத்திற்கியையப் பயனையுங் கொடுத்து நிற்றலாலென்க. இவ்வாறே யவத்தையுஞ் சுழுத்தி சொப்பனஞ் சாக்கிரமெனப் பொதுப் படக் கூறினு மீசனுக்கு வேறுபாடுடைத்து. வேறுபாடுடைத்தாமாறு: சீவன் அவ்வவத்தாமய மாவன். ஈசன் ஞானியைப்போல வவ்வவத்தைகளை யறிந்து நிற்றலே யென்க. சீவனவத்தைவயப்படலிற் சிற்றறிவனுதலு மீசனவ்வவத்தைவயப் படாமையான் முற்றுணர்வினனுதலு மறிகவென்க. இனி, செகத்சிருட்டியை விரித்துரைக்க வனேக பிரமர்க ளநேகமுங் கொண்டு அநேக யுகங்களாகக் கூறினு முடிவுபெறா வென்க. இதனால் 'தொகுத்தது' என்றாரென்க. வசிட்டபகவானு மநேக விதிகாசங்களா லிராமனுக்குக் கூறியது மிதற்குச் சான்றமென்க. (கக)

சீரிய வீசனார்க்குஞ் சீவர்க்கு முபாதியொன்றே
லாரிய குருவேபேத மென்னெனி லவ்வீசர்க்குக்
காரண வுபாதிசீவர் கட்குக் காரியவுபாதி
வீரிய மிருசமட்டி வியட்டியாற் பேதமாமே. (சங)

மரங்கள்போல் வியட்டிபேதம் வனமெனல் சமட்டிபேதஞ்
சரங்கடா வரங்கள்பேதந் தனியுடல் வியட்டியென்பார்
பரம்பிய வெல்லாங்கூட்டிப் பார்ப்பது சமட்டியென்பா
ரிரங்கிய பலசீவர்க்கு மீசர்க்கும் பேதமீதே. (சச)

முன்சிருட்டிகூறுமிடத்தில், "அநாதியாஞ் சீவரெல்லாம், பொருந்து மவ்வியத்தந்தன்னி லிதுகாலதத்துவப்பே ரீசனுட் பார்வை யாலே" என்ற விடத்திற் சீவேசுரர்கள் பொருந்திநிற்றற் கவ்வியத்த மேயன்றி மற்றென்று மாங்கு காணப்படாமையி னந்த வவ்வியத்த

மோன்றே யவ்விருவருக்கு முபாதியாக நிற்றலினுனுந் 'தூலமே மருவுமீசன்' எனவும், 'தூலமே மருவுஞ்சீவன்' எனவு மீண்டுக் கூறலானும், 'இவ்வுடன் மருவுஞ்சீவர்,' 'இவ்வுடன் மருவுமீச' னென விடையிற் கூறினமையாலு, மிம்மூன்று சரீரங்களு மோருபாதியாய் நிற்றலாலு மோருபாதியி லிருவ ரியாங்ஙன நிற்பர். நிற்பினு மறிவு முதலியவை தாரதம்மியமாக நிற்றலின் முரணுமே. முரணுய வவ்விருவரின் வேறுபாடறிதல் யாங்ஙன மென்னு மாசங்கையை மேற்கோண்டு ஸம்க்ஷேபசாரீரகத்திற் கூறிய சித்தாந்தத்தாற் சமாதானமு மிவ்விரண்டு கவியாற் கூறுகின்றார்:-

இவ்வினவிடை யிடைப்பிறவரலுமாம்.

(இ-ள்) ஆரிய குருவே! சீரிய வீசனுர்க்குஞ் சீவர்க்கும் உபாதி ஒன்றேல்=கூறிப்போந்த பிரதிவிம்பரான விவ்விருவர்க்களுக்கு முபாதியானவை யிரண்டிருத்தல் வேண்டும், கூறியவரற்ரு லவித்தை யொன்றே யாகின்றது; இங்ஙன மிருவருக்கு மோருபாதியாயின் பேதம் என்=இவர் சர்வஞ்ஞரான வீசரென்றும், இவர் கிஞ்சிஞ்ஞரான சீவர்களென்றும் வேறுபாடறித லெங்ஙனம்; எனின்=என்று நீ கேட்பாயாயின்; அற்றன்று. அவ்வவித்தை யொன்றே காரண காரிய வேறுபாட்டா லிருதிறனு மவற்றில், அவ்வீசர்க்கு காரண உபாதி=கூறிய வீச்சுரனுக்குபாதியாங்காற் காரணோபாதி யென்னப்படும்; சீவர்கட்கு காரிய உபாதி=சீவர்கட் குபாதியாங்காற் காரியோபாதி யென்னப்படும்; ஆகலின், சமட்டி வியட்டியால் பேதமாமே=காரணோபாதி சமட்டி யென்பதனுனுங் காரியோபாதி வியட்டி யென்பதனுனு மிவ்விரண்டு பாதியிலும் பிரதிவிம்பமும் வேறுபட்டிருத்தலி னிவர்தன்மையும் வேருமென்க. ஏகார மீற்றசை. (க)

இவற்றிற்குத் திட்டாந்தம்: மரங்கள்போல் வியட்டி பேதம் வனமெனல் சமட்டி பேதம்=தனித்தனியே யொவ்வொரு மரத்தையும் வேருகப் பார்த்தல் ;வியட்டியின்பிரிவு, அம்மரங்களனைத்தையு மொன்ருகக் கூட்டிப்பார்த்தல் சமட்டியின் பிரிவு; இவைபோல, சரங்கள் தாவரங்கள் பேதம் தனியுடல் வியட்டி என்பார்=நடப்பனவு நிற்பனவுமாயுள்ள வேறுபாடான தனியுடலாய்க் காண்பது தனித்த பிரிவு என்பர்; பரம்பிய எல்லாம் கூட்டி பார்ப்பதே சமட்டி என்பார்=அங்ஙனம் விரிந்துள்ள எல்லா வுடல்களையுந் தொகுத்துப் பார்த்தலே சமட்டியென்னும் பிரிவென்பர் மேலோர்; இரங்கிய பல சீவர்க்கும் ஈசர்க்கும் பேதம் ஈதே=கவலையுற்ற பலவாயுள்ள சீவர்கட்கும் அஃதில்லாத வொன்ருன வீச்சுரனுக்கும் வேறுபாடிவையே யாம். எ-று. ஏகாரம் ஈற்றசை. (உ)

ஆரியகுரு= ஆரியராகிய குரு. ஆரியர்கட்கு குரு என விருமுடி பெய்தமெனக. இவற்றுண் முதன் முடிபுப்பொருளாங்கால் பார்ப்பனப் பிறப்பின ரென்பது பெறும். மற்றைய முடிபாற் கூறுங்கா லிலக்கணையா லறிஞர்கட்குக் குரு வென்றுமெனக. எல்லாங் கூட்டிப்பார்த்தல் மாயை யாகலி னிம்மாயோபாதிகன் சர்வஞ்ஞ னென்பதும், அவ்வந்தக்கரணோ பாதிகர் கிஞ்சிஞ்ஞ ரென்பதும் பெறப்படு மெனக. இவ்வுபாதிகளின் றன்மம் பிரதிவிம்பத்தினிடத்துங் காட்டலினெனக. இதனுன் முன்னும் சீரிய விசனுரென்றும், இரங்கிய சீவரென்றுங் கூறினுரெனக. இதனுன் சீரில்லாமை சீவர்கட்கு மிரங்காமை யீசனுக்குங் கொள்ளப்பட்டன. 'என்ப' றென்றது ஸம்க்ஷேபக்காரரை யெனக. இனி யிவ்விருவரின் றன்மைகளை மேற்கூறுமிடங்களிற் காண்க.

'ஆர் ஆரீறு' சீவர்களுக்கடையாயது பன்மைப் பொருட்டு. ஈச னுக்கடையாய துயர்வுசிறப்பின் பொருட்டு. (௧எ) (௧அ)

கற்பனை வந்தவாறு காட்டினேங் காண்பவெல்லாஞ்
சொற்பனம் போலவெண்ணித் துணிந்தவன் ஞானியாவன்
செற்புதை மழைக்காலம் போய்த் தெளிந்தவா காயம்போல
வற்புத முத்திசேரு மபவாதவழியுங் கேளாய். (சரு)

" முந்தி யாரோபங் கேளாய் " என்று தொடங்கினு ரதுவிதுவேன் றிதுகாறுங் கூறிமுடித்து நிறுத்த முறையா னபவாத விலக்கணமு மிது முதன் மூன்று கவிகளானுங் கூறத்தொடங்கி யிதி லதற்குத்தி கூறுகின் ருர்:—

(இ-ள்) கற்பனை வந்த ஆறு காட்டினேம்= சீவர்களுக்குப் பந்தத் திற்கேதுவாகிய செகத்தினத்தியாரோபத்தைச் சுருதி கூறிப் போந்த வாற்று லிதுகாறு மறிவித்தோம்; இனி, காண்ப எல்லாம்= அப்பிர மத்திற் றேன்றுநின்ற வித்திரிசியங்களனைத்தும்; சொற்பனம் போல= நித்திராமோகத்தாற் காணுங் கனவிலுள்ள திரிபுடி யக்காலத்தே யுண்மை யாயினு னனவிற் கஃதெப்படி பொய்யோ வதுபோல; எண்ணி துணிந்த வன் ஞானி ஆவன்= சுருதி குரு சுவானுபவத்தாற் றெளியாமுன்ன ருண்மையாகக் காணினு மவைகளா லாரால் உழியவை யனிர்வசநீயமான பொய்யென்பதாகத் துணிந்தவனே ஞானியென்னுஞ் சொல்லுக்குப் பொருளாவன், ஏனையோ ராகாரெனக. ஆதலால், செல்புதை மழை காலம் போய் தெளிந்த ஆகாயம் போல=மேகநிறையுங் கார்காலத்தி லம்மேகத்தினுல் மறைபட்ட வானமானததுநீங்கித் தெளிந்து நின்ற வாங்குள்ள நிலைபோல; அற்புத முத்தி சேரும் அபவாதவழியும் கேளாய்=

கூறிய மாயாபடல நீங்கி யியல்பாய் நின்றுள்ள விறும் பூதான வீட்டை நீ முதலிய வதிகாரிக ளடைதற் கேதுவான வபவாத வழியையும் யாங்கூற நீ கேட்பாயாக. எ-று.

சொற்பனத்தினிலையைப் பற்றிப் பல கடாவு மவற்றிற்கு விடையு மி வற்றிற் கியைந்த பொருளும் 'விசாரசாகர மாரூந் தரங்கத்தில்' விரிவா யுணர்த்தப்படு மென்க. 'செல் புதை மழைக்காலம் போய் தெளிந்த வாகாயம்போல' வென்பது முத்தியினிலைமைக் குவமை யென்க.

இவ்வழியிற் றுணிவுடைமை யிச்சங்கரமதந்தருக்கன்றி யேனைய மதத் தருக்கின் றென்பதைத் 'துணிந்தவ' னென்ற சொல்லா லுணர்த்தினு ரென்க. (கூக)

அரவன்று கயிறென்றாற்போ லாளன்று தறியென்றாற்போற்
குரவன்சொ லுபதேசத்தாற் கூறுநூ லொளியைக்கண்டு
புரமன்று பொறிதானன்று பூதங்களன்று ஞானத்
திரமென்னும் பிரமமென்றுந் தெளிதலே யபவாதங்காண். (சுஉ)

முன், 'அத்தியாரோபத் தொடக்கத்திற் றிட்டாந்தம்,' 'நாருடு பணிமை யோர்தல், நான்மை தாணுவி லோர்தல்' என்றார். அங்ஙன மோர்தல் திரிபாதலி னப்பிராந்தி திரிபுடியைக் கழித்து அவற்றிற் கதிஷ் டானங்களைத் துணிபொருளாக வுணர்த லுண்மை போலக் கூறிப் போந்த கற்பனு சேகத் பேதங்களை யபவாதயுத்தியா லொழித்து நின்ற வியல்பாய தன் சொரூபத்தைக் காண்கவென் றிதுமுத லிரண்டு கவிகளாற் கூறுகின்றவ ரதிஷ்டானத்திலும் விஷமசத்தையுடையதி னவ பாச மத்தியாசமெனவும், தனதபாவாதிகரணத்திற் றனதவபாச மத்தி யாசமெனவு மத்தியாசவிலக்கண மிரண்டனு ளிதில் முன்னைய விலக் கணத்தை யெடுத்து விளக்கி யவ்வத்தியாசத்தைக் கழிக்க வாததிட் டியை முன்னிட்டுக் கழித்துக் கூறுகின்றார்:—

இங்ஙனங் கூறின் முன் கூறிய கனவு திட்டாந்தத்திற்கு முரணுதோ வெனின்? முரணுது. மித்தையாத்துவ மிரண்டிலு மொப்பதிறலினென்க.

(இ-ள்.) அரவு அன்று கயிறு என்றல் போல் ஆள் அன்று தறியென் றல் போல் = முன் நாருடு பணிமையும் தாணுவினேடு நான்மையும் ஓர்தல் என்றும், அங்ஙன மோர்தல் பிராந்தியாதலி னத்தோன்றியவுருக்க ளரவுமன்று ஆளுமன்று, பின்னையோவவை தோன்றற் கிடனுய் நின்ற பழுதையுங் கட்டையுமே யுண்மையாமென் றுணர்ந்தோர் சாதனங்களைக் கொண்டறிவித்ததனு லறிந்தாற்போல என்பது, அவ்வுரு பாம்பாயி னித்

தோற்றத்திற்கு முன்னுதல் பின்னுத லிருத்தல் வேண்டு மங்ஙன மிருந்த தாக அசத்கியாதிவாதியு மாத்மகியாதிவாதியு மக்கியாதிவாதியு மக்கியதாக் கியாதிவாதியோரு மொப்பாமையாற் சத்கியாதிவாதியாகிய நீயொருவ னெப்புவது அசங்கத மென்க. என்னை, பலருமொப்பாமையை நீரொப் பியவாறெற்றே வெனின்? யுத்தி யநுபவங்கட் கொவ்வாமையா லியா மொப்பிலோ மம்மதங்களை யவ்வாறே நின்மதமுஞ் சுருதி யுக்தி யநுபவங் கட் கொவ்வாமையா னினக்கியாங் காட்டலாதுகா மென்க. என்னை? கட் புலனுய பாம்பு பின்னுட்சிக்கு வாராமையாற் றேற்றறகாலத்து மஃது ண்மை யன்மையாமென்க. இதனுன், "நெற்கமுகாய் நீளாது நெல்லாய் நீளுதற் கேது வென்னையென்னுஞ்" சற்கியாதிவாதத்திற் கேது கூற லீண்டாபாச மாயதென்க. அன்றியு மிக்காட்டுப்போல பொருளிலு மொரு படித்தாய்க் காணுது திரிபுபட்டிருத்தலி னிவ்வுலகு கயிற்றரவு போன்றதேயன்றி நெல்லு நெல்லாய வாறுபோன்றன்றென்க. இதனை யாள் முதலிய திட்டாந்தத்திலுங் கொள்க. ஈண்டவற்றைக் கடாவிடை களான் விரிப்பி னிவ்வதிகாரிக்குப் பயன்படாமையாலு மிகப்பல்குமாக லின் விரிக்கிலமென்க.

என்றலென்ற பிறவினை குறிப்பிடைச்சொல், கூறுவோரையுங் கேட் போரையு மவாய்கின்றது. ஏனையவு மவ்வாறே கொள்க.

தூவன் சொல் உபதேசத்தால் = ஆப்த வாக்கியத்தால்; சொல்லுப தேசம் இருபெயரொட்டுப்பண்பு. கூறுநூல் ஒளியைக்கொண்டு = இவ் வத்தியாரோப வபவாதங்களைக் கூறு மத்தியான்ம சாத்திரார்த்தமாகிய வொளிப்பிழம்பைக் கைக்கொண்டு தான் புரம் அன்று பொறி அன்று பூத ங்கள் அன்று = தானிதுகாறு மத்தியாசமாகக் கூறிப்போந்த வித்தேகமுதற் பஞ்சபூதமீறு யவையன்றென்று கழித்து; ஞானத்திரம் என்றும் பிரமம் என்றும் தேளிதலே அபவாதம் = நின்ற ஞானவடிவமான பிரமசொரூப மென்றுணர்ந்து முன் விபரீதமாகக் கண்ட பிராந்தி நீங்கி நிதித்தியாசத் தாற் சுத்தமாதலே யபவாதமென்று சொல்வதாகும். எ-று. காண் முன் னிலை. அன்றி, யென்றுணர்க வெனினுமாம். (௬0)

படமுநூலும் போற் செய்தபணியும் பொன்னும்போற் பா
கடமுமண்ணும்போ லொன்றுங் காரிய காரணங்க [ர்க்கிற்
ளுடன்முதற் சுபாவமீறு யொன்றிலொன் றுதித்தவாறே
யடைவினி லொடுக்கிக்காண்ப தபவாத வுபாயமாமே. (௬௭)

இதிற் பிரவிலாபதிட்டியா லவ்வபவாத யுத்தியை வற்புறுத்து கின்றார்:—

(இ-ள்.) படமும் நூலும் பணியும் பொன்னும் கடமும் மண்ணும் போல காரியகாரணங்கள் ஒன்றும் = அங்ஙனங் கூறினாவுமுதலியவை போன்று பிராந்தி நிவர்த்தியின்பின் னத்தியந்தாபாவ மாகாது சோபாதிக மாய்க் காணப்படலின் கழிபட்டெஞ்சிய வுலகு வேறாய் நிற்றலி னத்து விதங் கெடுமே யெனின்? அற்றன்று. படமுதலிய விம்மூன்று காரியங் களுந் தமதுபாதான காரணங்களை விலக்கி நில்லாதனபோல; பார்க்கிற் காரிய காரணங்கள் ஒன்றும் = ஆராய்ச்சி செய்யுமிடத்திற் காரியகார ணங்களானவை வேறாக நில்லாது தம துபாதானகாரண சொரூபமாகவே காரியங்க ணிற்கும்; உடன்முதற் சுபாவ மீறாய் = இத்தேக முதற் பிரகிருதி முடிவாக; ஒன்றில் ஒன்று உதித்த ஆறே = ஒன்றினின் றொன்றுண்டான வழியே; அடைவினில் ஒடுக்கிக் காண்பது = பொருந்தும் விதத்தா லுண்டானபடி மறித்து ஒன்றிலொன்றை யொடுக்கிப் பார்ப்பதே; அப வாதவுபாய மாம் = மற்றொன்றாகிய வபவாதயுத்தி யாம். எ-று.

இங்ஙனம் பார்க்குமிடத்திற் பிரமத்திலுண்டாய வனைத்து மப்பிரம மேயாமென்ப தெஞ்சியது. இப்பொருளையே, "எப்பொரு ளெத்தன் மைத்தாயினு மப்பொருண் மெய்ப்பொருள் காண்பதறிவு" என்றது முதுமறையாகிய பொய்யா மொழி யென்க. இவற்றின் சூக்குமவிசாரம் யுத்தி கடினமாகலின் விருப்புடையோர் பெருநூனோக்கி யுணர்க வென்க.

'பிரமம் விவர்த்தோபாதான' மாகலின் சுபாவமுந் தோற்ற வொடுக்க முடையதாகக் கொள்க வென்க. உ-ம்: "அவனி நீரிஞன்மாள வனலின் மான நீர் காலினனலுமாள வாகாய மதனில் மாளவூடாடு, பவனன் வான மேலான பழைய தேசிலேயான படியின்மாள மாளாத பழைய பாழில்வாழ் வாளே." என்ற தஞ்சுவதைப்பரணி. (௩௪)

தூடண தமத்தில்வந்த தோற்றமாஞ் சத்திசெய்யு
மீடணை விகாரஞ்சொன்னீ ரிரண்டுசத்திக ளென்றீரே
மூடலாஞ் சத்திசெய்யு மோகமுஞ் சொல்லுமையா
கேடறக் குருவேயென்னக் கிருபையோ டருள்செய்வாரே. (௩௮)

இனித், "தாமதகுண மிரண்டுசத்தியாய்ப் பிரிந்து தோன்றும்" என்றவற்றுள் விட்சேபசத்தியின் றன்மையை யீதுகாறுங் கூறிமுடித்து இனி யாவரண சத்தியின் றன்மையை எட்டுக்கவிகளாற் கூறுபவ ரிதி லதற்குத் தோற்றுவாய்க் கூறுகின்றார்:—

(இ-ள்.) தூடணதமமென்பதை மேற்கூறுமிடத்திற் காண்க. ஈடணை பொருளுக் காகுதலா லாகுபெயர். அல்லது, ஈடணைத்திரய ரூபமான

விகாரம். ஈடணையை விளைக்கும் விகாரமெனினு மொக்கு மென்க. இவ் விகாரங் கூறிய 'வந்தக்கரண முதற் பௌதீக மீறுயவை.' மூடல்=ஆவரணம். இது செய்யு மோக மேற் கூறப்படுமென்க. இம்மோகத்தின் காரியங் கேடாகலின், கேடற வென்றார். கேடு பிறப்பிறப்பினு லுண்டாந் துன்பம். குருவே விட்சேபசத்தியின் றன்மையுஞ் செயலுங் கூறியது போல மற்றொன்றாய வாவரணசத்தியின் றன்மையுஞ் செயலுங் கூறு மென்ற மாணக்கனுக்கு அவர் கூறப்போதுகின்றார். எ-று. ஏகார மிரண்டனுண் முன்னது வினு பின்னது தசை. (௪௨)

*தானிகர்தனக்கா மீசன் றனையுந் தங்களைத் தாங்கண்ட*
*ஞானிகடமையு மன்றி நாஸ்திக பாதியென்ன*
*வூனிறையுயிர்க ளுள்ளத் துணர்விழிக் குருடாம்வண்ணம்*
*வானிலந்திசை கண்மூடு மழைநிசி யிருள்போன்மூடும் (௪௩)*

இதிலவ்வாவரண சத்தியின் றன்மையுந் தொழிலுங் கூறுகின்றார்.

தனக்குத் தானிகர்த லியற்கை யறிவு முதலிய வெண்குணங்களி லொப்பிப்பிறரின்மை. தங்களையென்ற தந்தக்கரண வுபாதிக் கதிட்டானங்களை யென்க. என்னுமெனப்பாடங் கொளி னதுகொண்டு முடியு மெச்சச்சொன்மே லின்மையினது பாடமன்று. ஊன் ஆகு பெயர் ஊனிறை உயிர்=உடலினிறைந்தவுயிர். வானும் நிலனு மாகு பெயர். விழி, உவமானத்திற்கும் பொருளுக்குமாமென்க.

(இ—ள்.) அவ்வாவரணசத்தி யியற்கையுணர்ச்சி முதலிய தன்மையுடைய வீசனையு முன் மறைபட்டுப் பின்றம்மை யுணர்தலா லவ்வாவரணத்தைக் கெடுத்த சீவன் முத்தரையும் விட்டு மற்றைய வுயிர்களி னுள்ளத்தி லுணர்வாகிய விழியானது குருடுபடுந்தன்மையாக மூடும், எதுபோல வெனின்? மழைகாலத்தினிரவி நடுயாமத்திலுள்ளவிருள் வானிலுள்ள வுடுக்களையும், நிலத்திலுள்ள வீடுமுதலிய பொருள்களையு மறைத்தல் கண்ணிற்கும் போல வென்க. அவ்வாறு மூடலு மிரு திறத்தினும். அவற்றி லொன்று, நாஸ்தி = இக்காட்சிப் பொருளேயன்றி மறுமை முதலிய வொன்று மில்லை யெனவும், அங்ஙன மிருப்பி னித்தேகாதிகள்போலக் காணப்படாவா வாகலி னபாதியெனவுமா. மெ-று.

"பார்வஞ்சேர மறைத்தாற்போல= நல்வழியை மறைத்தாற் போல, எல்லாப் பொருளையு மறைத்த, கூரிருள் நடுநாள்=மிகுந்த விருளையுடைய நடுபாயத்தில்" என்றார் கல்லாடருரையாசிரியருமென்க. திசைமூடல் கிழக்கு முதலிய திக்குகள் மயங்கத் தோன்ற வைத்தல். இருளை யுவமானங் கூறினமையா லாவரண மிருளென வதன்றன்மையு மறைக்கு மென்ற

ததன் றொழிலு மெனக் கொள்க வென்க. நாஸ்தி நபாதி என்ற விரு தன்மையையு மூவமானத்திலுங் கொண்டு வழிச்செல்வோனுக்கு வழியில் முள்ளும் பாம்பும் படுகுழி முதலியவுமில்லை யிருந்தாற் கட்புலனாகாதா வெனப் பொருளுரைத்துக் கொள்க வென்க. இவ்வாவரணத்தின் செயலின் விரிவை வருஞ் செய்யுட்களா லுணர்க. (௪௩)

பூன்றமாம் பிரமத்திற்கும் புறத்துள விகாரங்கட்கு
மான்றகூ டத்தனுக்கு மகத்துள விகாரங்கட்குந்
தோன்றிய பேதஞ்சற்றுந் தோன்றுமன் மறைத்துமூடி
மூன்றிய பவவியாதி யுண்டாக்குமுபாதி யீதே. (௫௰)

"ஊனிறை யுயிர்களுள்ளத்துணர்.........மூடும்" என்றமையா னகத்தே யன்றி புறத்தேயு மூடுமோ வென்னு மையமகற்றற்குத் தாட் டாந்தத்தை விரித்துக்கூறி யாவரணத்தின் பயனு மிதிற் கூறுகின்றார்:—

பூரணம்=பூன்ற என தத்பவ மாயிற்று. ஆன்ற=அமைந்த என் பது பொருள். அமைதலாவது, சீவனுக்கதிட்டானமாய் நிற்றல். தோன் றிய பேதமேன் பிறந்தகாலத்தாற் கூறினு ரனுதியாறனு லிப்பேதமு மோன்றுதலி னென்க. பவவியாதி யுண்டாதற்குப் பல காரணங்களிருப் பினு மிவ்வாவரண முதற்காரணமாகலி "னூன்றியவுபாதி" என்று ரென்க.

(இ—ள்.) பிரமத்திற்கும் பஞ்சபூதாதி புறவிகாரங்கட்குங் கூடஸ் தனுக்கு மந்தக்கரண முதலிய வகவிகாரங்கட்கும் பலவாய விரோதமிருப் பவு மவற்றி லொருசிறிதும் பேதந் தோன்றுமன் மறைத் ததிகாரிக்கு மூடு தலா லிதுவே ஜன்னத்தையுண்டாக்கற்கு முதற்காரண மாயது. எ-று.

ஈண் டுபாதியென்ற தேதுவை யென்க. இவ்வேறுபாடுகளை மேல் வரு மிடங்கடோறுங் காண்க. இவ்வேறுபாடுகளைத் தெரியவொட்டாமன் மறைத்த லிவ்வாவரணத்தின் றொழில். இம்மறைப்பா லிப்பவவியாதி யுண்டாத லதன்பயன். பவவியாதி இருபெயரொட்டு. (௫௪)

ஆதார மறைந்துபோனு லாரோப மெங்கேதோன்று
மாதார மறையாதாயி னாரோப மிலையேயென்று
லாதாரஞ் சமவிசேட மாமென விரண்டுகூறு
மாதாரஞ் சமமாமெங்கு மாரோபம் விசேடமாமே. (௫௧)

"பிரமத்திற்கும் புறத்துள விகாரங்கட்கும், கூடஸ்தனுக்கு மகத் துள விகாரங்கட்குந் தோன்றிய பேதஞ் சற்றுந்தோன்றமன் மறைத்து மூடும்" என்றீ ரங்ஙன மதிட்டானமாகிய பிரமகூடத்தரை யிவ்வா

**வாரண மறைக்குமாயி னிவைகாரணமாகத் தோற்றுத லவ்விருவகைப்
பிரபஞ்சமு மியாங்ஙனமென்ற மாணாக்கன்வினாவை மேற்கொண்டு கற்
பிதந் தோன்றற் கதிட்டான மிருகூற்றதென் றதன் பாதபாடு மவற்றி
லாரோபந் தோன்றற் கதிட்டான மிதுவென்று மதனை யிவ்வாவரண
மறைக்குந் தன்மையு மிதுமுத லிரண்டு கவிகளாற் கூறுகின்றவ ரிதிலவ்
வினாவையு மாதாரத்தின் பிரிவு மிதில் கூறுகின்றார்:—**

(இ—ள்.) **ஆதார மறைந்துபோனு லாரோபம் எங்கே தோன்
றும்**=*ஓராரோபத்திற் காதாரமாயுள்ள பொரு டன்வடிவு முற்றுந் தோன்
றுமன் மற்றோர் பொருளான் முற்று மறைபடுமாயி னவ்வாதாரங் காணா
மையி னபாவப்பொருளி லாரோபந் தோன்றுமையா லவ்வாரோபந் தோன்
றற்கிட னுண்டியாது?* **ஆதார மறையாதாயின் ஆரோபம் இலையே**=
*அங்ஙனமன்றி யவ்வாதாரமானது ஒரு பொருளானு மறைபடாது வெளிப்
படத் தோன்றுமாயி னதினு மாரோபந் தோன்றுதே;* **என்றால்**=*இவ்வாறு
வினவுதியேல், கூறிய துண்மையே யாயினு மவ்வாறன்று;* **ஆதாரம் சமம்
எனவும் விசேடம் எனவும் இரண்டு கூறு ஆம்** = *அவ்வாதாரத்தினிடத்
திற் சாமானியக் கூறொன்றும் விசேடக் கூறொன்றுமாக விரண்டு கூறு
பாட்டினையுடையது அவ்வாதாரமாகலின்; அவற்றில்* **ஆதாரம் சமம்எங்கும்
ஆம்**=*ஆதாரத்தின் சாமானிய பாகமானது எவ்விடத்திலும் பொதுமையி
னிற்குமாகலி னதுதான் மறைபடாத பாகம்;* **எவ்விடத்து**மென்றது *கற்
பிதவிசேடந்தோன்று* **மதிஷ்டானத்தினிடத்து** *மென்க.* **ஆரோபம்
விசேடம் ஆம்** = *ஆரோபமாகப் பரிணமிக்கும் பாம்பு முதலியவை அவ்
வாதாரத்தின் விசேடபாகத்தி லாகும். எ-று.*

*ஏகார மிரண்டனுண் முன்னையது வினாப்பொருளிலும்* **பின்னைய**
*தசையுமாம். இவ்வினாக்கள் பிறிதுமொழித லாதலின் றுட்டாந்தத்தும் பிரம
முற்று மறையுமாயிற் பிரபஞ்சந் தோன்றுதென்றும் மறையாதாயி னுண்
டும் பிரபஞ்சந் தோன்றுதே யெனக் கொள்க. இனித், தருமவிசேடத்தோ
டுந் தருமி தோன்றும்போது ஆரோபந் தோன்றுமையைக் கூறவேண்டா
வாயினு* **மந்நுவயயுத்தியுந்** *தடைப்படலைக் காட்டற்குக் கூறினு ரென்க.
மறைபடு மதிகாரணமு மவற்றிற் றோன்று மாரோபமும் பலவாகலின் பொது
வாய்பாட்டாற் கூறினு ரென்க.* **ஆதாரஞ் சம**மென்றது *தருமிபாகத்தை
யெனவும்,* **விசேட**மென்றது *தருமபாகத்தையெனவுங் கொள்க வென்க.
முன்னின்ற* **ஆ**மென்னு *மிடைச்சொற்* **சாரியை.** *ஈற்றினின்ற* **வா**மென்
*பதை யாரோபத்தோடுங் கூட்டுக.*

**விசேட**மென்ப *தேழாம்வேற்றுமை யீற்றுக்கண்டொக்க தொகைச்
சொல். அன்றி* **விசேடமே** *யாரோபமாகவாம் எனப் பொருளுரைப்பினு*

மமையு மென்க. இங்ஙனங்கூறுமிடத் தேகாரந் தேற்றமாம். கருத்து வருஞ்செய்யுளோ டொட்டி முடிக்கப்படு மென்க. (சரு)

சகமதிலிது வென்சுட்டாஞ் சமானந்தான் மறைந்திடாது
மிகவுரை கயிறுபாம்பாம் விசேடந்தான் மறைந்துபோகு
மகமெனுஞ் சமானந்தன்னை யஞ்ஞான மறைத்திடாது
பகர்விசேட மதாஞ்சீவன் பரனெனு மதனைமூடும். (நிஉ)

கூறியவற்றிற்குத் திட்டாந்தங்கூறி யிவ்வா றனுபவத்திலு முண்டே ன்ற தாட்டாந்தமுங் கூறுகின்றார்:—

(இ—ள்.) **சகமதில்**=திட்டாந்தத்தில்; **இதுவென்சுட்டாம் சமானந் தான் மறைந்திடாது** = பாம்புதோன்றற் கதிகாணமாகிய கயிற்றி லிது வென்று சுட்டுதற்குப் பொருளாயுள்ள சாமானிய வமிசமானது மாலையிரு ளான் மறைபடாது; பின்னையோ? **மிகவுரை கயிறு பாம்பாம் விசேடம் தான் மறைந்து போகும்** = எடுத்துக்கூறப்பட்ட (விசேடமாகக் கூறப் பட்ட) கயிற்றின்பாகந்தான் பாம்பாதற் கதிட்டானமாகு மாகலி னக்கயி றென்று விசேடபாகந்தான் விழிக்குத்தோன்றாத வவ்விருளான் மறைபடு மித்திட்டாந்தம்போல; **அகம் எனும் சமானம்தன்னை** = பிரபஞ்சாதிட் டானமான பிரமத்தினுனென்று கூறத்தக்கதான வியாபகசாமான்னியா மிசத்தை; **அஞ்ஞானம் மறைத்திடாது** = அஞ்ஞானத்தின்கூறாகிய வாவ ரணசத்தி மறைக்கமாட்டாது; **பகர் விசேடமதாம் சீவன்** = அப்பிரமத் தில் விசேடமாகக் கூறப்பட்டதுதான் (விசேடமாகக் கூறப்பட்டதுபான்) சீவபாவத்தையடையும், இதனுன் சீவனுக்கதிட்டான மப்பரனும்; **பான் எனும் அதனை மூடும்**=நான்|பரனென்பது!தோன்றாமையா லப்பரனென்ற விசேடாம்சத்தையே யவ்வாவரணசத்தி மறைக்கும். எ-று. **சீவன் விசே டம் பகர் பான்** என்று கூட்டி = சீவனது விசேடசொரூபங்கூறிய பர னெனப் பொருள்கொள்க வென்க.

திட்டாந்தத்தில் மறைந்திடாது மறைந்துபோகுமென்ற தன்வினைக் குக் கருவியாகிய வினைமுதல் அவாய்நிலையான் வந்தது. **கயிறு** என்றது முறுக்கி முப்புரியாயுள்ள பாகம். ஈண்டு சகமென்றது பழுதைமுதலியவை யிருத்தற்கிடமாகலி **னது**பெயரு மாம். **விழியை** யிதுகாறுங்கூட்டிப் பொருள் கொள்க. **அகமென்பது சமானமாவது**, பிரமாதிபிபீலிகாந்த மான சேதனமனைத்தினு **மகம் பிரதீதி** யொப்பநிற்றலி னென்க.அசேதனத் தினிடத் திக்கூறு வேண்டா **வந்தக்காண மின்மையி** னென்க. **அஞ்ஞான** மாகுபெயர். இவ்வஞ்ஞானத்தான் மறைபடுவது 'நான் பரனென்னும்' பாகமாம். இப்பாக மறைபட 'நான் சீவன்' என்னும் பிராந்தி யுண்டாயிற்

றென்க. இப்பிராந்திகாலத்து மகப்பிரதீதி நிற்றலி னிது சாமானியமா யிற்று. சாமானிய மதிககால மதிகதேசத்தி லிருப்பது. விசேடஞ் சில கால மேகதேசத்தி லிருப்பது. இது 'நான்சீவன்' என்னுந்தன்மை யக் காலத்தன்றி யிச்சீவத்துவம் 'நான்பர'னென்ற காலத் தின்றென்க. நானெ ன்றதை சீவனோடு மொட்டுக.

இங்ஙன மாதார மூன்று மறையாமையானு மேகதேச மறைந்தமை யானு மாதாரமு மாரோபமு மோருங்கே தோன்றின வென்க. இதனை யுவமானத்திலுங் கொள்கவென்க. இனி, இதிற் கேவலம் பழுதையைப் பாம்பிற் கதிஷ்டானமாகக் கூறியிருக்கின்றார். கேவலம் பழுதை பாம்பிற்க திஷ்டான மன்று. என்னையெனின்? பாம்பைப்போற் பழுதையு மவித் தையாகற்பிதமாகலின் ஒரு கற்பித மற்றொரு கற்பிதத்திற் கதிஷ்டான மாகாது. 'பின்னையோ ரச்சு அவச்சின்ன சேதனந்தான் பாம்பிற் கதிஷ் டானமாதல்வேண்டு' மென்றனர் விசாரசாகரக்காரர். இது' பிடித்தது சாதிப்பே' மென்னுமடத்தாற் கூறியது. என்னை யெனின்? சத்தை மூன்றாகப் 'பஞ்சதசியிலும்,' 'வேதாந்த பரிபாஷை' முதலிய வழிநூல்களி லும், முதனூற்பாஷியத்திலு' மொப்பியிருக்கின்றமையாலும், பழுதை கற் பிதமேயாயினு மூலாஞ்ஞானகற்பித மன்றி இதிற்றோன்றிய பிராதிபாசி கசத்தையாகிய பாம்பு தூலாஞ்ஞானகற்பித மென்றாகலின் சத்தாவேறுபா ட்டாற் பழுதை யதிட்டானமும், பாம்புஆரோபமென்பது மமையுமென்க. இவ்வுத்தியினானு மிந்நூற்காரரு மொப்பினரென்க. இது மேலீச்சுரசிருட்டி சீவசிருட்டி கூறுமிடத்து நன்கு விளங்கு மென்க. (சக)

கேவல நிலைதோன்றுமற் கெடுத்தது பஞ்சகோசஞ்
சீவனுஞ் செகத்துமாகிச் செனித்தவிட் சேபமன்றோ
வாவரணந் தானேபா ழனர்த்தமென் றுரைத்ததேதோ
மேவருங் குருவேயென்ன விஞ்வின மக்னேகேளாய். (ருஉ)

இனி, சேதனசேதனரூபமாகத் தோற்றிய காரியப்பிரபஞ்சம ன்றே வங்ஙன மான்மாவை மறைத்துத் தோன்றநின்றது. அங்ஙன மாக வாவரண மறைக்குமென்ற லியாங்ஙனம் பொருந்துமென்னு மாசங்கையு மதற்குச்சமாதானமு மீதுமுதன் மூன்று கவிகளாலுங் கூறு பவ ரீதி லவ்வாசங்கையைக் கூறுகின்றார்:—

கேவலநிலை பிரமம் சாட்சி கூடத்தன் பரமுதலிய சொற்க ளொரு பொருளுக்கு. இதனை முன் பிரமக்கூடத்தனென் விரண்டாகக் கூறினு மீண்டகமென் றொன்றாகக்கூறினரென்க. பஞ்சகோசங்களுக் கன்னியமா

யில்லாதிருப்பினும் **பிரதிவிம்பமுபாதிநோக்கால்** வேறென்பார் மதம்பற்றிக் கொள்ளினு மமையுமென்க. "ஊன்றிய பவவியாதி யுண்டாக்குமுபாதி யீதே" என்றமையாற் **பாழனர்த்தமென்று** கூறலாயிற்று. **மேவ நுந்தரு** = எம்போன்ற தரத்தினருக்குக் கிட்டத்தகாதவ ரென்றவாறாயிற்று. **கொடுத்து** என்றது விக்ஷேபத்தின் பயன். **தான்** சாரியை. ஓகாரமிரண்டும் வினா. ஈற்றேகாரங்கள் விளி. ஏனையபொருள் வெளி. முன்னின்ற வேகாரந் தேற்றம்.

தோற்றமாஞ் சத்திதானுந் துன்பமாம் பவமானாலு
மாற்றலான் முத்திசேர்வார்க் கநுகூல சகாயமாகு
மூற்றமாம் பகற்காலம்போ லுபகார நிசியிலுண்டோ [தே.(௩௪)
மாற்றமென் னுரைப்பேன்மைந்தா மறைப்பது மிகப்பொல்லா

சுழுத்தியிற் பிரளயத்திற் றோற்றமாஞ் சகங்கண்மாண்டு
மழுத்திய பவம்போய்முத்தி யடைந்தபே ரொருவருண்டோ
முழுத்தவிட் சேபமெல்லா முத்தியிற் கூட்டுகிற்கும்
கொழுத்தவா வரணமுத்தி கூடாமற் கெடுத்தகேடே. (௩௫)

**இவற்றிலிதற்கு விடை கூறுகின்றார்:—**

**இவ்விரண்டு மொருதொடர். இவற்றின் பொழிப்பு:—**

நீ கூறியவாறே **விக்ஷேபசத்தியும்** ஜனனமரணரூபமான துன்பமேயாயினுந் தன்முயற்சியால் வீடடையாநின்ற முமூட்சுக்களுக்குத் தன்னுடைய மற்றொரு வல்லபத்தா லனுகூலமான துணைக்காரணமுமாகும். எவ்வாறெனின்? சீவர்களுக்கு நிலைபெற்ற சுகபோகானுபவங்களுக்குச் சகாயம் பகற்காலம்போ லிரவிலுள்ளதோ? இல்லையே. இவ்வந்வயவியதிரேக யுத்திகளாலும், சுழுத்தியிலும் பிரளயத்திலுங் காரியப்பிரபஞ்சரூபமான விக்ஷேப நசித்திருப்பினு மொருவருஞ் சனனநீங்கி மோட்சமடைந்தாரில்லையே, இவ்வநுபவத்தினாலும் இது **வியதிரேகயுத்தியின்** றடையுமாம்.

மோட்சமடைதற்குச் சகாயமாயிருந் ததிற்சேர்ப்பது **விட்சேபமே. ஆவரணந்தான்** முத்தியிற் சீவர்கள் கூடாமற் கெடுத்த கேடான செயலுடையது. ஆகலி னவரண மிகவும் பொல்லாது. இதன்வலியை யானெங்ஙனென் றெடுத்துக் கூறுவேன். எ-று.

இதனான் முன்னும் பாழென்று மனர்த்தமென்றுங் கூறியதமையுமென்க. பகற்காலத்தி லுண்டாகு முபகாரம்: பொருளை யீட்டற்கும்

பூசுதல் முடித்த லுண்டல் பூணல் முதலிய விடயவின்பங்களை நுகர்தற்குங் காலமாயுங் கருவியாயுஞ் செயலாயு நிற்றலென்க. இவற்றிற்குச் சுழுத்தி யிடங்கொடா வென்க. **முழுத்தவிட்சேபம் =** முழுதுமான விட்சேபம். அவை தனுகரண புவன போகங்களாயுள்ள பிரபஞ்சமெல்லா மென்றபடி. இவையெல்லா முத்தியிற்கூட்டல். சீவன் தேகாபிமானியாய் வருணச் சிரமத்திற் கட்டுண்டு நித்தியநைமித்தியாதி கருமங்களைச் செய்யும்போது செய்பவனுக்குக் கருவியாயுங் கருமரூபமாயும் பலரூபமாயு மிருத்தல். இதுவு முன்கூறிய வுலகியலோ டொத்தது. இனிப் பத்தியா லுபாசிக்கும் போது உபாசனை உபாசிக்குங்கருவி உபாசியமாயு மிருத்தல். இனி ஞான விசாரஞ் செய்யும்போது குருசாஸ்திராதிரூபமாயும், சிரவண மநந நிதித்தியாசன சமாதி சாட்சாத்கார ரூபமான ஞானபூமி எழின் சொரூபமாயு நிற்றல் என்க. இங்ஙனநிற்றலை மேல் கூறிவரு மிடங்கடோறுங் காண்க வென்க.

முழுத்தவென்பது முழுதுமென்னும் பெயரடியாற் பிறந்த பெயரெச்சவினைச்சொல், சித்திரித்தானென்பது போல. 'அழுத்தியபவம்' சீவனுக் கிகபரந் தோன்றுது விடயத்தி லழுத்திய பவம். இத்தன்மையான செயல் விக்ஷேபத்தினிடத் தேகதேசத்திருப்பினும் பெரும்பாலு மோக்ஷசாதனமாய் நிற்றலின் 'நயநாடி யல்லவைநாடி மிகைநாடி மிக்ககொளல்' லறிவர் கடமை யென்க. (சஅ) (சக)

சுத்தியில் வெள்ளிபோலத் தோன்றிய தோற்றமான
சத்தியும் பொய்யேயென்றுற் சத்திசாதன மாவந்த
முத்தியும் பொய்யாமென்னின் மோகநித்திரை விலங்கா
னித்திரை தெளியுமாபோ னிருவாணநிலை மெய்யாமே. (நிசு)

**இதில் விக்ஷேபத்தைக் குறித்த மற்றோர் சங்கையு மதற்குச் சமாதானமுங் கூறுகின்றார்:—**

என்னை? காரணகாரியஞ் சமசத்தையா யிருத்தலேயன்றி விஷமமாயி னவை தம்மி லொவ்வாவே யென்ற கடாவிற் கிங்ஙனமு முண்டென்றதனு லென்க.

(இ—ள்.) **சுத்தியில் ... ... ... ... ... முத்தியும் பொய்யா மேன் னில் =**

" முன், ருமதகுண மிரண்டு சத்தியாய்ப் பிரிந்து தோன்று " மென் றவற்று ளாவரணம் பந்தத்திற் கேதுவாயதுபோல விவ்விக்ஷேபமும் பந் தத்திற் கேதுவாயினு மோக்ஷத்திற்கு மோராற்ற லேதுவென்றீ ரங்ஙனம்

கூறின், கிளிஞ்சிலிற் றோன்றிய வெள்ளி வியாவகாரிகவெள்ளி யாகா மையி னிவ்வுலகவின்மைப் பயவாததுபோல விக்ஷேபசத்திய மாயாகாரிய மாதலிற் பந்தத்தையே பயத்தல் வேண்டு மங்ஙனமன்றேல் வாளாவிருத் தல் வேண்டு மிவ்விரண்டு மின்றி யுண்மையான மோக்ஷத்தை யெங்ஙனந் தரும்? தருமெனி னிக்காரணம் பொய்யாதலி னிவ்விக்ஷேபஞ் சாதனமாக வந்த வம்மோக்ஷமும் பொய்யாதல் வேண்டுமேயென்று வினுவிடின்? அற் றன்று. **மோகநித்திரை விலங்கால் நித்திரை தெளியுமாபோல்**=கன விற்கண்ட சிம்மஞ்சாதனமாக வக்கனவு நீங்கி நனவுதோன்றுவ துண்மை போல; **நிருவாணநிலை மெய்யாமே**=விக்ஷேபம் பொய்யாயினு மதனு லாவரணங் கெடுபட்டுப் பயக்கப்படும் வீடுமாத்திர முண்மையேயாம். எ-று.

உவமேயத்திலுள்ள சாமானியதருமத்தை யுவமான **வெள்ளிக்குங்** கூட்டுக. அாதகபாதகஞ் சமசத்தைக்கே யாயினும், பிராந்திநிவர்த்தி சொரூப மதிஷ்டானமாதலின் சிம்மத்தோற்றங் கனவைமாத்திரங் கெடுக்க வக்கனவினிவர்த்திசொரூப நனவாகலி னிதுபோல, விக்ஷேப மாவரணத் தைமாத்திரங் கெடுத்தொழிவது மாத்திர மன்றி மோக்ஷத்தை யுண்டாக்கா மையி னவ்வாவரண முதலியவைகட்கு ஆதாரமாகிய மோட்ச மவ்வாவரண நாச சொரூபமாகவே யிருத்தலி னக்குற்ற முண்டாகா தென்பார், "மோக நித்திரை விலங்கானித்திரை தெளியுமாபோ னிருவாண நிலை மெய் யாமே" என்றார்.

"நிருவாணநிலை மெய்யாமே" யென வாளா முடிவுப் பொருளைக் கூறினும் விக்ஷேபசத்திமுதலியவு மீண்டுஞ்சென் றியையு மென்க. தோன் றியவென்று முன்னுங்கூறலி னிம்மோட்ச மவற்றிற் காதாரமென்ப **தவாய்** நிலையான் வந்ததென்க.

இம்பரி னஞ்சைநஞ்சா லிரும்பினை யிரும்பாலெய்யு
மம்பினை யம்பாற்பற்று மழுக்கினை யழுக்கான்மாய்ப்பர்
வம்பியன் மாயைதன்னை மாயையான் மாய்ப்பர்பின்னைத்
தம்பமா மதுவுங்கூடச் சவஞ்சுடு தடிபோற்போமே. (௫௭)

**இவ்விட்சேபத்தாற் கெடுவ தாவரண மாகலி னிவ்விரண்டு மாயை யின் சத்திகளாய் நிற்றலின் யாங்ஙனந் தம்மில் விரோத முண்டாதும், உண்டாயினு மாவரணத்தைக் கெடுத்த விட்சேப நிற்றலால் யாங்ஙன மத்துவிதங் கூடுமென்னுஞ் சங்கையு மவற்றிற்குச் சமாதானமு மிதிற் கூறுகின்றார்:—**

இச்சங்கைகளவாய்நிலே.

(இ—ள்.) நஞ்சுமுதலிய வன்கணுடைய பொருள்களை யவற்றிற்குப் பகையாய வௌடத முதலிய விஷங்களாலே கெடுப்ப நூலகர்; இவை போலத் தன்பை விளக்கு மியல்பினையுடைய வாவரணசத்தியை யறிவுருபமான விட்சேபத்தாற் கெடுப்ப ரறிஞர். அவ்வாவரணத்தைக் கெடுத்தற் கேதுவாய்நின்ற விட்சேபமு மெஞ்சாது சவஞ்சுடுதடி தானுமெஞ்சாது வேறோர் சாதனமும் வேண்டாது அச்சவத்துடனவ்வக்கினியாற் கூடச்சுடுமெண்ணுமாறு போல, வேறொரு சாதனமும் வேண்டா தவ்வாவரணத்தோடவ்விசாரத்தா லுடனசிக்குமாகலி னத்துவிதமுங் கெடா தென்றவாறு.

நஞ்சைக் கெடுக்கு நஞ்சுப்பூடு மந் நஞ்சுடம்பிற் சாராதகாலத் தண்ணினதுவே கொல்லுமாகலி னவ்வோஷதியையு நஞ்சென்று ரென்க. இருளு மொளியும்போல அறியாமைவடிவமான வாவரணமு மறிவுவடிவமாகிய விட்சேபமுஞ் சமசத்தையாகலிற் பாதகமுங் கூடு மென்பார் ' வம்பியன் மாயைதன்னை மாயையான் மாய்ப்பர்' என்றூ ரென்க. மாயை யாகுபெயர். ஈண்டு மாயையா லென்றது அந்தக்கரணத்திற் றோன்று மஹாவாக்கிய ஜன்னியமான வகண்டாகாரவிருத்தி யென்க. இவ்விருத்தி யின்னதென்பது மிது கெடுக்குமுறையுஞ் சந்தேகந்தெளிதற்படலத்தில் " உலகமான வஞ்ஞானமுங்கருமமு முறவென்ற வழிகூடும், பலவுமான வஞ்ஞானமு ஞானம்பகையென்ப துளதானு" லென்றது தொடங்கி விரித்துக் கூறப்படலி னுண்டுணர்க வென்க. மேல் வருவனவற்றிற்கு மிது தோற்றுவாயு மென்க. ஏகார மீற்றசை. (ருக)

*இந்தமாயையினுற் சீவர்க்கே மூவத்தைக ளுண்டாகு*
*மந்தவே மூவத்தைதன்னை யடைவினின்மொழியக் கேளாய்*
*முந்தவஞ் ஞானமூடன் முளைத்தல்கா ணுதஞானஞ்*
*சந்ததங் கண்டஞானந் தழல்கெடல் குளிர்மையாதல்.* (ருஅ)

இதுகாறு மாவரணசத்தி விட்சேபசத்திகளின் றன்மைகளையுஞ் செயல்களையுங் கூறிவந்தீ ரிக்கூற்றி லாவரணம்போல விக்ஷேபமும் பந்தத்திற் கேதுவென்று மிப்பந்தநீங்கு முத்திக்கு மேதுவென்றுங் கூறினீ ரிங்ஙன மவ்விரண்டு வகையான வேதுவை யேமக்குதன் பதத்து விசித்தமைத்தருளுக வென்றனை நோக்கிச் சமாதானமு மாறு கவிகளாற் கூறத்தொடங்கி யிக்கவியி லப்பந்தம் வீடுகளுக்குச் சாதனங்களாக நிற்கும்போ தவைகளுக் குண்டாகும் பெயர்களை நிரைபட வகுத்துக் கூறுகின்றார்: —

'இந்தமாயை' என்றது, கூறிய விரண்டு சத்திகளையுடைய மாயையென்க. பவத்திற்குமுன்னாக நிற்றலி னஞ்ஞானத்தை 'மூந்தவஞ்ஞான' மென்றார். **தழல்கேடல்** = துக்கநிவர்த்தி. தழல், தொழிலுவம வுருவகமாகலி னாகுபெயர். குளிர்மையாதலு மது. **குளிர்மையாதல்** = ஆநந்தமடைதல். ஏனையபொருள் வெளி. (௩௨)

பிரமமாந் தனைமறந்த பேதமையே யஞ்ஞானம்
பரனிலை காணேமென்றல் பகர்தலா வரணமூட
னரனென்னுங் கருத்தாற்சீவ னானென முளைத்தறோற்றங் (௩௯)
குரவன்வாக்கியத்தாற் றன்னைக் குறிக்கொளல்பரோட்சஞானம்.

தத்துவ விசாரஞ்செய்து சகலசந் தேகமும்போ
யத்துவிதந் தானாத லபரோட்ச ஞானமாகுங்
கத்தனுஞ் சீவபேதங் கழிந்தலேதுக்கம் போதன்
முத்தனா யெல்லாஞ்செய்து முடிந்ததா னந்தமாமே. (௩0)

நிறுத்தமுறையா லஞ்ஞான முதலியவற்றி னிலக்கணங்களை யிவற்றிற்கூறலி னிவ்விரண்டு மொருதொடர். இவற்றின் பொருள்:—

**பிரமம் ஆம் தனை மறந்த பேதமையே அஞ்ஞானம்** = சிற்சொரூபமாகலிற் றனதியல்பானசொரூபம் பிரமரூப மப்பிரமசொரூபமான தானவ்வாறென்றுணராது மறந்திருத்தலாகிய வறிவின்மையே யஞ்ஞானத்தின் சொரூபமாகும்; ஆயின் பிரமத்திற்கு மறைப்புண்டாகுமோ வெனின்? இதற்குச் சமாதான மீண்டுதசமதிட்டாந்தத்தாற் கூறலேயன்றி மேலும் "மலடிமைந்தனுந் தாணுவிற்புருடனு" மென்னுஞ் செய்யுண்முதலாண்டும் விரித்துக் கூறப்படுமென்க. ஏனையவற்றிற்கு மவ்வாறே காண்க. **பரன் இலை காணேம் என்று பகர்தல் ஆவரணமூடல்** = மறந்தவிடத்துத் தேகாதிசங்காதங்க ளுண்டாகலி னவை தானென்றிருத்தலி னிச்சங்காதத்தையன்றி வேறோர் பரசொரூபனான பிரம மில்லையென்று மிருந்தாலித்தேகாதிகள்போல வெளியாய்த் தோற்றப்படானுவென்ற விருதன்மையாய்க் கூறியவாறு மறைந்து கூறப்படுதலே யாவரணமாகிய மூடலாகும்; இம்மூடற்கிலக்கண முன்னாவரணசத்தியின்றன்மை கூறுமிடத்திற் கூறியிருக்கின்றனர். **நரன் எனும் கருத்தால் சீவன் நானென முளைத்தல் தோற்றம்** = கூறிய தேகாதிகளி லத்தியாசத்தா னரனென்னும் பாவனை தோன்ற வப்பாவனையாற் சீவத்துவவடிவமான வபிமானத்துவ முண்டாதலே விக்ஷேபம்; **குரவன் வாக்கியத்தாற் றன்னைக்குறிக்கோளல் பரோட்சஞானம்** = இச்சீவத்துவத்தாற் றுக்கமுறும்போது யானா ரெமக்கித்துக்க

மெவ்வாறு வந்ததென் றாராயுங்காலத் தாசிரியனை வினவ வவன் 'நீ சீவனல்ல சிவ' மென்று கூற வவ்வாக்கியத்தாற் றன்னைச் சிவமாகக் காணுவிடினும் 'மச்சிவம் நீ' யென்று கூறு மாசிரியர் வாக்கியத்தாற் றன்னைச் சிவமாக மதித்துக்கொள்வதே பரோக்ஷஞானத்தின் றன்மை; இக்குறிக்கோடலைத், 'தினமனு பவித்தலொக்குந் தெரியவுமில்லை சற்றே மனதினிலுதிக்கும் பின்னை மறைக்குமதருளுவீரே' என்று முற்கூறியவதனு னுணரப்படு மென்க. இது இல்லையென்ற வாவரணவிரோதி. (க)

தத்துவ விசாரஞ்செய்து சகல சந்தேகமும் போய் அத்துவிதந்தா னுதல் அபரோட்சஞானமாதும்; இவ்வவத்தை யிந்நான்முற்றிலுங் காணப்படும்; மேல்வரு மிரண்டவத்தையு மிதன்பலன். இவற்றையு மிவ்வபரோக்ஷஞானிகளிடத்திற் காணப்படும்; அவை, **கத்தன் ஆம் சீவபேதம் கழிவதே துக்கம் போதல்** = இவ்விசாரத்தாற் கர்த்தத்துவ புத்திரூபமான சீவசொரூப பேதப்பிராந்தி நீங்குவதே சம்சாரதாபத்தா லுண்டாகுந் துக்கநிவர்த்தி யாகும். "த்³விதீயாத்³வை ப⁴யம் ப⁴வதி" என்றசுருதிவாக்கியத்தாற் பேதஞானமே பயத்திற்கேது வென்க.

ஆதலா லப்பேதஞானத்தி னிவர்த்தியே துக்கநிவர்த்தியா மென்க. ஈண்டு பீடை கொண்டழல் விக்ஷேபம் என்றது ஆதியாத்மீகாதிரூபமாய் நிற்றலின் கூறியது முரணின்றென்க. **முத்தன் ஆய் எல்லாஞ்செய்து முடிந்தது ஆனந்தம்** = இவ்வுடலுள்ளபோதே முத்தியடைந்தவனு மிகபரங்களைக்குறித்துச் செய்யவேண்டிய கர்த்தத்துவந் தனக்கொன்றும் வேண்டாவாயினபடியா லச்செயல்கண் முடிவடைந்ததே யானந்தாவத்தையா மெ-று. (உ)

இத்துக்கநிவர்த்தியு மானந்தப்பேற்றினிலக்கணங்களை விரிவா யீற்றில் வித்தையானந்தங் கூறுமிடத்திற் காண்க வென்க. ஏகார மிரண்டனுண் முன்னது தேற்றம், பின்னதசை. (௫௩)(௫௪)

**இதுநினைக் கறியும்வண்ண மிப்படியொரு திட்டாந்தம்**
**புதுமையாங் கதைகேள்பத்துப் புருடரோ ராற்றைநீந்தி**
**யுதகதீரத்தி லேறியொருவ னென்பது பேரெண்ணி**
**யதனுடுதான் பத்தானென் றறியாமன் மயங்கித்தேர்தல்.** (௬௧)

**அறியாதமய லஞ்ஞான மவனிலை காணேமென்றல்**
**பிறியாவாவரண மாகும் பீடைகொண்டழல் விக்ஷேபம்**
**நெறியாளன் றசமனுண்டு நிற்கின்று னென்றசொல்லைக்**
**குறியாக வெண்ணிநோக்கிக் கொள்வது பரோக்ஷஞானம்.** (௬௨)

*புண்ணிய பதிகன்பின்னும் புருடரொன் பதின்மர்தம்மை*
*எண்ணிய நீபத்தா வாமெனன்னவே தன்னைக்காணல்*
*கண்ணினிற் கண்டஞானங் கரைதல்போவது நோய்போத*
*திண்ணிய மனத்திலையந் தெளிதலா னந்தமாமே.* (சுங)

அங்ஙனம் பிரமத்திற்கே யிச்சத்தாவத்தை யுண்டாமோ வென வாசங்கை வரின் றிட்டாந்தம்போலென்று தாட்டாந்தத்தையு முடம் பொடு புணர்த்துக் கூறுகின்றார் :—

**இம்மூன்றின் பொழிப்பு** :—*தசமனிடத்தே யிறத்தலு மீண்டு தோற்றலு மில்லாதிருந்து மிவை யுள்ளனபோலக் காட்டலின் 'புதுமையாங் கதை' என்றார். இதனைத் தாட்டாந்தத்திற்குங் கொள்கவென்க. 'புண்ணியபதிகன்' என்றது, துக்கத்திற்கிரங்கி யுண்மை விளக்கலாமெலன்க. இதனை யாசிரியனுக்குங் கூட்டுக வென்க.*

*'யாறு கடந்து சென்றாரு ளொருவ னொன்பதின்மரை யெண்ணிய தான் றன்னையெண்ண மறந்து பின்றேர்தல்.' இக்கதையி லேழவத்தையு முள. அவை: 'தன்னையறியாத மயக்கமே யஞ்ஞானந் தானில்லை யிருந் தாற் காணேனு' வென்றதனாற் றன்புற விவன்றன்னைக் கண்ட வழிச் செல்வோ னச்சரிதங் கேட்டுக் கருணையா லெண்ணிப் பத்தாவா னுண்டென்ன வச்சொல்லா லில்லையென்றது நீங்கவும் நீதான் பதின்மனென்று ஒன்பதின்மரினின்று விலக்கிச் சுட்டிக்காட்ட வதனாற் காணேனென்றது நீங்கித் தான் பத்தாவானெனக் காணக் கண்டதனான் முன்னுண்டான துக்க நீக்கத்தோடு காணேனென்றது நீங்க வதனா லின்ப முண்டானவா போன்று. எ-று. ஏகார மீற்றசை.* **அஞ்ஞான** *முற் கூறப்பட்டது.* **இல்லை காணேனென்ற லாவரணம், துன்புறல் விக்ஷேபம். ஏனையவையை** *யுரைக்கிடையிற் காண்க வென்க. அஞ்ஞான மாவரண மிரண்டு மறைப்பா லொருபகுதியாயது, சீவனெனல் விக்ஷேபத்தி னசுத்த பாகமாகிய முதற் கூறு. அவ்விக்ஷேபத்தின் சுத்தாசுத்தபாகமாகிய நடுக்கூறு* **பரோக்ஷ ஞானம்.** *அபரோக்ஷஞான* **மவ்விக்ஷேபத்தின் சுத்தப்பகுதி. துக்கநிவர்த்தியு மானந்தப்பேறு** *மிவ்வபரோக்ஷத்தின் பலனாகலி னோராற்று விவற்றை யுங் கூட்டி "இந்தமாயையினாற் சீவற்கேழவத்தைக ளுண்டாகு" மென்றார்.*

*இனி, அபரோக்ஷ ஞானத்தின் பயன் துக்கநிவர்த்தியு மித்துக்கநிவர்த்தியி னதிகரணமே யானந்தப்பேறு மாகலி னானந்தந்* **தனக்கியல்பென் றுணர்க.** *ஆயினு மேனைய வாறவத்தையும் வாராதிருந்தும் வந்ததுபோலக் காட்டலி னிதுவு மவ்வாறாயிற் றென்க.*

உ—ம்: "இல்லாமாயை தங்கணிலே யாருநிற்க வம்மம்ப், பொல் லாப் பிறப்பிற் பட்டதுமாய் போக்க மிகவுந் தவிர்த்ததுமாய், நல்லாரிணக் கஞ் சேர்ந்ததுமாய் ஞானவிசார முடித்ததுமா, யெல்லாமாய் வீட்டைந் ததுமா யார்க்குங்காட்டி மறைந்திடுமே" எனவரும். இக்கருத்தை யிந்நூலில் மேல்வரு மிடங்கடோறுங் காண்க. (கூ), (கூ), (கூ)

தசபுமான் றனைக்கண்டாற்போற் சற்குருமூர்த்தியே யென்
நிசவடிவினை யான்காண நீர்காட்டல் வேண்டுமென்றான்
சுசிபெறு மிலக்கியார்த்தந் துவம்பத தற்பதங்கட்
கசிபத மைக்கியஞ்செய்யு மதுசெயு மூண்மைகேளாய். (கூச)

"அத்தியாரோபமென்று மபவாதமென்றுஞ் சொல்லு மூத்தியா" லென்பது தொடங்கி இதுகாறு மவ்வத்தியாரோப வபவாதங்களாகக் கூறு மவாந்திரவாக்கியங்களா லான்மாவைப் பரோக்ஷமாக வறிவித் தினி மஹாவாக்கியத்தா லவனை யபரோக்ஷப்படுத்துவார், சித்தார்த் தபோதகமாகிய வைதீகவாக்கியங்களுள், "உரைத்தவையுட் சிறந்தது நற்சாமமறை புகலு மோங்குதத்துவமசி மகாவாக்கிய" மென்றதலால் இதுகோடு அவனுன்மபுத்தியை பாகத்தியாகவிலக்கணையா லொ ழித்து ஆன்மசுபாவத்தை யடைவித்தும் பொருட்டுப் பதினொண் கவிக ளா லருளுவோர், பதின்மன்றன்னைத் தான் கண்டதுபோல வென்னை யபரோக்ஷமாக யான் காணக் கருணைகூரு மென்றனுக் கவ்வாறருளு வோ ரிதில் மஹாவாக்கியம் பிறந்ததற்குக் காரணமும் பயனுங் கூறு கின்றார்:—

என்னையெனின்? சுசிபெறுதலு மைக்கியமு மாகிய விவ்வையே காரணமும் பயனு மாகலி னென்க.

(இ—ள்.) சற்குரு மூர்த்தியே! தசபுதமான்றனைக் கண்டாற் போல் என் நிசவடிவினை நீ காட்டல் வேண்டு மென்றன், என்னையெனின்? ஒன்பதின்மனும் மயங்கிநின்றும் பிரிந்தும் பத்தாமவனுன தனதுண்மை வடிவினைப் பதிகனுற் கண்டதுபோலத், தத்துவக் கூட்டங்களையே யானுக வொவ்வோ ரமையங்களிற் கருதி மயங்கிய யா னதத்தத்துவக்கூட்டங்களி னின்றும் வேறுபிரிந் தென்னுண்மைவடிவினை யையமறக் காணும்படி காட்டக் கருணைகூருதி யென்றமையா லென்க. இங்ஙனம் வினவினனுக் காசிரியர் கூறும்விடை: சுருதியில் 'தத்துவமசி' என்றோர் வாக்கியம் பிறந்துளது. அவ்வாக்கியத்தில் பத மூன்றுள்ளன. அவற்றில், துவம்பத தற்பதங்களின் இலக்கியார்த்தம் சுசிபெறும் = துவம்பதமும் தற்பதமும் வாச்சியலட்சியங்களோடு கலந்துள்ளன வவற்றில் வாச்சிய மசுசியாகும்

இலக்ஷியங்கள் சுத்தமாகு மாகலின்; **அசிபதம் ஐக்கியஞ் செய்யும்**= எஞ்சி நின்ற அசி என்னும் பதமானது அவ்விலக்கியங்களை யொன்றென்று கூறும்; **அது செயுமுண்மை கேளாய்**=அவ்வா றைக்கியஞ்செய்யு முறுதி யை யாம் திட்டாந்த தாட்டாந்தங்களோடு கூறக் கேள். எ-று.

**த** ஏழனுருபு. மயக்கம்: வாக்கியம் பிறந்தவாற்றாற் கூறாது துவம்ப தத்தை முன்னதாகக் கூறியது **மந்தாதிகாரி**யாகலி னியது வென்று முன் னர்க்கூறி மேல் வாக்கியம் பிறந்தவாற்றாற் கூறுந் **தந்திரவுத்தி** யென்க. இதுகாறு நீர் கூறிப்போந்தது எனக்குப் பரோக்ஷமென்பான், "என்னிச வடிவினை யான்காண நீர் காட்டல் வேண்டு" மென்றா னென்க. இங்ஙன ங் கூறவே, 'சீவனு' னென்றதனு லித்தேகாதிகட்கு வேறாகச் சீவ னுண்டென்றாகலி னோராற்றா லஞ்ஞான நீங்கியதுபோல விப்பரோக்ஷ ஞானத்தா லப்பிரம மில்லையென்ற வசத்தாவரணமு நீங்கினமையான் மேன் மஹாவாக்கிய விசாரமு மிவனுக்குக் கர்த்தவ்விய மாயிற் றென்பதுங் குறிப் பாக வோர் பொருளு முளது. "சுசிபெறு மிலக்கியார்த்த" மென்பது. **பிறிதோடியைபு நீக்கிய** பொருளாகலின் வாச்சியார்த்த **மெதிர்மறைப் பொருளாய்** நின்றது. (உஅ)

***விண்ணொன்றை மஹாவிண்ணென்று மேகவிண்ணென்றும் பாரி***
***மண்ணொன்றுங் கடவிண்ணென்று மருவிய சலவிண்ணென்று[ன்***
***மெண்ணுங் கற்பனைபோலொன்றே யெங்குமாம் பிரமமீச***
***னண்ணுங் கூடத்தன் சீவனுங்கு சைதன்னியமாமே.*** (உரு)

**நிறுத்தமுறையாற் றுவம்பதந் தற்பத மென்றும், வாச்சியலக்ஷிய மென்று மமைத்தவற்றி லோவ்வோரு பதத்திற்குஞ் சைதன்னிய மிரண்டிரண்டாக நான்கென வுத்தேசிக்கப் படுகின்றமையி னிவற்றின் பெயரும், சொருபமு முதாரணத்துட னிதுமுத லிரண்டு செய்யுளாலுங் கூறுகின்றார்:—**

(இ—ள்.) **விண் ஒன்றை**= ஆகாயமொன்றனையே; **மஹா விண்ணென்றும்**=மேகஜலத்திற் பிரதிவிம்பித்த வாகாயத்திற் கதிஷ்டான மானதை மகாகாயமெனவும்; **மேகவிண்ணென்றும்**= இம்மகாகாயப் பிரதிவிம்பமானதை மேகஜலப் பிரதிவிம்பாகாய மெனவும்; **பாரின் மண்ணொன்றும் கடவிண்ணென்றும்**= நிலவுலகின் மண்மயமான குடத்துள் வளைபட்ட வாகாயத்தைக் குடாகாய மெனவும்; **மருவிய ஜலவிண்ணென்றும்**= அக்குடத்து னிறைந்த நீரிற் பிரதிவிம்பித்த குடஜலப் பிரதிவிம் பாகாய மெனவும்; **எண்ணும் கற்பனைபோல், சைதன்னிய மொன்றே,**

**எங்குமாம் பிரமம்=** வியாபகமான பிரமமெனவும்; **ஈசன் எனவும்=** மாயாபிரதிவிம்ப வீச்சுரசைதன்னிய மெனவும்; **நண்ணும் கூடஸ்தன் =** அந்தக்கரணத்திற் றங்கிய வந்தக்கரணவச்சின்ன சைதன்னியத்தைக் கூடஸ்தனெனவும்; **சீவன் எனவும்=** அந்தக்கரணப் பிரதிவிம்ப சைதன்னியனை சீவசைதன்னிய மெனவு நான்கு சைதன்னியமாகப் பிரிந்திருக்கும். எ-று.

மேகங் கடமெனத் திட்டாந்தத்திற் கொண்டமையாற் றாட்டாந்தத்திலு மந்தக்கரண மாயைகளை **யுபாதி** யாகக் கொண்டாமென்க. திட்டாந்த மன்றியிற் பொருள் விளங்காமையி லெடுத்தாளப் பட்டது. இவற்றின் விரிவை **விசாரசாகரம் விருத்திப் பிரபாகர** முதலிய பெருநூல்களுட்கிக் காண்க. (௫௧)

**பூச்சிய வீசன்சீவன் புகல்பத மிரண்டினுக்கும்**
**வாச்சிய மிலக்கியந்தான் மலமிலாப் பிரமமாத்மா**
**காச்சிய பாலினெய்போற் கலந்தொன்றுங் கடைந்தெடுக்கு**
**மாச்சிய மென்னவுன்னை யறிந்துநீ பிறிந்துகொள்ளே.** (௬௬)

(இதுவுமது.)

(இ—ள்.) **பூச்சிய ஈசன்=** பிரம விஷ்ணுக்களாலும் பூசிக்கப்பட்ட வீசன்; **சீவன்=** அவனைப் பூசிப்பவன்; **புகல் பத மிரண்டினுக்கும்=** கூறிய தத்பத துவம்பதங்கட்கும்; **வாச்சியம்=** தற்பதவாச்சிய மீசன் துவம்பதவாச்சியம் சீவனுமாம்; **இலக்கியம் தான்=** இவ்விருபதங்கட்கு மிலக்கியந்தான்; **மலமிலாப் பிரமம் ஆத்மா=** தற்பதத்திற்குப் பிரமமும் துவம்பதத்திற்குக் கூடத்தனுமாகும்; இவை யிங்ஙனமாயினும் விசாரமின்மையால், **பாலில் நெய் போல் கலந்து ஒன்றும்=** காய்ச்சாத பாலில் நெய்கலந் தொன்றாயிருப்பதுபோல விவ்வாச்சிய லக்ஷியங்களொன்றுபட்டு நிற்கும்; **காச்சிய பாலில் கடைந்தெடுக்கும் ஆச்சியம் என்ன =** காய்ச்சப்பட்டபாலில் கடைந்தெடுக்கும் வெண்ணெயைப் போல; **உன்னை அறிந்து நீ பிறிந்துகொள்=** இப்போது விசாரத்தாலவ்வாச்சிய லக்ஷியங்களை பிறித்தறிந்து நீ வாச்சியமன்றென்று இலக்ஷியமாக வவைகளை விட்டகன்று நில். எ-று.

தான் தேற்றப்பொருளில் வந்தது. ஏ ஈற்றசை. பூச்சியனீச னென்றமையால் சீவன் பூசிப்பவனெனக் கொண்டாமென்க. இவை **யெதிர் நிரை நிரையணி.** மலமிலாப் பிரமமென்றது மாயைக் கதிஷ்டானத்தை யென்க. **ஆன்மா,** கூடஸ்தனுக் கோர் பரியாயப் பெயர். அது

" சத்தொடு சித்தாநந்தஞ் சமந்திரஞ் சாட்சியேக, நித்தியம் வியாபியான்மா " என்றதனனு முணர்க. கலந்தோன்ற மென்றதனற் காய்ச்சாத பாலென்று கொள்ளப்பட்டது. கடைந்தெடுத்தற் குலகென்னு மெழுவாயெஞ்சி நின்றது. பாலிரண்டிடத்து மியையு மென்க. (கூ0)

பிறிவதெப்படி யென்றக்காற் பிணமாகு முடனுனென்னு
மறிவினைக் கொல்லல்வேண்டு மைம்பூத விகாரமன்றே
வெறியதோர் துருத்திமூக்கின் விடுவதுபோல மூக்கா
லெறிபிராணனு நீயல்லை ரசோகுண விகாரமென்றெண். (கூஎ)

கரணமானது புந்திகருத்தா வாமவை யான்மாவோ
தரமுள விரண்டுகோசஞ் சத்துவகுண விகாரம்
வரமறு துயிலானந்த மயனையு நானென்னுதே
விரவிய தமவஞ்ஞான விருத்தியின் விகாரமாமே. (கூஅ)

'தத்துவமசி' யென்னு மகாவாக்கியம் பிறந்திருப்பினுந், தத் என்ற பதம் மவாந்திரவாக்கியம் போலப் பரோக்ஷஞானத்தை யுணர்த்துவதன்றிச் சுரோதாவுக்த அபானுவரணத்தை நீக்கி யான்மா பரோக்ஷஞானத்தை விளக்காமையா லிவ்வபரோக்ஷத்தை ஞானவாயிலாகப் பயக்கத்தக்க துவம்பதார்த்தத்தை, முன்னர் " தன்னையுந் தனக்காதாரத் தலைவனையுங் கண்டானேல் " என்றுத்தேசித்ததத்திற் கியைய மீண்டும் விரித்து விளக்கிப் பின்னுக வித் துவம்பத விலக்கியார்த்தனுக் ககண்டார்த்தத்தைப் போதிப்பான் கருதிச் சொன்னிலை மாறுக. 'நீ பிறிந்துகொள்' என்று முன்கவியாற் றேற்றுவாய் செய்தமையா லஃதிவ்வாறென்றும் மதஸ்தர்கள் கொண்ட வான்மநிர்ணயங்களிற் பிறித்துக் கழிக்கத்தக்கவை யீத்துணையவென்று மிவ்விரண்டு கவிகளாலுங் கூறுகின்றார்:—

(இ—ள்.) பிறிவது எப்படி என்றக்கால்= காய்ச்சாத பாலினெய் கலந்தொன்றாயிருக்க வப்பாலைக் காய்ச்சப் பிறிந்த நெய் கடைந்தெடுப்பது போல விங்கே யெதினின்று மெவ்வாறு பிறிவது எனக் கேட்பையாயின்; பிணமாகும் உடல் நானென்னும் அறிவினைக் கொல்லல் வேண்டும்= யாதினுலெனின் ? அனுதிகாலந்தொட்டு அறியாமையாலெழுவகையான பிறவியையுடைய விவ்வுடம்பையே யானென்னு மிப்பாவனையால் விடயங்களை யெனதென்று மவற்றை யின்பென்றுங் கருதி யவற்றை நுகருமிடத்துப் பல துன்பங்களு முண்டாதலி னித்துன்பிற்குக் காரணமிவ்வுட ஞனென்னும் பாவனையாகலி னிப்பாவனையாய வறிவினை

முன்னே கொல்லல் வேண்டு மென்க. இங்ஙனமாயி னிவ்வுடம்பையே யசுரகுரு நானென்று கருதி யிதற்கு நலனியற்றுக. வதுவே வீடென்று கூறியதென்னை யெனின்? ஆன்மா வென்று மனுன்மா வென்று மொன்றுங் கருதாத மூடரைக் குறித்தென்க. அங்ஙனமாயின், நீர் வேறுபிறித்ததற் குத்தி யாதோ வெனின்? நரைதிரை மூப்புகளான் வேறுபடு மியலை யுணராவிடினும் பின் பிணமாதலை யாகுதல் காணென்பதே யென்க. இங்ஙன நசித்தலு முன்கூறியபடி பஞ்சபூதத்தின் சேர்க்கையாகலி னென்க. இதனுல் 'ஐம்பூத விகாரமன்றோ' என்னப்பட்டதூஉ மென்க.

ஓகாரம் வினுவாகலின் முன்கூறியதென்பது ஈண்டெடுத் தாளப்பட்டது. இவ்வைம்பூதமே யன்னரூப மாகலி னன்னமயகோச மென்றதற்கு முரணின்றென்க. ஏனைய நான்கிற்குங் கோசமென்றதை யவற்றின் செயல் கூறுமிடத்திற் காண்க. இனி, இத்தூலதேக மான்மா வன்றென்றதொக்கு மிங்ஙனமின்றி யித்தூலதேகத்தைத் தானிருந்தாட்டியுந் தானீங்கின் பிணமாகப்படுத்தியு முள்ள பிராணனேயாத லியானென்னுமோ வெனின்? **வெறியுது ஓர் துருத்தி மூக்கின் காற்றுவிடுவதுபோல மூக்கால் எறி பிராணனு நீயல்லை**= அறிவில்லாத துருத்தி மூக்கினுற் காற்றை விடினு மக்காற்றிற்கு மறிவின்மைபோல இச்சரீர காவலாயுள்ள பிராண னேடிக்கொண்டிருப்பினு மிதற்கு மறிவில்லாமையா லறிவாயுள்ள நீ யிப்பிராணனல்லை; அன்றியும், **இராசதகுண விகாரம்**= தன்மாத்திரையின் ரசோகுண விகாரமுமாம். எ-று.

பிராணசத்தத்தால் காற்றென்றதை துருத்திக்குங் கூட்டிப் பொருள் கொள்க. இராசதகுணவிகாரமென்று பொதுமையிற் கூறினமையால் சமட்டிபாக மிப்பிராணனும் வியட்டிபாகங் கருமேந்திரியமு மாகலின், **ஒன்றினழுடித்த றன்னினழுடித்த** லென்னு முத்தியாற் கருமேந்திரியமுங் கூட்டிப் பிராணமயகோச மெனக்கொள்க. (க)

இனி யிப்பிராணன் சடமாயினும் மனமும் புத்தியு மறிவுடைமையி னவற்றிலொன்றை யான்மா வென்னுமோ வெனின்? **மனது காரணமாம்**= மனது கருத்தாவுக்குக் காரணமாய் நிற்றலன்றித் தான் சுயவறி வன்மையாலும்; **புந்தி கருத்தாவாம்**=புத்திகதமான வாபாசன் கருத்தாவாய் பரிச்சின்னமாய் நிற்றலி னிக்கருத்தத்துவ விசேஷணமுடைய சிதாபாசன் அகர்த்தத்துவ வியாபக பரமான்மா வாகானென்க. இவ்விருவரு மனோமயகோசம் விஞ்ஞானமயகோச மென்ற விரண்டு கோசமாம். அன்றியும், **சத்துவகுண விகாரம்**= இவ்விரண்டுந் தன்மாத்திரையின் சத்துவகுண காரியமாம். சத்துவகுண விகார மென்றமையா லிம்மனம்புத்தி சமட்டிபாக மாகலினுனும் வியட்டிபாகமாகிய ஞானேந்திரியங்களையு மிவற்றிற்குத் தனித்தனியே

கூட்டிக் கோசமெனக் கொள்க. அன்றியும், **வாம் அறு கனவு**=இவ்வி ரண்டுந் தனியே நிற்புழி நிலையில்லாத சொப்பனுவத்தையு மாம்; ஆகலி னு மிவ்விரண்டையு மான்மாவென்போரு மறிவில ரென்க. இந்நிலை யைக் கனவென்றமையா லிவ்விரண்டும் பிராணனோடுந் தூலத்தினிற்கு நிலை நனவெனக் கொள்க. இனி, ஆனந்தமயனையும் நானென்னுதே, யாதி னுலெனின்? **தமம் விரவிய அஞ்ஞான விருத்தியின் விகாரம் ஆம்**=தமசு கலப்பாயு மஞ்ஞானவிருத்தியிற் பவித்த வானந்த மாகலி னிது சுத்தசேத னமாயுஞ் சுத்தானந்தமாயு முள்ள பரமான்மா வாகாது. எ-று.

நேதிக்கத் தொடங்கினுர் தத்துவங்களைக் களையாது பஞ்சகோசமாகக் களைந்தது, அத்தத்துவக்கூட்டங்க ளிவற்று ளடங்குதலாலு மதத்தர்கள் கொண்ட வான்மநிண்ணயங்களைக் களையவேண்டுதலாலு மிவ்வாறு களைந் தன ரென்க. இந்நிண்ணயங்களைப் பற்றிப் பல **சடாவிடைகளான்**மதாந் தரங்களில் விரிந்திருத்தலி னிவ்வதிகாரிக்கவை பயன்படாமையிற் றெருகுத் துக்கூறினுராகலி னியாமு மவ்வாறே உரைத்தா மென்க. மேல்வருவனவு மன்ன. (சுக),(சுஉ)

சத்தொடு சித்தானந்தஞ் சமந்திரஞ் சாக்ஷியேக
நித்தியம் வியாபியான்மா நீயதுவா யறிந்து
பொத்தொடு சடந்துக்காதி பொருந்து பேதங்களான
குத்திர பஞ்சகோசக் குகைவிட்டு வெளியிலாவாய். (சுங)

ஒடுவிரண்டு மெண்ணிடைச்சொல். ஆதி என்றமையான் பரிச்சின்ன மஸ்திரம் சாக்ஷிய மநித்தியம் விஷம மனுன்மா வென்பவையுங் கொள்க வென்க.

**கூறியவை யனைத்து மான்மாவன்றயின், மேனின்றவான்மாயாவன் அவனுக்கிலக்கண மென்னவென வருஞ்சங்கைக்கு இத்துணை யிலக்கண முடையதான்மா வெனவு மவற்றிற்கு மாறய விலக்கணமுடைய தனுன் மாவெனவு மிதிற் கூறுகின்றர்:—**

(இ—ள்.) **சத்து சித்து ஆனந்தம் சமம் திரம் சாக்ஷி ஏகம் நித்தி யம் வியாபி ஆன்மா** = சத்துமுதலாக வியாபகமீருன விவ்விலக்கண முடையதாகு மாத்மாவானது; ஆன்மாவிற்கித்துணை யிலக்கணம் வேண்டு மோவெனின்? இவ்விலக்கணங்களிற் குறைபடுமாயி னவ்வியாத்தி யசம்பவ முதலிய குற்றந்தங்கிப் பொய்யாய்ப் போமென்க. ஆகலின், **நீ அதுவாய் அறிந்து** = நீகூறிய விலக்கண முடையதாக வறிந்து; **பொத்து சடம் துக்கம் ஆதி பொருந்து பேதங்களான்** = பொய்யாயு மறியாமை முத லிய விலக்கண மமைந்து பலவகையான வியல்பினையுடைய; **குத்திர பஞ்**

சகோச குகை விட்டு வெளியில் ஆவாய் = கூறிவந்த பஞ்சகோசமாகிய குகைகளிலேநின்றும் வெளிப்படுவாயாகவென்க.

இவற்றில், 'பொத்தொடு சடந்துக்காதி' என்றது காரணத்தின்றன்மை காரியத்திற்கு மமைதலி னென்க. இவற்றின்விரிவு மேல்விளங்கும்.

இதுகாறு மிவ்விலக்கணமுடையதாக வான்மாவை மறைத்தலி னிவ் வஞ்சகத்தாற் 'குத்திர' மென்னப்பட்டது. இச்சச்சிதானந்த விலக்கணங்களுக் குப் பொருளு மிவற்றி லொன்று குறையினு மான்மாவாகா வென்றற் குத் தியுஞ் சந்தேகந்தெளிதற் படலத்திற் கூறுமிடத்திற் காண்க. மேல்விரித் தலி னூலாசிரியரும் பெயர்மாத்திரங் கூறிவிடுத்தா ரென்க. இந்நூன்முற் றுஞ் சுருதிப்பொருளாகலி னீண்டு சுருதி காட்டிற்றில மென்க. (சுகூ)

பஞ்சகோசமும் விட்டப்பாற் பார்க்கின்றபொழுது பாழே
விஞ்சியதது வல்லாமல் வேறொன்றுந் தெரியக்காணே
னஞ்சன விருளேயோ நானகமென வநுபவிப்பேன்
வஞ்சமில் குருவேயென்ற மகன்மதி தெளியச்சொல்வார்.(எ0)

முன்புக றசமன்புத்தி மோகத்தா லெண்ணியெண்ணி
யொன்பது பேரைக்கண்ட வொருவனுந் தனைக்காணுத
பின்பவ னிடையிற்கண்ட பெரியபா ழவனேபோரா
யன்புள மகனேகாண்ப தடங்கலுங் காண்பாய்நீயே. (எக)

பஞ்சகோசங்களேயு மான்மா வென்பாரையு மறுத்து மேற்சூனிய வாதியையு மறுக்கத்தொடங்கி நேதித்தவிடத்துண்டாமோ ரையத்தையு மதற்குவிடையையு மிதிற் கூறுகின்றார்:—

(இ—ள்.) நேதித்தவிருத்தியும் நேதிக்கப்பட்ட பொருளு மிலவென் பான் 'பஞ்சகோச....................தெரியக்காணேன்' என்றான். அங்ஙன னஞ் சூனியமே யானுயின் சூனியவாதி யானுவனே என்பான் 'அஞ்சன... ..........அகமென வநுபவிப்பேன்' எனவும் வினுயினன். வஞ்சமில் குரு = வேதார்த்தத்தை யபார்த்தப்படுத்தி வயிறோம்பும் பாஷாண்டபுத்தி நும்மிடத்தில்லை யென்றதை யென்க.

அவற்றிற்கு விடை: தசமன் விலக்கிய வொன்பதின்மரினின்று மன் னியனுதலன்றியும் பாழாகாமலுந் தானேயாதல் போல, நேதித்துநின்ற வினைதுவடிவந் திரிபுடியாகாமலும் பாழாகாமலு மவற்றைக்கண்ட வறிவு வடிவு நீயென்பார் 'முன்புகறசமன்............................காண்பாய் நீயே என்றார். எ-று.

நஞ்சு அன இருளெனப் பிரித்து, விடயவிடபோதந் தலைக்கேறி பிற வியிலே மாளாந்துவைக்கச்செய்யு மஞ்ஞானம் எனவும் பொருள் கொள்க. "எண்ணிஎண்ணி" என்னுமடுக்குப் பலதர மெண்ணலை யென்க. இத னற் சூனியமான்மா வென்ற மதமு மறுக்கப்பட்ட வாருயிற்று. இப்பாழே மூலாஞ்ஞான மிதுவே தன் சொரூபத்தை யறியவொட்டாமனின்ற தென் பார் 'பெரிய பாழ்' என்றார். அங்ஙன மறைத்த விருணீயல்லை யவ்விரு ளைக் கண்ட வறிவு நீ யென்றதற் குதாரணம். 'உனைமறைய மூடி மூணர் விலாமாயைக் கனவிருளைக் காணென்று காட்டும் பெருமானே' 'கண்ட விருளை நீகாணுதே யவ்விருளைக், கண்டவறிவை நீ காணென்று சொன் னனே' என்பன. (௬௪), (௬௫).

தூலசூக்கும மஞ்ஞானந்தோன்று மூன்றவத்தை தாமுங்
காலமோர் மூன்றுஞ் சன்மக்கடலெழு கல்லோலங்கள்
போலவே வந்துவந்து போனவெத்தனை யென்பேனு
லமர்க் கடவுளாணை யவைக்கெலாஞ் சாக்ஷிநீயே. (௭௨)

'காண்பதடங்கலு' மென்ற ரீப்பஞ்சகோச மன்றி வேறு முண் டோ வென நிகழ மாசங்கைக்கு விடை யிதிற் கூறுகின்றார்:—

என்னை யிச்சங்கை நிகழுமாறெனின்? முன்சங்கைக்கிது சமாதான் மாகாமையானு மிதிலிவ்வினு வின்மையானு மிவ்வினு வவாய்நிலையான் வந்ததென்க.

(இ—ள்.) தூலம் சூக்குமம் அஞ்ஞானம் = கூறிய தத்துவங்க ளிப் பஞ்சகோசமாய்நிற்பதன்றி யிவையே மூன்றாக நின்ற வித்தேகங்களை யதிட்டித்து; தோன்றும் மூன்றவத்தைதாமும் = நிரையே தோன்று நின்ற சாக்கிராதியவத்தைகளும்; காலம் ஓர் மூன்றும் = இவை யுண்டாகி விளங்கி யழிவதற் கேதுவாய மூன்றுகாலங்களு மாகிய பிறவும்; சன்மக் கடல் எழ கல்லோலங்கள் = கூறிய தூலாதிகளின் பிறப்பாகிய கட லின்கணுண்டாகும் பெரிய வலைகளாம்; வந்து வந்து போன எத்தனை யென்பேன் நான் = இவ்வலைகணினக்குத் தோன்றி யழிந்தன நானளக்க முடிவுபடா; அங்ஙனமாயினு மவைபோலாது இப்பஞ்சகோசத்திற் கெவ் வாறுநீ சாக்ஷியாகின்றாயோ வவ்வாறே யிவைக்குஞ் சாக்ஷி யாகின்றாய்,என்ற மைய்ா லவற்றின் சம்பந்தமுடைய கர்த்தா வாகா யென்றபடி. ஆல் அமர் கடவுள் ஆணை = இஃது என்னுடைய புனைந்துரையன்று, பின்னையோ, கல்லாலின்கீ ழெழுந்தருளியிராநின்ற பரமகுருவாகிய தக்ஷிணாமூர்த்தியின் திருவடி யிதற்காணை யென்று நானுறுதி மொழி கூறுவன். எ-று.

ஈண்டநீ ஞானந் தூலாஞ்ஞானம். நகரமெய் மெலித்தல் விகாரம். போல அசை. ஏகார மிரண்டனுள் முன்னதசை, பின்னது தேற்றம். காலமின்றேல் வினைநிகழாமையான் காலத்தைத் துணைக்காரணமாகக் கூறி னுங் கருமமு மிடமு முதலிய துணைக்காரணங்களையுங் கொள்க வென்க. தூலசூக்குமங்களைத் தவிர ஜன்மம் வேறின்மையா லிவ்வாறுரைக்கப்பட் டது. சன்மாதி பிரவாகவனுதி யாகலி னிடைப்படவில்லை யென்பார், வந்து வந்து என்று மிகுதிபற்றிய வடுக்காய்க் கூறினாரென்க. இவைக் கெலாஞ் சென்ம முதற்காரணமென்பார் 'சன்மக்கடலென்றார்.' குருபரம் பரையில் முந்திய தென்பார் 'ஆலமர்க்கடவுள்' என்றாரென்க. இனி, 'தூல சூக்கும மஞ்ஞானந் தோன்று' மென்றதை, தூலசூக்குமமாகிய விரண்டு மஞ்ஞானத்திற் றோன்று மாகலின்; தோன்றும் மூன்றவத்தை தாமும் = இவை காரணமாகத் தோன்றுநின்ற அவஸ்தை மூன்றும், காலமோர் மூன் றும் தோன்றும்; ஜன்மம் = இவைகளே ஜன்மமாம்; ஏனையவை கூறி யன = இவ்வாறு கூறினு மமையு மென்க. ஆலமர்க்கடவுளெனக் கூறினு மவர் திருவடியைக் கருதிநின்றது. ஒவ்வொரு மதமுந் தன்னிலைமையைக் கூறுமிடத் துறுதிமொழி கூற லொருதலை யாகலி னிதுவு மதுபோலன் றென்றற்குச் சனகாதியர்க் கருளிய மூர்த்தந் தக்ஷிணமூர்த்தமே யென் பது சுருதிசம்மத மாத்திரமன்றி யனைத்தான வாகமங்கட்கும் ஸ்மிருதி புரா ணங்கட்கு மொருதலையான சம்மதமாகலி னேனையவுமா மஹேசுர சம் வாத முதலிய மூர்த்தங்களைக் கூறாது, இக்காலி லெழுந்தருளிய நங்குரு முகூர்த்தத்தை யெடுத்துக் காட்டாகக் கொண்டா ரென்க. இச்சுருதி சம் மதமாகிய விம்மத மேனைய மதம்போலன்றி மதாதீதத்தை யுணர்த்திற் றென்க. (சுசு)

எல்லாங்கண் டறியுமென்னை யேதுகொண் டறிவேனென்று
சொல்லாதே சுயமாஞ்சோதி சுடருக்குச்சுடர் வேறுண்டோ
பல்லார்முன் றசமன்றன்னைப் பார்ப்பதுந்தனைக் கொண்டேதா
னல்லாது பதினொன்றாறு மவனிடத்துண்டோ பாராய். (சுஎ)

இந்நிலை சாட்சியேன்ப தோக்குமாயினு மிவ்விளக்கம் விருத்தியான் விளங்கி நின்றதோ, வன்றித் தானே விளங்கி நின்றதோ? தானே விளங்கி நின்றதேனின், நையாயிக ரொரு ஞானமாவது சுயமாக விளங் காதெனக் கொண்டனரே யென்வரு மாசங்கைகளுக்குச் சமாதான மிதுமுத லிரண்டு கவிகளாலுங் கூறுவா ரிதி லான்மா சொப்பிரகாச மாகலின் வேறொரு சாதனம் வேண்டாவென் றிதிற் கூறுகின்றார்:—

(இ—ள்.) எல்லாம் கண்டு அறியும் என்னை ஏது கொண்டு அறி வேன் என்று சொல்லாதே = இங்ஙன மேதிக்கப்பட்டவையை யெல்லா

மறியாநின்ற வென்னை யானே யறிவேனே? அல்லது வேறொன்றைக் கொண்டறியத் தக்கவனோ? என்று வினவுதற்க; **சோல்=** வினைச்சொல். என்னை யெனின்? **சுயம் ஆம் சோதி=** ஏனைய பொருள்களெல்லாஞ் சடமாகலி னெவ்வொன்றுந் தன்னையறியு மியல்பின்றாய் நிற்கும், நீ யங்ஙனமின்றி யறிவு வடிவா யிருத்தலின், சுயம் பிரகாச மாகின்றா யாதலால் நீயே பிரகாசிக்கின்றமையா னீயொன்றைக் கொண்டு பிரகாசித்தறிய வேண்டாம். எதுபோல வெனின்? **சுடருக்கு சுடர் வேறுண்டோ=** விளக்கு மிரவி முதலிய சுடர்ப்பிழம்புக டாமே விளங்கி யனைத்தையும் விளக்குவதன்றி வேறொரு சுடரை விரும்பாதவா போன் றென்க; அன்றியும், **பல்லார்முன் ............ .............மவனிடத்துண்டோ பாராய்=** ஒன்பதின்மரை யெண்ணின பத்தாமவன் றன்னைப் பத்தாவானென் றெண்ணுவது தன்னாலேயே யன்றி ஆண்டுப் பதினொராம் புருட னவனிடத்திருந்து அப்பத்தாமவனை யென்னுமை போல, அச்சுயஞ் சோதியாயுள்ள வுன்னைவிட வேறொரு பொருளு மாண்டில்லை யென்பதை யுன்னனுபவத்திற் பார். எ-று. (சுஎ)

**இது பிறிதுமோழிதல்,**

அறிவுக்கு மறிவுசெய்யு மறிவுவே றுண்டென்றெண்ணு
மறிவற்ற குதர்க்கமூடர்க் கனவத்தை பலமாய்த்தீரு
மறிபடும் பொருணீயல்லை யறிபடாப் பொருணீயல்லை
யறிபொரு ளாகுமுன்னை யநுபவித்தறிவாய் நீயே. (எசு)

**இங்ஙனஞ் சுயம்பிரகாச வறிவா யான்மாவை யோப்பாது 'அறிவுக்கு மறிவுசெய்யு மறிவு வேறுண்டேன்றேண்ணு' நியாய வைசேடிகர் மதத்தை மறுத்துச் சித்தாந்தத்தைக் கூறுகின்றார்:—**

(இ—ள்.) **அறிவுக்கு அறிவு செய்யும் அறிவு வேறு உண்டென்று எண்ணும் அறிவு அற்ற குதர்க்க மூடர்க்கு அநவஸ்தை பலமாய் தீரும்=** நீர் பதினொன்றா னில்லாதது போல சுயம்பிரகாச வறிவொன்றே யுள தென்பதென்னை? நையாயிகர் இதுகடமென்னு மிடத்துண்டான ஞானத்தை விளக்க **அநுவியவசாயஞானம்** ஒப்பினரே யெனின்? அவ ரவ்வா றொப்பியது, கடமென்றறிந்த வறிவு சடமெனவு மது தானேவிளங்காமையாற் கடம்போல வதை விளக்க மற்றொரு ஞானம் வேண்டினார். அங்ஙனம் வேண்டுமிடத்து அந்த ஞானமுஞ் சடமாகலி னதை விளக்க மற்றொரு ஞானமு மதுவுஞ் சடமாகலி னதை விளக்க மற்றொரு ஞானமு மொப்பின் வரம்பின்றிச் செல்வதென்னுங் குற்றந் தனக்குப் பயனன்றிச்

கிடைப்ப தவ்வறிவிலிகட்கு யாதொன்று மில்லை, ஆகலின், நமக்கக் குற்ற முடன்பாடன்று.

இதனால், அவ்வாறு வாதிப்பதை யொழித்து, அறிபடும் பொருள் நீ அல்லை அறிபடாப் பொருள் நீ அல்லை = கூறியபடி பஞ்சகோச முதலிய திரிசியவஸ்து நீயல்லை, அவற்றி னபாவமான சூன்னியவஸ்துவு நீயல்லை, பின்னையோ பிரமாணங்களுக் கதீதனுகியுஞ் சொரூபாசித்தி யின்மையனுயு முள்ள; அறிபொரு ளாதும் = ஞானமே வடிவனுகும்; உன்னை அநுபவித்து அறிவாய் நீயே = இவ்வாறுன வுன்னை அவஸ்தாதிகடோறு மநுபவித்து நீயே சந்தேகமறத் தெரிந்துகொள். எ-று.

இதைப்பற்றிய கடாவிடைகளை விரிவஞ்சிச் சுருக்கினும். ஏகாரம் பிரிநிலை. (கூஅ)

மதுரமாங் கட்டிசுட்ட மாப்பணி யாரமெல்லா
மதுரமாக்கிடி னதற்கு மதுரந்தான் சுபாவமன்றே
வதுவிதுவெனுஞ் சடங்களறிவாக வறிவைத் தந்தே
யதுவிதுவிரண்டு மாகாவகம் பொருளறிவாய் நீயே. (எ௦)

கூறிய வான்ம விலக்கணங் கரணங்களிடத்துஞ் செல்லுதலா லதிவியாத்தி யாமே, யன்றியு மிவ்விலக்கண மான்மாவிற் கியல்போ வாகந்துகமோ வெனநிகழு மாசங்கைக்குச் சமாதானமு மிதிற் கூறுகின்றார்:—

முன் வினுவிடைகளையு மிவையுஞ் சார்ந்துவரலி னிவையு மதன் றெடரென்க.

(இ—ள்.) மதுரம் ஆம் கட்டி..............மாக்கிடின் = இனித்த கட்டி கலந்து சுடப்பட்ட மாவினுலாய பணியார மனைத்தையு மதுரமில்லாத வுவைகளை மதுரமாகச் செய்திடின்; அதற்கு மதுரம் தான் சுபாவம் அன்றே = அப்படிச் செய்த தனக் கம்மதுரமானது இயல்பல்லாம லாகந்துகமாமோ? ஆகாதென்றபடி. இதுபோல, அது இது எனும் சடங்கள் அறிவாக அறிவை தந்து = கடபட முதலாகவுள்ள சடப்பொருள்கள் சுட்டியறியுமிடத் தங்ஙன மறியப்பட்டு விளங்கும்படியாகத் தனதறிவை யவற்றில் விளங்கச் செய்தும்; அது இது இரண்டும் ஆகா அகம் பொருள் அறிவாய் நீயே = அங்ஙனஞ் செய்மை யண்மையாயுள்ள சுட்டிற்குப் பொருளாயுள்ள வவ்விரண்டு பொருளுந் தாமாகாது நானென்னுமான்மா இங்ஙனமென் றறிந்துகொள். எ-று.

கட்டியின் மதுரம் மாவினிடத்தே காணலன்றி மாமதுர மாகாமையி னதிவியாத்தி யின்மைபோல வான்மாவின் சேதனபாகஞ் சகங்களிற் காணலி னதிவியாத்தி யின்றென்க. இனி யான்மாவிற் கன்னியமாக வேறொரு சேதன பதார்த்தத்தை சுருதி யொப்பாமையி னவ்வறி வான்மா விற் காகந்துக மின்றென்க. இஃதுடம்பொடு புணர்த்திக் கூறப்பட்டது. கூட்டவென்றது படுவிகுதிகுன்றிய செயப்பாட்டுவினை. ஏகாரமிரண்ட னுள் முன்னது தேற்றம், பின்ன தீற்றசை. (௬௬)

இந்தநீ துவம்பதத்தி லிலக்கியப் பொருளா மென்றும்
பந்தமில் பிரமமே தற்பதந்தனி லிலக்கியார்த்த
மந்தமாஞ் சீவனீச னவர்களே வாச்சியார்த்தஞ்
சந்ததம் பேதமாவார் தமக்கைக்கியங் கூடாதே (௭௬)

பேதமா னதுவுங்கேளாய் பேராலு மிடங்களாலு
மோதரு முபாதியாலு முடலாலு முணர்வினாலும்
பாதலம் விசும்பும்போலப் பலதூர மகன்று நிற்பா
ராதலா லிவர்க்கெந்நாளு மைக்கியமென்பது கூடாதே. (௭௭)

இதுகாறுஞ் சுசிபேறுந் துவம்பதத் திலக்கியார்த்தத்தி னிலக்கணங் கூறிமுடித்து, ஒழிந்த தற்பதவிலக்கிய விலக்கணமு மவ்விருபதங்களின் வாச்சியவிலக்கணமு மிவ்விலக்கிய வாச்சியங்களி லின்னவற்றிற்கே யைக்கியமெனவு மேனையவற்றிற் கது கூடாமைக்குக் காரணமு மக்கா ரணத்தின் சொரூபவிலக்கணமு மிவ்விரண்டு கவியாற் கூறுகின்றார்:—

(இ—ள்.) இந்தநீ= கூறிய விவ்விலக்கணமுடைய நீயே; துவம் பதத்தி லிலக்கியப் பொருளாம்= துவமென்னும் பதத்தி னிலக்கியார்த் தப் பொருளாகும்; என்றும் பந்தம் இல்பிரமமே= மாயைக் கதிட்டான மான பிரமப்பொருளே; தத்பதந்தனில் இலக்கியார்த்தம்= தத் என்னும் பதத்திற் கிலக்கியப்பொருளாகும்; பந்தமில் பிரமமென்றமையா லொரு வாறு பிரமவிலக்கணம் விசாரிக்கப்பட்டதாயிற்று. என்னை யெனின்? பிரமாண்டத்தி னுள்ளும் புறம்பும் மகாகாசம் போலப் பரிபூரணமான யாதொரு சேதன முண்டோ வது பிரம மென்று சொல்லப்படும். அப்பிர மஞ் சமீபமல்ல, தூரமுமல்ல. என்னை? யாதொரு வஸ்து தனக்கன் னியமாயுந் தேசரூபவுபாதி யுடையதாயுமாமோ வதுவே சேய்மை யண்மை யென்று சொல்வதற் குரித்தாகும். அங்ஙனமன்றி யப்பிரம மனைத்திற்கு மான்மா வாகலாற் றன் சொரூபத்தி லச்சேய்மை யண்மைத் தன்மைகள் கூறவமையா வென்க.

ஆயினும் 'பிரமம்' என்ற சொல்லின் வாச்சியமுஞ் சோபாதிகமாம் என்னை? வியாபகவஸ்துவிற்குப் **பிரம**மென்று பெயர். அவ்வியாபகமும் **ஆபேக்ஷிகவியாபக** =மென்றும் **நிரபேக்ஷிகவியாபக**மென்று மிருவகைத்து இவ்விரண்டில் மாயையினிடத்துத் தன்னுடையகாரியத்தைக் குறித்துத் தனக்கு வியாபகத்தன்மையு மதிஷ்டான பிரமத்தைக்குறிக்கத் தனக் கவ்வியாபகத்தன்மையு மிருப்பதனு **லாபேக்ஷிகவியாபகத்**தன்மை யுண்டு. பிரமத்தினிடத்திற் றனக் கொப்பு முயர்வு மின்மையா னிரபேக்ஷிகவியாபகத்தன்மையிருத்தலி **னிரபேக்ஷிகவியாபகத்**தன்மை யுண்டென்பதே யவ்விசார மென்க.

**அந்தமாம் சீவன் ஈசன் அவர்களே வாச்சியார்த்தம்**= அந்தமாஞ் சீவ னென்றதற்கு முன் நாசமாமுயிரென்றதுபோலப் பொருள்; **ஈசன்**= இப்பெயர்க்குப்பொருள் சிலவிடங்களிற் பிரமபரமாயினும் பலவிடத்து மாயாப்பிரதிவிம்பனையே யுணர்த்தலி[illegible]ண்டு மஃதேயிவர்கருத்தென்க. இவ்வீச்சுரனைப்பற்றி மாயையின்சத்துவகுணப் பிரதிவிம்பனென்றுஞ் சத்துவகுணம் பிரகாசமுடையதாய் மாயையிற் றமத ராசதங்கள் கலவாம லிருத்தலின் சர்வஞ்ஞனென்று மிவனே சிருட்டிக்குநிமித்தகாரண னென்று முன்னர் விரித்திருத்தலி னீண்டு கூறிற்றில ரென்க. இவ்விருவருமே கூறிய துவம்பதத்திற்குந் தற்பதத்திற்கு நிரையே வாச்சியமுமாம்; இங்ஙன மிவ்விருவரு மப்பதங்களின் **வாச்சியார்த்த**மென்பது, செஞ் சொலாற் பொருள் படுவது.

இங்ஙன மச்சொற்களுக்குச் செம்பொருள்கொள்ளின் சமனுதிகாரண சம்பந்தப்படாமல், **சந்ததம் பேதம் ஆவார்**= சந்ததம் பேதமாதல் மேற் கூறும் விவகாரதசையிலேயன்றி மோட்சதசையிலு மிவ்வுபாதிகளோ டொன்றுபடா ரென்பதை யென்க. இங்ஙன மவர் பேதபாவத்தையடைந் திருத்தலின், **தமக்கு ஐக்கியம் கூடாது**= இவர்களுக் கொன்றுபட லமையா தென்றவாறு. ஏகார மீற்றசை இலக்கியத்திற்குப் பொருள் மேற்கூறப்படும்.

**பேதமானதுஉம் கேளாய் போரலும்**=சீவன் ஈசன் என்றபெயர்ப் பொருள் வேறுபட்டாலும், இப்பெயர்கள் அஸ்தங் கரம் பாணி யென்றது போல வொருபொருட்குப் பரியாய மன்மையானும், அல்லது ஒரு பொருட்கே பலகாரணம்பற்றி வந்ததன்மையானும், சீவனுக்குப் பொரு ளொருவனுட்ட வளர்வதென்பதாதலாலும், ஈசனென்ற சொற்குப் பொரு ளிறைமைநடாத்த லென்பதாதலினுலுந் தம்மிலொப்புமை யில்லையென்க. **இடத்தினாலும்** = இருவருக்கு மோரதிகரணமின்றிப் பிண்டபிரம்மாண்டமான விடவேறுபாட்டாலும்; **ஒதநும் உபாதியாலும்** = ஒதரும் உபாதி

யென்ற மிகுதியடை யடுத்து வந்தது அந்தக்கரண மளவின்மையா லென்க. இவ்வந்தக்கரணஞ் சீவர்களுக் குபாதியாதலாலு மிக்காரியவந்தக்கரணங்க ளுக் குபாதானகாரணமான சமட்டிமாயை யீசனுக்குபாதியாதலாலும்; **உடலாலும்** = அவ்வியட்டியந்தக்கரணங்க டாங்கிநின்ற வியட்டி தூலதேகஞ் சீவனுக்குடலாதலாலு மித்தூலசமட்டியே யீசனுக்குடலாதலாலும்; **உணர்வினாலும்** = அவ்வந்தக்கரண மலினோபாதியாதலாற் சீவன் சிற்றறி வனாதலாலும், அச்சமட்டிமாயை சுத்தசத்துவோபாதியாதலா லவ்வீசன் முற்றறிவுடையோனாதலாலும்; **பாதலம் விசும்பும் போல** = ஆடகேச் சுரருலகந்தமான பாதாளவுலகும் சத்தியலோகாந்தமான மேலுலகு மெவ் வாறு அண்மைப்பட் டொருமையாகாதோ வதுபோல; **பலதூரம் அக ன்று நிற்பார்** = அணுத்துணையு மணுகி யொன்றுபடார்; **ஆதலால் இவ ர்க்கு ஐக்கியம் என்பது எந்நாளும் கூடாது** = இக்காரணங்களால் வாச் சியமான விச் சீவேஸ்வரர்களுக்குப் பேதாபாவமான தாதான்மியசம்பந்த மான திச்சம்ஸாரகாலம்போலவே மோக்ஷகாலத்து மமையாதென்றவாறு. **பாதலமும் விசும்பு** மென்றதிலுள்ளவும்மைக ளெண்ணும்மை. ஏனைய வும்மைகள் முற்று.

இவ்வகைகளாற் கூறிய சீவேஸ்வாருடைய வேறுபாடுகளைப்பற்றி முன்னூல்களில் பல கடாவிடைகளான் விரித்துக்கூறியிருக்கின்றன ரென்க. அவற்றுள், சீவசொரூபத்தில், ஏகஜீவவாதமென்றும், நாநாஜீவ வாதமென்றும்; இவற்றில் விம்பப் பிரதிவிம்பவாதமென்றும், ஆபாசவாத மென்றும், அவச்சேதவாதமென்றும்; இவற்றில் பிரதிவிம்பம் மித்தை யென்றும், பிரதிவிம்பதரும மித்தையென்றும், சைதன்னியம்: ஜீவ னீச னிரண்டேயென்றும், ஜீவ னீசன் பிரம மென மூன்றேயென்றும், ஜீவ னீசன் பிரமங் கூடஸ்தனென நான்கென்று மிவ்வாறான வாதங்கள் மலைபோ லளவிறந்தனவாக வுள்ளன. அவைகளிற் சிலமாத்திர மிந்நூலிற் கூறிவரு கின்றனர். அவற்றுள்ளு மிம்மகாவாக்கிய விசாரத்தில் நான்கு சைதன் னியவகையாற் சீவேசுரவைக்கியங் கூறுகின்றன ரென்க. (எ0),(எக)

வடநூல் வல்லவர்கள்சொல்லும் வாசகப்பொருள் சேராம
விடராகிற் பொருளாம்வண்ண மிலக்கணையுரையாற் கொள்வார்
திடமான வதுவுமூன்றாய்ச் செப்புவார் விட்டதென்றும்
விடலிலா தென்றும்விட்டு விடாததென்றும் பேராமே. (எஅ)

'தத்துவமசி' என்றுகூறு மிம்மகாவாக்கியத்தி லசி யென்னும் பத மத்தத்துவமென்றபதங்கட் கைக்கியஞ் செய்யுமென்றி ரிக்கூற்றி லிலக்கியங்கட்கன்றி வாச்சியங்கட் கவ்வைக்கியங் கூடாதென்றி ரிங்ங னங்கூறி லவ்வாக்கியத்திற் சித்தாந்தம் பிறத்த லெங்ஙன மபாதித

சுருதிவாக்கியமாகலி னையப்படலாகுதல் கையிகத்தலாதுதல் கூடாவே யெனின்? வாக்கியங்களுக்குப் பொரு ளித்துணையாற் கூறப்படுமென்று மக்கூற்று செய்யுள்வழக் குலகவழக்கென்னு மிருவகை வழக்கிற் கண்டதென்று மெடுத்துக்காட்டோடு மிதுமுத லிரண்டு கவிகளானுங் கூறுபவ ரிதில் வாக்கியம் பொருள்படுமாற்றையு மதனுட்பிரிவையுங் கூறுகின்றார்:—

(இ—ள்.) சொல்லும் வாசகப்பொருள் சேராமல் இடராகில் = இலௌகிக வைதிகநூல்களிற் சொல்லப்பட்ட தொடர்சொற்களுக்குப் பொருளானது செம்மையிற்றோன்று திடர்ப்படுமாகில்; பொருள் ஆம் வண்ணம் = அவ்விடர்நீங்கிப் பொருள்படும்படி; வடநூல் வல்லவர்கள் இலக்கணையுரையால் கோள்வார் = ஆரியத்தில் வல்லுநரான சத்த நூலாரும் அர்த்த நூலாரு மிலக்கணை வகையாற் பொருள் கொள்வார்கள்; திடம் ஆக அதுவும் மூன்றும் செப்புவார் = அவர்களா னிச்சயிக்கப்பட்ட வவ்விலக்கணையு மூன்றுவகையாகச் சொல்லுவார்கள்; விட்டது என்றும் விடலிலாது என்றும் விட்டுவிடாத தென்றும் பேராம் = அதுவு மிக் கூறிய பெயரினையுடைய மூன்று வகையதாகும். எ-று.

உரையாலெனக் கூறினு மிம்மூன்றனுருபை யிலக்கணையோடு மொட்டுக. ஏகார மீற்றசை.

வடநூலில் வல்லவர், சந்தசு நிருத்தஞ் சோதிட முதலியவை கூறினோரு மிருப்பினு மிவ்விசேட வியலுறுப்பு வேதத்திற்குக் கௌணவுறுப்பன்றி சொன்னிர்ணயம் பொருணிர்ணயமாகிய முக்கிய விவ்விசேட வியலுறுப்புச் சத்தநூலாரு மர்த்தநூலாருஞ் செய்திருத்தலின் பாணினியுங் கௌதமரையே கொண்டாமென்க. இக்கோட்பாட்டை, "ஜஹத்ஸ்வா ர்த்தா ஸ்யாத் அஜஹத்ஸ்வார்த்தா சாபி ஜஹதஜஹல்லக்ஷணா ||" என்று லக்ஷணீகர்முன்னிலையாற் பாஷியக்காரரு மேற்றுளார். இவ்விலக்கணையாற் கொள்ளும்பொருள் செம்பொருள்போலவே பிறழாதென்பார் 'திடமானவதுவு' மென்றார். இலக்கணை யாகுபெயர். கருத்துப்பொருள்: வியஞ்சனவிருத்தி, கௌணிவிருத்தி முதலிய பொருட்கோள்களிருப்பினு மிம்மஹாவாக்கியத்தி லவை பயன்படாமையின் செஞ்சொல்லோடுங் கழிக்கப்பட்டன வென்க. அவையு மேல்வருதலானு முன்வந்தமையானு முணர்க. (எஉ)

கங்கையிற் கோஷமென்றுங் கருப்புச்சேப்போடு தென்றுந்
தங்கிய சோயந்தேவ தத்தனென்றுஞ் சொல்வார்கள்
இங்குதா ரணங்களாக்கி யிந்தமூன் றுரைகளாலே (எக)
துங்கநூல் விரோதமான சொல்லெலாம் பொருளாங்காணே.

இதிற் கூறியவிலக்கணை மூன்றிற்கு நிரையே யுதாரணங்காட்டி யிவ் விலக்கணையை யாழுங் கொள்ளுதலா லவ்வாக்கியங்களைக் கையிகத் தல் முதலியவு மின்றமென்று கூறுகின்றார்:—

(இ—ள்.) **கங்கையில் கோஷம் என்றும்** = *கூறியவற்றுள் விட் டவிலக்கணைக்குக் கங்கையினிடைப் பசுத்தொழுவ முள்ளதென்றும்;* **கருப்பு சேப்பு ஓடுது தங்கியது என்றும்** = *நிரையே கருப்பு ஓடுது சேகப்புத் தங்கியது எனவும்* **சோயம் தேவதத்தனென்றும்,** *விட்டுவிடாத விலக்கணைக்கு அவனே யிந்தச்சாத்தனென்றும்;* **இந்து உதாரணங்கள் ஆக்கி சொல்லுவார்கள்** = *அவ்விலக்கணை மூன்றற்கு மிம்மூன்றையு முதாரண மாக்கிக்கொள்ளுவார்;* **இந்த மூன்று உரைகளாலே** = *அச் சத்தநூலாதியோர் கொண்ட விம்மூன்று பொருள்களாலே;* **துங்கநூல் விரோதமான சொல்லெலாம் பொருளாம் காண்** = *ஆசங்கை யில்லாத கூறிய வேதவாக்கியத்திற்குச் செம்பொருள் பெறாத சொற்களுக்கெல்லாம் பொருளுண்டாகு மென்றுணர். எ-று.*

*ஏகார மிரண்டு மசைகள். தங்கியது எனற்பாலது தங்கின வெனா துவ்வீறு குறைந்துநின்ற வினைமுற்று.* 'துங்கநூல்' *என்றது இயற்கை யறிவினையுடைய யுக்தயோகியாகிய விறைவனால் வெளியிடப்பட்டுசுதப்பி ரமாணமாய் நிற்றலா லாசங்கைப்படாதென்றதை யென்க. வெ்ாஷ௦= கோஷம். பசுத்தொழுவ மென்றதைக் காவியப்பிரகாசம், உ-ம் உல்லாசத் திற் காண்க.*

(எ௩)

பன்னிய சோயமென்னும் பதங்களின் வாச்சியார்த்த
மன்னிய தேயங்கால மவனிவ னென்பவெல்லாஞ்
சொன்னவிவ் விரோதம்விட்டுத் தொடர்விசேடியம் விடாம
லுன்னிடிற் றேவதத்தனொருவனை வெளியாய்க் காட்டும்.(அ0)

'இந்த மூன்றுரைகளாலே துங்கநூல் விரோதமான சொல்லெலாம் பொருளாம்' என்றவற்று ளேற்புழிக்கோடலா லீண்டு பயன்படாத விட்டவிலக்கணையையும், விடாதவிலக்கணையையுங் கழித்துநின்ற பாக த்தியாக விலக்கணையா லிலக்கியார்த்தத்திற் கைக்கியங் கூறலை மூன்று

கவியாற் கொண்டவ ரிதி லப்பாகத்தியாக விலக்கணைத்துத் திட்டாந் தத்தை விளக்குகின்றார்:—

(இ—ள்.) பன்னிய சோயம் என்னும் பதங்களில் = இறுதியிற் கூறிய 'சோயந் தேவதத்தன்' என்ற மூன்று பதத்துண் முன்னின்றஸ:— அயம் என்றது, அவனே யிவன், இவ்வாறுகூறுந் தொடர்மொழியுள்; வாச்சியார்த்தம் = நேரே பொருளாதல்; அன்னிய தேயம் = இவனென்று முன்னிலைச்சுட்டுப்பொருளாய்நின்ற புருடனிற்றற்குச் சேய்மையிடமாகிய வயலிடமும்; காலம் = அங்ஙனமே யச்சுட்டுச்சொன்னிகழு நிகழ் காலத்திற்குக் கழிந்த வயலான காலமும்; அவன் இவன் என்ப எல்லாம் = பிரத்தியபிஞ்ஞாப்பிரத்தியக்ஷமாகிய வரசகோலத்தோடுங் கண்டுகழிந்த வேடமும், காணற்குநின்ற தவவேடமு மாகிய விவையனைத்துமாம்; சொன்ன இவ்விரோதம் விட்டு = கூறிய தேசகாலமுதலிய விசேடங்கடம்மில் முரணுதலி னவற்றைவிட்டு; தொடர்விசேடியம் விடாமல் = இம்முன்னிலைப் படர்க்கையாகிய விசேடணங்களைத் தொடர்ந்துநின்ற விசேடியமாகிய வடிவத்தினைமாத்திரம் விடாமல்; உன்னிடில் = கருதுமிடத்து; தேவதத்தன் ஒருவனை வெளியாய் காட்டும் = சாத்த னொருவனையே கண்கூடாகக்காட்டும். எ-று.

அன்னியத்தை காலத்திற்குங் கூட்டுக. (௭௪)

தத்துவமெனும் பதங்கள் பிரமமாய்ச் சாக்ஷியான
வத்துவைவிடாவாம் பேதவாச் சியார்த்தத்தை விட்டு
நித்தமுமது நீயாகு நீயது வாவையென்னு
மர்த்தமு மகண்டமென்றே யசிபத மைக்கியங்காட்டும். (௭௫)

முன் 'துவம்பத தத்பதங்கட் கசிபதமைக்கியங் காட்டும்' என்றதின் வாக்கியார்த்தத்தை முடிப்பவ ரிதிற் றட்டாந்தத்தை விளக்கிக் கூறி யசிபத மவ்விரண்டு பதத்திற்கு மைக்கியங் கூறலை யோதப்புரோத நியாயத்தால் வலியுறுத்திக் கூறுகின்றார்:—

என்னை? 'அதி' என்ற சொல் லாயினுமென் றொருமுறைகூற அது நீயாகு நீயதுவாவை யென் றிருமுறை கூறலெனின்? அவ்வசியென்ற சொல் லதுநீயாணுமென்றதோடமையாது நீயென்றதைத் தத்தென்றதோடுங் கூட்டிக் கடைநிலைத்தீபமாய்நின்று ஈரிடத்துஞ்சென்று பொருளைக் காட்டலி னங்ஙனங் கூறினு ரென்க.

அர்த்தமா செதுகை பதங்கள் விடாவாம் விட்டுமெனக் கூட்டி முடிக்க

(இ—ள்.) தத்துவம் எனும் பதங்கள் = அதுவென்றும், நீயென்

றுங் கூறு மிவ்விருபதங்களுங்கூறிய திட்டாந்தம்போல, **பேதவாச்சியார்த்தத்தைவிட்டுத்** தமக்குச்செம்பொருளாயுள்ள சர்வஞ்ஞத்துவ கிஞ்சிஞ்ஞத்துவ முதலியவாகக்கூறிய தம்மிலொவ்வாமையாகிய விருத்த தரும விசேடணங்களையுடைய நிரையே சீவேசுரரை விட்டு; **பிரமம் ஆய் சாக்ஷி ஆன வத்துவை விடாமல்=** பிரமமேயாகி சாக்ஷியுமான வவ்விருத்ததருமவத்துவைத் தமக்குப்பொருளாய்க் கொண்டுநிற்க, கொண்டதோடு நில்லாமல் அவ்விருபொருளையும்; **நித்தமும் =** முக்காலத்தும்; **அது நீயாதும் =** வாக்கியம் பிறந்தவாற்றா லச்சர்வஞ்ஞத்துவாதி குணமுடைய வீச்சுரனுக் கதிட்டானசுத்தப்பிரமமானது கிஞ்சிஞ்ஞத்துவாதி குணமுடைய சீவனுக்கதிட்டானனான கூடஸ்தனீயென்றும், பரோக்ஷபுத்தி நீங்கற்கு முன்னிலையிற் சுட்டிக் கூறியும்; **நீ அது ஆவை என்றும்=** அங்ஙனமாயினும் நீ பரிச்சின்னனல்லை, பின்னையோ வியாபகப்பிரமமென்று அச்சாக்ஷிக்கு வியாபகத்தன்மை கூறற்கு சாக்ஷியானநீயே யவ்வியாபகசொரூபமாகின்றாயென்றும்; **அர்த்தமும் அகண்டமேன்றே =** இவ்விருபதங்களி னர்த்தமானது வியாபக மென்பதாக; **அசிபதம்=** அசியென்ற மூன்றாவதுபதமானது; **ஐக்கியம்காட்டும்=** ஒன்றாதலையே காட்டு மென்றவாறு.

ஏகாரந் தேற்றம். இவ்வேகாரத்தை யீற்றிலுங்கூட்டிப் பொருள் கொள்க. இங்ஙன மிவ்வாக்கியங்களி லொருபாகத்தைவிட்டு மற்றொரு பாகத்தைக்கோடல் **விட்ட விலக்கணைக்குப்** பொருளின்றென்க. என்னை? தத்பத துவம்பதங்களில் பிரம கூடஸ்தரின் றொடர்ச்சி யிருத்தலி னவையுஞ் சக்கியார்த்தமென்றாய் முற்றும்விடவேண்டிவரும். அவற்றைவிடி னச்சேதனங்களுக் கயலான வநிர்த சட துக்கத்தைக் கைக்கொண்டு புருடார்த்தமிழக்கவரும். இனி விடாதவிலக்கணையைக் கொள்ளில் வாச்சியார்த்த முற்றும்விடாம லதற்கப்பாலுங் கொள்ளவரும். வாச்சியந்தம்மில் விரோதமாக நிற்றலின் விரோதம் பரிகரிக்கக் கொண்ட விலக்கணையாற் பயனின்றிமுடியு மாதலா லிவ்விரண்டிலக்கணைகளையு மீண்டுக் கழிக்கப்பட்டன வென்க. அகண்ட மென்றமையாற் றன்சொரூபத்திற் காணாமை யின்மையின் பரோக்ஷ நீக்கங் கூறாதே யமைதலின் **சுருங்கச் சொல்லலாற்** கூறினரென்க. (எகூ)

**கடநீரின் மேகநீரிற் கண்டவானிரண்டும் பொய்யே**
**குடவானும் பெரியவானுங் கூடியொன்றா மெப்போது**
**மிடமான பிரமஞ்சாக்ஷி யிரண்டுமெப்போது மேகந்**
**திடமான சுவானுபூதி சிவோகமென் றிருந்திடாயே. (அஉ)**

இங்ஙனமாயின் பந்தமுற்றவனன்றே வதுநீங்கிவீடடையவேண்டு, மஃதின்றி யெப்போதும் பந்தாகிதனை கூடஸ்தனுக்குப் பிரமத்தோடைக்கியங்கூறுவதிற் போந்த பயன்யாது? அன்றியுங் கூடஸ்த னுவாகலி னவனுக் கொன்றனபிரமத்தோ டெவ்வாறைக்கிய முண்டாமென்னு மாசங்கைகளுக்குச் சமாதான மத்துவிதார்த்தத்தைத் தீரபற வுணர்த்துமுகத்தால் வாதியர்கொண்டபொருளை மறுத்துத் திட்டாந்தத்தாற்கூறிச் சோகம்பாவனையையு முடன்கூறி மௌனமாக மாணுக்கனை யிருத்தத் தானுமவ்வாறிருத்தலை யிதிற் கூறுகின்றார்:—

(இ—ள்.) 'தத்துவமென்னும் பதங்கள் பிரமமாய்ச் சாக்ஷியான வத்துவை விடாவாம் பேதவாச்சியார்த்தத்தை விட்டு' என்றீரிதில் வாச்சிய லக்ஷியங்களுக்குத் தொடர்பியாது, விட்டதிற் பயனியாது எனின்? கட நீரில் மேகநீரில் கண்ட வான்இரண்டும் பொய்யே=யாதினுலெனின்? அவ்விரண்டிலுங் காணப்பட்டன வதிஷ்டான வாகாயங்களின் பிரதிவிம்பமாகலி னென்க. குடவானும் பெரியவானும் எப்போதும் கூடி ஒன்றும்= நீர் நிற்றற்கு மதிற் பிரதிவிம்பித்திடுதற்கு மேதுவாகிய குடத்தளவாய்நின்ற குடாகாயமும் மேகநிற்றற்கு மந்நீரிற் பிரதிவிம்பித்திடுதற்கு மேதுவாய் நின்ற மகாகாயமு மெக்காலத்துந் தாதான்மியமா யொன்றுபட்டே நிற்கும், அப்பிரதிவிம்பாகாயங்கள்போல விவை பொய்யாகா வென்பது போந்த பொருள். இடமான பிரமம் சாக்ஷி இரண்டும் எப்போதும் ஏகம் = இத்திட்டாந்தம் போலத் தற்பதவாச்சியமான வீச்சுரனுந் துவம்பதவாச்சியமான சீவனும் நிறையே மாயை யந்தக்கரணங்களிற் பிரதிவிம்பித்துக் கற்பிதமாகலின் மித்தையா மிவற்றிற்கதிஷ்டானமாகியும் வியாபகமாகியு முள்ள பிரமமுஞ் சாக்ஷியுஞ் சத்தாதலாலுமன்றியும் மிவ்விரண்டுமாபாசமன்றிச் சுத்தசேதனமாகலிற் றாதான்மியமாய், எக்காலும்வேறறலில இதனாற் போந்த பொருள்: ஈச்சுரன் சீவனுகிய வாபாசர்களுக்கு சாமானியசொரூபம் பிரமமுங் கூடஸ்தனுமாகலி னிப்பிரதிவிம்பம் விம்பங்களுக்குத் தொடர்பாடுண்டென்பதும், இவ்வாக்கிய மொவ்வொரு சீவர்களுக்குந் தனித்தனியே யறிவித்தலி னச்சீவாதிட்டானகூடத்தன் பிரமரூபமே யாகலினுவாகத்தோன்றல் சாக்ஷியந்தக்கரணவுபாதியாலன்றிச் சொரூபத்தாலன்மையின் சாக்ஷி நானுவன்றென்பதுமாமென்க. திடமான சுவானுபூதி = இம்மஹாவாக்கியத்திற்கு இவ்வர்த்தமே திடமான சுவானுபவமாம், என்றமையால் கேவலம் யுத்திவாதங்களாற் கூறுஞ் சிவேஸ்வரவைக்கியம் போன்ற மதங்களன்றென்பது பெற்றாமென்க. சிவோகம் என்று இருந்திடாய் = ஆகலினச்சிவமே யானென்பதாக வமைக ; மேலாசங்கை, பிரவாதவுள்ளத்தோடு மென்றவாறு

இத்திட்டாந்த தாட்டாந்தங்க **ளெதிர்நிரநிறையணி. ஏகாரமிரண்** டனுண் முன்னது தேற்றமும் பின்னதசையுமாம். உவமானத்திற்கேற்ப வுவமேயம்விரிக்கப்பட்டது. இனி, ஆபாசசகிதவந்தக்கரணஞ் சீவனுக்கு விசேடணமாயுஞ் சாக்ஷிக்குபாதியாயுநிற்றலி **னவ்வந்தக்கரண விசிட்ட சேதனஞ் சீவனாயு முபசிதசேதனஞ் சாக்ஷியாகின்றன.** இன்னுமவ்வந் தக்கரணத்தை விசேடணமாகக்கொண்டசேதனபாகஞ் சீவனாய்நிற்றலி னவ்விசேடணாம்சத்திற் சமுசாரமுண்டு. விசேடிய பாகமான சேதனத் தின்கண்ணே ஜநநமரண முதலிய யாதொரு சமுசாரமுமின்று. இவ்வா றே, தற்பதத்தும் மாயாவிசிட்டங் கற்பிதமெனவு மாண்டே சிருட்டியாதி சமுசார முண்டென்றுஞ் சுத்தப்பிரமமெனவு மிதனிடத்தவை யின்றெனக் கொள்க என்பார் **"கடநீரின் மேநீற் கண்ட வானிரண்டும் பொய்யே"** என்று திருட்டாந்த முகத்தார் கூறினாரென்க. **இது பிறிது மொழிதலே ன்னு மணி.** இனி, இக்கூற்றினாற் சமுசாரமுடைத்தானவ னாபாசனென்று மவனது விசேடபாகத்தையுணர்தலே வீடென்றும், முன்னுந் **'தன்னையுந் தனக்காதாரத் தலைவனையுங் கண்டானேல் பின்னையத் தலைவன்றானாய்ப் பிரமமாய்ப் பிறப்புத்தீர்வ'** னென்ற தீண்டு முடித்துக்கூறினா ரென்க.

இனி, முன் னான்குசைதன்னியத்தின்வேறுபாடுமாத்திரங் கூறி யவற்றிற் பொய்மெய்யின்வேறுபாடு கூறப் பெறாமையானு, மவற்றின் றொடர்பாடுகூறாமையானு மிவைமுதலிய பிறவுங் கூறினமையானு மிக் கூற்று புனருத்தமன்றென்க. இப்பொருளையே **தமாரதேவரும்** "இந்தச் சீவன் கற்பிதமே யின்றி வேறோர் பொருளென்னி, லந்தச்சொரூப மிவனா கா னந்தச்சீவ னென்றாகு, மந்தச்சீவனது நாமென்றெண்ணிச் சோகம்பா விக்க, வந்தச்சொரூபமாய்விடுவ னவனைவிடவே றிவனிலதின்" என்பதாக கூறினார் என்க. இனிக், கடாகாயமென்னும் பெயரு நீர்கொணர்தலாகிய காரியமுங் கடரூபவுபாதிதிருட்டியாற்றோன்றி யவ்வுபாதி யின்றியபோது கடாகாயவடிவமாத்திரமாய்த்தோன்றி மகாகாயவடிவமாய் நிற்குமாபோ லச் சேதனத்தின்கண் சாக்ஷியென்னும் பெயருஞ் சுகதுக்க சகித தருமங்க ளோடுகூடின வந்தக்கரணத்தின் பிரகாசரூபமானகாரியமுமந்தக்கரண வுபா தியாற்றோன்றி யவ்வந்தக்கரணமின்றியக்கா லவைதோன்றாமற் சைதன் னியமான பிரகாசமேதோன்றுதலாற் சாக்ஷிபிரமரூபமென்பார் **'குடவானும் பெரியவானுங் கூடியொன்ற மேப்போது மிடமான பிரமஞ்சாக்ஷி யிர ண்டுமெப்போது மேகம்"** என்றாரென்க. எப்போதுமேகமென்றது பிராந்தி க்குமுன்னும் பிராந்தி நிவர்த்தியின்பின்னு மிவ்வாறே யென்றதையென்க. இவ்வாறு சிவோகமென்னுஞ் சிந்தனையோடு மௌனமாயிருத்தற் குதார ணம்: "மும்மைப்பாழ்திர மொழியா மொழியாலே, நம்மைப் பாரென்று நவிலும் பெருமானே" எனவும், "இவ்வாறறிந்த பரிசென்ன ஒண்ணாவின்

பத்தைச் செவ்வாய் மலராமற் செப்பும் பெருமானே" எனவும்" ஆநந்தவெள்ளமென தங்கைக்கனியாக, மோனந்தன்னாலே மொழியும் பெருமானே" எனவும் வருவனவற்றாற் காண்க. இனி, 'ஞானமலாதபாத முரையாடி ஞான முரையாடுகோலை யரனார், மோனமலர்துகூற முடியாமலியாது மொழியா ரிதியாவர் மொழிவார்' என்பதுங் கொள்க.

தஞ்சமாங் குரவன்சொன்ன தத்துவவழி தப்பாமற்
பஞ்சகோசமுங் கடந்து பாழையுந்தள்ளி யுள்ளிற்
கொஞ்சமா மிருப்பும்விட்டுக் கூடத்த பிரமமென்னு
நெஞ்சமு நழுவியொன்றாய் நின்ற பூரணத்தைக் கண்டான். (அங)

கூறிய மஹாவாக்கியத்தான் மாணாக்கனுக்குண்டான சுவானுபவத்தை யிரண்டுகவியாற் கூறத்தொடங்கி யிதிற் சுத்தானுவித்தசமாதி பரியந்த மறிவித்த வாசிரியர்வழிச்சென்று நிருவிகற்பமாயினானென்றிதிற் கூறுகின்றார்:—

(இ—ள்.) **குரவன் சொன்ன தத்துவவழி தப்பாமல்** = இதுகாறுந் தனதாசிரியர் கூறிப்போந்த தத்பத துவம்பதங்களின் நெறியிற் பிறழாது; **பஞ்சகோசமும் கடந்து பாழையும் தள்ளி, உள்ளில் கொஞ்சமாம் இருப்பும் விட்டு** = அவற்றி னீங்கிய தான் றனக்குள் தன்னைப் பரிச்சின்னனாகக் கருதியிருந்த வக்கல்பனாநிச்சயமும் விட்டு; **கூடஸ்த பிரமம் என்னும் நெஞ்சமும் நழுவி** = அவ்விடத்துள்ள தானான கூடத்தனே பிரமமென்பதாகக் கருதுங் கருத்தையு மகற்றி; **நின்ற பூரணத்தைக் கண்டான்** = அத்துவிதமாய் நின்ற பூரணசொரூபமான தன்னியல்பு வடிவ மாயினான் எ-று.

'**தஞ்சம் ஆம் குரு**'—புருஷார்த்தமான மோக்ஷத்தைத் தருதற்குச் செல்சாராக நின்றவர். '**பஞ்சகோசமுங்கடந்து பாழையுந்தள்ளி**' என்பனமுதலிய வாக்கியங்களை யநுவதித்துக்கூறியது 'வழிதப்பாமல்' என்றதை விளக்கற்கென்க. '**கொஞ்சமாமிருப்பு**'— மதஸ்தர்கள் கொண்ட தேகமுதற் சீவனீறாய வான்மநிர்ணயம் பரிச்சின்னமாயிருத்தல். கூடஸ்தன் றானென்றறிதல் சுத்தமாயினும் புருஷார்த்தசாதனமன் றாதலினது பெறற்பொருட்டு அக்கூடஸ்தனைப் பிரமமாகச் சிந்தித்ததைக் '**கூடஸ்த பிரமமென்னு**' மெனவும், அங்ஙனங் கூடஸ்தனைப் பிரமமாகச் சிந்தித்தல் புருஷார்த்தசாதன மாயினு மது திரிபுடிப் பிரதீதியுடைய சவிகல்ப மாகலினதுவு மொழிந்தா னென்பார் '**கூடஸ்தன் பிரமமென்னு நேஞ்சமு நழுவி**' எனவும், நழுவினவிடத் தத்வைத பாவனாரூபமான நிருவிகற்ப மாயினானென்பார் '**ஒன்றாய் நின்ற பூரணத்தைக் கண்டான்**' எனவுங் கூறினாரென்க.

**மாணாக்கன்** *றேன்றுவெழுவாய்; அல்லது கண்டானென்றமையா* **லவாய்நிலையெனினு** *மொக்கும்.* (௭௭)

*அனுபவானந்த வெள்ளத்தழுந்தியே யகண்ட மாகித்*
*தனுகரணங்க ளாதிசகலமு மிறந்து சித்தாய்*
*மனதுபூரணமாய்த் தேகமான சற்குருவுங் காண*
*நனவினிற் சுழுத்தியாகி நன்மகன் சுபாவமானான்.* (௮௪)

முன்னடைந்த நிருவிகற்பத்தின் பேதமான மற்றொன்றி னிலைமையு மடைந்தானெனக்கூறி யதன்பலனுங் கூறுகின்ற ரீதிலென்க:—

(இ—ள்.) **அனுபவம்** = *இவ்வாறானவனுடைய மேலனுபவம் யாதெனின்?* **ஆனந்தவெள்ளத்தழுந்தியே அகண்டமாகி** = *அங்ஙன நின்ற விருத்தியு மகண்ட பிரமானந்தவெள்ளத்தின் மூழ்கியதுவாய்;* **தனுகரணங்களாதி சகலமும் இறந்து** = *முன்றானாகவுந் தனதாகவு மிருந்த வன்னமயமுத லானந்தமயமீறான வனைத்தின்வாசனையு மிறந்து;* **மனது சித்தாய் பூரணம் ஆய்** = *அவ்வாசனைகளிறந்துநின்ற சுத்தசத்துவ மனமானது வியாபகப்பட்டு;* **தேகமானசற்குருவும் காண** = *தம்போல மானுடச்சட்டை சாத்தி யெழுந்தருளிய ஸ்ரீசற்குருநாதனு மிவனிலைமை யுணரும்படி;* **நனவினிற் சுழுத்தியாகி** = *வியாவகாரிக வந்தக்கரணவிருத்தி, சத்துவசேடமாய் நிற்கின்ற நனவின்கண்ணே திரிசியந்தோன்றாத வவத்தையை யடைந்து;* **நன்மகன் சுபாவம் ஆனான்** = *உத்தமாதிகாரியான விம்மாணாக்கன் றனதியல்பே யாயினான் எ-று.*

*இதன் பொழிப்பு:—மேலனுபவம், தனுகரணங்களாதியவனைத்தின் வாசனையுந்தோன்றாதிறந்த மனது சிற்சொரூபமாய் பரிபூரணமா யானந்த வெள்ளத்தழுந்தியே யகண்டாகாரமாய் அருளே திருமேனியான சற்குருவுங்காண* **நனவினிற் சுழுத்தியாகி நன்மகன் சுபாவமானா** *னென்பது. அனுபவானந்தமென்றதை யியற்கையானந்த மெனினு மொக்கும். தனுகரணங்களாதி சகலமும் வாசனைக்காகலி* **னாதபேயர்.** *இனிப், பூரணத்தை யவ்வாறுகாணலு மத்துவிதாவஸ்தானுரூபமாகாமையி னீண்டது பெற்றானென்பார்* **'அனுபவானந்த வெள்ளத்தழுந்தியேயகண்டமாகி'** *என்றார். இவ்வாறாதற்கேது செகத்வாசனை யுதியாதமனமென்பார்* **'தனுகரணங்களாதி சகலமு மிறந்து'** *எனவும், இத்தன்மையான மனமே சுத்தசத்துவசொரூப மென்பார்* **'சித்தா'** *யெனவும், இங்ஙனங் காணக் கருவியாய் நின்ற மஹாவாக்கியஜென்னியமான வவ் விருத்தியுஞ் சேட்டியாம லப்போடுகலந்த வுப்புப்போலப் பிரமாகார மனமென்பார்* **'மனது பூரணமா'** *யெனவுங் கூறினார்.*

இதிலுள்ள விறந்தது த்தீஇநின்ற வேச்சவும்மை விக்ரத்தாற் றொக்கது. இவ்வநுவதிப்புப் பிரபஞ்சஞ் சங்கற்பமுள்ளவிடத்துண்டாய்து நீங்கியவிடத்தின்றாகலி னப்பிரபஞ்சங் கற்பிதமென்பதையும் விளக்கிநின்றது. ஆனவென்னு மாக்கச்சொல், பரிபூரணராய்த் தன் வடிவரேயாயினுங் கருணையாற் கொண்ட கோலமென்பதை விளக்கிநின்றது. இனிக் குருவுமென்றதிலும்மை இறந்தது தழீஇ நின்று அங்ஙனம் பூரணராகவுள்ளுந் தேகமாக வெளியிலு நின்று இவனிலைமையை யுணர்ந்தாரென்ற பொருளைக் குறிப்பிக்கின்றமையா லாக்கவும்மையு மாமென்க. இது, 'ஐயனே யெனதுளே நின்றனந்த சென்மங்களாண்ட' மெய்யனே யுபதேசிக்க வெளிவந்த குருவே போற்றி' என மேற்கூறுவதனாலும் விளங்குமென்க. அன்றி யிவ்வாக்கவும்மை யிவ்வாசிரிய ரன்றியு மிவ்வாசிரியரிடத்தே தன்னோடுபதேசங்கேட்கு மொருசாலைமாணக்க ரெனினும் பொருள்படு மென்க. இனி, நனவிற் சுழுத்தியென்ற தந் நிலைமைக்குப் பெயரென்க. தவிர்வழிவந்த வின்சாரியை. கண்டபூஷணநியாயமா யியற்கையாயுள்ள பொருளைச் செயற்கையாகக் கூறியது பிராந்திதிட்டியை நோக்கியென்க. மனது சித்தாய் வெள்ளத்தழுந்தி யகண்டமாய்ப் பூரணமாய்ச் சுழுத்தியாகிச் சுபாவமானு னென்னக் கொள்கவென்க. இவ்விசாரத்தை 'வீடதாம் பரிபூரண...... .....அகண்டமா மனுபவசித்தி யெப்படி' என்றவிடத்திலும் விரிவாய் விளங்கும்.

அளிமகனெடும்போ திவ்வாறானபின் மனதுமெள்ள
வெளியில்வந் திடவுணர்ந்தான் விமலதேசிகனைக் கண்டான்
றுளிவிழி சொரியப்பாதந் தொழுதுவீழ்ந்தெழுந்து சூழ்ந்தான்
குளிர்முகச் சுவாமிகேட்கக் கும்பிட்டுநின்று சொல்வான். (அ௫)

அனந்த ஜன்மத்திலீயற்றிய நிட்காம்புண்ணியத்தின் முடிந்தபயனிச்சஞ்சிதவொழிவாயினும் பிராரப்தவினை நிற்றலி னதன்வசத்தனும் மேலையற்றிய வின்சரிதங் கூறுகின்றார்:—

(இ-ள்.) அளிமகன் இவ்வாறு நெடும்போது ஆனபின் = அதீதமான விந்நிருவிகற்பநிட்டையிற் சுகாதீதனாய் நெடுநேர நின்றதின்பின்னர், மனதுமெள்ள வெளியில் வந்திட உணர்ந்தான் = தன்மன மந்நிலையினின்றும் வெளிப்பட வுலகை யுணர்ந்தான்; விமலதேசிகனைக் கண்டான் = உணர்ந்தவ னம்மனங் கருவியாகத் தன்முன்னாக வெழுந்தருளிய வாசிரியரையுங் கண்டான்; துளி விழி சொரிய = கண்டவாது கைம்மாறு படுதலின்றி யப்பொருளைநினைந்து கண்ணீர் பெருகக் கரைந்து; பாதம் வீழ்ந்து தொழுது = அவரது பாதத்தில் வீழ்ந்து வணங்கி; எழுந்து சூழ்ந்தான் = எழுந் தவரைவிட்டகலாதவனாய்; குளிர் முகச்சுவாமி

**கேட்க** = விளங்கிய முகமுடையவரான வவ்விறைவ னறியத்தக்கதாக; **தும்பிட்டுநின்று சொல்வான்** = அஞ்சலியோடும் வாழ்த்துமுகத்தாற்றன் னனுபவத்தைச் சொல்லத் தொடங்கினன், எ-று.

**சூழ்ந்தான்** முற்றெச்சம், குளிர்முகமாயது, இவன் சுவாநுபவத்தைக் கண்டு 'முன்பீடையு நகையுங் கொண்டவர்' அப்பீடை நீங்கி யின்புற்ற ரென்றவாறு. இச்செய்யுளின் கருத்து, மேல் 'சமாதிக்குஞ் சாட்சியே யான்' என்றவிடத்திற் செவ்விதாய் விளங்குமெனக். அளிமகன் சொல் வான் என முடியும். (எக)

ஐயனே யெனதுளே நின்றனந்த ஜென்மங்களாண்ட
மெய்யனே யுபதேசிக்க வெளிவந்த குருவேபோற்றி
யுய்யவே முத்திநல்கு முதவிக்கோ ருதவிநாயேன்
செய்யுமா றென்றுங்காணேன் றிருவடி போற்றிபோற்றி. (அக)

**சொல்வானென்ற தி:்தென் றிதிற் கூறுகின்றார்:—**

அஃதிவ்வாழ்த்தே. என்னே? தன்னைக் கொடுத்தோனுக்குப் பின் னைக் கொடுப்பதொன்றின் றுண்மையா யின்மையானும், முன்னரே யுன் னடிமையென் றுடல் பொரு ளாவி மூன்று மையனுக் காக்கினமையானு மிவ்வாழ்த்தே யீண்டிவர்க்குப் பயன்பட்டவாறு காண்க.

அனந்த ஜன்மங்களாகத் தன துள்ளே நின்றுண்ட மெய்ய னந்தரியாமி யாதலி 'னைய' னெனவும், அவனே வெளிவந் துபதேசித்தமையாற் 'குரு' வெனவுங் கூறினன். போற்றியென்ற தின்னமு மிவ்வாறே கா வென்ற பொருள். ஆண்டானுக் கடிமை செய்ய வேண்டிய வுதவி யொன்றின்மை யின் '**செய்யுமா றென்றுங் காணேன்**,' என்றான். **நாயேனென்பதை** முன்னுங்கூட்டி, நாயேன் போற்றி, நாயேன் காணேன் எனமுடிக்க. நாய்—என், நாயிற் கடைப்பட்டவ னென்பது பொருள். காணுமையா லிவ் வணக்கே யென்னால் முடிந்ததென்றது கருத்து. **ஐயனாண்டவகையைத் திருவருட்பா சிறுவிண்ணப்பம் பெருவிண்ணப்பங்களிற் காண்க.** குருவே போற்றி யென்றதே ஐயனாகிய மெய்க்குருவுக்குச் செய்யுங் கைம் மாறேயாயினு மிதனினு மிக்கஃதொன்றின்மையி னிவ்வணக்கே யக்கைம் மாறென்ற தேற்றச்சுட்டின்பொருட்டுப் பின்னுமடுக்கி '**திருவடி போற்றி போற்றி**' யென்றா ரென்க. திருவடியென் றீற்றிற் கூறினுங் குருவென்ற விடத்து மிஃதே யமைதலி னுண்டு மித்திருவடியைக் கூட்டிப் பொருள் கொள்க. ஏகாரமூன்று மண்மையிற் சேய்மைவிளியுருபாய் விகாரப்பட் டன. **ஆறு**பொருளின் மேற்று. இதன்வழியாக வுதவிசெய்தலி னிஃ தாறுயிற் றென்க. (அ0)

*சிட்ட னிவ்வாறுகூறத் தேசிகர் மகிழ்ந்துநோக்கிக்*
*கிட்ட வாவெனவிருத்திக் கிருபையோ டருளிச்செய்வார்*
*துட்டமாந் தடைகண்மூன்றுந் தொடராமற் சொரூபஞான*
*நிட்டனு யிருக்கினீதே நீசெய்யு முதவியாமே. (அஎ)*

தேவரீரருளிய விந்நிரதிசயானந்தப் பேற்றிற் கொப்பதோர் பொரு ளுமக்சியான் கொடுக்கற் கொன்று பிறிதின்மையி னிவ்வாழ்த்தே கைம்மாறெனை முன்வாழ்த்திற் குறித்தமையா லிக்கும்பிடுக்த வீங்கியு மியாமன்று ஆகலினிது கைம்மாறுமன்று, பின்னையோ இப்போது நீ யடைந்துள்ள வைராக்கிய முபாதி சாதனசதுட்டயஞ் சிரவண மன்ன் நிதித்தியாச முதலிய புறப்புறச்சாதனம் புறச்சாதன மகப்புறச்சாதன மகச்சாதன முதலிய சாதனவலியா லிப்பேறு நினைக்கு வாய்க்கினும் பிராரத்தவசத்தான் முன்வாசனை வந்து தாக்கி னிந்நிலைக்குக் கேடு பிறக்குமாகலி னவ்வாசனையின்வயமாகாது நீ நிற்கி னின்முயற்சியு மென் சொல்லும் பயன்படு மிதுவே யெமக்குக் கைம்மாறென் றிதிற் கூறுகின்றார்:—

**சிட்டன்**, *அறிவிற் சிறந்தோனுமாம்.* **துட்டமாந்தடை** = *பலபிற வியின்வாசனைமிகுத் திவ்வபரோக்ஷத்தையும் விலக்கும் வன்கண்ணதாகிய தடை. ஆன்மசொரூபநிட்டனுயிருத்தல், மெய்யுணர்வாயதன்னையுணர்ந்த வுணர்ச்சி மாறுபடாதன்னிலையிலேயேயிருத்தலைச்செய்பவன். ஏனைய பொருள் வெளி. ஏகார மிரண்டனுள் முன்னது தேற்றம், பின்னதசை.அக.*

*நீநானென் றிரண்டிலாம னிறைந்தபூரணமா யெங்கு*
*நானுகத் தெளிந்தஞான நழுவுமோகுருவே யென்றான்*
*றானுகும் பிரமரூபஞ் சற்குருநூலாற் றேறின்று*
*மானுலுந் தடைகளுண்டே லநுபவ முரைத்திடாதே. (அஅ)*

பேதங்க டன்னைமறந்த வறியாமைகாரணமாய்த் தோற்றலன்றி யறிந்தபின்னு மாமோவெனின்? கண்ட வொருபொருளிலு மையம் பிறக்கி னக்காட்சியு நிலையுறதென் றிதிற் கூறுகின்றார்:—

(இ—ள்.) **நீ நான் என்று இரண்டு இல்லாமல் எங்கும் நிறைந்த பூரணமாய்** = *அறியாமைகாரணமாகத் தோற்றிய நீ, நானென்று சொல் லப்பட்ட இவ்விரண்டுபாதியையு நீக்க தேசகால வஸ்துபரிச்சேதரகிதமாக வெங்கு நிறைந்துநின்ற பூரணசொரூபமாய்;* **நான் ஆக தெளிந்த ஞானம் நழுவுமோ** = *நானொருவனுகவே தெளியும்படி தேவரீர் தெளிவித்த வுண ர்ச்சியானது என்னிடத்துநின்று நீங்குமோ? குருவே, என்றான்;* **இங்ங**

னம் விண்ணப்பித்தானுக்கு, **தான் ஆதும் பிரம நபம் =** நீயேயன்றி யாவருக்குந் தன்சொரூபமாக விருக்கும் பிரமசொரூபமானது ; **சற்குரு நூலால் தோன்றும் =** ஆனாலும் அறியாமைகாரணமாக மறைபட விம்ம றைவுகாரணமாகத் தாபப்படுமெதிகாரிக்கு சற்குருவாலுஞ் சற்சாஸ்திரத்தி னாலு மொருவாறு தோன்றுமானாலும் ; **தடைகள் உண்டேல் அநுபவம் உரைத்திடாது =** முன்றோன்றிய தடைகளான் மறைபட்டு விபரீத முன் றோன்றியது போற் றோன்றும் எ-று.

பத்தாவானுக்குத் தன்னை வெளிப்படக்கண்டபின் னையமுண்டாகா மைபோலத் தன்னை யுள்ளவாறுணர்ந்தபின் பிராந்தி யாங்ஙனமுண்டா மென்பான் '**நானகத் தெளிந்தஞான நழுவுமோதருவே**' என்றான். நீ கூறிய் துத்தமாதிகாரியின் செய்தியாயினு மிம்மகாவாக்கிய விசாரத்தான் மாத்திரம் ஞானமுண்டா யையந் தோன்றாதிருத்த லனைவருக்கு மொப்ப முடியாமையி னவ்வையந்தோன்று முளத்தினர்க்கே யாமிங்ஙனங் கூறிய கருத்தென்பார் '**தானதும் பிரமநபஞ் சற்குரு நூலாற்றோன்று மானலுந் தடைகளுண்டே லனுபவமுரைத்திடா**' தென்ற விடை கூறினரென்க. இதனாற்போந்த பொருள்: அப்பிரதிபந்தாபரோக்ஷமென்றும் பிரதிபந்தாப ரோக்ஷமென்று **மபரோக்ஷமிருவகைத்**தென்று மிவற்றிற் சனகஞ்தியரிட த்துள்ள ஞான **மப்பிரதிபந்தாபரோக்ஷ**மாகலி னதுவே திடஞானமென் றும், சடபரதர்வாமதேவாதியரிடத்துள்ள ஞானம் பிரதிபந்தசகிதஞானமா கலின**திடஞானமென்பது**உ **மா**மென்க. "புற்றில் வாழரவு மஞ்சேன் பொய்யர்தமெய்யு மஞ்சேன், கற்றைவார்சடையெமண்ணல் கண்ணுதல் பாத நண்ணி, மற்றுமோர் தெய்வந்தன்னை யுண்டென நினைந்தெம்பெம் மாற், கற்றிலா தவரைக் கண்டா லம்ம நாமஞ்சுமாறே" என்ப திதற்குக் காட்டு.
(அஅ)

தடையெவை யெனிலஞ்ஞானஞ் சந்தேக விபரீதங்கள்
படர்செயு மிந்தமூன்றும் பலசன்மப் பழக்கத்தாலே
யுட்னுடன் வரும்வந்தக்கா லுயர்ஞானங் கெடுமிவற்றைத்
திடமுடன் கெடுப்பாய் கேட்டல்சிந்தித்த றெளிதலாலே. (அகூ)

"துட்டமாந் தடைகண் மூன்று" மென்று தொகைபடக் கூறினீ ரவற்றின் பேயர் யாவை, அவை வருதற்குக் காரண மியாது; அம்மூன் றற்கும் பயன் யாவை, அன்றியுந் தொடராமற் சொருபஞானநிட்டனு யிருவென்றீ ரவை தொடராம லிருத்தற்குந் சொருபநிட்டனுதற்கு மேது வெவை யென்னு மாணக்கன் வினக்கட்கு விடை யிதுமுத லைந்து கவி களாலுங் கூறுபவர் நீக்குமுபாயத்தின் பெயர்காறு மிதிற் கூறுகின்றார்:-

அஞ்ஞானம் சந்தேகம் விபரீத மென்பன வத்தடைகளின் பெயர். பல சன்மப்பழக்க மவை வருதற்குக் காரணம். உயர்ஞானத்தைக் கெடுத்த லவற்றின் பயன். உயர்ஞான, மிதனின்மிக்கு ஞானமின்மை. மகாவாக்கிய ஜென்னியஞானமாகவி னென்க. இதனை விம்மகாவாக்கியத்திற்கு வேனை யோர் கூறும் பொருள் போலியென்றுயிற் றென்க. கேட்டல் சிந்தித்தல் தெளிதல், அத்தடை மூன்றனையு நிரையே நீக்கு முபாயங்களின் பெயர். திடத்தை மூன்றற்துங்கூட்டி, சடுவித லிங்கதாற்புரியத்தோடு கேட்டலே திடக்கேள்வி, யுத்தி தருக்க மனுமானங்களோடு மநநஞ்செய்தலே திடசிந் தனை, இயமாதி யெட்டங்கங்களோடே தெளிதலே திடத்தெளிவெனப் பொருள்கொள்க. ஏகார மிரண்டுந் தேற்றம். இங்ஙனங் கேட்டலாதியவ ற்றிற் குதாரணம். "எழுத்தறியத் தீருமிழி தகைமை தீர்ந்தான், மொழித் திறத்தின் முட்டறுப்பானுகு, மொழித்திறத்தின், முட்டறுத்த நல்லோனே முதனூற் பொருளுணர்ந்து, கட்டறுத்து வீடுபெறுமால்." எனவரும். இங் ஙனங் கற்காவிடின், 'பொய்படு மொன்றோபுனைபூணுங், கையறியாப் பேதைவினை மேற்கொளல்.' என்ற பொய்யாமொழிக் கிலக்காவர். இன் னும், 'ஊனமிலா ஞானநூல் விசாரத்தாலே.' என்று முன் கூறிய வாசிட் டத்தாலு முணர்க. ஏனையபொருள் வெளி. (அ௯)

அக்கினி கட்டுப்பட்டா லற்பமுஞ் சுடமாட்டாது
மக்கின ஞானத்தாலே வந்தபந்தமும் வேவாது
சிக்கெனப் பழகல்கேட்டல் சிந்தித்த றெளிதலாலே
விக்கின மடஞ்சந்தேகம் விபரீதம் போக்குவாயே. (௯0)

"வந்தா லுயர்ஞானங் கெடும்" என்றீ ரதற்குத் திட்டாந்த மியாது, 'கெடுப்பா' யென்றதீ லெதுவேதனு, லெது வேதனைத் கெடுத்தல் வேண்டுமென்னும் வினுவிற்கு விடை யிதிற் கூறுகின்றார்:—

(இ—ள்.) அக்கினி கட்டுப்பட்டால் அற்பமும் சுடமாட்டாது = யாதினுலெனின்? அவ்வக்கினியின் தாகசத்தியைக் கட்டு மணிமந்திர வௌடதங்களின் வலியா லென்க. இதுபோல், மக்கின ஞானத்தாலே வந்த பந்தமும் வேவாது = பிரதிபந்திக்கப்பட்ட ஞானத்தாலான்மாவிற் குண்டாகிய பந்தமுந் தகனத்தை யடையாது. ஆதலால், சிக்கெனவென் பது, எப்போது எப்போது அக்ஞானுதிக டோன்றுமோ தோன்றியக் காலே யென்றபடி. கேட்டல் சிந்தித்தல் தெளிதல் பழகலாலே = இம்மூன்று முயற்சியினுலே; மடம் சந்தேகம் விபரீத விக்கினம் போக் குவாயே = நிரையே யிம்மூன்று தடையினையு நீ நீக்குவாய். எ-று.

ஏகார மூன்றனுண் முன்னது தேற்றம், பின்னவை யசைகள். "எந்த வெந்த வாதனைக ளிதயத் தெழுந்ததது வதனை, யந்தவந்த விடத் தழுக்கி னதுவே மாயைக் கழிவாகும்." என வசிட்டரும் விரைவுக்குறிப்போடு மவ்வாசனுத்தியாகங் கூறினு ரென்க. இன்னும், 'இளை தாக முண்மரங் கொல்க' களையுநர்கை கொல்லுங் காழ்த்தவிடத் தென்ருர் சேனுப் போதாரு மென்க. இங்ஙனமன்றி வாசனை மிகுத்துப் பிறவிப்பட்டதற் குச் சடபாதர் சுக்கிரன், முதலோருஞ் சான்ருமென்க. இக்கேள்வி நிருவி கற்ப சமாதிக்குப் பின்னெழுந்ததாதலின், வந்தபந்தமும் வேவாதென் றிறந்த காலத்தாற் கூறிய தென்னை யெனின்? அற்றன்று. அதிகாரிக் குச் சுரோத்திர சம்பந்த மஹாவாக்கிய ஜெனிியமான வபரோக்ஷஞான மே மோக்ஷத்திற்கு நேரே சாதானமாயின், வேதப்பிரதிபாதகமான சிரவண மநந முதலிய சாதனங்க ணிட்பல மாமே யென்பார் மதம்பற்றி யெழுந்த தாகலி னுரோ வோரதிகாரிக்கு அம்மஹாவாக்கிய ஜென்னியமான வபரோக்ஷ ஞான முண்டாமன்றி யனைவருக்கு மம்மஹாவாக்கிய ஜென்னிய ஞான முண்டாகாமையி னிச்சிரவணுதிகள் வேண்டநிற்றலி னச்சமாதிக் குப் பயனின்மை யின்மை யுணர்க வென்க. (அச)

பிரமபாவனையை மூடிப் பேதங்காட்டுவ தஞ்ஞானங்
குரவன் வாக்கிய நம்பாமற்குழம்புவதாஞ் சந்தேகந்
திரமறு சகமெய்யென்றுந் தேகநானென்று முள்ளே
விரவிய மோகந்தானே விபரீதமென்பர் மேலோர் (சுக)

தத்துவ வனுபோகந் தான்சாதித்தல் கேட்டலென்பா
ரொத்துள பொருளுகத்தா லுசாவல் சிந்தித்தலென்பார்
சித்த மேகாந்தமான தெரிசனந் தெளிதலென்பார்
நித்த மிப்படிசெய்தக்கா னிருவாணம் பெறுவாய்நீயே. (சுஉ)

கூறிய வசம்பாவனுதிகளி னிலக்கணமு மவற்றிற்கு விரோதியான சிரவணுதிகளி னிலக்கணமுங் கூறி யிச்சிரவணுதிகளின் பயனுக்குப் பயனுமுடித் திவ்விரண்டு கவியானுங் கூறுகின்றர், இவற்றி லஞ்ஞானுதி களுக் கிலக்கணங் கூறியன போன்று சிரவணுதிகளுக்கு மிலக்கணங் கூறினரோயன்றி யித்தா லிது கேடுமேன் றீண்டுக் கூறிற்றிலரோ யெனி னது முன்னரே கூறியிருத்தலி னீண்டிலக்கண மாத்திரங் கூறினு ரென்க:—

இவற்றின் பொருள்: பிரமபாவனையை மூடி பேதங்காட்டுவது அஞ் ஞானம் என்பது, முன்னத்தியாரோப வபவாதங்களாற் செகத் மித்தை யென்றும் பிரமமே யுள்ளதென்றுங் கூறிய வப் பிரமபாவனையை மறைத்து

முன்போலப் பேதமாகிய ஜெகத்தைக் காட்டுவ தஞ்ஞானத்திற்குச் சொரூபமாகும்; இதைக் கெடுப்பது, **தத்துவ அநுபோகந்தான் சாதித்தல் கேட்டலென்பார்**= அப்பிரமானுபவ மவ்வஞ்ஞானத்தான் மறைபடாது சடுவிதலிங்க தாற்பரியத்தோ டாசிரியரிடத் தடிக்கடி வேதாந்த சிரவணத்தால் விளக்கிக் கொள்வதாயதே சிரவணமென்பர், என்னை? **சிரவணமென்கை**=கேட்கை; அது சுரோத்திரேந்திரியத்திற்குஞ் சத்தத்திற்குமுண்டாயதோர் சம்பந்தத்தா லுண்டாவதாய ஞான மிதுவே யவ்வஞ்ஞானத்தைப் போக்கத்தக்கதா லென்க. **குரவன் வாக்கியம் நம்பாமல் குழம்புவதாம் சந்தேகம்.** என்பது, ஆசிரியர் கூறும் வேதாந்தவிசாரத்திலையப்பாடுடையவனுய்த் தெளிவு பிறவாததே சந்தேகத்திற் கிலக்கணமாம்; என்னை? இவ்வேதவாக்கிய மத்துவிதப்பிரமத்தைக் கூறுகின்றனவோ வன்றிச் சீவேஸ்வர பேதத்தைக் கூறுகின்றனவோ வென வருதலினென்க. இதைக்கெடுப்பது **மனனம்.** அஃதாவது, **ஒத்துள பொருளூகத்தால் உசாவல்சிந்தித்தல் என்பார்** என்பது; அவர் கூறுஞ் சீவப்பிரமங்களிடத்திற் சேதனத்துவ வேதத்துவ வர்த்தத்தை யுத்தி தருக்கவனுமான முதலிய வூகத்தைக் கொண்டு ஆராய்ச்சி செய்தல் மனனமென்பா ரென்றதை யென்க. என்னை? அச்சீவேஸ்வர பேதத்தைப் போக்கற் கிவை கருவியாகலி னென்க. **திரமுறுசகம் மெய்யென்றும் தேகம் நானென்றும் உள்ளே விரவிய மோகம் தானே விபரீதம் என்பர் மேலோர்.** இதற்குப் பகை, சித்தம் ஏகாந்தமான தரிசனம் தெளிதல் என்பார், யாதினு லெனின்? உள்ளே கலந்த மோகத்தை யுள்ளேயே தெளிவிக்கவேண்டலி னென்க ‘**இனி, நித்த மிப்படிசெய்தக்கால் நிருவாணம் பெறுவாய் நீயே**’ என்றது, அவ்வாசனைகள் தோன்றுந்தோறு மவ்வாறு நீக்கி னீயே மோட்சமடைவாய். எ—று. **ஏகார** மிரண்டுந் தேற்றம்.

**பிராசீனமதம்** சந்தேகம் விபரீத மிரண்டே தடையென்னும்; **நவீனமதம்** பற்றித் தடை மூன்றென்று ரென்க. இவற்றின் விரிவை மறுபடலத்தில் காண்க. **உரையிற் கோடலா** லிவ்வா றுரைக்கப்பட்டது.

(அ௫) (அ௯)

எத்தனைநாண் ஞாதரவுஞானமு மிருக்கு முன்பா
லத்தனைநாளும் வேண்டுமப்பா லோர்செயலும் வேண்டா
நித்தமும் வெளிபோற்பற்று ஞேயமாத்திரமாய்ச் சீவன்
முத்தரானவர் விதேகமுத்தி பெற்றிருப்ப ரென்றும். (௯௰)

"நித்தமிப்படி செய்தக்கா னிருவாணம் பெறுவாய் நீயே" என்று கூறினமையால் மரணபரியந்த மிவற்றைச் செய்க வென்று விதித்தமை யாகின்றதே யங்ஙனமாயின் கருமிகளுக் கொப்பன்றிக் கிருதகிருத்திய மியாங்ஙன முண்டாமென்று மாசங்கைக்கு அவ்வாறு செய்தற்குக் காலவளவையுங் கூறி முடித்து, மே லித்தன்மையான சீவன் முத்தர் விதேக முத்தியை யடையும் வகையும் கூறுபவ ரிதி லத னையுந் தோற்றுவாய் செய்கின்றார்:—

இவ்வினுவிடை யிடைப்பிறவரலு மாம். இதுவு மோ ரையமகற்ற லென்க.

(இ—ள்.) உன்பால் ஞாதாவும் = உன்னிடத்து கர்த்தத்துவப்புத்தியும்; ஞானமும் = விடயாகாரமான ஞானமும்; எத்தனை நாள் உன்பால் இருக்கும் = எத்தனை கால முன்னறிவிற் றங்கி யகலாதிருக்குமோ; அத்தனை நாளும் வேண்டும் அப்பால் ஓர் செயலும் வேண்டா, யாதினு லெனின்? இவை தோற்றுங்காறுமே யவ்வஞ்ஞானுதிகள் தோன்றலா லென்க. இனி, ஞாதா ஞான நீங்குங் காலமே யச்சிரவணுதிகட் கவதிக்கால மென்க. நித்தமும் வெளிபோல் பற்று ஞேயமாத்திர மென்றது, மற்றப் பூதங்களிற் கலவாத வாகாயம்போல விவ்வாகாயாதி பிரபஞ்சங்களிற் றாக் காத விடய சொரூபன். ஈண்டு விடயம் = அபாதீத சுருதிக்கு விடயம். ஏனைய வெளி. உன்பால் என்பதை ஞாதாவுக்குங் கூட்டுக. (அஎ)

ஞானமார் சீவன்முத்தர் நால்வகையாவர் கேளாய்
வானிகர் பிரமவித்து வரன்வரியான் வரிட்ட
னுனவர் நாமமீதா மவர்களிற் பிரமவித்தின்
ஞானமு மற்றைமூவர் தாரதம்மியமுஞ் சொல்வேன். (கூகூ)

'சீவன்முத்தானவர்' என்று முன் பன்மைப்படக் கூறினு ராகலி னவ ரெத்துணைய ரவர்கள் வேறுபாடியாவை யிவற்றிற்குக் காரண மியாது எனவும், "விதேகமுத்தி பெற்றிருப்ப" ரென்றீ ரிவர்களுக்கு விதேகமுத்தி யெதனு லுண்டாகு மதனிலக்கண மியாது என்பனவாக வுண்டாகு மாசங்கைக்குச் சமாதானம் பதின்மூன்று கவிகளாற் கூறத் தொடங்கி யிதி லச்சீவன்முத்தர்களின் றொகையும் பெயருங் கூறி யில க்கணத்திற்குந் தோற்றுவாய் செய்கின்றார்:—

(இ—ள்.) ஞானமார் சீவன்முத்தர், ஞானமன்றியுஞ் சீவன்முத்தராத லிலராயினு மிவ்வடை யேனைய மதத்தர் கூறு ஞானநிலைமை போலாது இவ்வத்துவிதஞானமே ஞானமென்னுஞ் சொற் கியற்பொரு ளாகலின்

முன் கூறிய வபரோக்ஷஞானமே ஞானமென்று சுட்டிவரினும் பிறிதோ டியைபு நீக்கிய விசேடணமுமா மென்க. நால்வகையாவர் என்றது அவ ரித்துணையாராவரெனத் தொகை கூறியவாறு. பிரமவித்து, பிரமவ ரன், பிரமவரியான், பிரமவரிட்டன் ஆனவர், நாமம் ஆகும் = கூறிய நால்வரின் பெயராக வமையும். பிரமமென்றது ஏனைய மூவருக்கு மமை யும். அப்பிரமபதமன்றி வரன் முதலிய நிலைமை வாராமையி னென்க. வானிக ரென்றற்குப் பொருள் மேற்கூறப்படும். அவர்களில் = கூறிய நால்வரிலும்; பிரமவித்தின் தானமும் = இவனிலைமையும்; மற்றை மூவர் தாரதம்மியமும் = இவனொழிந்த பிரமவரன் முதலாய மூவரின் நிலைமைத் தாரதம்மியமும்; சொல்வேன் கேளாய். எ-று.

தான மூவருக்குங் கூட்டி தானத்தின் றாதம்மியமெனப் பொருள் கொள்க. நீ தோன்றுவெழுவாய். யானென்பது மரு. (அஅ)

தீரராய்ப் பிரமவித்தாய்த் தெளிந்தவர் தெளியுமுன்னம்
வாரமா யிருந்ததங்கள் வருணமாச்சிரமஞ் சொன்ன
பாரகாரிய மானுலும் பலர்க்குபகார மாக
நேரதாய்ச் செய்வார் தீர்ந்தநிலைவிடாச் சீவன்முத்தர். (கூ)

இதுமுத னின்த கவியானும் பிரமவித்தினது நிலை மையையுஞ் செய லையுங் கூறுதலா லொரு தொடராய் நீரீஇ யிதி லுடம்போடு புணர்த்தி யவர் நிலைமையும் வருணச்சிரமந் தவிரா தொழுகற் கேதுவாய செயலை யுங் கூறுகின்றார்:—

(இ—ள்.) தீரர் ஆய் = உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காத்தலாய வலியினராய்; பிரமவித்தாய் = இவ்வலியால் வரனென்னும் வைப்புக்கோர் பிரமவித்தாய்; தெளிந்தவர் = யானென்னதென்னுஞ் செக த்பிராந்தியினின்றுந் தெளிந் திண்மை யுணர்ந்தவராய் விவர்; தெளியும் முன்னம் = இப்பிராந்தி நிவர்த்தியாதற்கு முன்னரே (அஞ்ஞானத்தையி லென்றபடி); வாரமாயிருந்த = தேகேந்திரிய வியாபாசர்களைத் தானென் றிருத்தலி னவற்றிற் குரிமையா யிருந்த; தங்கள் வருணம் ஆச்சிரமம் = பிராமணதி வருணமென்ன பிரமசாரியாதிய வாச்சிரம மென்ன; சொன்ன காரியம் பாரகாரியம் ஆனாலும் = நீ யின்ன வருணத்த னதிலு மின்ன வாச்சிரமி யாதலி னினைக்கிக்காரியஞ் செய்தற்பாலது, இன்னகாரியந் தவிர் தற்பால தென்று விதிநிடேதங்களைக் கூறிய சுருதிசித்தமான செய் வித்த சைக்கு முடியாத காரியமே யாயினும்; பலர்க்கும் உபகாரமாக = பல ராவார், தான் முன் னின்ற நிலைக்களத்தாராய கருமியு முபாசகரு மென்க. இனி விகாரத்தாற் றெருக்க வெச்சவும்மையான் முழுட்கவைக் கொள்ளினு

யிழுக்காது. என்னை? யாகாதி யெக்கியங்களிலும் வருந்துதலுடையன சிரவணாதிக ளென்க. உபகாரமாதல் = கருமிக்கு நித்தியநைமித்தியத்தாற் சொர்க்கப்பேறும், உபாசகர்களுக் குபாசனையால் பிரமலோகாதி பதப்பேறும், முமூட்சுவுக்கு அபரோக்ஷஞானப்பேறு மாமென்க. நேரதாய்ச் செய்வார் என்றது, பிணி, வறுமை, சோம்பு, சிரத்தையின்மை, நூலாராய்ச்சிக் குறைவு முதலியவற்றாற் செயல் குறைவுபடாமலும், மந்திரலோபங், கிரியாலோப, தனலோப முதலியவை குறைவுபடாமலுஞ் செய்த லென்க. தீர்ந்த நிலைவிடாச் சீவன்முத்தர் = கூறிய வஞ்ஞானாதிக ணீங்கித் தன்னிலையை விடாத சீவன்முத்த ரென்றவாறு.

தீரராய் பிரமவித்தாய் தெளிந்தவராகிய தீர்ந்தநிலை விடாச் சீவன் முத்தர் நேரதாய் செய்வாரென முடிக்க. தீரராதியவே யவர்க் கிலக்கணம். பலர்க்குபகாரமாகச் செய்தல் ஏது. அச்செயலு முன் னஞ்ஞான தசையிற்போலவே யபிமானம்பற்றிச் செய்தலே செயலென்க. இனிப், பலர்க் குபகாரமாகச் செய்வரென்றமையாற் றமக்குப் பயனின்றாகின்றதே யங்ஙனந் தனக்குப் பயனின்றென்று கருதி னவ்வருணாச்சிரமங் கூறுஞ் சுருதியை யவமதித்த தாகாதோ வெனின்? இவ்வினாவிற்கு விடையாகவே, 'தெளியு முன்னஞ் சொன்ன காரிய' மென்றார். ஆகலி னஞ்ஞான தசையிற் பற்றியதை ஞானதசையிற் கைவிடலா மென்றற்கு விடை, மேற் சந்தேகந்தெளிதற் படலத்திற் கூறுமிடத்திற் காண்க வென்க. (அக)

காமமாதிகள் வந்தாலுங் கணத்திற்போ மனத்திற்பற்றார்
தாமரையிலைத் தண்ணீர்போற் சகத்தொடுங் கூடிவாழ்வார்
பாமரரெனக் காண்பிப்பார் பண்டிதத் திறமைகாட்டா
ரூமருமாவா ருள்ளத் துவகையாஞ் சீவன்முத்தர். (கூகூ)

அவ்வாறு திரிகரணங்களாலும் பகிர்முகராய்த் தொழில்களை யாற்றும்போது வருணாச்சிரமங்களி லபிமானரூபமான விச்சையு மவ்விச்சையின் றொழில் முடிவு பெறது முட்டுப்படி னுத்தடை செய்யும் போது னிடத்து வேதளியு முண்டாமேயெனின்? அவற்ற லவர் விகாரப்படாது மவற்றைத் தன்னு ளடக்கி நிற்ப ரென்னும் விடையு மிதிற் கூறுகின்றார்:—

(இ—ள்.) காமமாதிகள் வந்தாலுங் கணத்தில் போம் மனத்தில் பற்றார் என்பது, வருணாச்சிரமஞ் சொன்ன காரியம் பாரகாரிய மாகலி னவற்றை யாற்றும்போது யானெனதென்னு மபிமான முண்டாகலி னது காரணமாக மனத்திற் காமமுதலியவை யுண்டாமே யெனவரின், அஞ்ஞானிக்குப் போ லங்ஙனம் வந்தாலு மக்கணத்தன்றி மறுகணத்தி னில்லாம

னீங்கிவிடு மாகலின் மூடனைப்போ லெப்போது மவற்றைத் தரித்திரார்; யாதினு லெனின்? அக்காமாதிகள் பாவப்பயனுகலி னிவரிடத்துப் பாவமிக் கின்மையின், தோன்றிய மறுகணத்தி லழிந்துவிடுதலி னென்க. இஃதழி யவே நிற்பது சத்துவசேட மாகலின், **தாமரையிலை தண்ணீர் போல் சகத்தோடுங் கூடி வாழ்வார்** = அச்சத்துவ சேடத்தோடு மூலகவிவகார நடத்தலி னிவ்வுலகு மித்தையென்னும் திடத்தாற் றன்மனதி லக்காரியப் பலன் பற்றுமையால், தாமரையிலையி னீர் நிற்பினு மவ்விலையை நனைக்காத வாறுபோல விம்மன மக்காமாதியாகார மாகாது வேறுபட்டே நின்று விச் சகத்தொழில் செய்துவருவர்; **வாழ்தலாவது** மனைமக்களோடு கலந்துண் ணலாதிய தொழில் செய்து காலம் போக்கல்; **பாமரர் எனக் காண்பிப் பார்** = ஞானியாயின் ஒரு பொருளிலும் பற்றின்றி கல்லுகள் மரங்கள் போற் பிறவிருத்தி யற்றிருத்தல் வேண்டுமென்னும் பாமரருக் கங்ஙனமின் றிக் கூறிய வாழ்க்கையுட னிருத்தலி னப்பாமரரேபோற் றன்னைக் காட் டிக்கொண்டிருப்பர்; **பண்டிதத்திறமை காட்டார்** = இங்ஙன மிருந்துவ ருதலிற் றன்னுடைய பிரமஞானவுணர்ச்சியை யப்பாமரருக்குங் கருமிக் குங் காட்டா தொழிவர்; **ஊமரும் ஆவார்** = இங்ஙனங் காட்டாமையின், ‘**இங்கொரு செயலு மாசை யில்லேன்**’ என்றபடி மனுமௌனத்தை யடைந்திருப்பர்; **உள்ளத்து உவகையாம் சீவன்முத்தர்** = முமூட்சுப்பரு வத்துள்ள தாபநீங்கி யிம்மௌனத்தாற் சித்தித்த வகத்திற் பேரானந்த வுவகையை யுடைய கூறிய சீவன்முத்த ரென்றவாறு.

‘**பாமரர்**’ என்றற்குக்கருமி யுபாசகர்களைக் கூறுவர் **தத்துவார்த்ததீபக் கார** ரிவர் பாமரசொற்குப் பொரு ளுணராதா ராகலி னென்க. இனி, **ஊம**ரென்று கூறுஞ் சொற்கு மீண்டு மனமே பொருளா மென்க. விரிக் கிற் பெருகுமென்க. இக்கருத்தை வாசிட்ட முதலியவற்றைக் கூர்ந்து நோக்கிக் காண்க. (கயி)

> **பேதகன் மத்தால்வந்த பிராரத்த நானுவாகு**
> **மாதலால் விவகாரங்க ளவரவர்க் கானவாறு**
> **மாதவஞ் செயினுஞ்செய்வர் வாணிபஞ் செயினுஞ்செய்வர்**
> **பூதலம் புரப்பரையம் புகுந்துண்பர் சீவன்முத்தர்.** (கஎ)

இவ்வாறன சீவன்முத்தர் சருவத்தியாகிய ராயினமையி னெல்லா மொழிந்தன்றே நிற்றல் வேண்டு மங்ஙனமின்றி யொருவகைச் செய லினராகாது பலவாகக் காணப்பட லென்னையென்னு மாசங்கைக்குச் சமாதானமு மிதிற் கூறுகின்றார்:—

இவ்வினுவிடை யிடைப்பிறவரல்.

(இ—ள்)பேத கன்மத்தால் வந்த பிராரத்தம் நாஞவாதும்= காரணங் கெட்டுக் காரிய மில்லாத வாறு போல, சஞ்சிதங் கெட்டோர்க்கு மேற் பிரபஞ்சானுபவ மெப்படி யுண்டாகு முண்டாயினு மொருபடித்தன்றி பலவாருகக் காணப்படுவானே னெனவரின், சஞ்சிதங் கெட்டதென்ப துண்மையே யச்சஞ்சிதம் போல மேற் பிறப்பிற் கேது வாகாது இப்போ தனுபவித்தற் குரியதாய் மோண்டுகொண்டவினை பலபட, முகந்து கொண்ட வினையால் வந்த முன்வினையநுபவ மொருபடித்தல்ல; ஆதலால் = அவ்வினை பலபட நிற்றலால்; விவகாரங்கள் அவர் அவர்க்கு ஆன வாறு=தொழிலு மவ்வினை யுடையார்க் கவ்வினை யெவ்வாறே வவ்வாறே; மாதவம் செயினும் செய்வர் = வருணச்சிரமஞ் சொன்னபடி நான்கு வருணத்தவருந் துறவறாயிருந்து செயற்கரிய தவத்தைச் செய்தாலுஞ் செய்து பிராரத்தத்தை யொழிப்பர்; வாணிபம் செயினும் செய்வர்= அங்ஙனமன்றி யில்வாழ்க்கையரா யந்தணரொழிந்தோர் கொண்டு விற்றலைச் செய்து காலம் போக்கினும் போக்குவர்; பூதலம் புரப்பர் = அவ் வினைவயத்தால் வணிகரொழிந்தோ ருலகை யாண்டேழைக் கழிப்பினுங் கழிப்பர்; ஐயம் புகுந்து உண்பர்=தம் வினைவயத்தா லரச ரிறுதியானோ ரொழிந்த வந்தணர் பைக்கிய மேற்று விதியைத் தொலைப்பினுந் தொலைப் பர்; சீவன்முத்தர் = இவரது தொழி லிங்ஙன மாயினு மகத்திற் சீவன் முத்தரே யென்றவாறு.

வாணிப முதலிய தொழில்களுக்கு மவை யறுதியாய் துறவிற்கும் வருணச்சிரமங்களை யமைத்துக் கூறியது, முன் "வருணமாச்சிரமஞ் சொன்ன பாராசரிய மாஞலும் பலர்க் குபகாரமாக நேரதாகச்செய்வ" ரென்றமையா லென்க. இங்ஙனமின்றி முறைபிறழ்ந்து கூறின் நேரதாய்ச் செய்த லமையா தென்க. முன் மாதவ மென்றமையாற் றுறவு மதற் குரிய பிச்சையு மாண்டடங்கவி னீண்டையம்புக வென்றற்கு அந்த ணர்க்குரிய தொழில் கூறிஞமென்க. இனி, விடயபோகசுய முடையோர் மாதவஞ் செய்வர், அவ்வனுபவ முடையோர் வாணிபாதிகள் செய்வ ரென்க. இவற்றின் விரிவை சந்தேகந்தெளிதலிற் காண்க. (கூக)

சென்றதுகருதார் நாளைச்சேர்வது நினையார் கண்முன்
னின்றதுபொசிப்பார் வெயில்நிலவாய் விண்விழுது வீழ்ந்தும்
பொன்றினசவம் வாழ்ந்தாலும் புதுமையா யொன்றும்பாரார்
நன்றுதீதென்னுர் சாட்சி நடுவான சீவன்முத்தர். (கூஅ)

இவ்வநுபவ மஞ்ஞானிக்கு மொத்ததன்றே வங்ஙனமாக விவன் பேத்த னிவன் முத்த னென்ற வேறுபாடறித லியாங்ஙனமோ வென வரி னதற்கு விடை யிவ்வாறென் றிதிற் கூறுகின்றார்:—

(இ-ள்) இவ்வாறு விதிவழி யொழுக லறிவிலார்க்கு மொத்ததன்றோ வெனின்? அன்று, என்னை? சென்றது கருதார் சாட்சி நடுவான சீவன் முத்தர், யாதினுலெனின்? அங்ஙனங் கழிதல் புதுமை யன்று பொய்யாகலி னென்க. அரிதும் பெரிது மிதிலின்றென்க. இதனுல், நாளைச் சேர்வதும் நினையார், பின்னையோ, கண்முன் நின்றது போசிப்பார், யாதினு லெனின்? பசி, தாகம், குளிர், வெப்ப முதலிய வுபாதி நீக்கற்பொருட்டென்க. இங்ஙனமாகலின், வெயில் நிலவு ஆய், விண் விழுது ஆய் வீழ்ந்தும், போன்றின சவம் வாழ்ந்தாலும் புதுமையாய் ஒன்றும் பாரார், இவற்றில், நன்றும் தீதும் என்னூர் = என்றுஞ் சொல்லா ரிவை மாயாகாரிய மாகலினென்க.

எண்ணும்மைக ளெஞ்சிநின்றன. இந்நோக்குடையோர் 'சாட்சி நடுவான சீவன்முத்த' ரென்றமையா லஞ்ஞானி யிந்நோக்குடையனல்ல னெனல் பெறப்படு மென்க. இதுவே யிவர்க்கு வேறுபாடென்க. 'சாட்சி நடுவான சீவன்முத்த' ரென்றதற்கேற்ப முன்னும் 'வானிகர் பிரமவித்' தென்றூர். இவற்றி லொன்றும் புதுமையாய்ப் பாராதிருத்தற் குதாரணம்:—ஆளுடையவரசு தனித்திருவிருத்தம்: "வானந் துளங்கிலென் மண் கம்பமாகிலென் மால்வரையுந், தானுந் துளங்கித் தலைதடுமாறி லென் றண் கடலும், மீனம் படிலென் விரிசுடர்வீழிலென் வேலை நஞ்சுண், டூனமொன்றிலா வொருவனுக்காட்பட்ட வுத்தமற்கே." (கூஉ)

பின்னைமூவரி லிரண்டுபேர்களுஞ் சமாதி யோகந்
தன்னையுற்றிருப்பர் தேகசஞ்சார நிமித்தந் தானு
முன்னுவோன்வரன் வேற்றோரா லுணர்பவன் வரியானுரு
மன்னியர் தம்மாற் றன்னு லறியாதோன் வரிட்டனுமே. (கூக)

முன், "பிரமவித்தின் றனமும் மற்றைமூவர்தாரதம்மியமுஞ் சொல்வேன்" என்றவற்று ளிதுகாறு மப்பிரமவித்தி னிலைமை கூறி முடித்ததி லேனைய மூவரி னிலை கூறுகின்றார்:—

முன்னர் 'மாதவஞ் சேயினுஞ் செய்வ' ரென்றதா லிவர்நிலைமை யடங்க வீண்டுக் கூறல் புனருத்தமன்றோ வெனின்? பிராரத்த வயத்தால் சமாதியிருப்பரென் றீண்டுக் கூறினதன்றி யச்சமாதி நிலையின் றாரதம்மிய மாண்டுப் பெறுமையி னின்றென்க.

(இ-ள்) பின்னை மூவரில் = கூறிய பிரமவித்தொழிந்த வரன் வரியான் வரிட்ட னென்றவருள்; இரண்டு பேர்களும் = முன்னின்ற பிரம வரனும் பிரமவரியானும்; சமாதியோகம் தன்னை உற்றிருப்பர் = சமாதிக் குரிய வியம நியமாதிகளைச் செய்துகொண்டிருப்பர்; இவ ரிவ்வா றிருப்பின் றேகதாரணை யெவ்வா றெனவரின்? தேகம் சஞ்சாரநிமித்தம் தானுயி உன்னுவோன் வரன் ஆகும் = இவ்விருவருள்ளுந் தன்னுடலம் பிராரத்த நசிக்குமளவு நடைபெற்றிருப்பதற்காக பசிமுதலானவை தோன்றும்பொ ழுது அவற்றை யொழிக்கும்பொருட்டு அவற்றிற்குச் சாதனங்களைத் தானு கவே யாராய்பவன் வரனென்னும் பெயருடையவனாகும்; வேற்றோரால் உணர்பவன் வரியான் ஆகும் = அத்தன்மையாக வப்பசி முதலியவற்றை யவன்போற் றன்னாலன்றி யன்புடைப்பிறனு லொழித்துக் கொள்வோன் வரியானென்னும் பெயருடைய மற்றொருவனாகும்; அன்னியர்தம்மால் தன்னால் அறியாதோன் வரிட்டன் ஆகும் = கூறிய விருவகையாலுந் தன் னுடலைப் பேணுதோன் வரிட்டனென்னும் பெயருடைய வேறொருவனாகு மென்றவாறு.

என்னை யிவ்வாறுத லெனின்? அச்சீவன்முத்தனுய பிரமவித்திற்குப் பிராரத்தபோக மிக்கிருத்தலி னவ னவ்வாறுதலு மிவருள்ளு மப்போக மொருவரினின் றொருவர்க்குக் குறைவுபட்டு நிற்றலி னிவ்வாறுய தென்க. இவ்வாறுக்லி னித்தன்மைகளாய்ச் சமாதியோக மடைந்திருத்தலுஞ் சீவன் முத்தனுய் விவகாரஞ் செய்திருத்தலும் பிராரத்தவசமன்றி ஞானத்தின் றன்மை யன்றென்க. இக்கருத்து வருஞ்செய்யுளாலும் விளங்குமென்க. இனி, இரண்டு பேர்களுஞ் சமாதி யோகந்தன்னை யுற்றிருப்ப ரென்றமை யான் மற்றொரு வரிட்டன் கரணச்சேட்டை சற்றுமின்றித் தனக்கென வொருசெயலுஞ் செய்யாமையா லிச்சமாதியோகங்களி லொன்றுஞ் செய் தற் கியலாமையி னிவனை யொழித்தா ரென்க. ஒழிப்பினு 'மன்னியர் தம் மாற் றன்னா லறியாதோ' னென்றமையா லவையனைத்து முடிந்து நின்ற துரியாதீதப்பதத்தி னிற்பனெனக் கொள்க. ஏகாரமீற்றசை. எண்ணும் மைக ளெஞ்சின. (கக)

அரிதாகு மிவர்களிவ்வா றனேகராறு முத்தி
சரியாகும் பாடுபட்ட சமாதிக்குப்பல னேதென்றாற்
பெரிதான வதிர்ஷ்டதுக்கம் பிரமவித் தனுபவிப்பன்
வரியானும் வரனுமற்றை வரிட்டனுஞ் சுகமாய்வாழ்வர். (ஙா)

இந்நால்வருஞ் சீவன்முத்தர்களாயின் பொறிகரணங்களாற் போக நுகர்வோனு மற்றவற்றையடக்கி யோகம்புரிவோனு மெங்ஙன மொத் திருப்ப ரெனவரினதற்கு விடை யிதிற் கூறுகின்றார்:—

அதிர்ஷ்டதுக்கம் உம்மைத்தொகை. அதிர்ஷ்டம், அதன் பயனை சுகத்திற்காகவி ஞதுபெயர். சுகபோகநுகர்ப்வனே யதிர்ஷ்ட முடையானென்னு மூலகியனேக்கிக் கூறினுரெனக.

(இ—ள்) அரிதாதும் இவர்கள் = தெய்வகதியாலன்றிச் சீவமுயற்சியாற் பெறற்கரியவாயுள்ள நிலைமையையுடைய கூறிய சீவன்முத்தர்கள்; இவ்வாறு அநேகர் ஆனுலும் = பிராரத்த போகானுபவத்திற் ருரதம்மியராய்ப் பலராஞலும்; முத்திசரியாதும் = சீவன்முத்தி விதேகமுத்தி யுனேவருக்கு மொப்ப முடிந்ததேயாகும்; இங்ஙனமாயின், பாடுபட்ட சமாதிக்குப் பலனேதென்றால், 'பேரிதான் வதிர்ஷ்டதுக்கம் பிரமவித்தநுபவிப்பன் வரியாறும் வரனு மற்றை வரிட்டனுஞ் சுகமாய் வாழ்வர்.' இச்சுகாநுபவமே பாடுபட்ட சமாதிக்குப் பலனென்றவாறு. இதுவே சீவன் முத்திச்சுகம். இஃதின்மையாற் பிரமவித்துக்கு விடயங்களி லொத்துண்ணலாகிய அதிர்ஷ்டமுந் துக்கமு முண்டாயின வெனக.

இனிப் 'பிறவா முடிவான பிறப்பிலே மெஞ்ஞான மெளிதிலுண்டா' மெனவும், "காரண மிறந்தொன் றிற்குங் காட்சியிற் படாத்தொன்றைச்,சேர்பவர்வருத்தம்வேறு செப்பிட லாவதொன்ரே,ஓர்வரி திதுதான் வாழு முயிர்களாலாவ தென்னே,ஆரவர் பெருமைதன்னே யளவறுப்பவர்க ளேயா." எனவும், வருஞ் சுருதிஸ்மிருதிகளா லிவரும் 'அரிதாது' மென்றார். சீவமுயற்சியாற் கூடாதென்பதற்கு உதாரணம், "அவனருளாலே யவன்றாள் வணங்கி" யென்பது. (கசு)

பிரமஞானிகளுங் கன்மப் பேதையர்போல வாழ்க்தாற்
றிரமுறுமஞ்ஞானம் போய்ச் செனியாதவழி யேதென்னிற்
பரவுமாகாய மொன்றிற் பற்ருது மற்றைநான்கும்
விரவினதோடீக் கூடும் விதமிருவோரு மாவார். (ரு௭)

எத்தனே நாண் ஞாதாவு ஞானமு மிருக்கு முன்புர லத்தனே நாளும் வேண்டு மப்பா லோர் செயலும் வேண்டா வென்று கூறியதிற், றிரிபுடிக்காட்சி யுள்ளவ ஞன்மாநுபவி யல்லனென்று, மப்பிரதி பந்தாபரோக்ஷஞான முடையாநுக்குத் திரிகரணங்களாலும் யாதொரு செயலும் வேண்டாவென்றுங் கூறினீ ரங்ஙனமாக விங்ஙனம் வருணச்சிரமங்களுக்குரிய கருமங்களைச் செய்துஞ் சித்தநிரோதக சாதகமான, இயமாதிகளைச் செய்துந் திரிகரணங்களாலுந் தொழில் வேண்டிநிற்பி னிவர்களுக்குச் சித்தவிசிராந்தி யடைந்த தான கிருதகிருத்திய முதலியவை யெங்ஙன் முண்டாமென்னு மாசங்கைக்குச் சமாதான மிதிற் கூறுகின்றார்;—

இவ்வினவிடை 'சென்றதுகருதா' றென்ற செய்யுளில் முடிந்திருக்க வீண்டுக்கூறியது கூறியதுகூறலன்றோ வெனின்? ஆண்டு சீவன் முத்தன் செயல்செய்யு மாற்றைக் கூறினதன்றி யவர் சொரூபநிலைமை கூறாமையி னன்றென்க.

(இ—ள்.) **பிரமஞானிகளும் கன்ம பேதையர் போல வாழ்ந்தால்** = பிராந்திரகிதரான சீவன்முத்தர்களு மப்பிராந்தியை யுடைய கருமிகளாகிய வறிவிலிபோல வாழ்நாளை நடாத்திவந்தால்; **திரமுறும் அஞ்ஞானம் போய்**=அநாதியாயுள்ள வாவரண நீங்கி; **சேனியாதவழி ஏதென்னில்**= செய்தகன்மஞ் செய்தாரைத் தொடர்ந்து பிறவிக்குக் கொண்டுவரலி னிவர் பிறவிக்கு வாராதிருக்கு நிலைமை யாங்ஙனமென விஞவுதியேல்; **பாவும் ஆகாயம் ஒன்றில் பற்றது** = தானிரம்மியமாகலின் வியாபகமான வாகாய மேனைய பூதங்களோடுங் கலத்தலைச் செய்யாததுபோல வான்மாவுங் கரணாதிகளோடுங் கலவாமையா லவற்றின் றொழிலுந் தன்னிடத்துப் பற்றுதலின்றி முத்தனேயே யிருக்கும்; **மற்றை நாலும் விரவினது ஒடும் கூடும்**= வாயுவு முதலிய வேனைய நான்கு பூதங்களுந் தம்முடன் கலந்தவையோடுந் தாமுங் கலக்கும்; இவ்வாறே கன்மப்பேதையர் காணங்களோடுந் தான் கலத்தலிற் றன்னி லக்காணத்தொழிற் பயன் கலந்து பிறவியைத் தாரா நிற்கும்; **விதம் இருவோரும் ஆவார்**=இத்தன்மைகளா லிவ்விருவருக்கும் வேறுபா டுண்டென்றவாறு. (கஞ)

சீவன்முத்தரைச் சேவித்தோர் சிவனய னெடுமாலான
மூவருமகிழ நோன்பு முழுவதுஞ்செய்து சன்மப்
பாவனமானரென்று பழமறை முழங்கு மிப்பான்
மேவருஞ் சீவன்முத்தர் விதேகமுத்தியு நீகேளாய். (ாஉ)

சீவன்முத்தரது சிறப்புக்கூறுமுகத்தா லவரைச்சரணடைகவேன்று விதித்து, மே லச்சரணடைதற்குப் பயனுங் கூறி, விதேகமுத்திக்குத் தோற்றுவாயுஞ் செய்கின்றதிதில்:—

(இ—ள்.) **சீவன் முத்தரைச் சேவித்து ஜன்மப்பாவன மானர் என்று பழமறை முழங்கல்**, 'காரணமிறந் தொன்றிற்குங் காட்சியிற் படார்' வென்ற திருவாக்காலும் 'மனமெனும் பகையை வென்றோர் மலரடி முடிமேற் கொள்வாம்' என்பது முதலிய வாரிஷத்தாலு மறியப்படுமென்க. யாரினு லெனின்? **சிவன் அயன் நெடுமாலான மூவரும் மகிழ நோன்பு முழுவதும் செய்து முடிந்தவ ராவ** ராதலினென்க. இவர் மகிழவவர்க்காகச் செய்யு நோன்புகளை யவரவர் புராணங்களிலு மிதிகாசங்களிலுங் காண்க. இவரைச் சேவித்தவளவி லிவ்வாறுமோ வல்லது புனைந்துரையோ வெனின்? திருஷ்டபல மில்லாத வாக்கியங்களே புனைந்

துரையன்றி மூவரை யுபாசித்த லதிர்ஷ்டபல மொன்றேயாகு மிச்சீவன்முத்தரைச் சேவித்த லதிர்ஷ்டபலத்தோடு மஞ்ஞானத்தைப் போக்குந் திர்ஷ்டபலமு மிவரிடத் திருத்தலின் சன்மப்பாவன மாதலேயன்றி புனைந்துரையன்று. அன்றி யிவர்சேவை கிடைத்தலே யரிதென்பதற்கு முன்னு 'மரிதாகுமிவ' ரென்றுறுதி கூறினு ரென்க.

'ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து வேண்டும் பனுவற் றுணிவு' என்ற மறைமொழியு மிது. இன்னுஞ் சசிவர்ன்னபோதச் சரிதத்தாலு முணரப்படு மென்க. இன்னுஞ் சுருதி ஸ்மிருதி புராண மிதிகாசங்கள் கூறுவன முற்று மிவர் பெருமையே யென்க. இச்சீவன்முத்தருக்கு விதேகமுத்தி வரும்வழி மேற் கூறப்படு மென்க. (கக)

பஞ்சினை யூழித்தீப்போற் பலசன்ம விவிதவித்தாஞ்
சஞ்சித மெல்லாஞானத் தழல்சுட்டு வெண்ணீறுக்குங்
கிஞ்சிலா காமியந்தான் கிட்டாமல் விட்டுப்போகும்
விஞ்சின பிராரத்தத்தின் வினையனு பவித்துத்தீரும். (௱௩)

முன் 'சீவன்முத்தரானவர் விதேகமுத்தி பெற்றிருப்பர்.' என்றதனுள் சீவன்முத்தர் நால்வ ரென்றதனுந் றேகையும், பிரமவித்து முதலிய பேர்கூறலின் வகையு மவர் செயலு மருமையும் பெருமையு மிதுகாறுங் கூறி முடித்து நிறுத்தமுறையா லிவர்க்கு விதேகமுத்தி யுண்டாகுந் திறன் கூறுபவர் பிறவிக்குக் காரணமான கன்மங்களின் வேறுபாடு மவற்றின் பெயருந் தன்மையு மிவற்றிற்குப் பகையு மிவற்றலவை கெடும் வகையு மிதிற் கூறுகின்றார்:—

(இ—ள்.) பஞ்சினை ஊழி தீ போல் என்றது, எத்துணைப்பஞ்சேயாயினு மிவ்வுலகத்தியே சுட்டு நீறுக்கு மாயி னூழித்தீ யங்ஙனஞ் செய்யு மெனக் கூற லத்துவிதஞானத்தின் பெருமையு மஞ்ஞானத்தின் சிறுமையுந் தோன்றற் கென்க. சுட்டு வெண்ணீறுக்கலை யீண்டுங் கூட்டுக. இது போல, விவிதசன்ம வித்தாம் சஞ்சிதம் எல்லாம் = எழுவகைத் தோற்றத்திலு மளவிறந்ததாக வெடுக்கும் பிறவிகட்கு வித்தாயுள்ள கட்டுப்பட்ட வினை யனைத்தையும், ஞானத்தழல் சுட்டு வெண்ணீறாக்கும்; இஃதிங்ஙன மாகவே, ஆகாமியம் தான் கிஞ்சித் கிட்டாமல் விட்டுப் போகும் = அச்சஞ்சிதத்திற் சேர்வதாகிய விப்போதிட்டுவரும் வினையானவையொன்றேனுந் தன்னைத் தொடராமற் றன்னை விட்டகன்று நீங்கும்; யாதினுலெனின் ? இதற்கு விடை முற்கூறினது மன்றிக் கர்த்தத்துவபுத்தியாற் செய்யாமையா லென்க. விஞ்சின பிராரத்தத்தின் வினை யநுபவித்துத் தீரும். எ-று.

இவற்றிற்குக் காரண மேற் கூறுகின்றார். பிராரத்தாநுபவ முன்னுங் கூறப்பட்டது. தான் அசை. (கள)

பொறுமையாற் பிராரத்தத்தைப் புசிக்குநாட் செய்தகன்ம
மறுமையிற் றொடர்ந்திடாமல் மாண்டுபோம் வழியேதென்னிற்
சிறியவரி கழ்ந்துஞானி செய்தபாவத்தைக் கொள்வா
ரறிவுளோ ரறிந்துபூசித் தறமெலாம் பறித்துண்பாரே. (ாச)

"ஒருவரு மொரு பொழுதினு மோர் காலமு மிருவகை வினை செய்யாதவர்க ளில்லையால்" என்றமைத்தமையாற் சீவன்முத்தரும் பிராரத்தத்தை யநுபவிக்கும்போது செய்யு நல்வினை தீவினைகளின் பயனவரைச் சென்றடையாம லிங்குமா றெவ்வாறென்னு மாசங்கையை மேற்கொண்டு சமாதான மிதிற் கூறுகின்றார்:—

(இ—ள்.) பிராரத்தத்தைப் புசித்தல் பெரும்பாலும் பிரமவித்துக்காகலி னவர்க்குப் பஞ்சகுறு முதலிய பாதகமும் நித்திய நைமித்திகாதி சற்கருமங்களாற் புண்ணியமு முண்டென்றலின், "புசிக்குநாட் செய்த கன்ம மறுமையிற்றொடர்ந்திடாமல் மாண்டுபோம் வழியேதென்றார்."; இது நான்கு வருணத்தார்க்கு மொத்தலின் பொதுமையிற் கூறினாரென்க. ஏனையபொருள் வெளி. சிறியவரிகழ்ந்து ஞானி செய்த பாவத்தைக் கோடற்கும், அறிபவ ரறிந்து பூசித்தறமெலாம் பறித்துண்ணற்கு முதாரணம் வந்துழிக் காண்க. இனி, "விழிமிதமய மேதங்கள் செய்யினும், பழிமிகு பஞ்சபாதகஞ் செய்யினும், மொழிவுறும லொன்றேயென் றுணருவா, னழுவிரு ணந்தநன்மையுந் தீமையும்." எனவும், பாபப்பயன் றம்மினே கிட்டாமைக்குப் பதினாயிரஞ்சன்னியாசிகளைத் தலையை யுடைத்த விந்திரனையும், புண்ணியப்பய னவ்வாறே கிட்டாமைக்குப் பதினாயிரம் பசுக்களைத் தானங் கொடுத்த சனகராஜனையுங் காட்டாகக்காட்டினார். நிரையே கண்ணபிரானும், பாடியக்காரரு மங்ஙன மிவர்கூறுது வேறோராற்றாற் கூறியது, 'தன்மதநிறுத்தல்' என்னு முத்தி யென்க. (கூஅ)

அரிய பெஞ்ஞானத்தீயா லவித்தையா முடனீறுகும்
பெரிய தூலமுங்காலத்தாற் பிணமாகி விழுமங்கோர
முரிய சூக்குமசரீர முலையிரும்புண்ட நீர்போற்
றுரியமாய் விபுவாய்நின்ற சொரூபத்தி லிறந்துபோமே. (ாரு)

'விதேகமுத்தியு நீ கேளாய்' என்றதிற் றேகநீங்குவது மோர்முத்தியென்றதலி னத்தேக மேத்துணைய வென்று மவை யெவ்வாற்று னீங்குமென்னும் வந் மாசங்கைக்குத் தேக மித்துணையவென்று மவை யிவ்வாற்று னீங்கு மென்று மிதிற் கூறுகின்றார்:

'சஞ்சிதமெல்லா ஞானத்தழல் சுட்டு வெண்ணீறுக்குந், கிஞ்சிதா காமியந்தான் கிட்டாமன் விட்டுப்போகும், விஞ்சின பிராரத்தத்தின் வினை யநுபவித்துத்தீரு மென்றதனு லமையாதோ விக்கூற்று மிகையாம் பிறவெனின்? ஆண்டு வினை கூறினதன்றி யவ்வினை தங்கற்கிடனுய வுடலைக் கூருமையின் மிகை யன்றென்க.

(இ—ள்.) 'அரிய மெஞ்ஞானத்தீயா லவித்தையாம் உடல் நீறதும்' என்பது, பிரமாகாரவிருத்தியா லப்பிரமத்தை மறைத்திருந்த வவித்தையைக் கெடுத்தொழிக்கு மென்றவாறு. முன், 'சஞ்சிதமெல்லா ஞானத்தழல் சுட்டு வெண்ணீறுக்கு' மென்றதற்கு வேறாய தெவ்வாறெனின்? சஞ்சிதமென்றது கட்டுப்பட்டிருந்த வினையாதலின், மீவித்தை யென்றதவ்வினை தங்கற்கிடனுய இராசதகுண மவித்தை யென்றதாதலினும் வேறுபா டுண்டென்க. ஈண்டு ஞானமென்றது சுட்டின்பொருட்டு. அருமை யென்றது, இஞ்ஞானம் வருதல் தேவர்கட்கும் கிட்டாதென்பதை பிரமகீதையிலும், பகவத்கீதையிலு முணர்த்தியதை நோக்கி யென்க.

'பெரியதூலமும் காலத்தால் பிணம் ஆகிவிழும்' என்றது, பிராரத்தவினை தங்கற்கிடனுய தூலதேக மவ்வினையின் முடிவுகாலத்திற் சீவனுக்குப் போகங்களை யூட்ட கருவியாகாது சடமாய்க் கிடக்கு மென்றதை யென்றவாறு. சித்தியுடைய பிராரத்தாநுபவக்கருவி யாகாத தேகமாகலி னிங்ஙனங் கூறப்பட்டது. இப்பிராரத்ததேகமே பெரும்பாலு மாகலினென்க. ஆகலின் வசிட்டத்தும் பெரும்பாலு மிதனையே கூறினரென்க. சிறுபான்மை யுபாசனையாற் சித்தியுடைய பிராரத்தாநுபவ தேக விதேகத்தைக் குறித்துக் குமாரதேவரும் பெரியபுராணத்துள்ளுங் கூறியனவென்க. இப்பிராரத்தவேறுபாடன்றி ஞானவேறுபா டன்றென்க. இவ்வேறுபாட்டை ஸ்ரீகுமாரதேவர் சாந்தலிங்கசுவாமிகளின் விதேகமுத்திச்சரிதங்களிலும் காழிக்கரசு முதலிய நால்வர் சரிதங்களிலுங் காண்கவென்க.

'அந்நேரம் சூக்கும சரீரம் துரியமாய் விபுவாய் நின்ற சொரூபத்தில் இறந்துபோமே' என்றது, ஆகாமியவினைக் கிருப்பிடமாகிய சூக்குமசரீரத்தைக் கொண்டெழுப்புங் காரணசரீர நசித்தமையாலு மிவ்வலியான் மேற்கிழ்க்கொண்டுய்க்கும் பிராணன் வெளிச்செல்லாமையாலு மிச்சூக்குமசரீரந் தனக்கதிஷ்டானமான கூடஸ்தனிடத்தே லயத்தையடையு மென்றவாறு. அவ்விறப்பும் சுழுத்திபோலன்றி, உலையிரும்புஉண்ட நீர்போல்= உண்டநீரை வெளியே க்ககாத காய்ந்த விரும்பி லடங்கிய நீர்போ லென்க. இச்சூக்குமசரீரமே பிறப்பிறப்பிற் கேதுவாகலி னிதன்லயமே முக்கியவிதேகமென்னு மொக்கும். என்னை? இச்சூக்குமசரீரமே சீவனேடு சகசதாதான்மிய மடைந்தாஞ் சீவன் பிரதிவிம்பித்திடுதற் கேதுவாய் நிற்றலினென்க. உரிய சூக்கும சரீர' மென்றது மிதனு லென்க.

இனி, அஞ்ஞான சொரூபமாய வவித்தை நீருதலே சாலுமாயினு மிவைகூற லுபசாரவழக்கென்க. அஞ்ஞான அம்ச மாகலி னவித்தையெ ன்றார். இதன்விரிவை விசாரசாகரத்துணர்க. இனி, இச்சூக்குமசரீரம் பிரமாண்டத்தொடுங்கு மென்பார் மதம்பற்றி யதைமறுத்தற்கு 'துரியத்தி லிறந்து' மென்றார். (கக)

கடமெனு முபாதிபோனாற் ககனமொன் ருனாற்போல
உடலெனு முபாதிபோன வுத்தரஞ் சீவன்முத்த
ரடிமுடி நடுவுமின்றி யகம்புறமின்றி நின்ற
படிதிகழ் விதேகமுத்திப் பதமடைந் திருப்பரென்றும். (௱௬)

மூன்று சரீரமு நசிக்குமாறு கூறினீ ரிவற்றுள் கூடஸ்தனுக் குபாதி யாயுஞ் சீவனுக்கு விசேடணமாயு முள்ள சூக்குமசரீர நசிக்கப்பெற்ற வச்சீவகூடஸ்தர் யாதாவாரென்னு மாசங்கைக்க அவரடையு மாற்றை யுபமானத்தோடு மிதிற் கூறுகின்றார்:—

(இ—ள்.) கடம் எனும் உபாதி போனால் ககனம் ஒன்றுனல்போல என்பது, 'உரியசூக்கும சரீரந்துரியமாய் விபுவாய்நின்ற சொரூபத்தி லிறந்துபோமே' என்றீ ரிங்ஙன மிருவருக்கு முரிமையாய் நின்ற சூக்கும சரீரந் துரியத்தி லிறந்தபின்ன ரிதுகாரணமாக வந்த பெயருடைய துரிய னுஞ் சீவனும் யாதாவா ரென்பையாயின்? கடாகாயத்திற் குபாதியாய்நின்ற குடங் கடஜலப்பிரதிவிம்பாகாயத்திற்கும் விசேடணமாய் நிற்றலி னக்குட முடைந்தபோதே சலப்பிரதிவிம்பாகாயங் கடாகாயத்தோ டொன்றுபட்டு மக்குடாகாய மகாகாயத்தோ டெப்போது முள்ள வபேதமாய் நிற்பதுபோல; உடல் எனும் உபாதிபோன உத்தரம் சீவன்முத்தர் = கூடஸ்தனுக் குபா தியாயுஞ் சீவனுக்கு விசேடணமாயு முள்ள வந்தக்கரண நசிக்கப்பெற்ற சீவன்முத்தனது சீவன் றனக்கதிட்டானமான கூடத்தனோ டொன்றுபட்டு மக்கூடஸ்தசொரூபமான சீவன்முத்தர்; அடிமுடி நடுவும் இன்றி அகம் புறம் இன்றி நின்றபடி திகழ், விதேகமுத்திப்பதம் அடைந்திருப்பர்= அத்தன்மையான தேகமற்ற பதத்தையே யடைந்திருப்பர், வேறொன்று மாகாரென்க. இந்நிலைமை மாறுபடுமோ வெனின்? என்றும் = எக்கால த்து மென்றவாறு. அடிமுடி நடுவுமின்றி யகம்புறமின்றி நின்றபடி திகழ் வை உவமானத்திலுங் கொள்க.

என்னை? இங்ஙனங் கூறல், சூக்குமவுடலை யாகாயத்திற்குக் கடம் போல வுபாதியாகக் கோடலி னுபாதியை யுடையவன் கூடத்தனன்றோ விண்ணுக்கன்றோ பிரமத்தோ டைக்கியங் கூறல்வேண்டு மெனின்? வேண்டுமாயினுஞ் சீவனோடு கூடத்தனுக்குத் தாதான்மிய முடைத்தாதலி னிவ்வொற்றுமைபற்றி யங்ஙனங் கூறினோரேனுஞ் சீவன்முத்த ரென்றமை

யான் முத்தனென சீவனுக்குங் கதிகூறல் வேண்டுமாகலி னங்ஙனங் கூறினு மென்க. இவ்விடைய யுவமானத்திற்குங் கொள்கவென்க. அன்றியு மிவ்விதேகமுத்தித்தன்மை நித்தியமுத்தனென கூடஸ்தனுக் கமையாமையி னிதுவே பொருளென்க. ஆயின், அடிமுடி.........நின்றபடிதிகழ் விதே கமுத்திப்பத மென்றது சீவனுக் கமையுமோ வெனின்? சீவனது விசேடண சொரூபமான கூடஸ்தனுக் காகலி னமையுமென்க. இனி, என்று மென்றதின் கருத்தை வருஞ்செய்யுளால் விரித்துணரப்படு மென்க.

இச்சீவன்முத்தி விதேகமுத்தி நிலைகளைப் படர்க்கையாற் கூறினு நீ யிச்சீவன்முத்தர்க் குரிய குணங்களை யுடையவனுக வெனவு மேலுனக்கு விதேக மிவ்வாறே வருமென்று ராயிற்றென்க. (ஙா)

சொல்லியமகனே யெங்குஞ்சூழ் வெளியிருக்க மண்ணைக்
கெல்லியபின்பு தோன்றுங் கிணற்றினுகாயம் போல
வொல்லையாம் பிரமநூலா லுற்றதுபோலத் தோன்று
மெல்லையினு மெப்போது மேகமென் றிருந்திடாயே. (ஙாஎ)

'உடலெனு முபாதிபோன வுத்தரம் விதேகமுத்திப்பத மடைந்தி ருப்ப' ரென்றீ ரங்ஙன மிப்போது புதிதா யுண்டாயி னஃதோர் கால த்துமாறுபடுமோவெனி னவ்வாறகாதென்று மிந்நிலை நமக்கெப்போது முள்ளதென்று முவமானத்தோடு வற்புறுத்துகின்றார்:—

(இ—ள்.) மகனே, சொல்லிய சூழ்வெளி எங்கும் இருக்க மண்ணை கல்லியபின்பு தோன்றும் கிணற்றின் ஆகாயம்போல = விதேக முத்திப்ப தமடைந்திருப்ப ரென்று மென்றீ ரங்ஙன மாயின் செயற்கை யெல்லா மனி த்தமாமேயென்னு நியாயத்தா லிவ்விதேகமுத்திக்கு மொருகா லழிவுண் டாமே யெனின்? அற்றன்று. பின்னையோ? கூறிய வுனைத்திலுங் கலந்த வாகாய மெவ்விடத்து மெக்காலு மியல்பாகவே யிருக்க வொருவன் கீழ் நிலத்தை யகழ்ந்ததின்பின்ன ரவ்விடத்தே யப்போதே தோன்றிய கிணற் றின்கண் கற்பனுவாகாயம்போல; சொல்லிய ஒல்லையாம் பிரமம் = யாங்கூறிய நிருவிகற்பசமாதியிற் றோன்றிய வனுதியான பிரமசொரூபமா னது; நூலால் உற்றது போல தோன்றும் = இம்மகாவாக்கிய விசாரத் தாலிப்போ துன்னிடத் தடையப்பெற்றது போலக் காணப்படும்; படினு மிதுவு மோர் கற்பனையாகும், என்னையெனின்? எல்லையில் நாம் எப் போதும் = பூரணசொரூபமாகிய நா மிவ்வபரோக்ஷஞானத்திற்கு முன் னும்? ஏகம் என்று இருந்திடாய் = அடையப் படுவோனு மடையப்படும் பொருளுமான வேறுபாடின்றி யொன்றுன வடிவே யென்றமைக வென்ற வாறு.

ஏகார மீற்றசை. சொல்லிய வென்பதை யுவமேயத்திற்கு மொக்கு மென்க. கல்லிய உற்றது என்றமையாற் காலமுங் கொள்ளப்பட்டது கல்லிய வென்றது கெல்லியென்ருயது மரூஉவழக்கு. தோன்றுங் கிணற்றி னுகாய மென்றமையா லத்தோற்றங் கற்பனை யென்ரும். கல்லுதற்கு முன்னு மாண்டிருத்தலி னென்க. உவமானத்தினு முற்றதுபோல வென் றமையா லிவ்வுறுதலுங் கற்பனை யென்ரும். நானஞ்ஞானி, நான்பிரம மறியவில்லை யென்னு மஞ்ஞானகாலத்து மறிவுவடிவாய்த் தானுயவ்வறி யாமையைக் கண்டுகொண்டிருத்தலி னினியு மச்சொரூபாபாவ முண்டாகா தென்பாராகலி னென்க. ஆயி னிம்மகாவாக்கியவிசாரம் பொய்யாமோ வெனி னிதற்கன்றே வருஞ்செய்யுட் டோன்றியது என்க. இனி, நாமென் றுள்ப்பாட்டுத்தன்மையாற் கூறியது தொன்று தொட்டு வருஞ் சீவன்முத் தர்க்கெல்லா மாயநிலைமை யிஃதென்று படர்க்கையோரையுந் தழுவற் பொருட்டு என்க. (௱௧)

கானனீர் கிழிஞ்சில்வெள்ளி கந்தர்ப்பநகர் கனுவூர்
வரன்மலர் கயிற்றிற்பாம்பு மலடிசேய் முயலின்கோடு
பீனமாக் தறிபுமானிப் பிரபஞ்சமெல்லாம் பொய்யே
ஞானமெய் மகனேயுன்னை நம்மாணை மறந்திடாதே. (௱௮)

கடத்தினுக்கு மண்ணினையு நூற்துலண்டுதனையுங் காரணமென்பது போலப் பிரமமே முன்னம் 'படைத்த சகத்காரண மென்பது' உபபத்தி யாகலின் கூறிய வெல்லா வர்த்தத்தையு மிதில் முடித்துக் கூறுகின்றார்:-

இப்படலத்தின் பொருண் முற்றுங் கூர்ந்து நோக்குவோருக்கிதன் பொருளெளிதி லறியப்படும். முன் 'ஆலமர்க்கடவுளாணை' யென்ரு,ரிதில் 'உன்னைநம்மாணை மறந்திடாதே' யென்ருரிவரு மொருவரென்பது தோன் றற் கென்க. ஏகார மிரண்டனுண் முன்னது தேற்றம், பின்னதசையு மாமென்க. (௱௨)

தத்துவவிளக்கப்படலம்

முடிந்தது.



உ

ஓம்

சிவமயம்

# இரண்டாவது
# சந்தேகந்தெளிதற்படலம்.

*நார்குழி பறித்துமெள்ள நாட்டிய நெடியகம்ப*
*முரமுறக் குத்திக்குத்தி யுறைப்பிக்கு முபாயம்போலப்*
*பரமசிற் சொரூபந்தன்னிற் பற்றிய மனோவிருத்தித்*
*திரநிலை பெறச்சந்தேகந் தெளிதலை மொழிகின்றேனே. (௱௬)*

**நான்முகத்தே 'இருபடலமாக வகுத்துரை செய்கின்றேனே' என்ற வற்று ளிதுகாறுந் தத்துவத்தை விளக்குமுகத்தாற் சீவப்பிரமைக்கியத்தை விளக்கிக் கூறி நிறுத்துமுறையாற் சந்தேகந் தெளிதலையுங் கூறுகின்றார்:—**

*என்னை? கூறியவற்று ளைய முளவாயின், "ஐயம்போ லரந்தை யுண்டோ", 'துட்டமாந்தடைகள்' என்பனவற்றா லவ்வையமு மவனுணர்ந்த தத்துவத்திற்கு முரணிப் பிறவித்துன்பிற் கேதுவாக நிற்றலி னதனையு மத்தத்துவத்தை விளக்கியது போன்ற கற்ற லதிகாரிக் கொருதலையாற் பயனாதலி னென்க. இதனா லிப்படலத்திற்குச் சந்தேகந் தெளித லென்னும் பெயராயிற்று. இனி, இங்ஙனமன்றிச் சந்தேகமுந் தெளிதலு மென வும்மைத் தொகையாகக் கொண்டு சந்தேகத்தினின்றுந் தெளித லெனப் பொருள்கொள்ளினு மமையு மென்க. சந்தேகந்தெளிவித்தற் படல மென்றன்றோ பெயரிடல் வேண்டும். ஆசிரியர் தெளிவித்தலி னங்ஙனமன்றிச் சந்தேகந் தெளிதலெனத் தன்வினைப் பெயராற் கூறிய தென்னை யெனின்? தெளித லொருவர் தெளிவிக்க வாகலி னாசிரியரா லென்பது தொகநிற்பினுந் தொகாவியல்பிற்றாய ஞாபக முணர்த்தியச் சொற்றொடர் நிற்றலி னங்ஙனங் கூறலே யமையுமென்க. இப்பொருள் கண்டவாறு யாதினா லெனின்? மேல் வருங்கடாவிடைகளா லென்க. இத்தெளிவை,* **"ஐயத்தினீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின் வான நணியதுடைத்து."** *என்றது* **மறை.** *இனி, இங்ஙனஞ் சந்தேகந்தெளிதற் கூறப்புக்கவர் நியாயமுகத்தா லதை யுத்தேசிக்கின்றா ரிதில்.*

**(இ—ள்.) நார் குழி பறித்து மெள்ள நாட்டிய நெடிய கம்பம் உரம் உற குத்தி குத்தி உறைப்பிக்கும் உபாயம் போல, இது 'தூணாக**

னன நியாய' மென்ப. உரம் உறக் குத்தாவிடிற் காற்று முதலியவை யா லலேயுண்டு சாய்ந்துவிடலாற் குழி பறித்து நாட்டியதிற் பயனின்ருய் முடியு மென்க. துத்தி துத்தி யென்னு மடுக்கு மிகவுறக்கவென்ற வுறுதி பற்றி வந்ததென்க. முன்னே மேள்ள நாட்டினமையா லென்க. பரம சிற்சோருபந்தன்னில், பற்றிய மனோவிருத்தி = சிரவணுதிகளா லச்சொ ரூபாகாரத்தை யடைந்த வந்தக்கரண விருத்தியானது; திரநிலை பேற= அசம்பாவனுதிகளா லவ்வாகாரத்தினின்றுந் திறம்பாது நின்ருங்கு நிற்கு நிலையை யடைய; சந்தேகந்தேளிதலே மோழிகின்றேன் = அம்மாணுக் கனுக் குண்டாகுஞ் சந்தேகங்களேயு மவற்றிற்கு விடையினுற் றெளிதலை யும் யாமிப்படலத்தாற் கூறுகின்ருே மென்றவாறு. ஏகார மீற்றசை.

தானெடுத்து மொழிபொருட்கு நியாயங் கூருவிடி னது திரநிலே யுண்டாகா தாகலி னிவ்வுவமானங் கூறியிதுபோல வென்ரு ரென்க. சொரூபசாக்ஷாத்கார முண்டாயினு மனுதி செகத்வாசனையா லந்நிலே கலக்குருது நிற்க வென்பார் திரநிலே பேற வென்ரு ரென்க. இன்னு மித்திரநிலே யென்றது விதேகமுத்தியளவு நிலேபெறலே யெனினு மொக்கும். பரமசிற்சோருப மென்று படர்க்கையாற் கூறியது சர்வான் மபாவம் பற்றி யென்க. மனம் அந்தக்கரணத்திற் காதலி ஞதுபெயர். அன்றி, மனமாகிய விருத்தியென விருபெய ரொட்டுப் பண்புத் தொகை யெனினு மொக்கு மென்க. ஈண்டு சந்தேக முன் ருெருகுத்துக்கூறிய வற்று ளுண்டாம் பிரமாணகத சந்தேக முதலியவை யென்க. தேளிதல், மெய்ப்பொருள் கண்டதனு லவ்வைய மகறல். (௧)

நற்கருத் துடையோனுகி ஞானவானுகி நின்றேன்
மர்க்கட நியாயம்போல மகாபூத விகாரந்தொட்டு
நிர்க்குண விதேகமுத்தி நிலேபரியந்தஞ் சொன்ன
சற்குரு வினேவிடாமற் சந்தத மனுசரித்தான். (௧௬௦)

இனி, தத்துவத்தை யுணர்ந்த மாணுக்கன் விதேகமுத்தியளவு, மசம்பாவனுதிகள் கலவாதிரு வென்ற வாசிரிய வசனப்படி யிவனு மவ்வுணர்ச்சிநிலேயி னிற்றற்குக் கருதி யத்தத்துவத்தை யளித்த வாசி ரியரையே, யங்ஙன நிற்றற் குபாயம் வினவுவான் கூறியவற்று ளுண்டா மையங்களே யெடுத்து வினவுவான் பின்னுந் திருதலவாசஞ் செய்கின் றனென்றிதிற் கூறுகின்றர்:—

இது 'மேலதையுரைத்து மதைநினைத்து மிருப்பதன்றே ஞானி களுக்கான நீதி' என்பதனுனும் விளங்கு மென்க. மர்க்கடம், நிர்க்குண

மெல்லினவெதுகை யாசிடையிட்ட வெதுகை. மேல் வருவனவு மன்ன. ஏனைய நற்கருத்து, சற்குரு வல்லின வெதுகை.

(இ—ள்.) நற்கருத்து உடையோன் ஆகி ஞானவான் ஆகி=சித்த சுத்திமுதற் றீவரதர மோட்ச விச்சை யிறுதியாய நல்ல சிந்தனையை முன் னுடையவனாய்ப் பின் னவற்றின் பயனான வாத்மஞான முடையவனாகி; நின்றேன் = அதினின்றுந் திறம்பாத நிலையினின்ற வம்மாணாக்கன்; மர்க்கட நியாயம் போல=இது, தாயைப்பற்றிய குரக்குக்குட்டி யத்தாய் சென்றுழிச் செல்லுமாப் போல வென்பது; மகாபூதவிகாரம் தொட்டு= பெரிதான பஞ்சபூதம் பரிணமித்தது தொடங்கி ; நிர்க்குண விதேகமுத்தி நிலைபரியந்தம் சொன்ன, சற்குருவினை விடாமல் சந்ததம் அனுசரித் தான் என்றவாறு.

சந்தத மனுசரித்தல் முன்போற் பணிபுரிந்து நிற்றல். குருவினை யென்றதனு னின்சாரியை தவிர்வழி வந்தது. பணிபுரிந்து நிற்றல் தனக்குப் புருடார்த்தத்தி லின்னும் விருப்புற்று நிற்ற லென்க. 'துர்ச் சங்க நிவர்த்தி வந்து சிவஞானம் விரும்புவது சுபேக்ஷை' என்றதற் கேற்ப 'நற்கருத்துடையோனாகி' என்றா ரென்க. (உ)

*சந்ததம் புருடன்றன்னைச் சாயைபோல் விடாமலன்பா*
*மைந்தனை நோக்கிச்சாட்சி மாத்திரமாய் நின்றாயோ*
*சிந்தையி லையமெல்லாந் தீர்ந்தவோ தெளிவினுள்ளே*
*யந்தரங் கலந்ததுண்டோ வனுபவ முரைசெய்வாயே.* (௱கக)

தான், மறைமொழியாகக் கூறினு மதனு லச்சுவானுபவத்தி லமைவு பெற தவாவோடு நின்றசரிக்கு மாணாக்க னையக்கருத்தைக் குறிப்பானுணர்ந்த வாசிரிய னதனை யமைவிப்பான் கருதி யவ்வவாவை வெளிப்படுத்த மூன்று வகையாக வித்தில் வினவுகின்றார் :—

(இ—ள்.) சந்ததம் புருடன்தன்னை விடாமல் நிற்கும் சாயை போல்=ஒரு புருடனது நிற மவனை விட்டெப்போது மகலாது நிற்கு மியல்பைப் போல; தன்னை விடாமல் அன்பாம் மைந்தனை நோக்கி= தான் புருடார்த்தத்தை யருளியு மதி லமைதி பெறாது . மீண்டுந் தன்னை யடுத்துத் தனக் கவன்பா லன்புண்டாகப் பணிந்துவரு மாணாக்கனை யவன் கருத்தறிந் தவனைப் பார்த்து; சாக்ஷி மாத்திரமாய் நின்றாயோ ?= "ஆல மர்க்கடவுளாணை யவைக் கொலாஞ் சாக்ஷி நீயே" என்றபடி யவ்வளவோடே நிற்கின்றனையா ? அன்றி, சிந்தையில் ஐயம் எல்லாம் தீர்ந்தவோ ?= "தன்னைத்தாண றியா மாந்தர் தாணியி லொருவருண்டோ." எனவும்,

"தேகியாரித் தூல மல்லாமல்" எனவுங் கூறினையே யச்சந்தேகங்க ளெல்லா நீங்கினவோ? தெளிவின் உள்ளே அந்தரம் கலந்தது உண்டோ? நீ யிப்போது சமாதி யெம்முன்னாக விருந்தனையே யச்சமாதியிற் சீவன் வேறு பரம் வேறென்னு மிடைப்பாடின்றி யேகபாவனை யுன்னுள்ளி லுண்டாயிற்றோ? அநுபவம் உரைசெய்வாயே = வஞ்சமின்றி யஞ்சாது தோன்றியவைகளைக் கூறுக வென்றவாறு.

ஏகார மிரண்டு மசைகள். ஓகார மூன்றும் வினாவினவு மன்றி யெதிர்மறையு மாமென்க. இப்பொருள் மேற்கூறும் விடையாற் பெற்றாம். 'சந்ததம்............மன்பா மைந்த' வென்ற தவனதியல்பாய வொழுக்கை யுணர்த்திற் றென்க. ஈண்டு சாயை யென்றது சூரியச்சாயை என்றது போலக் கொள்க. மாணாக்கன் குறிப்புணர்ந்து அவனைத் தெளிவிப்பான் மாறாத கருணையா லவனைக் கடைக்கணித்தா ரென்பார் 'நோக்கி' யெனவுங் கூறினா ரென்க. ஈண்டுக் கூறிய வையங்கள் பிரமேயகதத் தூட்பட்டன. 'அந்தரங்கலந்ததுண்டோ' வென்றதற்கு 'பேதப்பிரதீதி வந்து பொருந்தின துண்டோ' வெனப் பொருள் கூறுவா ரவர் 'சிந்தையி லையமெல்லாந் தீர்ந்தவோ' வென்ற வினாவின்பின் வந்ததனோடு மாறு கோடலை யுணராதா ரென்க. அன்றி, அவ்வையமே பேதமாகலி னப் பேதங்கலத்தல் புருடார்த்தமு மாகாமையு முணர்க வென்க. இவ்வினாக்க ளையவினா. (௯)

எனவுரைத் தருளுமாசா னிருபதம்வணங்கி யெந்தாய்
சனனவன் காட்டின்மோ கத்தமத்தெழும் பேதப்பேய்க
ளுனதருளுதயவெற்பி லுபதேசவருக்கன் றோன்றி
மனவிழி தெரியஞான வான்கதிர் பரந்தாலுண்டோ. (கக௨)

இவை, அவ்வினாக்களுக்கு மாணாக்கன் விடை:—

(இ—ள்.) என உரைத்து அருளும் ஆசான் இருபதம் வணங்கி, இது தன்னிடத் தவர் சலிப்பின்றி கருணை வைத்ததற்குக் கைம்மாறு. எந்தாய், சனனவன் காட்டில் = நீர் வினாவியவை, பிறப்பென்னும் வலிய காட்டின்கண்; மோக தமத்து = விபரீதவுணர் வென்னு மிருளால்; எழும் பேத பேய்கள் = எழத்தக்கதான சீவேச்சுரர் முதலியவற்றுள்ள வேறுபாடாயுள்ள பசாசங்களே யன்றி; அங்ஙனமல்லாத, உனது அருள் உதய வெற்பில் = அக்காட்டிற் கயலிடமாகிய வவாவறுதி யென்னும் வெள்ளிடையி னிற்கின்ற வெனக்கும தருளையாகிய வுதயகிரியில்; உபதேச அருக்கன் தோன்றி = மகாவாக்கியங்களை யுபதேசித்தலாகிய சூரியனுதித்தனால்; மனவிழி தெரிய = என்மனமாகிய கண்ணுன்று

கூரிய வந்தகாரப் படலத்தினின் றும் விலகி நிற்கும்படியாக; ஞான வான் கதிர் பரந்தாலுண்டோ=ஜீவப்பிரமைக்கிய ஞானமாகிய மேலான கிரண மானது பரவிட வப்பேதங்க ளென்னும் பசாசுக ணிற்குமோ நிற்கா வென்றவாறு.

வன்மையை ஜனனத்திற்குங் கூட்டுக. வன்ஜன்ன மென்றது, ஆழ வேரோட்டி மிக்க பாரரையினை யுடையதாய் வன்கோடுகள் பல செறியப் பெற்று முட்கணிறைந்துள்ள மரங்கள் பல் செறிவை வன்கா டென்ப போல, உலகவாதனை யென்னு மாழ்ந்தவேர் மிக்கு அகமென்னும் பெரிய பாரரைக் கொண்டு எனதென்பது பலவாய வலியகோடுகள் செறிந்து அளவிறந்த நோயாகிய முட்களுடையவா யளவிறந்த பிறவிகளா கிய மரங்களாக நின்ற மிகுதிபற்றி யென்க. இவை பின்மொழியோரீ பேன்னு மூவமோதரபத கருமதாரையன். மேல் வருபவையு மன்ன. இனிப், பிறவி யென்பு தவாவே யாகலி னிதற் கெதிர்மறையாகிய வவா வறுதி வருவிக்கப்பட்டது.

உண்மை யுபதேசித்தற்குக் காரணங் கிருபை யென்பார், 'உனக்குநு கய வேப்பு' எனக் கூறினர். 'உன்னை நீயறிவா' யென்ப தாதியவை வேதசம்மதோபதேச மாகலி னருக்கன்போன்றதாயிற்று. இஃதொழிந்த வுபதேசமெல்லா 'மந்தகூலாங்தல நியாய' மென்க. இவ்வருக்கன் றோன் றற்குப் பயன் மோகவுணர்வு கெடலுங் கெடவே மெய்யுணர்வு தோன் றலுந் தோன்றவே பேதப்பே யகறலு மாமென்க. இங்ஙனமாக சாட்சி மாத்திரமாய் நின்று சிந்தையில் முன் கொண்ட வையமெல்லாந் தீர்ந்து தெளிவினுள்ளே யந்தரங் கலந்ததெனக் கென்ற வாறாயிற் றென்க. ஒளி தோன்றி யிருளைக் கெடுத்துக் கண்ணுக்குப் பொருளுண்மையைக் காட்டு வது போல, ஞானவான்கதிர் பரந்து மோகத்தமத்தைக் கெடுத்துச் சொரூப சாக்ஷாத்காரத்தை யுண்டாக்கலின், மனவிழி தெரிதலை காரியமாகவும், வான்கதிர் பரத்தலைக் காரணமாகவுங் கூறினு மென்க. இக்கருத்து மேலும் விளங்கும். அந்துச்சாரியை விரிந்துருபு தொக நின்றது. (ச)

மந்திர மூர்த்திதன்னான் மாற்றியபேய் போனாலு
மெந்திர மெழுதிக்கட்டி யினிவரா வகை செய்வார்போன்
முந்தியுன் னுபதேசத்தான் மோகம்போனாலு மையா
புந்தியின் றுரைக்கவின்னம் புகலும்விண்ணப்ப முண்டே. ( )

தேகாதியபேதபாவ நீங்கி யியல்பாய சாட்சியே யானேன்னு மபேதபாவ முண்டாயினு மிவற்றினுஞ் சில வினவ வேண்டுமேன் றிதில் விண்ணப்பிக்கின்றன்:— எங்ஙனே? இக்காட்டுப்போல வென்க.

(இ—ள்.) **மந்திரமூர்த்தி**=அதர்வணத்திற் கூறிய மந்திரங்களே யோர் வடிவாயினேன்; **தன்னால்**=இவனால்; **பேய் மாற்றிய போனாலும்**=ஒரு மங்கையைப் பிடித்த பேய் மந்திரிப்பதிற் கட்டுப்பட் டிவளை விட்டகன் றோடினாலும்; **இனிவரா வகை எந்திரம் எழுதிக்கட்டிச் செய்கை செய்வார் போல் ஐயா, உன் உபதேசத்தால், முந்தி மோகம் போனாலும்**=முன்னுள்ள மோக மென்னும் பேதங்களானவை யகன்று நிற்பினும்; **புந்தி நின்று உரைக்க**=அவ்விபரீத மகலப்பெற்ற புத்தியானது பிராரத்த முள்ளளவுஞ் சாட்சியே நானென்னு மிந்நிலையிலே நின்று திரநிலை பெற; **புகலும் விண்ணப்பம் உண்டு**=யானுமிடத்து விண்ணப்பிக்கத் தக்க தாகிய விண்ணப்ப மிருக்கின்றதே. எ-று.

**மாற்றிய** வென்பது, மாற்றுப்பட்டென்னுஞ் செயப்பாட்டு வினையில் வந்த செய்யியவென்னும் வினையெச்சம். இது **போனாலு** மென்பதனோடு முடியு மென்க. **ஒருத்தி யவாய்நிலையான் வந்தது.**

இனி, மோகத்தைக் காரணமாகக் கொண்டு பேதத்தை யதன் காரியமாகக் கொள்ளினு மமையு மென்க. ஈண்டு **மோக மாதுபெயர்.** இம்மோகம்போனதுமேல் 'தஞ்சமாங்குருவும் சொன்ன' என்றசெய்யுளில் விளங்கும். **விண்ணப்பம்,** வருவனவற்றிற்குத் தோற்றுவாய். (௫)

ஆகமப் பிரமாணத்தா லறியென்றும் வாக்குக்கெட்டா
வேகமாம் பிரமமென்று மிதயத்தா லுணர்வாயென்றுஞ் [னீர்
சோகமா மனத்திற்கெட்டாச் சுயஞ்சோதி யென்றுஞ்சொன்
மோகமா மிரண்டுசங்கை முளைத்தன பறித்திடீரே. (௧௧௪)

**'புகலும் விண்ணப்பமுண்டே' என்றவற்றை யாசிரியரிடத்து விண்ணப்பித்துக்கொள்பவன், 'துரியன்றிகழ் பிரமாணதீத' னென்ப தபூர்வதையென்னு மிலிங்கத்திற்கு மாறாகப் பல்லாற்றாற் கொள்கின்றீரே வையங் களைக வென்றிதிற் கூறுகின்றான்:—**

**மனமும்** பிரமாணமாகலி னுடன் கூட்டப்பட்டது. இது, 'பிறநான் முடிந்தது தானுடன்பட' லென்னு முத்திக்கினமென்க. **இவை பிரமாணகத சந்தேகம்.** இப்பிரமாணவாராய்ச்சி சுருதி சூத்திர மிவற்றின் பாடியங்களிலு மனத்மவிடயமென்று கருதிக் கூறுவிடினு முமுட்சுக்களுக்கு வேதாந்தார்த்தத்தை மனனஞ் செய்வதில் மிகப்பெரும் பயனுடைமையி னீண்டெடுத்துக் கூறல் பயனுடைத்தென்க.

(இ—ள்.) **ஏகம் ஆம் பிரமம்**=சுசாதி முதலிய பேதமின்றிய வத்துவிதீய பிரமம். முன், **'ஆகமப்பிரமாணத்தால் அறி'** என்றது

'சுசிபெறு மிலக்கியார்த்த தொம்பத தற்பதங்கட், கசிபத மைக்கியஞ் செய்யும்' எனமகாவாக்கியத்தி னசி யென்னும் பதத்தா லறியக்கடவா யென்றதை யென்க. அப்பிரமம் வாக்குக்கு எட்டா என்றது, 'இதன்றிதன்றெனச் சேடித்தபின் பரமந்தன்னைப் பேசாமல் பேசு'மென்றதையென்க. இனி, 'இதயத்தாலுணர்வா' யென்றது,'உன்னையறிந்து நீ பிரிந்துகொள்' என்றதை யென்க. 'சோகமாமனத்திற் கெட்டா' வென்றது, 'சுயமாஞ் சோதி சுடருக்குச்சுடர் வேறுண்டோ, இல்லை, அறிவுக்கு மறிவுசெய்யு மறிவு வேறுண்டென்றெண்ணு மறிவற்ற குதர்க்கமூட' ரென்றதை யென்க. 'இரண்டு சங்கை' என்றது, ஒவ்வொன்றிலு மிரண்டெனக் கொள்க. ஏனைய வெளி. இங்கே மோக மென்றது, முன் 'தேகமல்லாமல் வேறே தேகியார்காணே' னென்றதுபோன்று. பின்னேயோ சுருதி யுத்தியநுபவங்களைப் பற்றியவை யாகலி னதனினு மிவை வேறென்க. மேல் வருபவையு மன்ன. ஏகார மீற்றசை. (ச)

மற்றைமுப் பிரமாணத்தால் வத்துநிண்ணயங் கூடாவே
யுற்றதோர் விடயம்பூத முபயமன் றுதலாலே
குற்றமாங் குணவிசேடங் கூடாம லிருக்கையாலே
யிற்றது வாக்குக்கெட்டா தென்பது மறிவாய்நீயே. (ககரு)

அவ்வாறு பிரமம் பிரமாணதீதமாயினும், ஈண்டுப் பிரமாண முபநிடத மொழிந்த வேனையவை. பிராந்தசீவனுக்கு (அது நீ) என்றுக மங் கூறவிடின் புருடார்த்தமின்றிக் கெடுவனாகலி னிவ்வாறு கூறலும் பொருந்த முடைத்து. இதுமேல், "நீர்க்குணவத்துவின் குணங்களுரைப்பது தாய்மலடியென நிகரென்றதே" என்று மேலாளப்படலி னீண்டெதிரதுதழீஇயது. இவ்வாறது நீயென்று கூறினு மம்மகாவாக்கியத்தின் செஞ்சொலாற் பொருள்படாது இலக்கணையாற் காட்டு மப்பொருளை யெஞ்பதற்குக் காரணமு மூன்று கவிகளாற் கூறுபவ ரிவ்வாகமம், உபநிடதம். பிரமாணமன்றி யேனைய பிரமாணங்க ளிவ்வா றத்துவிதீயப் பிரமத்தை யுணர்த்துதல் கூடா வென்பதையு மினஃபற்றிக் கூறிமுடித்துக் கனைவா னிக்கவியி லவற்றின் றேதையும் வகையாற் பேர் முதலியவு மவை யறிவிக்காமைக்குக் காரணமு மவ்வாகமத்தாலு மறியக் கூடாமை யித்தாலேன வோரேதுவுங் கூறுகின்றார்:—இது கூட்டிப் பிரித்தலென்னு முத்திக்கினம்.

(இ—ள்.) மற்றை முப்பிரமாணத்தால் வத்துநிண்ணயங் கூடாவே = ஆகமமன்றி யேனையப் பிரத்தியக்ஷ முதலிய மூன்று பிரமாணங்களாலு மப்பிரமப்பொருளை யீதென்று மித்தன்மைத்தென்றுஞ் சுட்டிய

தன் றன்மையை நிச்சயஞ் செய்வதில் வன்மையில; யாதினுலெனின்? **உற்றது ஓர் விடயம் அன்று ஆதலாலும்** = பிரத்தியட்சப்பிரமாணத்தா லறியலா மெனின்? அப்பிரத்தியக்ஷஞான முண்டாவதற்கு நேத்திராதி யிந்திரியங்களுக்கும் ரூபமுதலிய விடயங்களுக்குஞ் சம்பந்த முண்டாதல் வேண்டும். அச்சம்பந்தமு மவ்விடயத்தோடு நேரே யுண்டாகாம லவ்விட யத்தைச் சமவாயமாக வுடைய குணத்திற்காகிலுஞ் சாதிக்காகிலு முன்ன ருண்டாய்ப் பின்ன ரவற்றிற் காதாரமான விடயங்களோ டுண்டாகும். இச்ச ம்பந்தத்தைச் **சம்யுக்த சமவாய சம்பந்த**மெனக் கூறுப. இங்ஙனமாகப் பிரபஞ்சாதி குணவிசேடணமுடைய விடய மாகாமையி னென்க.

இனி, **பூதம் அன்று ஆதலாலும்** = அனுமானப் பிரமாணத்தாலு மறியக்கூடாது; என்னையெனின்? அனுமானம், ஏதுவான வியாப்பிய ஞானத்தால் **சகசாரவியாபகஞான** முண்டாதல். இது மலையிற் றோன்றும் புகையைக் கண்டு அது தோன்றற்குக் காரணமாயு முடனிகழ்ச்சியாயு முள்ள நெருப்பைக் கருதப்படல். இது தூலமாயுள்ள பூதப்பொருட்கன் றிக் கூடாமையி னிப்பிரமம்பூத மாதலினுனுந் தனக்குக் காரிய மின்மை யானு மிக்கருதலளவைக்கும் விடயமன்று. இனி, உவமானப்பிரமாணத் தாலறியலா மென்பதற்கும்; **உபயமும் அன்று ஆதலாலும்** = ஸம்ஞா = சஞ்ஞா, ஸம்ஜ்ஞி = சஞ்ஞி, என்ற விரண்டு தன்மையு மன்றுதலாலும் என்பது; **ஆவொப்புமையா லாமாமை** யறிவதுபோலப் பிரமத்திற் கொப் புக்காட்டற்கு மற்றொரு சாதி திரிசப்பொருளான பிரமமுதலியவை யின் றென்று வேதங் கூறுவதனு லிரண்டாவதின்மையி னுவமான முவமேய மென்னு மிரண்டன்பாற் படாமையி னென்க. **ஆதலா** லென்பதை மூன் றிலு மியைக்க. **எண்ணும்மைக** ளெஞ்சிநின்றன.

**குற்றமாம்** = இந்நிலைமையா லம்மூன்று பிரமாணத்தாலும் பிரமத்தை யறியலாமென்கை குற்ற முடையவாகும்; இனிக், **குணவிசேடம் கூடா மல் இருக்கையாலே** = கூறிய குணமாகிய விசேடணத்தை யடையாம னிர்க்குணமா யிருத்தலின்; **இற்றது** = இத்தன்மையான வப்பிரமமா னது; **வாக்கிற்கு எட்டா** = சத்தத்தின் சத்தி விருத்திக்கு மெட்டமாட்டா தென்பதையும்; **நீயே அறிவாய்**, அறிவுடையனுதலின் எ-று.

**மற்று** ஆகமத்தை விலக்கலின் வினைமாற்றில் வந்தது. வேதாந்தத்தி லாறுபிரமாண முடன்பாடா யிருக்க, இவர் நான்காகக் கொண்டது, அர்த்தா பத்தியை யனுமானத்திலு மனுபலபத்தியை பிரத்தியக்ஷத்திலு மமைத்துக் கொண்ட **நையாயிகர்** மதம்பற்றி யென்க. இது, 'பிறநூன்முடிந்தது தானுடன்படல்' என்னுமுத்தி. இவ்வாறே **வாதவூரடிகளுங்** " கண்முதற்

புலனுற் காட்சியுமில்லோன்" என்றருளியதூஉ மென்க. என்பதும் என்றதிலும்மை யிறந்ததுதழீஇய வெச்சவும்மை. நீயேயென்ற தேற் றேகார மாணுக்கனது கருவி, நூலுணர்ச்சி, வலியை யுணர்த்திற்று. (எ)

வாக்கியந் தனக்கெட்டாது வத்துவென் றுரைத்தவேதம்
வாக்கிய விருத்தியாலவ் வத்துவைக் காட்டிற்றன்றோ
வாக்கியங் களிலேமான மாவதே தென்றியாகின்
வாக்கிய மிரண்டுமெய்யே மறைகள்பொய்யா நீகேளாய். (கககூ)

பிரமம் வாக்குக்கெட்டா தென்பதற் கேது கூறின ரங்ஙனமாயின் வாக்கியத்தாற் பிரதிபாதிக்கப்படாமையின் பிரமஞ் சொருபசித்தி யுடைத்தாதல் வேண்டு மன்றியும் வேத மப்பிரமாணமாகு மென்னு மாசங்கையைப் பரிகரிப்பான்வேண்டி யவ்வேதங் கூறுங் கருத்தைத் தொகுத்து மிதனிடையே யுண்டாகும் வினவிற்கு விடையு மிதிற் கூறு கின்றார்:—

(இ—ள்.) வத்து வாக்கியந்தனக் கெட்டாதென்றுரைத்த வேதம், அங்ஙனமே யொழியாது வாக்கியவிருத்தியால் அவ்வத்துவைக் காட்டிற்று. ஈண்டுவிருத்தி சத்தியை யொழித்த இலக்கணவிருத்தி யென்க. இக்கூற் றால், வாக்குக்கெட்டாமை யிதனு லென்பது மெட்டுமென்ப திதனு லென் பது மமைத்தன ரென்க. இனி யிக்கூற்றி லேற்பதியாது விவெதியாதென வரின், வாக்கிய மிரண்டு மெய்யே = அதனு லிருபகுதியு மேற்றற்பா லன; யாதினு லெனின்? மறைகள் பொய்யா: பொய்யாமையை மேற் கூறுது நீகேளாய். எ-று.

தன் என்றது வேதத்தைச் சுட்டியது. வேதம் வினையிடத்து மமையு மென்க. வேதம்தன் வாக்கியமெனக் கொண்டு முடிக்க. மஹாவாக்கியம் பலவாகலி னீண்டு வேதமென்பது சாதியொருமை. இதனுற் காட்டிற் றென்று ஒருமைப்பயனிலையோடு முடிந்தது.

இனி, முன்வாக்கியமென்றும், பின்வாக்கியவிருத்தியென்றுங் கூறின மையான் முன்னுள்ள சுவாந்திரவாக்கிய மென்றும் பின்கூறியது மஹா வாக்கியமெனவும் பொருள்கொள்ளினு மமையு மென்க. என்னை? மஹா வாக்கியத்திற்கே யிலக்கணைகோட லொருதலை யாகலி னென்க. இங்ஙன மன்றி, காட்டிற் றென்றதனு லிலக்கணை வருவித்தா மென்பார், பதப்பொ ருளுணராதா ரென்க. மான்ம் தலைக்குறை. மறைகளென்ற பன்மையெ ழுவாய்க்கு பொய்யாது என்ற ஒருமைவினைமுடிபு இயையாமையி னது பாடமன்று. " யதோவாசோ நிவர்த்தந்தே அப்ராப்ய மநஸா ஸஹ " உபநிஷ

ஸஹிநாழ்" என்ற சனஸ்ஸுஜாதம் வாக்குக்கெட்டா தென்பதற்கும், 'வேதமோதியதே மெய்ப்பொருள்' என்றது மறைகள் பொய்யா வென்ப தற்கும் பிரமாண மென்க. ஏகார மசைகள். (அ)

தன்பதி யல்லாப்பேர்க டமையல்ல னல்லனென்று
ளன்பனைக் கேட்டநேர மவள்வெட்கி மௌனமாகு
மென்பது போலநீக்கி யிதன்றிதன் றெனச்சேடித்த
பின்பரப் பிரமந்தன்னைப் பேசாமற் பேசும்வேதம். (ககஎ)

'கேளாய்' என்றதற் குவமானங் கூறி யுவமேயத்தை முடித்துக் கூறுகின்ற ரீதில்:—

(இ—ள்.) **தன்பதி அல்லாப் பேர்கள் தமை அல்லன் அல்லன் என்றாள்**=மணக்கோலக்காலத் தகன்றுநின்ற ளொருமாது அம்மணமகனை யறியவேண்டிக் கோலவடிவினராய் நின்ற பலரையு மொவ்வொருவனுகச் சுட்டி யிவனோ நின்மணாளனென வினவுவதற்கு அம்மணமக ளிவனல்ல னிவனல்லனெனத் தன்பதியல்லாதாரை மறுத்து விடைகூறி நின்றாள்; **அன்பனை கேட்ட நேரம் அவள் வெட்கி மௌனம் ஆனாள்**=அப்பாணின் றானை யிவனோ நின்னுயகனெனக் கேட்டகாலத் தம்மணமக ளாமென்று விடைகூற வெட்கமுற்றவளாய் வாளா விருப்பினு மப்பேசாமை யிவனே யவளன்பனெனக் குறித்தவாறு; **என்பது போல** = இக்கூற்றுப்போல; **வேதம் இது அன்று இது அன்று என நீக்கி பேசும்** = வேதம், தன்னை வினவிய பிரமஜிஞ்ஞாசுக்குத் தூலதத்துவமுத ஞாததத்துவ மீறாய வனான்ம ப்பொருளைப் பிரம மிதுவல்ல விதுவல்ல வென்று கழித்துக் கூறும்; அங்ஙனங்கூறினும், **பின்** = கூறி முடிந்தவிடத்து எஞ்சிநின்ற; **பிரமம் தன்னை பேசாமல் பேசும்** = அப்பிரம சொரூபத்தை யித்திரியங்கள் போலச் சுட்டிக்கூறிக் காட்டமுடியாமையின் வாளா விருத்தலி னிதுவே யச்சொரூ பமென்ற பொருளை யுணத்திற் றென்ற வாறு. இஃது மோர் விடை. பேசாதிருப்பினு மாமென் றுடன்பட்டமையை யுணர்த்தி நிற்றலி னென்க.

அவனப்போது காட்டாமைக் கேது மேனிகழும் கலவியின்பப் பொருளை யுணர்ந்தின்க. வேதமுந் தன்னை விழுங்கு மானந்தத் தாலெனக் கொள்கவென்க. இதுவேயன்றி யேனைய காரண முன் கூறப்பட்டன வென்க. (கூ)

முந்திய சங்கைதீர மொழிந்ததை யறிந்துகொள்வாய்
பிந்திய சங்கைதீரப் பேசுமுத்தர நீகேளா
யிந்தியங் களுக்கிராச னிதயமா மதினெண்ணங்கள்
புந்தியு மனமுமென்றே புறத்தகத் துலாவியாடும். (ககஅ)

நிருத்தமுறையான் மனத்திற் கேட்டு மேட்டா தென்றிரென்ற விரண்டாம் வினவிற்கு விடை யைந்து கவியாற் கூறி முடிப்பவர் மனத்தின் சொருபமறிந்தாலன்றி யறியக்கூடுமோங் கூடாதென்பதை யுணரக்கூடாமையி னம்மனத்தின் சொருப மித்திரனுமென் றிதுமுத லிரண்டு கவியாற் கூறுகின்றார்:—

*இது சொல்லின்முடித்த லப்பொருண்முடித்தலால் மற்றொன்று விரித்தலென்னுங் குற்றமன்றென்க. மேல் வருபவையு மன்ன.*

(இ—ள்.) வெளி. இந்திரியங்களென்ற *பன்மையா லுள்ளுள்ள* மனம் புத்தி *முதலியவும், புறம்புள்ள* ஞானேந்திரிய *முதலியவையுங் கொள்க வென்க.* இதயத்தை யிராசனென்றது, *அமைச்சுமுதற் குடிகளிருனவற்றிற்குத் தான் பற்றுக்கோடாய் நின்று இயற்றுவித்த லரசாதல் போல,* இதயமு *மவ்வா றுற்றலாற்* றேழி லுவமவுருவகம். *இவ்வாற்றுதல் வருஞ் செய்யுட்களால் விளங்கும்.* ஏகார *மசை.* எண்ணும்மைகள் *விகாரமாயின* (௧௦)

*உன்முகம்போற் கண்ணாடிக்குள் ளொருமுகங் கண்டாற்போற்*
*சின்மயவடிவின் சாயை சித்துப்போற் புத்திதோன்று*
*நின்மனே விருத்தியந்த நிழல்வழியா யுலாவுந்*
*தன்மகன் மகனே யித்தைத் தானன்றோ ஞானமென்பார்.* (௧௧௧)

புந்தியுமனமு மென்றே புறந்தகத் துலாவியாடு மென்றி ரவ்வுலாவலுமாடலு மேதுபோல வெனவரி னதற்கு விடை கூறுகின்றார்:—

*புந்தி யகத்துலாவலாலு மனம் புறத்தாடலாலு மிவை* யெதிர்நிரை நிரையணியென்க. புந்தி யகத்துலாவல், *காமக்குரோதாதி யாகாரமாகப் பரிணமித் தடங்கலென்க.* ஈற்றினின்ற வும்மை *யுலாவலோடு மியையுமென்க.*

(இ—ள்.) கண்ணாடிக்குள் = *எதிரிலுள்ள கண்ணாடிக்குள்ளாக;* உன்முகம்போல் = *இயல்பாய வுனது முகத்தைப் போலவே;* ஒருமுகம் கண்டால் போலவே = *மற்றொரு முகம் யாவருங் கண்டன்ன ;* சின்மய வடிவின் சாயை, சித்துப்போல் = *சித்தின தாபாசமாக;* நின்புத்தி தோன்றும் = *உனதிதயத்தி னகவிருத்தியாகிய புத்தியினிடத்தே பிரதிபலிக்கும்; புத்தி பூதத்தின் சத்துவக்கூறுகலி னென்க.* இனி, நின்மனோவிருத்தி = *அவ்விதயத்தின் மற்றோ ரெண்ணமாகிய மனமென்னும் விருத்தியானது;* அந்த நிழல்வழியாய் உலாவும் = *அச்சிதாபாசத்தைத் தானு மேற்றலாலசிதாருகத் தானும் வெளியே வந்து போம்;* தன்ம நன் மகனே, இத்

**தைத்தானன்றே ஞானம் என்பார் =** இவ்வாபாசசகித விருத்தியை யல்லவா ஞானமென்று பெயரிட்டு வழங்குவ ரறிவுடையார். எ-று.

அந்தக்கரணத்தி னிராசதபாக மனோவிருத்தி யாகலி னுபாசத்தைப் பெறுவிடி னுலாவ லமையாதென்க. இவ்விருத்தி யாபாசத்தை யேற்றதற் குப்பயன் வருஞ்செய்யுட்களாற் கூறுப. இத்தை ஞானமென்பா ரென்றது விடயஞானத்தை யென்க. இதனல், காணமானது புந்திகருத்தா வென்ற விடத்து மிவ்வாபாசசகிதமாகக் கொள்க.

இனி, சாயை, நிழல் என்றமையா லாபாசவாதம் பிரதிவிம்பவாத மிரண்டு மிவரேற்றன ரென்க. இவற்றின் சொரூபம், பயன்களை முடிந்த நூலிற் காண்க. 'நின்' என்றதைப் புந்திக்குங் கூட்டுக. என்பாராவார், பாடியக்காரர், பஞ்சபாதிகைக்காரர், வித்தியாரண்ணியர், நிச்சலதாஸ் முதலானோ ரென்க. சுரேசுரர்மதம் அவச்சேதவாதம். (கக)

உருக்கிய தராநீர் நானுவுருவங்க ளானுற்போல
விருத்திகள் கடபடாதி விடயமாய்ப் பரிணமிக்கு
மருப்பல விடயமெல்லா மாபாசன் றோற்றுவிக்கு [(கஉ)
மிருட்டினில் விளக்குங்கண்ணு மில்லாமற் பொருள்காணுதே.

புறத்தகத் துலாவியாட லித்தாலென வோரோது கூறினு ரிதுமுத லிரண்டு கவியானு மனோவிருத்திக்த மதி லாபாசத்திற்கும் பயனுங் கூறுகின்றார்:—

(இ—ள்.) **உருக்கிய தாரநீர் நானுவுருவங்கள் ஆனுல் போல =** காய்ச்சிய தராநீர் கருக்கட்டிய வாருக வுருவுகொடு பரிணமிப்பது போல; **விருத்திகள் கடபட!ஆதி விடயமாய் பரிணமிக்தும் =** கடம்பட முதலிய விடயப்பிரத்தியக்ஷத்தை யவாவும்போது விடயத்திற்கு மிந்திரியத்திற்குஞ் சம்பந்த முண்டாக வந்தக்கரண விருத்தி கடாதிகளை மறைத்திருந்த வாவரணத்தைப் போக்க வவ்வாகாரங்களாய்ப் பரிணமத்தை யடைந் தாவரணத்தைப் போக்கும்; **அரும் பல விடயம் எல்லாம் ஆபாசன் தோற்றுவிக்தும் =** அளவிடற்கரிய பலவான வவ்விடயங்க ளனைத்தையு மவ்விருத்தியிற் பிரதிவிம்பித்துள்ள சிதாபாசன் விளக்குவிக்கும்; **இருட்டினில் விளக்தும் கண்ணும் இல்லாமல் பொருள் காணுது ஏ =** என்னை யிரண்டும் வேண்டுமென்பது, விருத்தியாகுத லாபாச மாகுதற் சாலாவோ வெனவரின்? இருளறையிலுள்ள பொருளை யொருவன் காணவேண்டி னவ்விருளைப் போக்க விளக்கு மிருள் நீங்க நின்ற பொருடானே விளங்காமையி னப்பொருளைக் காணக் கண்ணும் வேண்டி நின்ற வாறுபோல, வொன்றொன்றே சாலாது அவ்விருத்தியு மாபாசனு மொழிக்கவேண்டு மென்றவாறு.

அரும் என்றதனிறு எதுகை நோக்கி வலித்தல் விகாரமாயிற்று. ஈற்றேகாரந் தேற்றம். (கஉ)

எரிகின்றவிளக்காற் கண்ணு மிருட்பொருள் காணல்வேண்டுந்
தெரிகின்றபரிதி காணச் சென்றிடிற் கண்ணேபோதும்
விரிகின்றசகத்தைக் காண விருத்தியும் பலமும் வேண்டும் [கே()
புரிகின்றவிருத்தி யொன்றேபோது மெய்ப்பொருள் காண்போர்க்

இவ்விருத்தியு மாபாசனு மியாண்டும் வேண்டுமோவென வினு வினதற்கு விடை யிதிற் கூறுகின்றார்:—

(இ—ள்.) கூறியபடி இருளிலுள்ள வொளியற்ற பொருள் காண வேண்டுமானல் விளக்குங் கண்ணும் வேண்டும், ஒளிப்பொருளான விரவியைக் காண நாமுயலிற் கண்ணொன்றுமே போது மதுபோலச், சடப் பொருளாயுள்ள விரிந்த சகத்தைக் காணமாத்திரம் விருத்தியும் பலமும் வேண்டு மிங்ஙனமின்றிப், பிரகாச சொரூபமான மெய்ப்பொருளைக் காணற்கு விருத்தி யொன்றுமே போது, மச்சேதனத்தை மறைத்த வாவரணத்தை யவ்விருத்தி போக்கல் பயத்த தாதலி னென்க. ஏகார மூன்றனுள் முன்னவை யிரண்டுந் தேற்றம், ஈற்ற தசை.

பரிதியைக் காணச் செல்லுங் கண்ணிற் கியாதொரு தடையு மின்றாயது போல, சொரூபாகார விருத்தி யுண்டாதற்கு முன்னிருந்த சொரூபாஞ்ஞான மவ்விருத்தியுதயத்தா னீங்கிச் சொரூபாகாரமாய் விருத்தியாம் போ தவ்வஞ்ஞான மின்றாய்ச் சொரூபமும் விருத்தியு மாத்திர நிற்றலிற், பொருளிலு முவமானத்திலுஞ்சாமானியதருமம் பிறழ்ச்சியின்றென்க (கங)

விருத்தியும் பலமுங்கூடும் விகாரமே மனமென்பார்கள்
கருத்தெழும் விருத்திவேண்டுங் கணக்கினன் மனத்திற்கெட்டும்
வருத்திய பலமாமிந்த மனத்திற் கெட்டாதுகண்டா
யருத்தமிப் படியென் றையமகன் று நீதெளிந்திடாயே. (கஉஉ)

இதுகாறு மனத்தின் சொருபமுந், தொழிலுசி, பயனுங் கூறிமுடித்திதி லம்மன மிருதிறப்பட்டமையா விம்மனத்தாற் பிரம மறியத்தக்கதென்று மிம்மனத்தா லறியக்கூடா தென்றவற்றிற் கேதுவுங் கூறியிரண்டாஞ் சங்கையின் விடையையு முடித்துக் கூறுகின்றார்:—

(இ—ள்.) விருத்தியும் பலமும் கூடும் விகாரமே மனம் என்பார்கள், வருத்திய பலம் ஆம் இந்த மனத்திற்கு எட்டாது, (இங்ஙனம் விடயாகார மல்லாத,) கருத்து எழும் விருத்தி வேண்டும் கணக்கினல் மனத்

தீர்ந்து எட்டும்; கருதியேழும் கருந்தேழு மென்றுமயது விகாரம். கருது தல், ஆத்மானுத்மா விவையென்று பகுத்தல். இவ்விசாரரூபம் விருத்திக் கெட்டு மென்றது, முன் சொரூபாகார மாதலென்றதை யென்க. மேலுந் 'துருத்தி மாயையை' யென்றவிடத்திலுங் காண்க வென்க.. செய்யுளாதலி னடி பிறழ்ந்து நிற்பினு மிவ்வாறன்னுவயித்துப் பொருள் கொள்கவென்க.

கணக் கென்றது, நிட்சயம். கண்டா யென்பது, காணென்னு முன்னிலை யேவலில் வந்தது. ஏனைய வெளி. ஏகார மீற்றசை. முன்னின்ற வேகாரந் தேற்றம். (கச)

வஞ்சகமில் பரமார்த்த குருவேசொன்ன வழிகளறிந்தே னினியோர் வசனங்கேளீர், சஞ்சலமற் றகண்டபூரணமாய்ச் சித்தந் ததாகார மாவதன்றோ சமாதியோக, முஞ்சலையொத் தலைவதுதன் சுபாவமாகி யொருகணத்திற் பலவுலகா யுதிக்குமிந்த, நெஞ்சகம் வஸ்துவிலசையாநிவாததீப நிலையாவதெப்படியோ நீர் சொல்வீரே. கஉரு

இனிச், சீவன்முத்திச் சுகத்திற்குச் சாதனமாய்ச் சீவன்முத்தவிடத்தியல்பா யிருக்கவேண்டிய தத்துவஞானம், வாசனட்சயம், மனோநாசமென்ற மூன்றனு ளிதுகாறுந் தத்துவஞானவியல்பு கூறி யிதுமுதன் முப்பத்தைந்தாவது செய்யுள்காறு மதற்குத்துணையா யதனோ டுடனிற்பதாகிய வேனைய விரண்டுங் கூறுபவ ரிக்கவி தொடங்கி யேழு செய்யுள்காறு மத்தத்துவ ஞானத்தோ டுடன் றேன்றுவதாயும் வாசனக்ஷயத்தாலுள்தாவதுமான மனோநாசவியல்பு கூறப்புக்கி யிதி லட்மனோநாச மெவ்வாற்ற லுண்டாமென்று மாணுக்க னுசங்கையைக் கூறுகின்றார்:—

(இ—ள்.) வெளி. சொன்ன வழிகளாவன: பந்தத்திற்குக் காரணந்தொடங்கி விதேகமுத்தி யளவாகக் கூறிய சாதகநிலையு மிப்படலத்திற் கூறிய சாத்தியநிலையு மாம். அவை, பந்தம் வந்ததற்குக் காரணஞ்சொன்னது (க), உத்தேசமாகத் தன்னை யறியு முபாயஞ் சொன்னது (உ), அப்பந்தத்தின் விரிவான வத்தியாரோபஞ் சொன்னது (ங), இதனிவர்த்தியான வபவாதஞ்சொன்னது (ச), பந்தப்படுத்திய வாவரணத்தின் றன்மை சொல்லியது (ரு), இம்மாயாசத்திகளுக்குத் தம்மில் விருத்தஞ் சொல்லியது (சு), இப்பந்தமோக்ஷங் கல்பனையாய் வந்ததற்குத் திட்டாந்தஞ் சொல்லியது (எ), இதுபோலத் தாட்டாந்தத்திலு மென்றது (அ), இப்பிரமானுபவத்தை மஹாவாக்கியத்தா லுணர்த்தியது (கு), இவ்வாக்கிய விசாரத்துட் பஞ்சகோசவிசார மறிவித்தது (க௦), தொம்பதவாச்சியவிலக்கியங்

காட்டியது (கக), அவத்தாத்திரயத்தாலு மவற்றைக் காட்டியது (கஉ), மேற்றற்பதார்த்த முணர்த்தியது (கங), இதற்குள்ள வாச்சிய விலக்கிய பேத முணர்த்தியது (கச), இவ்வாச்சியங்களை விலக்கி யிலக்கியங்களுக் கைக்கியங்கூற விலக்கணை கூறியது (கரு), அத்துவிதத்தை யுணர்த்து முகத்தா னிருவிகற்பசமாதியின்பேத முணர்த்தியது (கசு), இவ்வப ரோக்ஷத்திற்குத் தடைகளையு மவற்றி னீக்கமு முணர்த்தியது (கஎ), அப்பால் சீவன்முத்தர்களுக்குள்ள பேதமுஞ் செயலு மச்செயலின் பய னுஞ் சொன்னது (கஅ), அப்பால் விதேகமுத்திக் கேதுவான கன்மத்திரய நீக்கத்தாற் சரீரத்திரய நீக்கஞ் சொன்னது (ககூ), விதேகமுத்தியின் பயன் கூறியது (உ0), சீவன் முத்தித்தன்மைக்குள்ள தத்துவஞான முணர்த்தி யது (உக) ஆக விவை. இவற்றை மகாபூதவிகாரந்தொட்டு நிர்க்குண விதேகமுத்தி நிலை பரியந்தஞ் சொன்ன 'சர்க்தரு' என்றதனாலு முணர்க.

இனி யிவனுக்குண்டான சாதனசதுட்டயத்தி னிலக்கணஞ் சொல்லி யதைக் கொள்ளினு மிழுக்காது. சஞ்சலம், கூறிய வசம்பாவனைதிகள். இதனை லுஞ்சலையொத் தலைதலி னென்க. ததாகாரமாவதன்றே சமாதி யோகம், 'அங்ஙனமன்றி' யெனவிடையி லொருசொல் கூட்டுக. ஒரு கணத்திற் பலவுலகா யுதித்தலை, சித்தன்கதை காதிகதை முதலியவற் றிற் காண்க வென்க. நிவாததீபம் = காற்றற்ற விளக்கு. நீர் சோல்வீ ரென்றது, நீரிதற்கு விடை கூறு மென்றவாறு. வசனங் கேளீர், 'கேட்டு நிலையடைவ தெப்படியோ நீர் சொல்வீரோ' யெனக் கூட்டுக. ஓகார மிரண்டும் வினா. ஏகார மீற்றசை. (கரு)

கருதுமனோ குணமூன்று மூன்றிலொன்று கதித்தெழுந் தான் மற்றைரண்டுங் கரந்துநிற்கும், தருமமிகு சத்துவ மேலான போது சன்மார்க்கமான தெய்வசம்பத் துண்டா, மருவுமிரசோ குணமாகி லுலகதேக வாதனையாஞ் சாத்திரவா தனையு மாகு, மருமகனே தாமத மேலானபோதி லசுரசம்பத் துண்டாகு மறிந் துகொள்ளே. (கஉச)

கூறியவினுவிற்கு விடைகூறப் புக்காரம்மன மீத்துணைக் குணமுடை யதென்று மக்குணங்களா லுண்டாதுமவை யிவையென்று மிதிற் கூறு கின்றார்:—

மனோகுணம் மூன்றென்றது, சத்துவாதி பாகமாய் நிற்றலைக் கூறவின் குணத்திற்குக் குணங் கூறிற்றில ரென்க. இங்ஙனமே, 'எப்பொருளி யார்யார்வாய்க் கேட்பினு, மப்பொருண் மெய்ப்பொருள் காண்பதறி'

வென்ற திருக்குறளிற்கு 'யாவர்க்கு முக்குண மாறிவருதலி' னென்று மூன்று பிரிவாதலையே பரிமேலழகியாரு மேற்றன ரென்க.

(இ—ள்.) **கருதும் மனோகுணம் மூன்று** = கருதுதல், அநுமானித்தல், அந்தக்கரணம் பிரத்தியக்ஷயோக்கிய மல்லாமையா லென்க. மன மாகுபெயர். இங்ஙனமன்றி, விடயத்தைக் கருது மனோவிருத்தி யெனின்? சத்துவ குணத்திற்கு விடயத்தைக் கருதுத லின்றெனன் ருசிரியர் மேற் கூறலா லவ்வுரை போலி யென்க. **அந்தக்கரணத்திற்குக் குண மூன்று**; அவை, சத்துவம், ரஜஸ், தமசு என்பன; **இவற்றில், ஒன்று கதித்து எழுந்தால்** = யாதானு மொருகுண மிரண்டை யடக்கி வினை வசத்தான் மேலெழுமாயின்; **மற்றை இரண்டும் கரந்துநிற்கும்** = தமக்கப்போது வெளிவரும் வினைப்பய னின்மையி னென்க. அங்ஙனம் வெளிவந்தவற்று ளியாதுயாது எவ்வெப்பயனைத் தருமெனின்? **தரும மிகு சத்துவ மேலானபோது** என்பதாதியாக வுரைத்தாங்கு தருவன வென்க. சத்துவத்திற்குத் தருமத்தை மிகுத்துக் கூறினமையால் ராசதத்திற் கடையாய மருவுதலை, தருமமு மதருமமுங் கலந்ததெனவும், **அநும்** என்றதை யின்மைப் பொருளாக்கி யத்தருமஞ் சிறிதுமின்றிய தனிப்பாவத்தைத் தாமதத்திற் கடையாக்கிக்கொள்க வென்க. **சன்மார்க்கமான தெய்வ சம்பத்து**, மேற்கூறும் நிருவிகற்பசமாதி. **சாத்திரவாசனை**, மஹா வாக்கிய விசார மொழிந்த சாத்திரவாசனை யென்க.

இங்ஙனங் கூறுவிடின், 'மேலதை யுரைத்து மதை நினைத்து மிருப்ப தன்றோ ஞானிகளுக்கான நீதி' என்ற கட்டுரைக்கு முரணு மென்க. இனி, இந்நூல் முதலிய வுபதேசாதிகளு மமையா வென்க. ஏனைய சாத்திரவாதனை: வாதத்தின் பொருட்டாகுதல், புகழ் பொருட் பேறுமுதலிய பொருட்டாகுதல், கற்கும் பதினான்கு வித்தையுமெனக் கொள்க வென்க. இத்தேகாதிப் பிரபஞ்ச வாதனைகளின் விரிவை, சீவன் முத்திப் பிரகரணம், திருவாசகம், திருவருட்பா முதலியவற்றிலுங் காண்க. **மகனே, அறிந்துகொள்ளென** முடிக்க. ஈற்றேகார மசை. (கசு)

**மனது சத்துவ சொரூப மற்றிரண்டும் வந்துகலந்தன வவற்றை மாற்றினாற்போங், தனது சன்மார்க்கத்தை விடாதிருந்த போது தமோகுணமும் ரசோகுணமுஞ் சமிக்கும் பின்னே, கனபரி ணாமஞ் சலனம்போம் போனக்காற் களங்கமற்றுநின்ற வாகாயம்போலு, நினதுள மப்படியாய்ப் பிரமத்தொன்றாய் நிருவிகற்ப சமாதியிலே நிற்குந்தானே.** (கஎ)

உளத்திற்கியல்பாயி னிம்முக்குணமு மிவை விதேகமுத்திகாறு நிற்கி னவ்வாதனையே பிறப்பாகலிற் றமதமிராசத மிருந்தபோது விதேக முண்டாயினது மேற்றேகத்தைத் தருமல்லது விதேகமாகாதே யென வரு மாணாக்க னாசங்கைக்கு அம்முக்குணங்களி லின்னதியல்பென்று மற் றவை யாகந்துகமென்று மிவற்றை நீக்கினா னீங்குமென்று மற்ற வியல் பாய வொன்றைக் கைக்கொண்டால் வீடுண்டாமென்று மிதிற் கூறு கின்றார்:—

(இ—ள்.) **மனது சத்துவசொரூபம் மற்றிரண்டும்வந்துகலந்தன** = *கருது மனோகுண மூன்றென்றீ ரங்ஙனமாக வம்மூன்று நின்று நிலவிடி னிவன் பெத்த னிவன் முத்த னென்ப தெதனாலறியப்படு மன்றியுந் தனக் குச் சீவன்முத்தி விதேகமுத்தி யெவ்வாற்றால் வருமென்பையாயின்? அவ் வுள்ளத்திற்குச் சத்துவமே யியல்பாய சொரூபம், மற்றைய விரண்டுமோ வெ னின்? அவை ஜன்மாந்தரவாசனையா லவ்வுள்ளத்தில் வந்து கலப்புற்றன, ஆக லி னியல்பு நீங்காதன்றிச் செயற்கையேதுவைக்கொண்டு நீக்கி னீங்குமாக லின்;* **அவற்றை மாற்றினால் போம்** = *ராசததாமதங்களை நூல்கள் கூறிய வேதுக்களைக்கொண்டு நீ மாற்றுவையாயி னவை மாற்றப்பட்டுப்போ மன் றி யுன்னிடத்து நில்லாவே;* **தனது சன்மார்க்கத்தை விடாது இருந்த போது** = *தனக்கியல்பாய சத்துவத்தின் காரியமான தெய்வசம்பத்தைக் கை க்கொண்டாற்றி வருவாயாயின்;* **தமோகுணமும் ரசோகுணமும் சமித்தும், பின்னை** = *அவை கெடவே;* **கன பரிணாமஞ் சலனம் போம், போனக் கால்** = *விடயாகாரப் பரிணாமமு மதற்குக் காரணமான விச்சாரூப சலனமு மாகிய வவை நீங்கினவிடத்து;* **களங்கமற்று நின்ற வாகாயம் போல, நினது உளம் அப்படியாம்** = *நினதுள்ளமுங் காமம்வெகுளி யென்னுங் களங்கநீங்கச் சுத்தசத்துவமாம்;* ஆகவே, **பிரமத்து ஒன்றாய் நிருவிகற்பச மாதியிலே நிற்கும்.** *எ-று.*

*முன்னின்ற* வேகாரந் *தேற்றம்.* தான், ஏ *ஈற்றசைகள்.* இடையே *வந்த* வினாக்க ளவாய்நிலையான் *வந்தன. ராசததாமதங்களை நீக்கு மேது கூறிய நூல்கள்* சூத்தசாதகம், ஹடயோகத்தீபிகை *முதலியன.* அருட் பிரகாச வள்ளலார் *கூறிய நூல்களிலுங் காண்க வென்க.* (௧௭)

*களங்கமற்ற கண்ணாடி தன்முன் வேறோர் களங்கமற்ற கண் ணாடி காட்டும்போது, விளங்கியதன் மயமாகி யபேதமாகி விகற் பமின்றி நிருவிகற்ப மானாற்போல, வளந்தறியப் படாவிபுவாய்ச் சத்தாய்ச்சித்தா யானந்தமாம்பிரமத் தைக்கியமான, வுளந் தெ ளிந்த படியிருந்தா லுலகமெங்கே யுலைவெங்கே யென்றுசங்கை யொழிந்திடாயே.* (க௨சா)

சத்துவாநந்தக்காரண மாயாகாரிய மாகலிற் பாரமார்த்திகசத்து டனே யாங்ஙன மொன்றுபடுமென்னு மாசங்கைக்குச் சமாதான மிதிற் கூறுகின்றார்:—

(இ—ள்.) கண்ணுடியுங் கண்ணுடியு மோரியல்பினதாகிற் றம்முள் விகாரமான வேறொரு பொரு டோன்றுமாறு போலத் தோன்றாது தம்மி யல்பே யீரிடத்துங் காட்டிநிற்பனபோலச் சத்துவகுணமும் பிரமமு நிர்வி காரமாகலி னிரண்டிற்கு மைக்கியத்துவ தாதான்மியங் கூடும். ஈண்டு சாமானியதருமம் விகற்பமற்ற தன்மையாகலின், தம்மிற் சத்தாவிகற்ப மிருப்பினு மொன்றுபடற்கு முரணின்றென்க. இங்ஙனந் தெளிந்தபடி காரண நிற்குமாயி னதனிடமாக வுலகத்தோற்றரவு மதுபற்றிய சலனமு மக்காரணத்தில் வாராமையி னவை பின்னும் வருமோவென்னு மையப்பாட் டினை யொழிதி யென்றவாறு.

ஈற்றேகார மசை. சங்கையு மென்பதிலுள்ள விறந்ததுதழீஇய வெச்சவும்மை விகாரத்தாற் றொக்கது. ஏனையபொருள் வெளி. (கஅ)

ஏகமாய் மனமிறந்தாற் சீவன்முத்த ரிருக்குமட்டும் பிரா ரத்த மெதனுலுண்பார், போகமா னதுபொசித்துத் தொலைப்ப தன்றோ புசிப்பனென்றான் மனந்தானும் போனதன்றே, சோக மா மனமிறந்தாற் போகமில்லை தோன்றுமெனின் முத்தரென்று சொலக்கூடாதே, மோகமா மிதுதெளியக் குருவேநன்றாய் மொ ழிந்தருள வேண்டுமென்றான் முழுதுமானோன். (கஉஎ)

பிரமத்தைக்கியமான மனந் தெளிந்தபடி யிருந்தா லுலக மெங்கே யுலை வெங்கே யென்று சங்கையொழிந்திடா யென்றீரிதிற் சங்கை யுண் டாகின்றது, என்னை ? இக்கூற்று வரியான் வரிட்டனுக்கன்றிச் சீவன் முத்தனுக்குக் கூடாமையின் என்ற மாணுக்கனுசங்கை யிதிற் கூறப்படு கின்றது:—

(இ—ள்.) ஏகமாய் மனம் இறந்தால் = நீர் கூறியவாறு இவன்மன மப்பிரமத் திறந்து படுமாயின் ; சீவன்முத்தர் இருக்குமட்டும் பிராரத்தம் எதனுல் உண்பார் = இவ்விறப்பு வரியான் வரிட்டனுக்கன்றிச் சீவன்முத் தனுயிருக்கின்றவன் விதேகமுத்தியளவுஞ் சுகதுக்கபோகானுபவங்களை யெக்கருவியா லனுபவிப்பன் ; ஞானம் வந்தவுடன் ஒருவருக்கும் விதேகம் வாராமையின், போகமானது பொசித்துத் தொலைப்பதன்றே = அச்சுக துக்கங்களை யநுபவித்தே கழிக்கவேண்டு மன்றித் தானே கழியுமோ வென்க. இங்ஙனமாகலி னிப்போகத்திற்குக் கருவியான, சோகம் ஆம்

**மனம் இறந்தால் போகம் இல்லை** = *சங்கற்ப விகற்ப ரூபமான மனமிற ந்தா லப்போகானுபவ மெங்ஙன முண்டாகு மம்மன மிருந்தே யனுபவிக்க வேண்டு மாகலி னென்க.*

**புசிப்பன் என்றல் மனம் தானும் போனது அன்றே** = *அவ்வாநுவ யயுத்திக் குடன்பாடாக வப்போகங்களைப் புசிப்ப னெனக்கூறி னப்போது மன மப்பிரமத்தி லிறந்ததனுலேயே; அங்ஙனமிறக்காமல்,* **தோன்றும் எனின் முத்தரென்று சொலக்கூடாதே. ஏனைய வெளி.**

*பிராரத்தானுபவத்தைக் குறித் திவ்வினு நிகழ்ந்தமையி னிதுவென் றென்றுய்ச் சுட்டினர்.* **தெளிய மொழிந்தருளல்,** *விடைவழு வாகாமலும் வெளிப்படையாயு மிருக்கவேண்டு மென்பது. இவ்வினுப்* **பிரமாணகத சந்தேகம்.** *இவை யையவினுவு மாம்.* **முழுதுமானேன்** = *அத்துவிதமா னேன். ஓகாரம் வினு. ஏகார மிரண்டு மசை.* (கக)

*மனநாசஞ் சொரூபமென்று மரூபமென்றும் வகுத்துரைப்பா ரிருவகையாவருமிவற்றில், வினவாத சீவன்முத்த ரிடத்திலொ ன்றும் விதேகமுத்தரிடத்தி லொன்று மேவுங்கண்டாய், தனதான சத்துவமாய் மனஞ்சேடித்துத் தாமதமிரா சதநசித்தல் சொரூப நாச, மனநாசத் துவந்தானு மிலிங்கதேக மடங்கும்போ தடங்கு வதே யரூபநாசம்.* (கஉஅ)

**அச்சங்கைக்குச் சமாதான மிரண்டுகவியாற் கூறத்தொடங்கி யிதி லம்மனேநாச மிருபகுதிய தென்பதூஉ மவையுடையாரி னியலு மவை நசிக்குங் காலவளவுங் கூறுகின்றர்:—**

**(இ—ள்.) மனநாசம் சொரூபம் என்றும் அரூபம் என்றும் இருவகையாக வகுத்துரைப்பார்** = *நீ கூறியவாறுக் சீவன்முத்தனிடத் தத்தி யந்தாபாவமாக மனங் கெட்டொழிவது மன்று முற்ற நிற்பதூஉ மன்று பின்னையோ? அம்மனேநாச மிருவகையாகக் கூறுவ ரறிஞ, ரவை, சொரூ பநாசமெனவு மரூபநாசமெனவு மாம்;* **இவற்றில்** = **இவ்விரண்டில்; வினவாத சீவன்முத்தரிடத்தில் ஒன்றும் விதேக முத்தரிடத்தில் ஒன்றும் மேவும் கண்டாய், தனது ஆன சத்துவமாய் மனம் சேடித்து தாமதமும் இராசதமும் நசித்தல் சொரூபநாசம், இதுவே சீவன்முத்தரிடத்து உள்ளது; அனகா, இச்சத்துவம் தானும், இலிங்கதேகம் அடங்கும் போது** = *சூக்குமதேக வடக்கமாகிய விதேகமுத்திக்காலத்து;* **அடங்கு வதே அரூபநாசம்** = *இதுவாகும், இது விதேகமுத்தரிடத் துள்ளது.எ-று.*

*ஏகார மசை.* **காண்பா**யென்பது **கண்டா**யெனவாயது *காலமயக் கம். இது தெளிவில் வந்தது. முன்னு மிப்படியே யென்பதுபற்றி யென்க.*

வினவாத என்பது, ஐயம் விபரீதங்களைப் பிறர்பால் வினவாதவென்க. தனதான சத்துவ மென்பதற்கு முன் கூறப்பட்டது மன்றி, வருஞ்செய்யுளிலுங் கூறப்படு மென்க. (உ0)

சுத்தமாஞ் சத்துவமே யுண்மையாகுந் துகளிருள்போனுன் மனமென் சொல்லும்போம்போம், வர்த்தமா னத்தில்வந்த வுணவையுண்பார் வருவதும்போ வதுநினைத்து மகிழார்வாடார், கர்த்தரா மகந்தையைவிட் டகர்த்தராகிக் கரணவிருத் திகளவத்தைக் காண்பாராகி, முத்தரா யிருக்கலுமாம் புசிப்புங்கூடு முட்டில்லையென் றறிந்துசங்கை மோசிப்பாயே. (கஉகூ)

இதில் ஞானத்திற்குப் பிரதிபந்தமின்றிய சுத்தமனத்தோடும் பிராரத்தத்தை யநுபவித்த மியல்புகூறிச் சமாதானத்தை முடித்துக் கூறுகின்றார்:—

வர்த்த, கர்த்த என்பவற்றிற்கு முன் கூறினும்.

(இ—ள்.) சுத்தம் ஆம் சத்துவம் ஏ உண்மை ஆகும் = சுத்தத்திற்குப் பொருள் முன் கூறப்பட்டது, அத்தன்மையான சத்துவமே யுண்மையாகும் என்றது தனதான சத்துவ மென்க. இங்ஙனமாகலின், துகள்,இருள் இவை குணவாகுபெயர். போனுல் = இவ்விரண்டு மச்சத்துவத்தை விட்டு நீங்கினுல்; மனமென் சொல்லும் போம்போம், யாதினுலெனின்? இவையே யுலகதாதாத்மியரூபமான போக்திருத்துவத்திற் கேதுவான கர்த்தருத்துவரூபமான மனமாகலி னென்க. போம்போம் என்னு மடுக்கு உறுதிபற்றி வந்தது. கர்த்தர் ஆம் அகந்தையை விட்டு அகர்த்தர் ஆகி = அம்மனம் போனதின்பின் னிவ்வியல்பினராகி; வர்த்தமானத்தில் வந்த உணவை உண்பார் = நிகழ்காலத்தில் பிராரத்தத்தினுல் வந்த சுகதுக்கப்புசிப்பை யனுபவிப்பர்; வருவதும் போவதும் நினைத்து மகிழார் வாடார் = சென்றகாலத்து நுகர்ச்சிபோலவே எதிர்காலத்தில் வரும் நன்மையைப் பற்றிய மகிழார் தீமையை நினைத்தும் வாடார், தீமைபோவது நினைத்து மகிழார், நன்மைபோவதுபற்றி வாடார்; இத்தன்மையாக வச்சுகதுக்கங்களை யனுபவிக்கினு மவை காரணத்தின்றொழிலென்றே கருதி; கரணவிருத்திகளவத்தை காண்பார் ஆகி = தானகர்த்தாவாகிய சாக்ஷியாகலி னவ்வந்தக்கரண விருத்திகளையு மவ்விருத்திக்காரணமாக வுண்டாகு மவத்தைகளையு மயலாக விருந்து சாக்கிர சொப்பன போகானுபவங்களைச் சமமாகக் காண்பவராகியும்; முத்தராய் இருக்கலும் ஆம் = அவ்வவத்தை முதலியவற்றினின்றும் விடுபட்டவரு மாகும்; புசிப்பும் கூடும் = பிராரத்த போகா

னுபவமுங் கூடும்; மூட்டிலை என்று = மனமிருந்தான் முத்தனுகான் மன மிறந்தாற் போகங் கூடாதென்றதடை யிந்நிலைக்கில்லை யென்றுணர்ந்து; சங்கை மோசிப்பாய் = அவ்வாசங்கையை விட்டொழிவாய். எ-று. ஈற் றேகார மசை.

சுத்தசத்துவமானவரு மம்மனத்திற்குஞ் சாட்சிக்குஞ் சிறிதும் வேறு பாடன்றி யிராசத தாமதங்கள் போல வகன்று நில்லாமையி னிச்சுத்தமனத் தோ டனுபவிக்கு மனுபவம் விடயானுபவ மாகாமையி னகர்த்தரா யென் றும், 'காணவிருத்திகளவத்தைக் காண்பாராகி' யெனவும், 'முத்தராயிருக் கலு மாம்' எனவுங் கூறினுர் என்க. ஈண்டு முத்த ரென்றது சீவன்முத் தரை யென்க. ஆகலின், புசிப்புங் கூடுமென்றார் என்க. ஈண்டுப் புசிப்பு சுகதுக்க போகானுபவங்கண் மேற்று.

இனிப், போவது என்றதற்கு முன், போனதுமான பதார்த்தங்களை யென்பா ரவ ரிறந்தகால மெதிர்காலமாவதற் கிலக்கணங் கண்டதை யாங் காணேமென மறுக்க. போனபொருளை யஞ்ஞானியுங் கூடக் கருதா னென்க. ஆயின், தசரதச்சக்கரவர்த்தி காடுசென்ற மகனுக் கிரங்கியும், பார்த்தன் வீரவீடுபெற்ற மகனுக் கிரங்கியு நின்றிலரோ வெனின்? தசரதச் சக்கரவர்த்திக் கிரக்கம் வந்தது மூத்தானுக் கரசுரிமை கொடாது பெண்பா லில் வைத்த நேயத்தனெனத் தான் வாய்மை காக்கினு முல கிகழுமெனுஞ் செயலாலும், பார்த்தனுக்கிரக்கந் தான் வில்லோடிருந்து மகனைக் காத்தில னெனு முலகிகழ்ச்சிக்கு மன்றி மக்களைப்பற்றியதன் றென்க. இதுவும், பாரகாரியமானுலு,நோதாய்ச்செய்யுஞ் சீவன்முத்தன்சரித மாதலி னிவ்விரு வரு மன்னவ ராதலி னவ்விரக்க முலகநடைபற்றிய தென்க. ஈண்டு விரிக் கிற் பெருகும். ஏனையவற்றின் கருத்து முன்னுஞ்சில கூறப்பட்டன. வருவனவற்றானு முணர்க வென்க. (௨௯)

**விவகார வேளையெல்லாஞ் சமாதியென்றால் விகற்பமன்றோ மனமலைந்து விடாதோவிட்டா, லவதான நழுவுமன்றோ வென் றுயாகி லதற்கொருதிட் டாந்தங்கே ளாசைகொண்டு, நவமாகப் பரபுருடன் றன்னைக்கூடி நயந்துசுக மனுபவித்த நாரிநெஞ்சந், தவமான மனைத்தொழில்கள் செய்யும்போது தழுவியறு பவித்த சுகந் தனைவிடாதே.** (௩௰)

**இதுகாறு மனோநாசவியல்பு கூறியிதற்குச் சகாயமாகிய வாசனு க்ஷயவியல்பை யிதுமுதற் பதின்மூன்று கவிகளானுங் கூறத்தொடங்கி யிதில் " முத்தராயிருக்கலு மாம்புசிப்புங்கூடுமூட்டிலை " யென்றீர்புசிக் கும்போது முத்தனுக்குச் சேகத்வாசனை வந்து தாக்காதிருக்குமோ**

வென்ற மாணுக்கன் வினுவிற் கவ்வாசனை கருதித் தொழில்புரிபவரிடத் தடையுமன்றிக் கருத்து வேறனோர்பா லடையாதென்று திட்டாந்தமுகத் தாற் கூறுகின்றார்:—

(இ—ள்.) *'முத்தராயிருக்கலு மாம் புசிப்புங்கூடும்'* என்றதில், *புசிக் கும் போதே யகர்த்தாவாகிய முத்தனுயிருத்தல் யாண்டையது, என்னை யெனின்?* **விவகாரவேளை யெல்லாம் சமாதி என்றல், விகற்பம் அன்றே**=*அவ்விவகார நிருவிகற்ப மாகாமற் பலவாய் விகற்பித்து நிற்றலா லல்லவா;* இங்ஙன மாகலின், **மனம் அலைந்து விடாதோ**=*இவ்விவகாரசம் பந்தமான மன மவ்வாறாகவே யலைந்து போகாதோ;* **விட்டால்**=*அவ்வு லைவே தனக்கியல்பாயின்;* **அவதானம் நழுவும் அன்றே** = *முன்னிட்சயித் திருந்த செகத் மித்தையென்பது மதற்கதிஷ்டான பிரம முண்மையென் பதுங் கழன்றுவிடு மல்லவா;* **என்றயாகில், அதற்கு ஒரு திட்டாந்தம் கேள்**= *அவ்வாறு மனமலையா தேகாக்கிரமா யப்பிரமத்தி னிற்றற் கொரு திட்டாந்தங் கூறக் கேள்;* **ஆசைகொண்டு நவமாக பரபுருடன் தன்னை கூடி நயந்து சுகம் அனுபவித்த நாரிநெஞ்சம், தவமான மனைத்தொழில் கள் செய்யும்போதும் தழுவி அனுபவித்த சுகம் தன்னை விடாதே;** *இக்கூற்றுப்போல, முமூட்சுப்பருவத்து விரும்பிய பேரானந்தத்தைச் சமா தியி லநுபவித்த சீவன்முத்தன்மனம் விவகாரத்திற் றிரும்பினு மச்சுகப் பேற்றி னிச்சயத்தை நழுவாதிருக்கு மென்றவாறு.*

ஈற்றேகார மசை. ஓகாரங்கள் வினப்பொருள. இறந்தது தழீஇய வெச்சவும்மை *விகாரத்தாற் றொக்கது.* இனிச், செய்யாது வாளா விருப்பினு மச்சுகந் தனை விடாதே யெனப் பொருள்படு மாயி னெதிரது தழீஇய வெச்சவும்மையு மாம். ஆசைகொண்டு நவமாகப் பரபுருடன் றன்னைக்கூடி நயந்துசுக மனுபவித்த நாரி, *பொழிலகத்தே யெதிர்ப்பட்ட தலைவனோடு செவ்விகிட்டப் புணர்ந்த தலைமக ளென்க.* இது களவுப்பு ணர்ச்சி யாகலானு மேனிகழ்தல் கற்புத்தொழி லாகலானும், *'தவமான மனைத்தொழில்க' ளென்று ரென்க.*

இனி, *'முற்படப் புணர்ந்தசொல் லின்மையிற், கற்பெனப் படுவது களவின்வழித்தே?' யென்று ரிறையனரு மென்க.* **பரம்** = *குலம், அழகு, பிராயம்,* கல்வி, வலி, *செயல் முதலியவைதம்மிலு மேம்பட்டிருத்தல். இத்திட்டாந்தத்திற் கிங்ஙனமன்றி வேறுபொருள் கூறுவா ரஃதித்துணைச் சிறப்பின்றென்க.* இவ்விடை **பிறிதுமொழிதல்.** *நெஞ்சம் சுகந்தனை விடா தெனக் கூட்டுக.* (உஉ)

தேகத்தை யலஞ்சி யகர்த்தாவாகிச் சீவனின்றிப் பிரமமா
ய்த் தெளிந்தமுத்தன், போகத்தை யுண்பனென்றுங் கர்த்தா
வாமே பூரணமா மகர்த்தனுக்குப் போகமுண்டோ, சோகத்தை
யறுத்தருளுங் குருவேயிந்தத் துகளறுக்க வேண்டுமென்று
சொன்னயாகின், மாகர்த்தன் மாபோகி மாத்தியாகி வகைமூன்று
யவரிருக்கு மகிமைகேளாய். (கருக.)

அத்திட்டாந்த மீண்டைக் கியையாது. என்னை யெனின்? நான்
கர்த்தாவென்னும் பாவனையன்றி யீதுண்பலென்னும் போகங்கூடாது.
பூரணனான சீவன்முத்தனிடத் தத்தோற்றாவு கூடாதென்னு மந்நுவய
வியதிரேகங்களாற் றடைப்படலி னென்ற வினவிற்த இதுமுதன் மூன்று
கவியானும் விடையுங் கூறத்தொடங்கி, யிதி லவ்வினவு மங்ஙன முண்
பாரின் றேகையுங் கூறுகின்றார்:—

விவகாரமுடைய பகிர்முகத்தானுக்குச் சமாதி கூடாதே யென்றவி
னவ்வினவிற் கிவ்வினா வேறென்க.

(இ—ள்.) வெளி. தேகத்தையலஞ்சிச் சீவனின்றிப் பிரமமா யக
ர்த்தாவாயென மொழிமாற்றிப் பொருள் கொள்க. போகமென்ற வள
வானே ஞானிக் கப்போகாநுபவத்தாற் பந்தமுண்டா மெனற்கு ஞானியின்
போகானுபவவிகற்பங் கூறத் தொடங்கியது. (உரு)

செய்கையுஞ்செய் விக்கையுமற் றிருக்குங்காந்தச் சிலைமலை
முன் னிரும்புகள்சேட் டிக்குமாபோற், செய்கையுஞ்செய் விக்
கையுமற் றிருக்குமென்முன் சடமான வுலகமெல்லாஞ் சேட்டை
செய்யு, மெய்கலந்தவிந்திரிய விகாரரூப விவகார விருத்திக்கும்
விருத்திதானு, மெய்கலந்த சமாதிக்குஞ் சாட்சியேநான் வெயில்
போலென் றுரைத்தவனே விபுமாகர்த்தன். (கருஉ)

கூறிய மூவருண் முன்னையோனிலக்கண மீதிற் கூறுகின்றார்:—

(இ—ள்) செய்கை = தானே யொரு தொழிலைச்செய்தல்; செய்
விக்கை = மற்றொருவரால் தொழிலைச் செய்வித்தல்; காந்தச்சிலை, மலைக்
கிரும்பை யிவ்விருவகையானுஞ் சேட்டித்த லில்லாதிருந்துந் தன்றன்மை
விசேடத்தா லவ்விரும்புதானே சேட்டிக்குமாறுபோல், அவ்விருவகையுமல்
லாத சாட்சியாகிய வென்முன் காரணமுதலிய சடமான வுலகமெல்லாஞ்
சேட்டைசெய்யும், ஆகலி னம்மலைபோல்வா னகர்த்தாவேயென்க. இங்ஙன
மகர்த்தாவாத லொவ்விலும், காந்தஞ் சடமாகலி னிரும்பைச்சேட்டித்தல்

மாத்திரங் கூடமென்றி யதனைப் பிரகாசியாதே ; சாட்சியோ சொப்பிரகாச மாகலி னனைத்தான திரிபுடிகளையும் பிரகாசிக்கின்றமையி னிச்சாட்சியினி டத்து இச்செயல்க டோன்றுதிருக்குமோ? தோன்றி யறிந்துகொண்டி ருக்கி னவ னகர்த்தாவாத லெங்ஙனமெனின்? மெய்கலந்த இந்திரிய விகாரரூப விவகாரவிருத்திக்கும் விருத்திதானும் மெய்கலந்த சமாதிக் குஞ் சாட்சியே நான்; எப்படிப்போல வெனின்? வெயில்போல, என்னை? வெயில்தன் முன்னிலையி லனேகமான பாப புண்ணிய மிசிர கருமங்க ணடந்துவரினு மவை நடவாம லுலகு வாளாவிருப்பினுந் தமக்கொரு பற்று தலும் பற்றுத்லன்மையு மில்லாதிருத்தலினு லென்க.

விவகாரவிருத்திக்கு விருத்தி தானுமிருத்தல், தனது சேதனத்தன் மையை யவ்விருத்தியாதிகளிடத்தில் தாதான்மிய முறச்செய்தல். இவ்வா றென் றுரைத்தவனே விபுவாகிய மாகர்த்த னென்றவாறு. சமாதியு மந் தக்கரணத்தினெழிவாகிய வோர் தொழிலாகலி னதற்குஞ் சாட்சியாதல். செய்கையுஞ் செய்விக்கையுமற்ற சேதனத்தின்பாற் கூடு மென்க. சடமான வுலகமெல்லா மென்றது, "இலங்கிரவி யிந்து வனலுரகை மீனைல்லா, நலம்பெற விளங்குவது ஞானவொளி கொண்டே" என்ற சுருதிப்பொரு ளின்படி சர்வான்மபாவம் பற்றி யென்க. இதுமே லீசனு ஞானியு மொப் பென்றீ ரென்றவிடத்து விரித்துணரப்படு மென்க. (உச)

*அறுசுவையின் குணங்குற்ற மசுத்தஞ்சுத்த மபத்தியம்பத்*
*தியமெனவு ணைந்திடாமற், பொறுமையுடன் கிட்டினதைக்*
*காட்டுத்தீப்போற் போகங்கள் பொசிப்பவன்மா யோகியாகுஞ்,*
*சிறிதுபெரி தகடனதன் னியங்கணன்மை தீமைகள்சே றினும்*
*படிகச் செயல்போற் சித்தம், வெறிதிருக்கு மவனேமாத் தியாகி*
*யாவான் விரதமிம்மூன் றுள்ளவரே வீடுள்ளோரே.* (கஙு)

இதி லெஞ்சிய விருவரினிலக்கணங் கூறுகின்றர்.

(இ—ள்.) வெளி. தானுண்ட தானந்த சொரூபமான சுத்தவின்பா கலி னசுத்தந் துக்கமாயுள்ள விடயவுணவிற் குணங்குற்றஞ் சுத்தாசுத்தமு மின்மையில் பத்தியாபத்தியங்க ளின்றாயிற் றென்க. பிராரத்தபோகந் தேக த்திலூட்டியே கழியுமாகலி னென்னுந்திடத்தாற், பொறுமையுடன் புசி ப்பா னென்றவாறு. பொறுமையாவ தத்திடம். இவன் மாபோகி. அணு வுக்கணுவாய் மகத்திற்குமகத்தாயும் வியாபகப்பட்டுத் தன்சொரூப நிற்ற லின், சிறிதும்பெரிதும் தனது மன்னியமும் நன்மையுந் தீமையுந் தன்னி டத்துக் காணு னென்றவாறு. இவன் மாத்தியாகி. மாகர்த்தாவின் சொரூப முற்கவியினு மிதி லவனது போகமும் போகமின்மையுங் கூறினமையி னிவையும் விடையாயின வென்க.

ஞானிகளுக் கிவையே விரதம். அஞ்ஞானிகளுக்கோ வுலகியலானமாச சங்க்ரமணம், அமாவாசை, சனிக்கிழமை முதலிய திங்க,ளுள், கோள் முத லிய காலங்களி லொருகா லுண்டு முணவொழித்து மிருத்தலென்க. (உ௫)

**மெய்யுங் கொண்டு பிராரத்தந் தரும் விதிவழி நின்றிடவு**
**முய்யுங் கன்மிகளுக் கனுகுணமா வுறு தொழில் செய்திடவுஞ்**
**செய்யுஞ் செய்கை முடிந்தவ னென்றுரை செப்புவ தெப்படியோ**
**வையுந் துன்ப மகற்றிய குருவே நலமா வருள்வீரே.** (கரு௪)

(இ—ள்.) **பிராரத்தம் தரும் மெய்யும் கொண்டு** = பிராரத்தத்தா லமைக்கப்பட்டுள்ள மக்களாக்கையை யானென் றபிமானித்துக்கொண்டும்; **விதிவழி நின்றிடவும்** = வருணாச்சிரமத்திற் குரித்தாக மறை விதித்த ஆற் றி லொழுகிவரவும் ; இவ்வொழுக்கு முன்னும், பின்னு மிந்நூலிற் கூறிவரு கின்ற வாற்று லுணர்க வென்க. இவ்வொழுக்குந் தமக்குப் பயனற்ற வாயி னும், **உய்யும் கன்மிகளுக்கு அனுகுணமாய் உறுதொழில் செய்திட வும்;** ஏனைய வெளி. உம்மை யபிமானத்திற்குங் கூட்டுக. **உறுதொழில்** சுட்டின்பொருட்டு. ஓகாரம் வினா. ஈற்றேகார மசை.

இனிப், பிராரத்தத்தை விதிவழிக்கடையாக்குவாரவர், மெய் பிராரத்த மன்றி வாராமையும், பிராரத்தம் விதி விதிக்காமையு முணரார் போலு மென்க. உய்யுமென்னு மடை கேவலஞ் சுவர்க்ககாமிகளை விலக்கிநிற்ற லின் பிறிதோடியைபுநீக்கிய விசேடணமென்க. உலகநடையும் பழிப்பும் பயனில் செய்கையுமல்லாத வென்பார், 'அனுகுணமா முறுதொழி' லென வுங் கூறினா ரென்க. இனி, அவ்வாறு மாகர்த்தத்துவ முதலிய நிலைமை யுடையான் சர்வாத்மபாவமான வியாபகனா யானந்தசொரூபனாய் விளங்கலி னியாங்ஙன மொரு தேகத்தை யபிமானிப்பதும் நியதியினின் றொழுக்க லுங் கூடுமென்று "தீராய்ப் பிரமவித்தாய்த் தெளிந்தவர் தெளியுமுன் னம், வாரமா யிருந்ததங்கள் வருணமாச்சிரமஞ் சொன்ன, பாரகாரிய மானு லும் பலர்க் குபகாரமாக, நேரதாய்ச் செய்வா" ரென்றதை விரித்து வினா விடைகளால் விளக்கலின் கூறியது கூற லன்றென்க. (உசு)

**ஆடவர் செய்தொழில் மூவகை யாகு மவித்தைவசத் துறுநா**
**ளீடணை மமதை யகந்தை யுளார்க்கே யிகபர விவகாரம்**
**வீடனு குவமெனு மிச்சை யுளார்க்கே வித்தை படிப்பவெலாம்**
**பாடன் மிகுந் தொழிலாற் பயனுளதோ பரிபூரண மானல்.**(கரு௫)

அவ்வினாக்களுக்கு விடை கூறுகின்றார், கருமத்தை மூவகைபாகப் பிரித் தவற்றிற் கதிகாரியு மூவகை யாகலி னவரவர்க்குரிய தீதுவேன் றிதிற் கூறுகின்றார்:—

(இ—ள்.) புருஷர்களாற் செய்யப்பட்ட தொழில், இகலோககிருத்திய மெனவும், பரலோககிருத்திய மெனவும், மோட்சகிருத்திய மெனவு மூன்றுவகைப்படு மவற்றுள், அஞ்ஞானியாயிருக்கின்ற சீவர்களாகிய விடயங்க ளெமதென்றுந் தேகாதி யானென்று மிருப்பவரே **யிகவிவகாரம் பரவிவகார முடையார்;** இவற்று **ளிகவிவகாரமாவன** "கற்ற நூற்றுறைபோய்க் கடிமனைக் கிழவ, னற்குண நிறைந்த கற்புடை மனைவியோ, டன்புமருளுந் தாங்கி யின்சொலின் விருந்து புறந்தந், தருந்தவர்ப்பேணி யைவகை வேள்வியு மாற்றி, யிவ்வகை நல்லறநிறப்பிப் பல்புகழ் நிறீஇப், பிறன்மனை நயவா வறன்மனை வாழ்க்கைக்கு, வரையா நாளின் மகப்பேறு குறித்துப், பெருநலந் துய்க்கும் பெற்றித்தன்றே" என்பன. இதில் பரலோகமுஞ் சித்திக்கினு மதுசிறு விரவிற்ருகலி னிவ்விகவாழ்க்கையை **மீக் கூறப்பட்டது.**

இனிப், **பரலோகவிவகாரமாவது** "மனையற நிறப்பி முற்றுணர் கேள்வியின் முதுக்குறை வெய்தி, பொருளுமின்பமு மொரீஇ யருளொடு பொறையு மாற்றலு, நிறைபே ரொழுக்கமும் வாய்மையுந் தவமுந் தூஉய்மையுந் தழீஇ, யோரறிவுயிர்க்கு முறுதுய ரோம்பிக் காலோய், நடையஞ் சித் தோலுடுத்து என்பெழுமாக்கை யன்றுள், புறத்துளங் கரதுவரையுங் கானுமெய்திச், சருகொடு கானீரருந்திக் கடும்பனிக் காலத்து, மாநீ ரழுவத் தழுங்கி வேனிலி,னைவகை யழலி ன்மெய் வருந்த,வருந்தி யிந்நிலையொழுகு மியல்பிற் றென்ப." என்பன. இக்கருத்தத்துவ போக்திருத்துவ புத்தி **பாமரனுக்கு** முளதாக வவனை விலக்கியது, இவ்விதிவழி யொழுக லவனிடத்தின்மையி னென்க.

இனி, இவ்விகபர விச்சைகளை யிகந்து, **வீடு அனுதவம் எனும் இச்சையுளார்க்கே, வித்தை படிப்ப எலாம்** = அவ்வீட்டை யுணர்த்தும் பிரமவித்தையை யாசிரியனிடத்து படித்தல் முதலிய வாம்; **எலாம்** என்றமையான் **மனனநிதித்தியாசனமுங்** கொள்க. **அவித்தை வசத்துறு நாளென** வவ்விரண்டிற்கு மடைதந்தமையி னிவ்வீடணுகுவோர்க்கு **அவித்தைகழியு நாளெனக்** கொள்க. **விவகார** மீண்டுங் கூட்டுக. **பரிபூரணமானல்** = அம்மூன்று மல்லாத போக்குவரவற்ற பரிபூரணசொரூபந் தானனல்; **பாடல் மிதம் தொழிலால் பயன் உண்டோ** = முமூட்சுவினுற் கழிக்கப்பட்ட விகலோக பரலோக கிருத்தியமே யன்றி யிச்சொரூபத்தைக் காட்டநின்ற சிரவண மனனாதிகளானு மிஞ்ஞானிக்கு யாதொரு பயனு மில்லையே; யாதினு லெனின்? காரியமான பயன் கிட்டியபின் காரணங்கள் பயனற்றவாறுபோ லென்க. எ-று.

இதனுற் **சீவன்முத்தன்,** விதிவழிநிற்றலு மனுகுணமா வுறுதொழில் செய்தலுந் **தனக்குப் பயன் கருதி** யன்றி, **சன்மி முதலியோருக் கனுதன**

த்தா லென்றவர் ருயிற்று. ஏகார மிரண்டுந் தேற்றம். எதிர்மறை யோகா ரம் இல்லையென்னும் விடையில் வந்தது. (உஎ)

குரவர் சிகாமணியே கேளீர் நீர்கூறிய வழி யொக்கும்
பரமுட னிகமு மிகந் தவரன்றோ பழகுவர் மெஞ்ஞானம் [ர்
விரவு முயற்சியின் மீண்டவ ரதையினி வேண்டுவரோ வேண்டா
சிரவண மனனுதிகள் வேண்டாவோ சித்த முறைத் திடவே.()

பந்தத்திற்கரிய விவகாரம் வேண்டாவாயினு மூலகவாசனை முத லியவை தாக்காதிருத்தற் கிவற்றிற்கு விரோதியான சாஸ்திரமுயற்சியா யினு வேண்டாவோ வென்று வினவுகின்றன்:—

(இ—ள்.) விரவு முயற்சி = பந்தத்திற் கட்டுப்படு முயற்சி; ஏனைய வெளி. குரவர்சிகாமணியே, என்ற தொடர்க்கு நான்கனுருபு தந்து விரி க்க. அங்ஙன மெஞ்ஞானம் பழகினவர்க்குச் சித்த முறைத்திட சிரவண மனனுதிகள் வேண்டாவோ, எனக்கொண்டு கூட்டுக.

கூட்டு ' இசையெச்சம்.' இவ்விரண்டு மிகவாத வஞ்ஞானிகள் மெய்ஞ் ஞானம் பழகா ரென்ப தருத்தாபத்தியாற் போந்த பொருள். (உஅ)

இளர்மகனே கேள் தத்துவமறியார் கேட்டல் செயக் கடனே
தளர்வறு சிந்தித்தலின் முயல்வார் சிலர் சந்தேகங்க ளுளார்
தெளிதலி னிற்பார் விபரீதப் பேய் தீரா வாதனையோர்
வெளியுருவா யருவா நிரை யினர் வேண்டுவ தொன் றுண்டோ.()

அதற்கு விடைகூறுகின்ற ரச்சிரவணுதிகள் வேண்டுங் காலவளவு கூறுகின்றர்:—

"சிக்கெனப் பழகிக்கேட்டல் சிந்தித்த றெளிதலாலே, விக்கினமடஞ் சந்தேகம் விபரீதம் போக்குவாயே." என்றதை மீண்டோர் பயன்கருதி விளக்கிக் கூறலின் கூறியதுகூற லன்றென்க. அப்பணிதுவிது வின்ன வின்ன காலவளவே வேண்டுமெப்பால் பயனின் றென்பது.

இச்செய்யுளின் பொருள், 'பிரமபாவனையை மூடி' யென்றது முதலிய செய்யுட்களிற் கூறப்பட்டன வென்க. இளர்மகன் = அடிக்கடி பிரமாண பிரமேயங்களைப் பற்றி வினவித் தெளிகின்ற மகன். தத்துவத்தை யறி யாதார் கேட்டல்செய்தலே, "சாமவேதத்திற் சாந்தோக்கிய வுபநிடதத்தி லுத்தாலகர் சுவேதகேது சம்வாதத்தாலும்," சந்தேகமுள்ளார் தளர்வு அறு சிந்தித்தலின் முயலலே, "சூத்திர மிரண்டா மத்தியாயத்தாலும்," தீரா வாதனையோர் தெளிதலி னிற்றலே, "பதஞ்சலியோக சூத்திரத்தாலு

முணர்க வென்க. ஓகாரத்திற்குப் பொருள் முன் கூறப்பட்டது. கடன் ஏனைய மனன நிதித்தியாசத்திற்குங் கொள்க. ஏகார மசை. (உக)

ஐயா கேளீர் தத்துவ ஞானியு மஞ்ஞானிகள் போலச்
செய்யா நின்றேன் கண்டே னுண்டேன் சென்றே னெனலாமோ
பொய்யாம் விபரீதங்க ளவர்க்குப் போயின வென்றீரே
மெய்யாம் பிரமவிசார மிதன்றே வெளியா யுரை யீரே. (கரு௨)

கூறியபடி சிரவணாதிகளே வேண்டாத சீவன்முத்தனுக் குலகர் போலச் சோல்லுஞ் செயலு முளவாயி னத்தியாச நீங்கிப் பிரமானுசந்தான முண்டானதென் றெங்ஙனங் கோடுமென்னு மாசங்கையை யிதிற் கூறுகின்றான்:—

(இ—ள்.) வெளி. 'செய்யாநின்றேன், கண்டேன், உண்டேன் என்பனவற்றிற்கு 'இதனை' யென்ற வொருசொல் வருவித்துரைக்க. இனி, இவை தருமியத்தியாச மாகலின், பிரமவிசார மீதென்று னென்க. ஏகார மூன்றனு ணடு நின்றது வினா; ஏனைய விரண்டு மசை. ஓகாரம் வினா.

ஓய்ந்த கனவிற் கண்ட பழங்கதை யோதுவன் வாதனையா
லாய்ந் தறிவுற்றவ னப்படி செப்புவ னுபாசனு மாகான் [வான்
மாய்ந்த தன்னுடல் வேமளவும விண்ணவன் மனிதனெனப் படு
வீய்ந்த சிதாபாசன் போமளவும் விவகாரந் தொடரும். (கரு௩)

இதி லதந்த விடை கூறுகின்றார், கனவின்றிட்டாந்தத்தால் விளக்கி யென்க:—

(இ—ள்.) ஓய்ந்த கனவில் கண்ட பழங்கதை வாதனையால் ஒருவன் ஓதுவன் = வியாவகாரிக விந்திரியங்க ளடங்கின கனவிற் காணப்பட்டுக் கழிந்த பழையதொரு சரிதத்தை நனவு வந்தவிடத்து மவ்வனுபவ சமஸ்காரத்தா லுண்டாகிய வாசனையா லிவ்வுலகி லொருவன் மற்றொருவனுக் கியா னின்னுழி யிவ்வாறுகவா யிச்செயல்களைப் புரிந்தன னெனத் தனதுயர்வுதாழ்வுகளை யொரு நிமித்தம்பற்றிக் கூறுநிற்பன்; அப்படி = இத்திட்டாந்தம்போல; ஆய்ந்து அறிவு உற்றவன் செப்புவன் = மஹாவாக்கிய விசாரத்தாற் றன்னை யகர்த்தாவாகிய ஞானவடிவினனாக வறிந்தம்மையானே னிவ்விசாரத்திற்குமுன் றான் கர்த்தா போக்தாவாக விபரீதத்தா லனுபவித்துக் கூறிவந்த வாறுபோல விப்போதுங் கூறுவன்; கூறினும், உபாசனும் ஆகான் = தன்சித்தத்தி லாபாசப்பிராந்தி யின்று. யாதினா லெனின்? கனவுபோல மித்தையென்னு நிட்சயத்தா லென்க.

இந்நிட்சயத்தா லவ்விபரீதங்க ளவர்க்குப் போயின வென்பதி லன்னுவ்ய வியதிரேகபாவ மின்றென்ப தின்றென்க.

இனி யவ்வாறாயின், கனவிற்கண்ட பொரு டனக் குபாதானகாரண மான தூலாஞ்ஞானங் கெடத் தானு முடனே கெடுதல்போ லன்றி யத்து விதஞானத்தா லஞ்ஞானங் கெட்டு மிதன் காரியமாகிய வந்தக்கரணத்தின் றரும மேன் கெடாது நிற்கு மெனின்? **மாய்ந்த தன்னுடல் வேம ளவும்** = துஷாக்கினியில் மாணுந்த பிராயச்சித்தஞ் செய்துகொண்டோ னக்கணமே விண்ணவனாயினுந் தன்னை யப்போது விண்ணுலகிற் கேற் றிப் பிண்மாய்க் கிடக்கு மவ்வுடல் வெந்து நீறா மளவும்; **விண்ணவன் மனி தன் எனப்படுவான்** = அவ்விண்ணவனை விண்ணவனென்று கூறாது, இம்மனிதயாக்கையோடு தாதான்மியப்படுத்தியே மனிதனென்றே யழைக் கப்படுதல்போல; **வீர்ந்த சிதாபாசன் போமளவும் விவகாரந் தொடரும்** = ஞானத்தா லாவரணங் கெட வதுகாரணமாக நின்ற வந்தக்காண விசிட்ட வாபாசனது கருத்தத்துவபுத்தி சத்தியமென்ப தொழியினும் பிராரத்தத் திற்குரிய வஞ்ஞானமு மதன்காரியமான விக்ஷேபமு நிற்றலி னது நீங்கு மளவு மச்சேதனத்தோடு தாதான்மியப்படுத்தி நீ கூறிய விவகாரங்க டொட ர்ந்துவரும்; வரினும் விண்ணவன் மனிதனாகாமை போல **கூடஸ்தசோரு பனானஞானி யாபாசனாகா** னென்றவாறு.

என்னையெனின்? நீ கூறிய கனவு **நிருபாதிகப்பிரமை**, இச்சிதா பாசனே **சோபாதிகப்பிரமை** யாகலா லென்க. என்னை, ஈண் டிவ்வினு விடை நிகழ்ந்த தெனின்? சாட்சியினிடத்தே கற்பிதமான பிராதிபாசிக சொப்பனப்பிரபஞ்சத்திற் கச்சாட்சி யெப்படி கருத்தாவாகிலனோ வப்ப டியே வியாவகாரிகப்பிரபஞ்சந் தன்னிடத் தவித்தையாற் கற்பிக்கப்படினுந் தா னதற்குங் கருத்தாவாகா னென்பதை யுணர்த்தற் கென்க, இக்கருத்து, "பித்தாஞானங் கடஞானம் பிரமஞான மெனு மிவற்றிற், கத்தாவன்று பரப்பிரமங் கன்மந்தானு மன்று வெறுஞ், சித்தா மிதனைத் தெரியாமற் கத்தாவாகச் சிந்தித்தல், பித்தா மகர்த்தாவா யறியப் பெற்றா னறியப்பெற் றானும்" என்ற **சுருதிப்பொருளின்** கருத்தென்க. **விருத்திப்பிரபாகர** மேழாவது பிரகாசத்திலு மிதன்விரி வுணரப்படு மென்க. (கக)

ஆனா லையா குருவே காண்ப தசத்திய மானாலு
நானா விவகாரந் துய ரலவோ ஞானசுகந் தருமோ
போனா லன்றோ நன்றாய் நிட்டை புரிந்திடல் வேண்டாவோ
தானா நிட்டை புரிந்தாற் செய்கை தவிர்ந்தவ னெப்படியே. ()

இப்பிராரத்தஞ் சீவன்முத்திக்குத் தடையாகாவிடினு மிச்சீவன் முத் திக்கு விலக்ஷணமான சுகப்பிராப்திக்குத் தடையாகலின் முற்று மிறந்

தல் வேண்டாவோ? அவ்விவகார மிறக்கத் தான் முயற்சித்தா லம்முய ற்சி சகசானுபவ மல்லவோவென்று மீட்டும் வினவு மாணக்கன்வினவை யிதிற் கூறுகின்றார்:—

(இ—ள்) ஆனல்= வீய்ந்த சிதாபாசன் போமளவும் விவகாரந் தொடருமானல்; காண்பதசத்தியம் ஆனலும் நான விவகாரம் துயரல்வோ; இத்துன்பத்தோடு கூடிய விருத்திக்கு, ஞானசுகம் தருமோ= ஏழாவதின் பூமியாகிய துரியாதீதப்பேறு அவ்விவகாரந் தரத்தக்கதோ; தாராமையின், அது பெறுதற் பொருட்டு, போனலன்றே நன்றய் நிட்டை புரிந்திடல்= அவ்விவகார முற்று மொழிந்தா லல்லவா சித்தசலனமின்றி நிருவிகற்ப மடைதல்; வேண்டாவோ = அன்றி சீவன்முத்தியே சாலுமோ? அவ்வானந்தப் பேறு வேண்டாவோ? வேண்டித், தான நிட்டை புரிந்தால் செய்கை தவிர்ந்தவன் எப்படியோ? ஐயா தருவே! யென்றவாறு. ஓகார மைந்தும் வினவில் வந்தன. (கஉ)

தெரிதரு மகனே யாரம்பத் தொடுதீரும் விவ கார
முரியதி யானமும் விவகாரங்களு முள்ளத்தொழிலன்றே[டோ
துரியப ரப்பொரு ளானவர் வேறொருதொழில் செய்வது முண்
வரியச மாதிகள் பழகுவனே லவ னருடனு மன்றே. (கசக)

இதி லவ்வினக்கட்கு விடை கூறுகின்றார்:—

(இ—ள்.) தெரிதரு மகனே = மைந்த! கூறிய வினக்கட்கு யாம் விடை கூறலா லதனுண்மை நினக்குத் தெரியவரும்; விவகாரம் ஆரம்பத்தோடு தீரும் = இப்பிராரத்தானுபவ மனுபவித்தே முடிவுபெறும்; இங்ஙனமன்றி யெம்மா னீக்கக் கூடாது, அங்ஙனம் விவகரித்திருப்பினு மதனற் சீவன்முத்திக்கு விலக்ஷண சுகத்திற்குத் தடையாயினுஞ் சீவன் முத்திக்குத் தடையின்மையி னென்க. இது, உரிய சமாதியும் விவகாரங்களும் உள்ளத்தொழில் அன்றே? = என்னை உள்ளத்தின் சத்துவகுணப் பிரதானத்தாற் சமாதியும், ரசோகுணப் பிரதானத்தால் விவகாரமு மேற் றலி னென்க. இது முன் கூறப்பட்டதனலும் விளங்கும்.

இனி, இவ்வுள்ளத்திற்கு வேருய, துரிய பரம்பொருளானவர் வேறெரு தொழில் செய்வதும் உண்டோ? = என்னை? அது அசங்க மாகலி னென்க. இவ்வுண்மை யுணராது, கருத்தத்துவபுத்தியா லானந்தப் பிராப்தி வேண்டுமென்று, அரியச மாதிகள் பழகுவனேல் அவன் ஆருடனும் அன்று, எ-று. ஓகார மிரண்டும் வினு. ஈற்றேகார மசை.

இனி, இது கருதியது, ஆரம்பத்தோடு தீரும் விவகாரம் என்றத ஞல் ஞானவிவகாரந் துயரந் துயரந்தானவை யாரம்பத்தொடு தீருதலன்றி யிஞ்ஞானத்தாற் றீராதெனவும், அவ்விவகாரத்தாற் றனக்கொரு பயனி ன்மைபோல சமாதியினலும் பயனின்றென்பார், அவை உள்ளத்தொழி லன்றே துரியபரம்பொருளானவர் வேறேரு தொழில் செய்வது மு ண்டோ வெனவும் விடை கூறினு ரென்க. (௩௩)

உத்தம குருவே யாரூடனுமா யொருதொழி லற்ற வனுஞ்
சித்தம டங்குதி யானதிகள் சிலசெய்குவ தேனென் று
யித்தல மருவும் பிராரத்வப் பிரி வெப்படி யப்படியே
முத்தரும் வெகுவித மாவா ரென்பது முன்னே சொன்னேனே.

அரிய சமாதிகள் பழகுவனே லவ னுருடனு மன்றென்றீர், சில ஆரு டருஞ் சமாதி பழகலி னன்னுவய வியதிரேகங்களுக்கு மாறுண்டாமே யென்ற முன்வினவின்கருத்தை யனுவதித்த வினவு மதற்கு விடையு மிதிற் கூறுகின்றார்:—

(இ—ள்.) தியானதிகள் சில என்றது, இயம நியமாதி யெட்டங் கங்களு மென்க. இங்ஙனஞ்செய்தல் வேதவாசனைப்பற்றி யன்று, பிராரத்த வசத்தாற்றானே சமாதியி லுய்ப்பதன்றி யிவன் கருத்தத்துவபுத்தியுங் கொண்டான்றென்பதினல், பிராரத்தப்பிரி வென்றார்.

ஏனைய வெளி. ஏகார மீற்றசையேகாரம். முன்னென்பது தத்துவ விளக்கப்படலம். (௩௪)

நல்லவ னேகே ளுலகுபகார ஞானிகள் விவ காரா
மல்லது வேறொரு பெறுபேறு மிலை யதனுற் பிணியு மிலை
வல்ல சிருட்டிமுதற் பல தொழிலால் வருபுண்ணிய பாவ
மெல்ல வருக்கு மனுக்கிரகஞ் செயுமீச னடைந் திலனே. (௩௪௩)

கூறிய விடைக்கு மலைவு தீர மேற்கோள் கூறிச் சமாதானத்தை யிதில் முடித்துக் கூறுகின்றார்:—

என்னை? ஈசன் சிருட்டி திதி யாதிய வனுக்கிரகங்களைச் செய்தல் புண்ணியமும், அன்றிப், பன்றிக்குருளைக்குப் பாலளித்த புண்ணியமும், தண்ணீர்ப்பந்தல் பலவிடத்தும் வைத்த புண்ணியமும், மஹா பாதகந் தீர்த்த புண்ணியமும், கருக்குருவி நாரை குரங்கு பாம்பு எறும்பு முதலியு வஃறிணையுயிர்களுக் கச்சந்தீர்த்து வீடருளிய புண்ணியமும் எனக்கூறினு மமையு மென்க. இங்ஙனம் புண்ணியப்பேறு கூறப்புகி னளவுபடா வென்க.

இனிப், பாவமாவன:—மாணுக்கனை வெட்டின பாவமும், பொருள் கொண்டு பொய்க்குதிரை காட்டிய பாவமும், சமணரைக் கழுவேற்றிய பாவமும், எச்சிலூணை யுண்ட பாவமும், பணிப்பெண்ணைப் புணர்ந்த பாவமும், பொய்கூறிக் காலனை யுதைத்த பாவமும், கற்புடை மங்கையரைக் கற்பழித்த பாவமும். இவை கூறப்புகின் வரம்பின்றெனக. நித்திய நைமித்திக பிரளயங்களி லுயிரை யழிக்கும் பாவமு மெனினு மமையு மென்க. இவற்ற லவ்வீசன் சுகதுக்க மடையாமை போல ஞானியுந் தபசினல் புண்ணியப்பயனை யடையா னென்றதனு லென்க. தியாகுதிகளைப்பற்றி வினவினும், தொழிலென்னுஞ் சார்புபற்றி பாவத்திற்குத் திட்டாந்தங் கூறினு ரென்க. இதனல் விடை வழு வின்று. செய்தவினை யெவ்வாற்ரு னுஞ் சாராது நீங்குமோ வெனின்? இதற்கு விடை முன் கூறப்பட்டதென்க. இவ்விடயங்களைப் 'பதினெண் புராணங்களா' லுணர்க. ஞானிகள் விவகாரம் உலகுபகாரமாதல், 'சூடாலை புருடனிமித்தம் யோகம் பயின்றது' முதலிய கதைகளா லுணர்க வென்க. பாவம் பற்றமைக்கு 'இந்திரன் சந்நியாசிகளைத் தலையுடைத்து நரிக்கு மூளையை யிரைகொடுத்தல்' முதலியவற்ற லுணர்க வென்க.

ஏனைய பொருள்வெளி. ஏகார மீற்றசை. (கடு)

ஈசனுமா யருவா யுருவாகி யெழுந்தருளுங் குருவே
யீசனு ஞானியு மொப்பென்றீரெ யெப்படி யொப் பென்ற
லீசனு ஞானியு மமதைய கந்தை யிகந்ததினு லொப்பா
மீசனு மாம்பல சீவருமா மூலமெல்லா மிவ ருமே. (கசச)

இதுகாறுந் துவம்பதத்தி லுளதாத மையங்களை நீக்கி யினித் தத்பதத்திலுளதாத மையங்களை நீக்கத்தொடங்கி முன் 'ஞானிகள் தனக்காமீசன் றனையுந் தங்களைத்தான் கண்டஞானி கடமையுமன்றி' என்றெப்பக் கூறியதற்கேற்ப வீண்டு மீசனுக்கு ஞானி யொப்பென்பதையக் குறிப்பை வெளிப்படக்கூறி யதிற் சாமானியதரும மவ்விருவரிடத்து மியாதென்னும் வினவு மதற்குவிடையு மிதிற் கூறுகின்றார்;—

(இ—ள்.) அருவாய் = கந்தழியாய்; ஈசனுமாய் = ஜெகத்திற்கு நிமித்த காரணனுமாய்; உருவாய் = அவ்வீசனே படிவமாய்; எழுந்தருளுங் குருவே, ஈசனும் ஞானியும் ஒப்பென்றீர், ஒப்பு எப்படி = அச்சாமானியதருமம் எப்பொருளைக் குறித்தது, என்னை? முன், 'பொரலு மிடங்களாலு மோதரு முபாதியாலு முடலாலு முணர்விலுைம், பாதலம் விசும்பு போலப் பலதூர மகன்று நிற்பார்' என்றதனல்; என்றல் = என்று வினவிடின்; ஈசனும் ஞானியும் = இவ்விருவரும்; மமதை அகந்தை இகந்த

தினுல் ஒப்பாம்; இவ்விரண்டும் விடுபட்ட காரணமன்றி முற்கூறியவை விரோதமேயா மென்க. என்னை யெனின்? எண்குணங்களினு மியல்பாகப் பாசங்களை நீக்கி நிற்ற லீசனுக்குச் சிறப்புப் போல ஞானிக்கு மவ்வீசன் கிருபையாலு மவ்வீசனே திருவுருவாக வெழுந்தருளிய குருகிருபையாலு மவித்தை நீங்கத் தான் சாக்ஷிசொரூப மாதலின் கருத்தத்துவபுத்தி தேகாதிகளிடத்து மதுபற்றி யெனதென்னும் புத்தி விடயத்தினிடத்து மின்றுதலா லென்க.

இனி, இவன் ஈசனும் ஆம் பல சீவநும் ஆம் உலகு எல்லாம் ஆம் — எதனு லெனின்? இச்சீவன்முத்தன் அந்தக்கரணவுபாதிகளுன சாட்சிசொரூப மாகலி னச்சாட்சிசொரூபமும் பிரமமும் பிரிவுபடாத சையோகசொரூபமா யேகமாய் நிற்றலின் மாயைக்கதிஷ்டான பாவத்தானதிற் பிரதிவிம்பித்திடுதலினு லீசனும், அப்படியே யவ்வதிஷ்டானத்திற் கற்பித வாசிரயமான மாயையின் றமோகுணப் பரிணமைவுலகிற்கு விவர்த்தோபாதான மாகலின் சேகத்தாயும், அவித்தைக் கதிஷ்டான கூடஸ்தப் பிரதிவிம்பஞ் சீவனுகலின் ஜீவனுமானவா றென்க. இக்கருத்து முன் சிருட்டி கூறியவிடத்துக் கூறியதனுலும், மேல்வரும் விடைகளாலு முணரப்படு மென்க. ஏகார மீற்றசை. (௩௪)

எல்லாச் சீவரு மிவனு மென்றீ ரிவன்றான் முத்தியடைக்
கெல்லாச் சீவரு முத்தி பெறும விருப்பரனே னையா
வெல்லாச் சீவரும் வெவ்வே றுனுலிவ னெல்லா மலனே
யெல்லாப் பொருளு முரைத்தருள் குருவே யிதைநீர் மொழி
[யீரே. (கசு௫)

'மமதை யகந்தை யிகந்ததினு லொப்பென்பதோ டமையாது, இவனீசனுமாம் பலசீவருமா முலகெல்லா மிவனுமே யென்றதி லோரையமுண்டாகின்றது. என்னை, இவன் பிரமசொரூப மாகலி னீசனுக்கு மிவனுக்குந் தாதான்மிய சம்பந்த முண்டாகின்றதனுலு, மிவ்விருவரு முத்த ரென்றமையானு மிவ னீசனேன்ப தொக்கு மென்க.

உலகு சடரூப மாகலானு மதற்குப் பந்தம் வீடின்மையானு மதைப் பற்றியின்டாராய்ச்சி யின்றென்க. இனி, நின்ற சீவர்களுக்கு இச்சீவன் முத்தனைப்போ லப்பந்தமும் அதுநீக்கலாகிய வீடு முண்டேன்பது சாதியாற் பெறப்படுகின்றது. இவ்விரண்டு மவருக்கின்றேன்றல் இலக்கணங் குறைவுபடலி னவ்வியாத்திதுற்றந் தங்குமன்றே? அன்றியுஞ் சீவனுண்டாகலிற் பந்தம் வீடுண்டாமேன்னு மந்நுவ்ய வியதிரேகங்களுந் மாறுகோ ளாமேயென்று வினவுகின்றன்.—

(இ—ள்.) எல்லாச்சீவரும் இவனு மென்றீர்:-இக்கூற்றி லோரைய முண்டாகின்றது ; என்னை யெனின்? அச்சருவான்மபாவ மிவனிடத்துண் டாயின், இவன் முத்தியடைந்து எல்லாச்சீவரும் முத்தி பெறமல் இருப் பான் ஏன் ; அடைந்தா ரென்பதற்கு முன்னுள்ள ஞானிகளா லிவ்வுலகு யிர்க ளீண்டு முத்திபெறுமலிருக்கின்ற பிராகபாவமே சான்ருகலினென்க. அற்றன்று. எல்லாச் சீவரும் வெவ்வேறு ஆனல், இவன் எல்லாம் அலனே ; எல்லாப்பொருளும் என்பது, கேட்டுவந்த வினப்பொரு ளென்க. இதை யென்பதையு மவ்வாறே கொள்க. ஏனைய வெளி. தான் தேற்றத்தில் வந்தது. ஏகார மீற்றசை. (௯எ)

அகமெனு மான்மா பூரண மேக மனேகவிதஞ் சீவர்
அகமெனு மந்தக் கரண வுபாதிக ளளவிலே யாதலினுற்
சகமுழு துங்குளிர் சந்திர னேகஞ் சலசந்திரரும் பலவாஞ்
சகமதி லேரிகுளஞ் சிறுகுழி சால் சட்டிகுடம் பலவால். (கசசு)

அவ்வினவிற்கு விடை யிதுமுத லிரண்டு கவிகளாலுங் கூறுகின்ற ரிதிற் பிரதிவிம்ப நியாயத்தாற் கூறி விளக்குகின்றார்:—

(இ—ள்.) அகம் எனும் ஆன்மா பூரணம் ஏகம் அனேக விதம் சீவர் ; எல்லாச்சீவரு மிவனு மென்றது, ஒருடற்குக் கைகான் முதலிய வவயவம் போன்றன்றிக் கூறியவாறு மென்க ; என்னை ? அகம் எனும் அந்தக்கரண உபாதிகள் அளவிலே ஆதலினல், இவற்றிற் பிரதிவிம்பித்த வச்சீவரும் பலராத லமைவுடைத்து. இதற்குத் திட்டாந்தம்: சகமுழுதும் குளிர் சந்திரன் ஏகம் சலசந்திரரும் பலவாம். யாதினு லெனின் ? சக மதில் ஏரி குளம் சிறுகுழி சால் சட்டி குடம் பலவால் = இவ்வுபாதிகள் பல்படலி னதிற்பிரதிவிம்பமும் பலவாதல்போ லென்றவாறு. ஆலீற் றசை. (௯அ)

சட்டி குடங்களி லொன்று நசித்திட வதனுட் சலசந்திர
னொட்டு முதற் சந்திர னொடுகூடு மொழிந்தவை கூடாவே
கட்டு முபாதி நசித்திடு சீவன் காரணவான் மாவிற்
கிட்டு மைக்கிய முபாதி கெடாதவர் கேவல மாகாரே. (கசஎ)

இதிற் சாமானிய தருமத்தை முடித்து விடையை முடித்துக் கூறு கின்றார்:—

(இ—ள்.) சட்டி குடங்களில் ஒன்று நசித்திட அதனுள் சலசந்தி ரன் ஒட்டும் முதல் சந்திரன் ஒடு கூடும் = சட்டி முதலிய கூறிய வுபாதி களி லியாதேனு மோருபாதி தனக்கு விரோதியான பொருள்களான் சிக்

கப்பெறுமாயிற் றன்னுட் பிரதிவிம்பித்து நின்ற சலப்பிரதிவிம்ப சந்திரன்று னென்றுபடற்கு முதலாக நின்ற விம்பசந்திரனோடு சொரூப சுபாவமாகும் என்றது, உபாதியால் வேறுபட்டுத் தோன்றிய தோற்றவொழிவு மாத்திர மென்க. இப்பொருளைத் தாட்டாந்தத்திற்குங் கூட்டுக. ஈண்டு பாதி யென்றது பிரதிவிம்பத்திற்கு விசேடணமாய் நின்றதை யென்க இதுவுந் தாட்டாந்தத்திற் கமையு மென்க.

ஒழிந்தவை கூடாவே = தம்முபாதி கெடாத வேனையசந்திர ரம்முதற்சந்திரரோடும் பொருந்தாதே ; இத்திட்டாந்தம்போல, ஒட்டு முதற்சந்திரன் என்றது வினைத்தொகை. கட்டும் உபாதி நசித்திடு சீவன் = பந்தப்படுத்து மவித்தியாவுபாதி ஞானத்தா னசிக்கப்பெற்ற சீவன் ; காரண ஆன்மாவில் ஐக்கியம் கிட்டும் = தனக்கதிட்டான சொரூபமான வான்மாவினிடத் தொன்றுபடும் ; உபாதி கெடாதவர் கேவலம் ஆகார் = அவ்வவித்தியோபாதி கெடாத வேனைய பிரதிவிம்பசீவர் மோட்சத்தை யடையமாட்டா ரென்றவாறு. ஏகார மிரண்டு மசைகள்.

'கட்டுமுபாதி' என்றமையா லவித்தை யென்றும். முன் 'னந்தக்கரணவுபாதிக' ளென்றதற் கிது மாறன்றோ வெனின் ? ஆண்டாகுபெயராற் கூறினமையி னன்றென்க. இச்சீவ ரொன்றுபடும் வகை மஹாவாக்கியங் கூறுமிடத்திற் கூறினு மென்க. ஆயி னுண்டுக்கூறியதை யீண்டுக்கூறல் புனருத்தமன்றோ வெனின் ? வேறொருபொருளை விளக்கலி னன்றென்க. அப்பொருள், ஆன்மா வொன்றாயின் பந்தமுற்றவனு முத்தியுற்றவனு மின்றாதல் வேண்டும். அவை யின்றெனின் ? அவை கூறிய சுருதியு, முத்தியநுபவமும், பயனற்றவும், விருத்தமுமா மென்க. அற்றன்று. நானாவாகவே வேறுதலே யமையு மெனின்? எல்லா மிவனேன்னு மேகான்மவாதமமையா தென்ற மாணக்கனுக்கு, விம்பப் பிரதிவிம்ப வாதத்திற் பந்தமோட்சமுடைய நானாசீவர் பிரதிவிம்பபக்ஷத்தும் விம்பபக்ஷத்தி லேகான்மபாவமும் பெறப்படலி னிருவகைக்குற்றமு மின்றென்று கூற லென்க. இங்ஙன் 'மௌபாதிக' மாகலின் 'மஹாவாக்கியத்தா லக்கியங்கூறல்' பாதாசமானுதி காணத்தாற் கூடுமென்க. இவ்விசாரத்தை விருத்திப்பிரபாகர முதலிய முடிந்தநூலில் விரித்துணர்க வென்க. (கக)

இவனயன் மால் சிவனுகிப் மூவரோர் டெப்படி யொப்பாவன்
சிவன்முதன் மூவருமகில சிருட்டி திதி நாசங்கள் செய்வா
ரவர்பிறர் மதிகளு முக்காலங் களுமறிவார் விபு வாவார்
தவமிகு குருவே யிவனுக் கவையிலோர் சற்றுங் காணேனே. ()

இனி, பலசீவரு மிவனு மென்பது கூறிய வாற்று லொக்குமேனு, மீசனுமா மென்பது மிப்பிரதிவிம்பபாவத்தா லெனவு மேற்றுது மங்ங

னமாயினும், பிரதிவிம்பங்களுக் கிலக்கண மொன்றவதன்றி மாறுபடி னவ்வியாத்தி யதிவியாத்தி முதலிய குற்றங்க டங்குமே. அற்றன்று. ஞானி யஞ்ஞானி யென்ற வேறுபாட்டால் வேறுபடு மெனினும், அஞ் ஞானி யொழிந்த ஞானியுமீசனும் பிரதிவிம்ப பாவத்தாலு மகமமதைக ளொழிந்த பாவத்தாலு மொப்புமைகாணுது விஷம்பம் பட லென்னை யென்று இதில் வினவுகின்றான்:—

(இ—ள்.) வெளி. அயன்மால் சிவ னென்று நிறுத்த முறையால் சிருஷ்டி திதி நாசங்கள் செய்வார் என்று நிரை நிறுத்தலான் நிரைநிறைப் பொருள்கோள். அன்றிப், பிரமனுக்குச் சிருஷ்டி யொன்றும், மாலுக் குத் திதியோ டிரண்டுஞ், சிவனுக்கு மூன்று மெனக் கொள்ளினு மமையு மென்க. அன்றி யம்மூவருக்கு மம்மூன்றுங் கூறினு மிழுக்காது. இம் மூன்றிலு மீற்றிற் கூறிய மதமே சிறப்புடைத்து. என்னை? அம்மூவருக் கும் பொதுவாக பிறர்மதிகளும் முக்காலங்களினு மறிதலும், விபுவாதலும் கூறியிருத்தலி னென்க.

பிறராவார் மூவருமொழிந்த சீவர். இனி, எண்குணங்களைக் கூறின் சிவனொருவனுக்கே யமையினு மமையு மாகலி, னிச்செயலுங் குணமுந் தன் மையும் விலக்கப்படாவாய்ப் பொதுமையினிற்றலி னென்க. இக்குணங் கருமங்க ளிம்மூவருக்கு முடைமையை யவரவர்புராணத்தாற் காண்க வென்க. ஈண்டு தவம், சிரவணுதிய சத்துவத்துவம். (௬0)

தடத்துநீர்நிலாத் திரியொளி யுபயமுந் தழுவுமூர் தனைக்காக் கும், குடத்துநீர் விளக்கினி லொளியிரண்டு மோர் குடும்பமாத் திரங் காக்கு, மடுத்தமைந்தனே ஞானியு மீசனு மறிவினுற் பிரி வில்லை, கெடுத்தமாயை யின்குணங்களான் மேலென்றுங் கீழெ ன்றும் பிரிவா மால். (௬௪௧)

இதுமுதலிரண்டு கவியானு மதற்குச் சமாதானங் கூறுகின்றார்:—

(இ—ள்.) தடத்துநீர் நிலாத்திரி ஒளி உபயமும் தழுவும் ஊர்தனைக் காக்கும்=இவ்விரண்டும் பெரிதாகலின் றன்னை யடுத்த வூரிலுள்ளாரைக் காத்துக்கொள்ளும்; குடத்து நீர் விளக்கினில் ஒளி இரண்டும் ஓர் குடும் பம் மாத்திரம் காக்கும் = இவ்விரண்டுஞ் சிறியதாகலிற் றன்னை யடுத்த வொரு குடும்பத்திலுள்ளாரை மாத்திரங் காத்துக்கொள்ளும்; அடுத்த மைந்த னே (இத்திட்டாந்தம் போல), ஞானியும் ஈசனும், கெடுத்த மாயை இன் குணங்களால் கீழ் என்றும் மேல் என்றும் பிரிவு ஆம்; என்னை? மாயை யின் ராசதகுணம் குடநீரும் விளக்கொளியும் போல வருகிப் பலவாகலி தனன் சம்பந்தமான சீவருஞ் சிற்றறிவுடையாரானர், அம்மாயையின் சத்து

வருணை மொன்றாய் வியாபகமாய் நிற்றலி னதன் சம்பந்தமான வீசன் மூன் றறிவனறு னென்க. இதனலிதற்குத் தடத்துநீரும் நிலாத்திரியோளியு மூவமை கூறினர். இக்குடமூந் தடாகமும் விளக்கும் நிலாத்திரியுமாகிய சிறிதுபெரி தென்னு முபாதியால் வேறுபாடே யன்றி, நீரின்றன்மையாலு மொளியின்றன்மையாலுங் காத்தலு மொன்றாதல் போல; ஞானியும் ஈச னும் அறிவனல் பிரிவு இல்லை = இக்கிஞ்சிஞ்ஞத்துவ சர்வஞ்ஞத்துவங்க ளைக் கற்பிக்கு மிராதசத்துவ குணேபாதி நீங்கிய சுத்தவறிவினிடத்தே யிவ்வேறுபா டின்றென்றவாறு.

பின்னையோ, மாயை, யவித்தைகளின் றன்மையே கூறிய குணங்க ளென்க. இக்குணங்களைத் தம்மிடத்துப் பிரதிவிம்பத்தினிடத்துக் காட்டு மன்றி யதிஷ்டானத்தினிடத்துக் காட்டாமையி னறிவினற் பிரிவில்லை யென்றார். இப்பொருளைத் திட்டாந்தத்திலு நீர்ச்சாமானியத்திலு மொளி ச்சாமானியத்திலுங் கொள்க. இவை ஏகதேசவுவமானம்.

ஊரும் தும்பழம் ஆகுபெயர். தழுவலை யூருக்குங் கூட்டுக. ஆ லீற்றசை. ஞானியு மீசனு மெதிர்நிரைப்பொருள்கோள். (சக)

நரரின் மன்னரைச் சித்தரைப் போலவே நாரணன் முதலான
சுரர்கண் மாயைவல்லவ ரணிமாதிக டொக்க மாதவ மிக்கோர்
தரணிமா னிடர்க் கவைக ளில்லாமையாற் றாழ்வுள ராலும்
பிரமபா வனையா லிவரவரெனும் பேத மொன்றிலை பாராய். (கரு0)

சத்துவ ரசோதணங்க ளிரண்டு மொரு மாயையினதாக ஒன்றிற் கொன்று வேறுபடும் வேறுபாடெவ்வாற மெனவரி னிவ்வாறமென வுவமானத்தாற் கூறிச் சமாதானத்தை முடிக்கின்றார் :—

(இ—ள்.) நரரில் மன்னரை சித்தரை போலவே = பொதுமையி னின்ற நரச்சாதியுள்ளு மரசுரிமை நடாத்துஞ் சிறப்புடைய வரசப்பகுதி யார் போலவுஞ் சித்திகளைப் பயின்று பெற்ற சிறப்பினையுடைய சித்தர் பகுதியாரைப் போலவுமே; நாரணன் முதலான சுரர்கள் மாயை வல்ல வர் = கூறிய மூவரு மாயையில் வல்லவராய்; அணிமாதிகள் தொக்க மாதவம் மிக்கோர் = அணிமாமுதலிய வட்டசித்திகள் தொகப்பெற்ற சுத்தசத்துவமே வடிவமான தவத்தில் மேம்பட்டோர்; தரணி மானிடர்க்கு அவைகள் இல்லாமையால் தாழ்வு உளர் ஆனலும் = இவ்வுலகின் கண்ணுள்ள மக்கட்பிறப்பினராய் ஞானிகட் கச்சித்தி யின்மையா லச்சித்தி யிற் றாழ்வுடையவராலும்; பிரம பாவனையால் இவர் அவர் எனும் பேதம் ஒன்று இலை பாராய்; யாதினலெனின்? மன்னர்சித்தரிடத்து

மொழிந்த வந்தணர், வணிகர், சூத்திரர் முதலானோரிடத்து, மங்நரச்சாதி வியாபித் தொன்று யாணைசெலுத்தல் சித்திமுதலியவற்று லுயர்வு தாழ்வு காணப்படாமை போல அதிட்டான சேதன பாகத்திற் சற்றும் பிரிவின் மையா லென்றவாறு.

தாழ்வை நரரி லேனையோர்க்குங் கூட்டுக. பேதம் ஒன்றேன்றது, சிறுமையினின்றது. 'நரரில்' என்றமையா லச்சாதி சாமானியதரும மாயிற்று. ஒன்று மேன்னு மூற்றும்மை யெஞ்சி நின்றது. இங்ஙன மாயை யினிடத்துள்ள குணங்க டாரதம்மிய மடைவானே யென்ற வினு வவாவி நின்று இதற்குடை நரச்சாதியுள்ளு மரசர் சித்த ரேனையோர்போல வென்று விடைகூறலாகக் கோடலே சிறப்புடைத்து. இக்கருத்தாற் 'பாராய்' என்று கூர்ந்தறிதலைக் கூறினு ரென்க. (சஉ)

முத்தி நல்கிய சற்குருவே பல முனிகளுக் கணிமாதி, சித்தி பூமியிற் கண்டிருக்கவு மந்தச் செல்வமீச னதென்றீர், புத்தி யொத்திட வுரைதரு ளென்றிடிற் புகழுமீசனை வேண்டி, பத்தி செய்திடுந் தவத்தினு லியோகத்தாற் பலித்ததென் றறிவாயே.()

கூறியவா றீசனதான சித்திக ளவனிடத்தே நில்லாது சில ஞானிக ளிடத்துங் காணப்படலி னதிவியாத்தி யாமே யெனின்? அவ்வாறன் மைக்கு நியாயங் கூறி விடையு மிதிற் கூறுகின்றார்:—

(இ—ள்.) முத்தி நல்கிய சற்குருவே, பூமியில் பல முனிகளுக்கு அணிமாதி சித்தி கண்டிருக்கவும்; (இங்ஙனமாக) அந்தச் செல்வம் ஈச னது என்றீர் = இதனுல் அந்நுவய வியதிரேகத்திற்குத் தடை. என்னை? சித்தியுடையவன் ஈசனெனவரின், அச்சித்தியுடைய சிலர் சித்தரென்றகு தலன்றி யீசனென் ருகாமையின்; (இவ்வையந்தீர) புத்தி ஒத்திட உரைத் தருள் என்றிடில், புகழும் ஈசனை வேண்டி பத்தி செய்திடும் தவத்தினுல் யோகத்தால் பலித்தது = அன்றி யவ்வீசோபாதியான மாயைக் கியல் பாய்த் தன்னிடத்திருப்பது போல விம்முனிவரிடத்தின்மையி னிரதாகந் துக மாகவி னியல்பு விலக்கப்படாமையி னந்நுவய வியதிரேகங்களுக்கு விரோத மின்று; என்று அறிவாயே.

ஏகார மீற்றசை. புத்தி = யூகம்; அது தருக்கம் அநுமானம் முதலி யவை. புகழு மீசன் = வேதம் புகழு மீசன். வேண்டி = பிரார்த்தித்து; வேண்டி செய்திடுந் தவத்தா லியோகத்தாற் பலித்தது. எனமுடிக்க.

பத்திசெய்திடுதலே தவமாகலின், பத்தி செய்திடுந் தவத்தினு லென் ருர். அப்பத்தித்தவமாவது:—"நெக்குநெக்குருகி யுருகிநின்று மிருந்து,

கிடந்து மெழுந்து, நக்குமழுதுந் தொழுதுவாழ்த்தி நானாவிதத்தாற் கூத்து நவிற்றிச், செக்கர்போலுந் திருமேனி திகழநோக்கிச் சிலுசிலுத்துப், புக்கு நிற்ப தென்றுகொல்லோ வென் பொல்லாமணியைப் புணர்ந்தே." என்னுந் **திருவாசகத்திற் கிலக்காகிய வறுபத்துமூவர் பன்னிராழ்வார் செயல்.**

ஶ்ரவணம் கீர்த்தநம் விஷ்ணோ: ஸ்மரணம் பாதஸேவநம்| அர்ச்சநம் வந்தநம் தாஸ்யம் ஸக்யம் ஆத்மநிவேதநம் || என்பனவற்றைக் கூறினு மொக்கும். விஷ்ணோ = விண்டுவை; ஶ்ரவணம் = அவனது கல்யாண குணங்களை சுருதிஸ்மிருதி புராணங்களாற் கேட்டல்; கீர்த்தநம் = அவன்றிருநாமத்தைத்தன் வாயாற்பாடல்;திருநாமமாத்திரமேயன்றித் திருவாய்மொழி போன்ற புகழுமாம். ஸ்மரணம் = எப்போதுமவனை மனத்தா னினைத்தல்; பாதஸேவநம் = அவன்றிருவடியை வணங்கல்; இது அவனது சரவடிவமான சன்னியாசியை வணங்கலும், அசரவடிவமான ஆத்மார்த்த பரார்த்தத் திருவுருவை யாலயங்களிலுந் தன்முன்னுங் காண வணங்கல். அர்ச்சநம் = சந்தன வக்ஷதை முதலிய சோடசபதார்த்தோபசாரத்தா லர்ச்சித்தல்; வந்தநம் = முக்கரணங்களையு மவன் றிருவடி விட்டகலாது வைத்தல்; இதனலிது, பாதஸேவநத்தினும் வேறு. தாஸ்யம் = அவனுக்குத் தன் குடிமுழுது மடிமையாக்கல்; அவன் பணித்தவாறன்றித் தன் செயலற்றிருத்தல். ஸக்யம் = தோழனாயு நிற்றல்; இது **திருமங்கை மன்னன்** சரிதத்தாலுந் **தம்பிரான்றோழன்** சரிதத்தாலும் விளங்கும். ஆத்மநிவேதநம் = உடல் பொருளாவிகளை யவனுக்கு **வி**ற்றல். இவ்வொன்பதுங் கொள்க. இவையு மவற்று ளடங்கும், விரிக்கிற்பெருகும்.

இனிப், **பத்தியும்** செய்திடும் **தவமும் யோகமு** மென வும்மைத் **தொகை**யாகக் கொள்ளினு மமையு மென்க. இங்ஙனமாயின், தவம் **கிருச்சிர** முதலியவை. **யோகம்** எட்டங்கத்தோடுங் கூடியது. இவற்றுள் **பத்தியாற் சித்திப்பது** விரைவாகலி னது முற்கூறப்பட்டது. இனி, தவமென்பது, 'உற்றநோய் நோன்ற லுயிர்க்குறுகண் செய்யாமை, யற்றே தவத்திற்குரு' வென்பன கொள்ளினு மமையு மென்க. **சூடலை புசுண்டர் அகத்தியனார்** முதலியோரு மிவற்றாற் சித்தி பெற்றவர். 'முனி' என்பது வடநூன்முடிபாய் நிற்றலின் 'பலமுனி' யென்றாயிற்று. அன்றிப், 'பலர்' என்ற வுயர்திணைச்சொல்லீறு கெட்டுநின்றதெனினு மொக்கு மென்க. ()

**சிவ சொரூபமாந் தேசிகமூர்த்தியே சித்தி முத்திக ளிரண்டும்,** தவ முளோ **ரடைகுவரெனி** லவர்கள்போற் சகலரு மடை

வாரோ, அவர்கள் பூருவஞ் சித்தியு ஞானமு மடைந்ததுங் கண் டோமே, இவர்கள் ஞானிக ளென்றிடிற் சித்திக ளிவர்க்கிலாவகை யேதோ. (கருஉ)

ஈசனைவேண்டி பத்திசெய்திடுந் தவத்தாலி யோகத்தால் கேவலம் சித்திமாத்திரம் வருமோ? அன்றி ஞானமும் வருமோ? இரண்டும் வரு மெனிற் சில ஞானிகளிடத் திப்போ தவ்விரண்டுங் காணாமையி னவ்வி யாத்திக்குற்றந் தங்குமே யென வினவுகின்றன் :—

*என்னை? இப்போதுள்ள ஞானிகளிடத்தும் பூர்வ சமஸ்காரமான வம்மூன்று முலோகோபகாரமாகச் செய்துவாவு மவற்றின் பயனான சித்தி காணாமையி னென்க. இது அந்நுவயயுத்திக்குத் தடையாகலி னென்க.*

(இ—ள்) வெளி. ஓகார மிரண்டும் வினா. ஏகார மசை. (சச)

*காமியத் தவங்காமிய மொன்றையுங் கருதிடாத் தவ மென்றும்*
*பூமியிற் றவமிருவகை சித்தியும் போதமுந் தரு மைந்தா*
*ஆமிவற்றி லொன்றியற்றினா ரொன்றையே யடைகுவ ரிது தீர்வை*
*யாமுனைத்த வவ்விரண்டையு மியற்றினா ரன்றுள பெரியோரே ()*

*அனக மைந்தனே முத்தி ஞானத்தையே யடைந்தன ரல் லாமற், சனகன் மாபலி பகீரதன் முதலினோர் சித்திகள் படித் தாரா, வினிய சித்தியை விரும்பினார் சிலர்சில ரிரண்டையு முயன் றார்கள், முனிவர் சித்திகள் வினோதமாத்திரந் தரு முத்தியைத் தாராவே.* (கருச)

இவ்விரண்டு கவியானு மதற்கு விடை கூறுகின்றார் :—

*அத்தவமித்துணைப் பிரிவென்று மொவ்வொன்றிற்கும் பய னிதுவிது வென்று மப்பயனுக்கும் பய னிவையென்றுங் கூறலின் என்க.*

(இ—ள்:) காமியத்தவம் = காமிக்கப்பட்ட தவம் ; (காமம் = இச்சை) இவை யெண்ணிறந்தன வாகலின் பொதுவாய் பாட்டாற் கூறினார். காமி யம் ஒன்றையும் கருதிடாத்தவம் = அங்ஙனம் விரும்பப்பட்ட விருப்பவி டயங்களுள் ஒன்றையேனு மாகுதல் மனத்தில் விரும்பாதிருத்தலாகிய தவம் ; (இது நிட்காமியம்) என்னும் பூமியில் தவம் இருவகை. பூமியி லென்று பொதுப்படக் கூறினு முத்தாதருபூமி சிறந்ததென்று மதற்குத் தெற்குள்ள பூமி யதனோ டொருசா ரொத்ததென்று மிவையுள்ளிட்ட விச் செம்புத்தீவன்றி யேனையதீவு இத்தவத்திற் குரியதன் றென்றவாறு.

**சித்தியும் போதமும் தரும்** = கிரையே காமியத்தவம் சித்தியையும், நிட்காமியத்தவம் ஞானத்தையுந் தரத்தக்கன; **ஆம் இவற்றில் ஒன்று இயற்றினர் ஒன்றையே அடைதவர்** = தந்தங் கருத்துப்போலச் செயல்களு மப்பயன்களை யினலாற் றனித்தனியே யொன்றொன்றையே பெறுவார்; **யாம் உரைத்த அவ்விரண்டையும் இயற்றினர் அன்றன பேரியோர்** அதனு லவ்விரு தொழிலு மிருபயனையுந் துவ்வலா லவ்விருபயனையு மடைந்தார். **மைந்தா இது தீர்வை** என்றது, இங்கியதியிற் பிறழா தென்றவாறு;

ஈற்றேகார மசை. ஒன்றென்றதை காமியத்திற்குங் கூட்டி, ஒன்றைக் காமித்தந்தவ மெனினு மொக்கு மென்க. (ச)

இனி, **அனக மைந்தனே, சனகன் மாபலி பகீரதன் முதலாயி னோர், நிட்காம தவம் செய்து அதன் பயனுன முத்திஞானத்தையே அடைந்தனர் அல்லாமல் சித்திகள் படித்தாரா** = சித்திகளுக் கேதுவாகிய காமியத்தவத்தைச் செய் தவற்றைப் பழகினரா? இல்லையே யென்றபடி. முதலினே றென்றமையால், வேடராஜன், கற்கடி, காதி, லவணன், சிகரத்துவசன் முதலிய பல்லோரு முளரென்க. **முத்திஞானம்** இரண்டாம் வேற்றுமை யுருபும் பொருளுந் தொக்க தொகைநிலைத்தொடர்.

இனி, **இனிய சித்தியை சிலர் விரும்பினர்** = தனக்கு முலகிற்கும் விநோதத்தைப் பயக்கத்தக்க சித்தியை மாத்திரங் காமியத்தவத்தால் சிலர் விரும்பினர்; **சிலர் இரண்டையும் முயன்றார்கள்** = சிலர் சித்தி முத்தி இரண்டையும் விரும்பி காமிய நிட்காமிய மிரண்டையு மாற்றினர்கள்; இவர்களின் பெயர் மேற்கூறுதும். **முனிவர் சித்திகள்** = முனிவராவார் மனனசீலாள். இதனுன் ஞானமின்றிய சித்தர்களிடத்துள்ள சித்திகள் போலவே, இஞ்ஞானிகளிடத்து முள்ள சித்திகளும் விநோதமாத்திரந் தரும், முத்தியைத்தாரா வென்றவாறு. ஈற்றேகார மசை. முன்னின்ற வேகாரம் பிரிநிலை.

இனிய சித்தியை விரும்பினர் சிலராவார் :—**விசுவாமித்திரர், சுலபை, கோரக்கர்** முதலானோர். 'நாமிருவர் பகை நீங்கக் கமலவேதா சொன்ன தனிஞானத்தின் றொகுதி' யென்றதனுல், **முன்றவ மியற்றிய போதஞ்ஞான** மின்றென்ற வாறுயிற்று. இவ்விடயத்தை யவரவர் சரித்தாலு முணர்க வென்க. (சரு) (சசு)

யோகஞானமே முத்தியைத் தருமெனி லொழிந்த சித்திகள் வேண்டி, மோகமா யுடல் வருந்தினர் சிலர் சிலமுத்தர்க ளேனைன்றூற், போகமாய்வரும் பிராரத்த கன்மங்கள் புசித்தன்றோ நசித்

தேகு, மாகையா லந்தச் சித்திகள் பிராரத்வ மாகுமென் றறிவா யே. (கருரு)

ஞானப்பயனைத் தாராத காமியத்தவத்தை ஞானம் வந்த சீவன் முத்தரு மாற்றுவானேனென்னு மாணாக்கன் வினவும் இதற்கு விடையு மிதிற் கூறுகின்றார் :—சில வென்பது ஈறு கெட்டது.

(இ—ள்.) யோக ஞானமே முத்தியை தரும் எனில்=*நிட்காமத்தின் பயனான சித்தயோகாக்கிரூபமான ஞானத்தாலே நிரதிசயவின்பம் பயக்கு மெனின்;* ஒழிந்த சித்திகள் வேண்டி=*இவ்வின்பிற்கு மாறாய சித்திகளை* விரும்பி; உடல் மோகமாய் உடல் வருந்தினர்=*அவ்வின்பமே வடிவமான சீவன்முத்தரு மிங்கிலைக்கு மாறாய தேகமே தானென்னு மோகத்தா லத்தே கத்திற்கு பிரகாயப் பிரவேசமாக சகமன முதலா வட்டமகாசித்திகளைப் பழகுவதா லிவ்வுடல் வருத்தமுற்றனர்;* சிலர் சிலர் முத்தர்கள் ஏனென்றல்= *இதற்குக் காரண மென்னை யென்பையாயின்? சிலர் சிலர் என்னு மடுக்குச் சிறுமை நோக்கி ஏகதேசிகள் என்னும் பொருளில் வந்தது.* இவர், சூடாலை *முதலியோரைக் குறித்ததென்க.*

போகமாய் வரும் பிராரத்த கன்மங்கள் புசித்தன்றே நசித்தேதுர், ஆகையால் அந்தச் சித்திகள் பிராரத்வம் ஆதுமென்று அறிவாயே, *இதுவே யிச்சித்திக்குக் காரணமன்றித் தன் சுயவிச்சை காரணமன் றென் றவாறு.* ஏனைய சுகதுக்கங்கள் போ *லென்ப தெஞ்சியது. உடலை முன் னுங் கூட்டியது, அஞ்ஞான தசைக்கண் ஆத்மாவையு மகங்காரத்தையு மொன்றாகக் கண்டது போலன்றி வேறாகக் காணவி னென்க. முன் ' மாத வஞ் செயினுஞ் செய்வர் ' என்றதனு லிது பெற்றிருக்க வீண்டுக் கூறல் புனருத்தமன்றோ வெனின்? அங்ஙனஞ் செய்தற்குக் காரண மாண்டுப் பெறாமையி னீண்டது பெற்றதனு லன்றென்க.* புசிப்பித்து *என்னும் பிறவினை, புசித்தென்று தன் வினையாயது வழுவமைதி யென்க.* ஈற்றே கார மசை. முன்னின்ற வேகாரந் தேற்றம். (சஎ)

*இலக்க மாயிரஞ் சுருதியா லூகத்தா லென்மன மசையா மற்,* பிலக்க வேண்டுமென் *றருள்குருவே யகப்பிராந்தி போய்த் தெளிவானேன்,* றுலக்க *மானகண் ணுடியை யடிக்கடி* துலக்கி *னுற் பழுதன்றே, யலக்கண் மாற்றிய தேவரீ ரெனக்குரை யமுதங்க டெவிட்டாவே.* (கருசு)

அடிக்கடி யாசங்கிக்குந் தன்னிடத் துவர்ப்புப் பிறவாதிருத்தற் பொருட்டு, "ஆசானை யெவ்விடத்து மப்படியே" என்ற கட்டளையின் படி யுவாது கருணையை வியந்து கூறுகின்றான் :—

(இ—ன்.) இலக்கம் ஆயிரம் = எண்ணிறந்த; சுருதி = உத்தரபாகச் சுருதி; ஆல் = கூறிய பொருளாலும்; ஊகத்தால் = பிரமாணவாராய்ச்சி முதலிய யுத்தியினாலும்; என் மனம் அசையாமல் நிலக்கவேண்டும் என்று அருள் குருவே = யான் கொண்ட சங்கையிற் கலக்கமடையாமல் ஐயந் தீர்ந்துணர்ந்த சொரூப ஸ்திதியினிலை பெறவேண்டுவதாக விடையருளிவரு மெனதாசிரியரே; (இதனை) லகப்பிராந்தி போய் தெளிவானேன். என்னுமைக ளெஞ்சி நின்றன.

துலக்கமான கண்ணாடியை அடிக்கடி துலக்கினால் பழுதன்றே. இதுபோல வபரோக்ஷஞான முண்டாயினும் பிரமாணகத பிரமேயகத சந்தேகங்களைப்பற்றிப் பலவாறாக வாராய்ச்சி செய்யினுங் குற்றமன்றே யாகலின்; அலக்கண் மாற்றிய தேவரீர் எனக்கு உரை அமுதங்கள் தேவிட்டாவே; உரை = விடை யென்றவாறு. இவ்விடை யளிக்கும் வல்லப மடியேனை யடிக்கடி யாசங்கிக்கச் செய்கின்றது. அலக்கண் காரண வாகுபெயர், பிறப்புக் காரணமாகத் துன்பம் வரலி னென்க. ஈற்றேகார மசை: முன்னின்ற வேகாரந் தேற்றம். (சஅ)

கைதவங்களைச் சாத்திரஞ் சொல்லுமோ கருணையா லெனையாளு, மையனே குருவே யெவ ராகினு மனுபவித்தா லன்றிச், செய்த கன்மங்கள் விடாவென்ற வசனமுஞ் சென்மசஞ்சிதம் வேவத், தூய்யஞானத் தீசுடுமென்ற வசனமுந் துணிவ தெப்படி நானே. (கறுஎ)

இதுமுதல் எசு-வது செய்யுள்வரையிலும் பிரமாணகத சந்தேகத்தை நிவர்த்திக்கத்தொடங்கி, இதில் "ஆரம்பத்தோடு தீரும் விவகாரம்" எனவும் "சஞ்சிதமெல்லாம் ஞானத்தழல் சுட்டு வெண்ணீறக்கு" மெனவுங் கூறிய விரண்டி லியாதுறுதி பயப்பதென்று வினவுகின்றான்:—

என்னை? சுருதி வஞ்சித்துப் பொருளைக் கூறுமோ? என்பதனா லென்க. ஆரம்பத்தோடு தீருமென்ற பொருட்கு மூலச்சுருதி: நாபுக்தம் க்ஷீயதே கர்ம கல்பகோடி ஶதைரபி: என்றது பூர்வ மீமாம்சாசுருதி "ஸர்வாணி கர்மாணி, ஜ்ஞானாக்நிஸ் ஸர்வ கர்மாணி பஸ்மஸாத் குருதே" என்பது உத்தரமீமாம்சா சுருதி. இவை யிரண்டுஞ் சுருதி யாகலி னிங்ஙன மாறுபடக் கூறி னிவற்றை சுவதப்பிரமாணமா யேற்ப தெவ்வாறெனா, "துணிவதெப்படி நானே" என்றையும் பிறந்த தென்க.

ஏனையபொருள் வெளி. ஈற்றேகார மசை. ஏகாரம் வினா. சொல்லாதே யென வெதிர்மறையிற் கொள்ளினு மமையுமென்க. (சுக)

சீவ பேதங்க ளளவிலை மைந்தனே செய்கையு மளவில்லை
யாவ வாமவ ரவரதிகாரங்க ளறிந்து பக்குவ நோக்கிப், பூவ
லர்ந்துபின் பலங்கள் காட்டுவபோற் பூருவஞ் சித்தாந்தங்,
காவ லவேதங்க ளிரண்டையும் வசனிக்குங் காண்டமூ வகை
யாலே. (கருஅ)

இதுமுத லிரண்டு கவியானு மதற்கு விடை கூறுகின்றார் :—இரண்டு முண்மையே, பக்குவத்தளவாகக் கூறிலினென்றதனு லென்க.

(இ—ள்) சீவபேதங்கள் அளவிலை; யாதினுலெனின்? முன்னியற்றிய கருமவேறுபாட்டா லவர்கள்குணங்கள் வேறுபடலி னென்க. ஈண்டு பேதம் குணத்தின்மே னிற்றலி னுதபெயர். இக்காரணத்தா லிப்போது செய்யுஞ் செய்கையும் அளவில்லை. அச்செய்கை: பாவம்,புண்ணியம், மிசிரம், பயனற்றவினை யென்பன வொவ்வொன்று மளவிறந்தன வென்க. ஆவவாம் = இவ்வாறுநின்றமையின், வேதங் கூறியவற்றொன்றனையே கூறின், அனைவர்க்கு மஃதமையாமையின், பூ அலர்ந்து பின் பலங்கள் காட்டுவபோல்=பருவங்காரணமாகப் பூப்புமீஇ பூத்தும் பயன்றருமூமீஇதந்து முயிர்கட்குச் சோலை நுகர்விப்பதுபோல; காட்டுதல் ஆதுபெயர், நுகர்வித்தற்காகலி னென்க. கருத்தாவின்றி யந்நுகர்ச்சி பெறுமையின் உயிர்கள் வருவிக்கப்பட்டன.சோலை தோன்றுவெழுவாய். பூவலர்ந்து பலன்களைக்காட்டுவ தஃதாகலின், அவர் அவர் அதிகாரங்கள் அறிந்து பக்குவம் நோக்கி = அதிகாரம் பண்பு மிகுதி. பக்குவம் செவ்வி. இவற்றை மேல்'கள்ளுமூனு நீ விரும்பினல் மகங்கள்செய் காமத்தின் மனதானல், கொள்ளும் பெண்டோடு கலவிசெய்.' என்றவிடத்தில் விரித்துக் கூறலி னுண்டுணர்க.

பூருவம் = அநுபவித்தே தீருமென்ற பூர்வபக்கத்தையும்; இது பாவஞ்செய்தால் நரகத்தையும், புண்ணியஞ்செய்தால் சுவர்க்கத்தையும் அநுபவிப்பா யென்றது. சித்தாந்தம் = ஞானத்தாற் கருமமனைத்துங் கெடுமென்றல்; இவ்விரண்டையும், காண்ட மூவகையாலே = மூவகை காண்டம் :—கருமம்; பத்தி, ஞான மென்பன. இவற்றாலே காவல வேதங்கள் வசனிக்கும் மைந்தனே, எ-று,

இது வசிட்டோபாக்கியானத்தாலுங் கொள்க. அது,' தான்மாளாக் கிரியையார்க்குக் கிரியை சாற்று சாதனமூளோர்க் குணர்வைச் சாற்று.'

என்று னென்றது. இனி, இக்கிரியையும் சாதனமுமே, அதிகாரமும், கிரியையினர்க்கு விடயவிருப்பமும் சாதனமுளோர்க்கு வீட்டுவிருப்பமுமே யவருக்குப் பக்குவ மென்க. வேதங்காத்தல், "தாய் மக்களை வரைவின்மகளாக்காது கற்பழியாது காத்துக் கணவனிடத் தடைக்கல மாக்கல் போலச் சீவர்களை விடயத்திற்சென்று நிறைகெடாது பூருவஞ் சித்தாந்தங்களா விதங் கூறி வீட்டிற் சேர்த்த" லென்க. இங்ஙனஞ் சீவர்க்குக் கூறற்காகப் பூருவஞ்சித்தாந்தங்களைக் காக்கும் வேத மெனினு மொக்கும். (இ0)

ஆன பாவிக ளடைவன நரகங்க ளவசிய மானாலுந், தான மந்திரவிரத வோமங்களாற் றவிரு மென்பதும் பொய்யோ, வின மாம் பலசன்ம சஞ்சிதவினை யெத்தனை யானாலும், ஞான மாங் கனல்சுடுமென்ற மறைமொழி நம்பினால் வீடுண்டே. (கருக)

காண்ட மூவகையாலே யவ்விரண்டையுங் கூறி யதந்துப் பயனுங் கூறி யிதனை வற்புறுத்துகின்றார்:—

(இ—ள்.) **ஆன பாவிகள் அடைவன நரகங்கள் அவசியம்** யாதினாலெனின்? உயிர்க ளனாதிதொட் டருந்தல் பொருந்தல்களையே யியற்ற லியல்பு. அந்நுகர்ச்சியும் விதிவழியின்றித் தம்மிச்சை வழி யாற்றலி னவற்றிற்குப் பயன் பாவமே. இப்பாவந் தம்பயனைத்தர னரகமே. இஃதொருதலை யென்பா 'ரவசிய' மென்று ரென்க. **ஆனாலும்** = இவ்வினைப்பய னூட்டா கழியாவானாலும்; **தானம்** = கோதான முதலிய பலவும்; **மந்திரம்** = பிரணவம், பஞ்சாக்கரம், அட்டாக்கரம், காயத்திரி முதலியவை; **விரதம்** = சாந்திராயணம், கிரிச்சிரம், மாசசங்கிரமணம், ஏகாதசி முதலிய பலவும்; **ஓமம்** = நவக்கிரகசாந்தி, வாஜபேயம், பௌண்டரம், பசுபந்தன முதலிய பலவும். **களால்** = இவைகளா லப்பாவப் பிராயச்சித்தஞ் செய்யின்; **தவிருமென்பதும் பொய்யோ** = இப்போதியற்றிய பாவமேயன்றி முன்னியற்றி வந்த பாவமுங் கெடுமென்று கூறுஞ் சுருதியே யன்றி ஸ்மிருதி புராணங்களும் பொய்யாகாவே; **என்பது**, என்று ஒருமையாற் கூறியது **சாதியொருமை**. அனைத்தையு நூலென்னும் பொதுவழக்கு நோக்கி யென்க. **ஓகாரவினு எதிர்மறை விண்டப் பொருள்.**

இப்புண்ணிய கருமத்தாலேயே யிப்பாவவொழி வுண்டாமாயின், **ஈனமாம் பலசன்ம சஞ்சிதவினை எத்தனை ஆனாலும்** = பலசன்ம சஞ்சித வினை யென்றதை, பலசன்மங்களிற் செய்த சஞ்சிதவினை யென்பதன்றி, பலசன்மங்களுக்குக் காரணமாகிய சஞ்சிதவினையெனினு மொக்கும். ஞான

**மாம் கனல் சுடும் என்ற மறைமொழி நம்பினால் வீடு உண்டே.** *என்ற வாறு.*

**ஈற்றேகாரம் தேற்றம். வீடுபயத்த லொருதலை யாகலி** *னென்க. தான மந்திர முதலியவை நீராய் நின்று பாவமலத்தைக் கழீஇ நிற்றலி னிந்நீரினையும் வற்றச்செய்த நெருப்பாகலின்* **ஞானத்தை யக்கினி** *யென்றார், "புண்ணியம் நீராதல், புறந்தூய்மை நீரானமையும் வாய்மையா லகந் தூய்மை காணப்படும்" என்ற* **மறைமொழியா** *லென்க.* **புண்ணியமும் பிறவிக்கேதுவாகலி** *னப்பாவவினையோ டிதனையு முடன் சுட்டப்பட்டது. இவ்வாராய்ச்சி மேல், "துளங்கு தர்ப்பண மழுக்கறக்கை கொண்டு துலக்கிலுற் போமன்றி" என்றவிடத்தில் விரித்துணரப்படு மென்க.* **'ஞானாம் பலசஞ்சித'** *மென்று சஞ்சிதத்திற்கு ஈனத்துவங் கூறற்குக் காரணமு* **மாண்டே பேறப்படு** *மென்க.* **ஞானத்தாலேயே யிவைமுற்று மெரிக்கப்படு** *மென்க.* (ருக)

*என்மனந் திருக் கோயிலாத் தினங்குடி யிருந்தருள் குருமூர்த்தி, சென்ம சஞ்சித வினையை வேரறுத்திடுந் தேவரீர் மெஞ்ஞானந், தன்மயந் தரு மகிமையை விபுதராஞ் சமர்த்தரு மறியாமற், கன்மமாங் குழியினில் விழுந் தழிகின்ற காரண முரையீரே.* (கசுO)

**நீர் கூறிய வாற்றா லறிவிலார்க்கன்றே கன்மமென்றுகின்றது; அங்ஙன மன்றி யவ்வறிவுடையாரு மக்கரும மாற்றலி னக்கரும மிழிவென்று நீர் கூறுவரானே னென்று வினவுகின்றான்:—**

(இ—ள்.) **தேவரீர் மெஞ்ஞானம்** = *அடிகளடைந்த மெஞ்ஞானம்; அன்றி அடிகளா லருளிய மெஞ்ஞான மெனினு மொக்கும்.* **தன்மயந் தருதல்** = *தனது சச்சிதாநந்த சொரூபமாதல்;* **விபுதர் ஆம் சமர்த்தர்** = *தெய்வத்தன்மை யுடைய வலியர்;* **தெய்வத்தன்மை,** *கல்விகேள்விகளிற் சிறந்தொழுக்கத்தில்* **மேம்பட்டார் தன்மை. ஏனைய பொருள் வெளி.**

**வேரறுக்க** *மென்ற வினைக்கேற்ப ஞானத்தை* **வாளாகக் கொள்க. விபுதராவார்,** *ஜைமினி, சாபரர், பட்டபாதர் முதலானோர்.* **தாருகவனத் திருடிகளைக்** *கொள்ளினுங் கொள்க வென்க.* **கருமத்தைக் குழியாக்** *கூறினார், உயிர்களைச் சனனத்தினின்று மேலேற்றாமையி னென்க.* (ருஉ)

*அழிவிலாத தற்பதந்தனை மைந்தனே யகமுகத் தவர் சேர்வார், வழிநடப்பவர் பராமுக மாயினுன் மலர்ந்த கண் ணிருந்தாலுங், குழியில் வீழ்வர்கா ணப்படி வெளிமுகங்கொண்டு*

காமிக ளானோர், பழிதரும் பிறவிக்கட லழுந்துவர்பரகதி யடை யாரே. (கருக)

இவ்வா றறியாதிருத்தற்குக் காரணங்கூறி யக்காரணத்திற்கு மதற்கு விரோதியான ஞானத்திற்கும் 'முடிந்தது முடித்தலால்' பயனு முடன் கூறுகின்றார்:—

(இ—ள்.) மைந்தனே, வழி நடப்பவர் மலர்ந்த கண் இருந்தாலும் பராமுக மாயினல் குழியில் வீழ்வர்=பகற்பொழுது பதிகர் விழித்த கண்ணுடன் வழிச்செல்லினும் பாராக்கினு லவ்வழி நோக்கிச் செல்லாராயின் செல்வழிப் பழுதுபட்டுடைய குழிக்கண்ணே வீழ்ந்து பழுதுபடுவரன்றிக் குறித்தவூர் செல்லார்; அப்படி = இதுபோல; காமிகள் ஆனோர் = ஈண்டு காமம், சுவர்க்கவின்ப நுகர்ச்சி விருப்பம்; என்னை? இதுவே பூர்வ சுருதியாகலி னிகலோக வனிதாதி யிட்டவிடயங்களை விலக்கி யறிவித்த தென்க. இகலோகவிச்சையினின்றும் பரலோகவிச்சை யுடையவராய், வெளிமுகம் கொண்டு = அப்பூர்வசுருதி கூறியவின்ப மிதுவென்ற வள வானே யகத்தி லான்மதிருட்டி யின்றி புறத்தே திரிசியப்பொரு ளச்சுருதிக்கென்று கருதி யச்சுவர்க்கவின்பையே கருதி யனுபவித்தலின்; பழி தரும் பிறவிக்கடல் அழுந்துவர் = அறிஞரா விழித்துக் கூறப்பட்ட விழி வைத்தரும் பிறவியென்னுங் கடலின்கண் மூழ்குவதன்றி; பரகதி அடையார் = அச்சுவர்க்கங் கீழ்பட மேற்பட்ட நிலையினை யடையமாட்டார்; பின்னையே, கண்ணுடையரும் வழிநோக்கிச் செல்வாராயின் படுகுழி யில விக் குறித்தவூர் செல்வதுபோல, அகமுகத்தவர் = அக்காம நீங்கி வீட்டு விருப்புடையவர்; அழிவிலாத தத்பதந்தனைச் சேர்வர் = தன்மயமாகிய வீட்டையடைவர். எ-று. காண் முன்னிலையசை. ஏ—ஈற்றசை.

உவமானங்களுக் கேற்ப வுவமேயம் விரிக்கப்பட்டன. இதனாற் பயந்துவிட்ட யாதோவெனின்? அத்தன்மயந்தரு மகிமையை விபுதாஞ் சமர்த்தரு மறியாததற்குக் காரணம், பகிர்முகக்காமமெனவும், இதன் பயன் பிறவியெனவும், முன் கன்மத்தைக் குழியென்றது இப்பிறவி யைத்தரலி னென்க. இதனு லது ஆதுபெயர். இக்காமத்தா லப்பரகதி யடையாமையு மோர்பயனுகக் கூறினமையி னக்காமநீக்கமே யிப்பர கதிக்கு நிமித்தகாரண மென்றவாறு. வேதனி மயக்கம் பிறவிக்குக் காரணமாயினு மேனைய வவித்தை யஸ்மிதைகளை யிவற்றி லடக்கியது போல விவ்விரண்டையு மக்காமத்து ளடக்கிக் கூறினு ரென்க. இக்கூற்று, செந்நாப்புலவநுக்கு முடன்பாடென்க. "வேண்டுங்காற் பிறவாமை வேண்டுமற்றது, வேண்டாமை வேண்டவரு" மென்றமையானு மென்க.

பீற பெரியரும், 'நீராசையின்றேற் றெய்வமுண்டோ' என்றதனுனும் எற்றன ரென்க. இதை வசிட்டரும் விரித்துக்கூறினா ரென்க. (கூ)

சிறந்த நன்மையுந் தீமையு மீசனார் செய்விக்குஞ் செயல
ன்றோ, பிறந்த சீவர்க ளென்செய்வா ரவர்கண்மேற் பிழை
சொல்லும் வகையேதோ, துறந்த தேசிக மூர்த்தியே யென்றிடிற்
சுருதிநூற் பொருண்மார்க்க, மறந்த மூடர்கள் வசனிக்கும் பிரா
ந்திகாண் மைந்தனே யதுகேளாய். (கசுஉ)

இனி, 'வெளிமுகத்தவராய்க் குழியில் வீழ்வரெனவும்' 'அகமுகத்தவராய் வீடுசேர்வர்' எனவுங் கூறலின் முற்றுஞ் சீவச்செயலென்றாக லின், சீவர்கள் சுதந்திரரோ, பராதீனரோ? வென்ற வையம் நீக்கிக் கொள்பவன், 'அவனன்றி யோரணுவு மசையாது' எனும் பெரிய வாப்தர் மொழிப்படி யெல்லா மீசன்செய லாகலின் சீவர்களின் முயற்சி வேண்டாமென்ற மதம்பற்றி யாசங்கித்ததற்குச் சமாதானங் கூறுபவ ரிவ்வாறு கூறல் சுருதியின் கருத்தன்றென்று கூறுகின்றார்:—

தொடர்பாட்டா லிவ்வினுவிடைக ளிடைப்பிறவந்தன வென்க.

(இ—ள்.) துறந்த தேசிக மூர்த்தியே = என்னை யாவரணச்சிறையினின்றுந் துறந்த தேசிகமூர்த்தியே; சிறந்த நன்மையும் தீமையும் ஈசனார் செய்விக்கும் செயல் அன்றோ = உயிர்களுக்குச் சிறந்ததாயுள்ள நல்வினையுஞ் சிறப்பின்றிய தீயவினையையு முற்றுணர்வுடைய விறைவன் 'நீ யிதனை யியற்றுக, நீ யிதனை யியற்றுக' வென வவர்களைக்கொண்டு செய்விக்குஞ் செயல்க ளல்லவா; அங்ஙனமாக, பிறந்த சீவர்கள் என் செய்வார் = அவ்வினை வயப்பட்டுப் பிறந்த சீவர்களுக்குத் தற்சுதந்திரமான வறிவின்மையானன்மை தீமை கண்டாற்ற விவர்களுக்கு வலி யின்மையின்; இவர்கள்மேல் பிழைசொல்லும் வகை ஏதோ—சிலர் பாவத்தைச்செய்து துன்ப மனுபவிக்கிறாரென்றும், புண்ணியஞ்செய்து துறக்க மனுபவிக்கிறாரென்றும், பயனற்ற வினைகளைச் செய் தொருபயனு மடையவில்லை யென்னு மிக்குற்றங்கூறும் வகை யாதன்பாலதோ வறியேன்; என்றிடின், சுருதிநூல் பொருள் மார்க்கம் மறந்த மூடர்கள் வசனிக்கும் பிராந்தி காண்; சுருதி நூலென்றது = சுருதியாகிய நூலெனக் கோடலினும், உம்மைத்தொகையாகக்கோடல் சிறப்புடைத்து. ஏனைய நூல், ஸ்மிருதி புராணங்களென்க. மறந்த மூடர் என்றதனால் அவற்றைக் கற்று மறந்த மூடரெனக் கொள்க. கற்க மறந்த மூடரென்றா லென்னை யிழுக்கெனின்? அவர்களுக்கீசனுண்டென்பது மிவ்வுடற்கு வேறாய் சீவனுண்டென்பதுமே விளங்காமையிற் செயலின் பாதுபாடும் விளங்காதென்க. இதனாற் கற்று மறந்த மத்துவர் முதலானோரையே கொள்க வென்க.

ஈண்டு மறத்தல், துறபிமானத்தால் வேறுபொருள் கோடல், உண்மைப்பொருள் விளக்கிக் கொள்ளாமை முதலியன. இவை மார்க்க மென்றதனுற் பெற்றும். ஈண்டு மார்க்கம், பொருளல்லவற்றைப் பொருளென்றுணராது, 'எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருள், மெய்ப்பொருள் காண்ப தறிவு' என்க. மைந்தனே, அது கேளாய் = ஆகலினம்மூடர்கள் வசனிக்கு மப்பிராந்தி வாக்கத்தை விட்டுச் சுருதி நூற்பொருண் மார்க்கத்தை யாங்கூற நீ கேட்பாயாக. அது வென்னுஞ்சுட்டு பொருண்மார்க்கத்தைச் சுட்டிற்றென்க. மேல் விதந்துகூற லிதனை யாகலி னென்க. நன்மை தீமை யவ்வவ்வினையை யுணர்த்தின. (இச)

இகழ்ந்த வீசனார் சிருட்டியுஞ் சீவனார் சிருட்டியும் வெவ்வேறே
சகந்தனிற் பொது வீசனார்சிருட்டிகள் சராசரப் பொருளெல்லா
மகந்தையா மபிமானங்கள் கோபங்க ளாசைக ளிவை யெல்லா
மிகழ்ந்த சீவனார் சிருட்டிக ளாகுங்கா ணிமலனார் செயலன்றே. ()

இதுமுத லேட்டுக்கவியானு மப்பொருண்மார்க்கத்தை விசாரிப்பவரீதி லச்சிவச்செயல் மாத்திரமன்றிச் சீவனுக்குஞ் செயலுண்டென்று மவ்விருவர் செயலு மிவையென் றவற்றின் வேறுபாடு மிதிற் கூறுகின்றார்:—

(இ—ள்.) திகழ்ந்த ஈசனார் சிருட்டியும் சீவனார் சிருட்டியும் வெவ்வேறு = திகழ்வு- எண்குணங்களால் விளங்கல். இவையே சிருட்டிக்கு மீசனுக்குச் சிறப்பிலக்கணம். இதனை முன் சிருட்டிகூறுமிடத்தும், மேல்வருவனவற்று முணர்க வென்க. இவையின்மையால் வாளாச்சீவனென்றது மன்றி மேலு மிகழ்ந்த வென்றார். திகழ்ந்த, இகழ்ந்த வென்பன வார்சிடையிட்ட வேதுகை. ஆர் விகுதி யீசனிடத் துயர்விலுஞ், சீவனிடத்துப் பலர்பாலிலும் வந்தன வென்க. இவ்விருவர் சிருட்டியும் வேறு வேறவன, அவை சகந்தனில் பொது சர அசரப்பொருள் எல்லாம் ஈசனார் சிருட்டி; யாதினுலெனின்? இவ்விருவகைப் பிரபஞ்சமும் சீவர்களுக்குப் போகநுகர்ச்சிக்குப் பொதுமையி னிற்பதன்றி யீசனுக்கு மப்போக முதலியவற்றைச் சீவருக்குக் கூட்டி யூட்டி மறைக்குஞ் செயல்களுக் கேதுவாய் நிற்றலி னிவ் வீச்சுரனுக்குப் பொது. சகம் உயிர்களுக்காகலி னுதபெயர்.

இங்ஙனமின்றி, அகந்தை ஆம் அபிமானங்கள் = தேகாதிகளிடத்தி யானென்னு மகந்தையுடைய் வபிமானமும், இதுபற்றி யுண்டாம் பொருள்களிடத்தபிமான மெனதென்பனவும், ஆமென்னு மாக்கவினையாற் பொருள்களு மவற்றி லபிமானமுங் கொண்டா மென்க. கோபங்கள் = இவ்வபிமானத்தினிடத்து மாறுகண்டோரிடத்துக் கோபமும்; ஆசை

கள் = அவ்வபிமானப்பொருள் வன்மையாயவிடத்து இவ்வாறே யெப்போது மிருக்கவென்னு மாசையும். இவை யெல்லாஞ்சீவனார் சிருட்டிகளாகும்; யாதினாலெனின்? ஒவ்வொருவருக்கு மிவ்வபிமானாதிகள் வேறுபட்டுத் தம்மிடத்தே நிற்றலி னென்க. இவற்று ளாகந்தை முன்னர்த் தோன்றி யதன்பின் னேனையவை தோன்றலின் நிரையே காரணகாரிய முறையாய் நின்றன வென்க. ஆசை முதலியவை பலவாதல் சீவர்கள் பலவாதலேயன்றி யொவ்வொரு சீவருக்கும் விடயவேறுபாட்டா லவாமுதலியவும் வேறுபடலே, 'பொறிவாயி லைந்தவித்தான்' என்ற மறைமொழியின் விசேடவுரையிற் காண்க. (௫௬)

மூவராம் பரன் சிருட்டிக ளுயிர்க்கெலா முத்திசாதன மாகுஞ்
சீவனார் செயுஞ் சிருட்டிக டங்களைச் செனிப்பிக்கும் பிணியாகுந்
தாவரா திகணசித்திடி லொருவர்க்குஞ் சனனங்க ணசியா வாங்
கோபமா திகணசித்திடிற் பந்தமாங் கொடும் பிறவிகள் போமே.()

இதி லந்நுவய வியதிரேக யுத்தியா லிருவர்சிருட்டியின் பயனுங்கூறி வற்புறுத்துகின்றார்:—

(இ—ள்.) மூவராம் பரன் என்றது, இச்சிருட்டியாதிகளைச் செய்யு மந்தரியாமியே மூவருமாயின னென்க. சிருட்டிக ளுயிர்க்கெலா முத்தி சாதன மாகும் = முழுத்த விக்ஷேபமெல்லா முத்தியிற் கூட்டுகிற்கு மென்றதின் கருத்தே யிதன்கருத்தென்க. ஆயின் புனருத்தமன்றோ வெனின்? ஆண்டுக்கேவல விக்ஷேப மென்றமையா லிவ்விக்ஷேபமே முத்தியைத்தருமென்னு மதத்தை மறுத்தற்கு அது வீச்சுரனுடைய பிரேரகத்தா லாமென மறுத்தலி னன்றென்க. அற்றன்று. இத்தாவராதிக ளிருத்தலினல்லவா வுயிர்களுக் கவற்றி லாசையு மதுபற்றிப் பிறவியு முண்டென வாசங்கை வரின்; அங்ஙனமாயின், தாவராதிகள் நசித்திடில் ஒருவர்க்கும் சனனங்கள் நசியாவாம் = இச்சனன நசியாமல் என்மனைவி யிறந்தாள், மக்க ளிறந்தார், வீடு கெட்டது, நக ரழிந்தது, சோலை யழிந்ததெ‌ன மேன்மேலுந் துக்கம் வளர்ந்ததனாற் பிறவியுண்டாகலி னென்க.

இங்ஙன மாகலின், சீவனார் செயுஞ் சிருட்டிகள் தங்களைச் செனிப்பிக்கும் பிணியாகும்; ஆகலின், அக், கோபமாதிகள் நசித்திடில் பந்தமாம் கொடும் பிறவிகள் போமே. எ-று. ஈற்றேகார மசை. பரன்சிருட்டி, நித்தியப்பிரளயம் நைமித்திகப்பிரளயம் மகாப்பிரளய முதலியவைகளில் நசிக்கினுஞ் சீவர்களுக்குச் சனன நசியாமையி னீதில்லையே லீதில்லை யென்னும் வியதிரேகயுத்திக்கும், பரன்சிருட்டியிருக்கினும் பிரமவிசாரத் தாற் சீவர்கள் மோக்ஷமடைதலி னீதுண்டாயி னீதுண்டென்னு மந்நுவய

யுத்திக்குந் தடைப்பட்ட தென்க. இனி, முத்திக்குச் சாதனமும் சாதன மின்மையையும், பந்தத்திற்குச் சாதனமும் சாதனமின்மையையுஞ் சுருதி கூறுந் துணிபைத் தந்துணிபாகக் கூறினு ரென்க. மேற்கூறுஞ் சுருதிக் கிஃதுத்தி யாகலி னென்க. (ருக)

*ஈசர்காரியம் பிரளயத்தொழியவு மெவர்பவ மொழிந்தார்க*
*டேசகால தேகாதிகளிருக்கவுஞ் சீவகாரிய மோக*
*நாசமாகிய விவேகத்தினுயிரொடு ஞானமுத்தர்க ளானார்*
*பாசமோகங்கள் பசுக்களின் செயலன்றி பசுபதிசெயலன்றே.* ()

கூறிய யுத்தியினையே வேறோராற்றுற் கூறி; வற்புறுத்துகின்றார்:— அது கண்ணிளிப்ப விளங்கும்.

(இ—ள்.) '**ஈசர்காரியம் பிரளயத்தொழியவும் எவர் பவம் ஒழிந்தார்கள்**' என்பது, 'முன்தாவராதிக ணசித்திடில்' என்றீ ரங்கசிப்பு ஒவ்வொன்ருக நசிக்கி லெவ்வாறு **சீவர்கட்குச் சனனங்க ணசிக்கும்**. பின்னையோ, முற்றுங் கெட்டொழியி னங்ஙனமா மெனவரின், இங்நித்திய நைமித்திகப் பிரளயத்தன்றி பஞ்சபூதங்களும் கெட்டொழியு மஹாப்பிரளயத்து மது காணேமே, ஒவ்வொரு சீவர் பவமொழியாம லனைவரு மொப்ப பவமொழி யாமைக்கு இப்போது சிருட்டி நடந்துவருதலே யேது; இதனுல் வியதிரே **காபாவமு** முண்டென்க. இக்கருத்தா லின்ன பிரளய மென்று கூருது பொதுவிற் **பிரளய** மென்ரு ரென்க. ஆகலி னச்சிருட்டி நசித்தல், **சீவர்கட் சனன நசித்தற்குக் காரணமன்று**.

*பின்னையோ*, **தேச கால தேகாதிகள் இருக்கவும்** = *இவ்விக்ஷேப முழுது மிருக்கும்போதே ; அவை சாதனமாக*, **சீவகாரிய மோக நாசமாகிய விவேகத்தின்** = *சீவகாரியமான வஞ்ஞானம் நாசமாகத்தக்க வக்கண்ட ஞானத்தால்; மோகங் கெட்டொழிய வதன் காரியமாகிய காமாதிகள் தாமே கெடலின்*, **மோகநாச** *மென்ருர்*. **இதனுல், காம வெகுளி மயக்க மிம்மூன்றி னுமங்கெடக் கெடு நோய். உயிரோடு ஞானமுத்தர்கள் ஆனூர்** = *சீவன்முத்தர்கள் ஆனூர் பிரமாமுதலிய தேவரும், சனகனுதிய முனிவரும், சனகனுதிய மக்களு மென்க.* **ஆகலின், பாச மோகங்கள் பசுக்களின் செயலன்றி பசுபதி செயலன்றே** = *பாசமோகம், பாசமாகிய மோகம் எனக்கூறின் மோக மநாதியென்பது கெடுமாகலின், பாசத்தை வினைக்கு மோகமென வேற்றுமைத்தொகையாய்க் கொள்ளின் பொருட்பொருத்த மாமென்க. இம்மோகந்தானே கெடாமையின்*, **சீவகாரிய மோக நாசமாகிய விவேகத்தி** *னென்ருர்.*

நாசமாகிய வெனத் தன்வினையாற் கூறினு மது பிறவினைப்பொரு ளில்வந்த தன்வினை. உடம்போடு புணர்த்த லென்னு முத்தியால் விவேக முடன்கூறப்பட்டது. இவ்விவேகம், சீவன்முத்தராளு ரென்றமையா லும், மோகத்தைக் கெடுத்ததனு லுமகண்டஞான மென்ருர். ஏகார மீற் றசை. (ருஎ)

அச்சுவத்த மென்ெருரு மரமதி லிரண் டரும்பறவைகள்
வாழு, நச்சுமங் கொருபறவை யம்மரக்கனி நன்று நன்றெனத்
தின்னு, மெச்சுமங் கொருபறவை தின்ன தெனவியங்கி யப்
பொருளாக, வைச்சுமா மறை சீவனை யீசனை வகுத்தவா றறி
வாயே (கசுசு)

இக்கூற்று யுந்தமாத்திர மன்று என்று "சுருதிநூற் பொருண் மார்க்க" மென்றதிற் சுருதிகூறும் பொருளை யீண்டுக் கூறுகின்றர்:— ஈற்றேகார மசை.

(இ-ள்.) அச்சுவத்தம் என்று ஒரு மரம் அதில் இரண்டு அரும்பற வைகள் வாழும், அம்மரக்கனி நச்சும் ஒரு பறவை நன்று நன்று என அந்த தின்னும் = வாழுகின்ற பறவை யிரண்டி லம்மரத்தினது கனியை விரும்பிய காரணத்தா லொரு பறவை யதையே மிக்க நன்றென் றருந்தா நிற்கும்; மெச்சும் ஒரு பறவை அந்த தின்னுது = அக்கனியை விரும்பா மையால் வேதத்தாற் புகழப்பட்ட மற்றெருரு பறவை யங்கு அதை யுண் ணுது; என = என்ற; வியங்கி அப்பொருளாக = வியஞ்சன விருத்தி யர்த்தமாக; மாமறை வைச்சு = மாட்சிமைப்பட்ட வேதமானது பெயர் வைத்து; சீவனை ஈசனை வகுத்த ஆறு அறிவாயே = இவர்களை வகுத்த வாருவது, சீவனைக் கனிதின்னும் பக்ஷியெனவு மீசனைக் கனிதின்னுத பக்ஷி யெனவு மிலக்கணமாக வமைத்துப் பிறிது பொருளாற் பிரிவுபடுத்தியதை யென்க.

என்னை, பிறிது பொருளாமாறெனின்? அச்சுவத்த மென்பது அஶ்வத்தம் ॥ என்ற வடசொல்லின் றிரிசொல்லாய தமிழ்ச்சொல். இதற் குப் பொருள்:—அ—ஶ்வஸ்தம் எனப்பிரித்து, சுவஸ்தம் = நிலையுடை யது. அகரம் விரோதப்பொருளாய வெதிர்மறையில் வந்தது. இவற்றைத் தொடர்புபடுத்திக் கூறுங்கால், இல்லாத நிலைமையை யுடையது, நிலையில் லாதது தென்பது. மரமென்பது, விருக்ஷமென்னும் வடசொற்பொருளுணர்த் துஞ் சொல்லாய்ப் பகாப்பதமாய் நின்றது. ஆயினும் வடசொற்பொரு ளைக்கியே பொருள் கொள்க.

அப்பொருள் = சேதிக்கப்படுந் தருமமுடையது. பறவைகள் = பறத் தற்ருெழிலை தமக்கியல்பாக வுடைய புட்கள். கனி = காயின் கனிவு. இவற்றிற்குச் செம்பொரு ளொருசிறிது மீண்டியையாமையின், அப்பொ ருளை யொழித்துக் கூறுவான் கருத்து. இவற்றிற்கு வேறு பொருளான

நிலையில்லாததுங் கெடுக்கப்படுவதுமான வியல்பினையுடைய மாயையும், இம்மாயையைப் பறவைக ளெவ்வாறு மரம் பற்றுக்கோடாக வாழு மியல்பினவோ வவ்வாறே பற்றுக்கோடாக வாழுஞ் சீவேசுரரும், ஒரு பறவைக்கு நுகர்வாய் நிற்கு மம்மரக்கனி போலச் சீவனுக்கு நுகர்வாய் நிற்கு மின்பத் துன்ப வுருவமான விருவினைப்பயனு மாகலி னென்க.

இனி, இலக்கணை யென்னுமோ வெனின்? என்னும். என்னை? அச்சுவத்தமரம், பறவைகள், கனி யிவற்றிற்கும், மாயை, சீவேசுரர் இருவினைப்பய னிப்பதத்திற்காகுதல் பொருட்காகுத லொருசிறிது மொருவாற்றானு மியைபின்றுதலு மின்றி, இடைப்பட்டதன்றித், தமக்கியற்பெயராய் மாயை முதலியவைகட் காதுபெயராய்த் தொண்டுதொட்டு வாராமையி னானு மென்க. ஆகலின் வியந்சனுவிருத்திப்போது ளாயிற்றென்க.

இனி, இம்மாயைக்கு ஒருகணமு நிலையுத லின்றென்னு மச்சுவந்த மென்னு மிலக்கணப்பொரு ளொன்றுமே சாலுமாக விருக்ஷமென்னு மற்றோரிலக்கணங் கூறன் மிகையா மெனின்? தோன்றி யழியு மியல் பினதா யெக்காலு முள்ளதென்னுஞ் சத்கியாதிவாதியை மறுத்தற்பொருட்டு ஞானத்தா லழிவுபடு மியல்பினதென்று மற்றொரு தருமமுங் கூறி வற்புறுத்தினமையி னன்றென்க.

இனி, அச்சுவத்த மென்னுஞ் சொற்குப் பொருளான நிலையில்லாத தென்பது, ஏனைய பொருள்க ளாதாரமான வேர் கீழு மாதேயமான கவடு கோடுகள் மேலு மாக வவ்வேரை யாசரித்து நிற்பதுபோ லன்றித் தனக்குச் சிதாகாய மான வேர் மேலு மேனைய வாதேயமான பிராணன் முதலிய பூத பௌதிகங்கள் கீழு மாக நிற்றலி னிலைமாறுத லென்னும் பொருளுமா மென்க.

இனி, இம்மாயை சீவேசுரருக்கு ஆசிரயமாய் நிற்றல்:—காமக்குரோதாதிதரும லிங்கசரீரஞ் சீவனுக்குபாதி. இதுவே யிவனுக்கு க்ஷேத்திரம். இதையே யிவ னாசரியித்துக் கருமபோகங்களை நுகர்வன். இந்நுகர்வு மநாதிகாமகரும வாசனையா லென்க.

இனி, இந்நுகர்வுந் தன்சுதந்தரத்தா லன்றி யவ்விலிங்க சரீரத்திற்குச் சாட்சியாய் சுத்தனாய் நித்தியபுத்த நித்தியமுத்த சுபாவமுடைய சர்வஞ்ஞனாகிய சத்துவகுணப்பிரதான மான மாயாவுபாதி யுடைய வீச்சுரன் றன்னில் மறைப்பின்மையின் வினையி னீங்கி விளங்கிய வறிவினனா யவ்வினைப் பயன்களை யறியாமை யுடைய தமக்கூட்டலி னியமிப்புடையவ ராயினரென்க.

இங்ஙன முண்ணுஞ் க்ஷேத்திரஞ்ஞனு மிவனுக்கு நியாய மகனுன விய திரிக்தனுமே மரத்தை யாசரிக்கும் பக்ஷியைப்போ லிம்மாயையை யாசரித் திருப்பவ ரென்க. இங்ஙனஞ் சீவனுண்ண லீசனூட்ட வாயினு மச்சீவன் செய்த வினையை யூட்டலி னக்காமாதிகள், 'ஒருமைசெய லாற்றும் பேதை யெழுமையுந் தான்புகழூந் தமளறு.' என்க. விரிப்பிற் பெருகும். பருந்து நிழலும் போற் பாட்டு முரையு மென்னுங் கட்டளேயா னமைந்தது. நின்னு மோரு பறவை யென்றது சாதியோருமை. நின்னு தோன் றேன்றது, இரணிய கருப்பாந்த மான வனந்த வவாந்திர பேதத்தை நீக்கி நின்ற தென்க. (௯அ)

இந்தச் சீவனால் வரு மறுபகையெலா மிவன்செய லென்னுமல்
லந்தத் தேவனால் வருமென்ற மூடர்க ளதோகதி யடைவார்க
ளிந்தச் சீவனால் வரு மறுபகையெலா மிவன்செய லல்லாமல்
லந்தத் தேவனு லன்றெனும் விவேகியே யமலவீ டடைவாரே. ()

அவ்வாறு கூறுஞ் சுருதிப்பொரு ளுணராது மயங்கிக் கூறுபவர்க்கு மப்பொரு ளுணர்ந்து தெளிவிற் கூறுபவர்க்குங் கதி யின்ன தின்ன தென்று முடித்துப் பயனு முடன் கூறுகின்றார்:—

என்னே? கூறியவாறு பகைகளாற் றனக்கே தீவினைப்பயன் வரல்கருத லளவையானுங் காட்சியளவையானு மமையினு மஃதுணராது, இத்தீப்பயன் றுனியற்று நீசனே காரணமின்றித் தந்தானெனல், ஒரு வினையாளனுக்குக் கூலி கொடுப்பதன்றி வினைசெய்யாதோனுக்குக் கூலி கொடுத்த லுலகவ ழக்கு முதலிய வெவ்வழக்கினுங் காணுமையி னக்கூற்று அந்நுவய வியதி ரேகங்களுக்த மாறுபடு மென்க.

அன்றியு மிவன் செய்த வினையன்றி மற்றென்றை யிவனுக்குக் கொடு த்தலா லீசனிடத்துப் பக்ஷபாதம் வரும். இங்ஙன மீசனிடத்துக் கற்பித் தல் குற்றம். அன்றி, ஈசன் சன்னதி மாத்திரத்தான் முத்தொழிலு நடக்கு, மென்னு மகர்த்தத்துவமுங் கெட்டு இச்சீவனேப்போல கர்த்தத்துவ முடை யவனு மாகு மீசன். இவ்வா றீசனிடத்திற் குற்றஞ்சுமத்தல் பெரும் பாதக மாகலி னிப்பாவங் காரணமாக வதோகதி யிவ்வாறு கூறுவோர்க்குப் பயன் கூறியவதனுலும் என்க.

வாக்கினுன்மாத்திரங் கூறுங் குற்றத்திற் கித்துணைத்துன்பம் வருமோ வெனின்? சொன்னிகழ்ச்சி மனத்தையன்றிக் கூடாமையானு, மனமுஞ் சொல்லு மொத்தவழி செயலு நிகழு மாகலி னெமக்குத் தீவினை செய்க வென விறை வகுத்தா னெனத் தீவினையே செய்து வரு மாகலி னித்து ணைப்பய னேமித்திய தென்க.

இனி, அருந்தல் பொருந்த லுயிர்களுக் கியல்பாகலின்று மென்க. இங்ஙனமன்றி, அவ்வாறுஞ் சீவச்செயலென சுருதி யுத்தி யநுபவங்களா லுணர்ந்து விதிவழி யொழுகுவோர்க்கு அக்குற்றங்க ணீங்கலி னமலவீ டடைதலின்று மென்க.

(இ—ள்.) இந்தச்சீவன் எனவும், அந்தத்தேவன் எனவும் முன்னி லையிலும் படர்க்கையிலு மாகச் சுட்டியது, அறுபகைகளை யியற்றற்த மக ற்றந்த முரிமை யுடைமையு, மிவ்விரண்டு மின்றி, சாக்ஷிமாத்திரமாய் நிற்றலையு முணர்த்திய தென்க.

இனி, சீவனால் வரு மறுபகை யெலாஞ் சிவச்செய லென்போன் அவிவேகி யாகலின் மூடர்கள் எனவும், (அவிவேகம்) வினையி னீங்கி வின் ங்கிய வறிவினுங் கூறு நூலுணர்ச்சி யில்லாதோ னென்க. இனி, சீவ னால் வரு மறுபகை யெலாஞ் சீவச்செய லென்போன் விவேகி யென வும், விவேகி யந்நூலுணர்ச்சி யுடையோ னென்க. கூறியவாறு:- அதோ கதி, இதனினும் கீழ்ப்பட்ட கதியின்மை. அமலவீடு, இதனினு மேற்பட்ட சுத்தமுடைய வீடின்மை யென்க.

ஏனைய பொருள் வெளி. அறுபகைக ளாவன:— காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மச்சர மென்பன வென்க. ஆறு அறு என விகாரமாயிற்று. ஈற்றேகார மசை. முக்னின்ற வேகாரந் தேற்றம்.(இக)

நலமெய் யையனே யெல்லவர்க்குந் தெய்வ நாயகன் பொதுவா னும், சிலரை வாழ்வித்துஞ் சிலரொடுங் கோபித்துஞ் செய்வதே னென்றியேற், குலவு மைந்தரைத் தந்தைபோற் சிட்டரைக் குளிர்ந்துந் துட்டரைக் காய்வன், கலைக ணல்வழி வரச்செயுந் தண்டமுங் கருணையென் றறிவரயே. (கசுஅ)

மெச்சப்பட்ட வீச னென்றையு நச்சாமையால் விருப்பு வெறுப் பின்மைய னாகலிற் பொதுநோக்குடையவ னுயிர்றே, சீவர்கள் தங்க ளைத் தாங்கள் வருத்திக்கொள்ளார்களே, யிங்ஙன்மாக வாழ்ந்திருப் பது சிலருந் தாழ்ந்திருப்பது பலருமாகச் செய்யுஞ் செய லியாவர்பால தென்று மாசங்கைக்குச் சமாதான மிதுமுத லிரண்டு கவியானுங் கூறு கின்றார்:—

இக்கூற்று, "சீவனாது சிருட்டிகடங் .....பிணியாகும்," "கோப மாதி......போமே" என்பனவற்றால் சீவச்செயலே துன்பவின்பங்களுக் கேது வென்றாகவு மீண்டும் வினவியது புனருத்தமன்றோ வெனின்? ஆண்டுக் கூறினமையாற் சீவனுக்கு முற்றுஞ் சுதந்திரமுடைமை காட்டலி

னீண்டதை விலக்கற்பொருட்டு விஞவினமையி னன்றென்க. இவற்றுற் போந்த பொருள், சீவன் சுதந்திர பராதீன னென்ப தென்க.

(இ—ள்.) நலமேய் ஐயனே = கருணையே திருவுருக்கொண் டெழுந்தருளிய விறைவனே; தெய்வ நாயகன் எல்லவர்க்கும் பொது ஆனால் = தேவதேவனுகிய விறைவன் பிரமாதித் தம்ப மளவாயுள்ள வுயிர் களிடத்துப் பொது நோக்குடையவ ஞயின்; சிலரை வாழ்வித்துஞ் சில ரோடுங் கோபித்தும் செய்வது என் என்றுயேல்; அச்செயல், நல்லும் மைந்தரை தந்தை போல் = பொதுநோக்குடைய வுலகி லொருதந்தை யாயினன், தன்சொல் வழிநடந்து தன்னைப்பேணு மறிவுடை மக்களைத் தன்பொருளைக் கொடுத்து சுகப்படுத்துவது போல; சிட்டரை துளிர்ந்து = பொறிவாயி லைந்தவித்ததன் பொய்தீரொழுக்கி னெறி நின்ருேராகிய சாதுக்களைத் தன்பொருளாகிய வருளின்பங்களைக் கொடுத்து இன்புறுவ தாகச் செய்து; துட்டரை காய்வன் = அத்தந்தைதானே தன்வழி வாராது புறஞ்சென்று தன்னைப் பேணுது திரியுந் துட்டமைந்தரைத் தன்பொரு ளைக் கொடுத்துச் சுகப்படுத்தாது பசிமுதலியவற்ருன் வருத்துவதும் அவ னல்வழிவாரச் செய்யுங் கருணையே யன்றி பக்ஷபாத மன்மை போல, அவ் வொழுக்கநெறி தீர்ந்தோராகிய துட்டவியல்பினராய வுயிர்களை யவ்வரு ளின்பங்களைக் கொடாது பசி பிணி முதலியவற்ருற் றுன்புறுத்துவன்; தண்டமும் = அவ்வாறு தண்டிப்பதும்; கலைகள் நல்வழிவா செய்யுங் கருணை என்று அறிவாயே = கூறிய நெறியில் வரும்பொருட்டுச் செய்யுஞ் செயலன்றி யிப்பெருங்கருணைக்கு மாருய வன்கண்ணை தன்றென்றவாறு.

'துட்டரைக் காய்வன்' என்றதை யுவமானத்திலுங் கொள்க. கலைக் னல்வழி வரச்செய்யுந் தண்டமுங் கருணையாகலின், 'தெய்வ நாயகன் பொதுதான் பட்சபாத மவனிடத் தின்றென் றுணர்வாய்' என்பவர் 'அறி வாயே' என்ருே ரென்க. ஈற்றேகார மசை. இக்கருத்தேபற்றி 'ஒறுத்தா லொன்றும் போதுமே' என்றது மாணிக்கவாசகம் என்க.

கோபிக்கப் படுவார் சிலராவார் = ஆதியாத்மீகாதி தாபத்திரய மளவின்றி வருத்துவோரை யென்க. குறைந்த வறுமை பிணி மூப் புடையோரு மிருத்தலின் பல ரென்று மென்க. 'சிலர் பலராத ஞேற் பார் சிலர் நோலாதார் பலரா...............'என்றது முதுமறை. இவ்வாதமப் பிரமாணங் காட்சி பற்றி வந்ததனு லென்க. ஈற்றேகார மசை. (கூ0)

மனைவில்க்கறு மைந்தனே கற்பகமரங் கனல்புனல் மூன்றுந், தனையடைந் தவர்வறுமையுஞ் சீதமுந் தாகமுந் தவிர்த் தாஞ், மனையவிச் சூ மடைந்தவர்க் கருள்செய் வனகன் றவர்க்கருள்

*செய்யா, வினைய குற்றங்க ளவர்குற்ற மாருமென் றெண்ணிநீ யறிவாயே.* (கசுகூ)

ஆயினுஞ் சீவர்களுக்கு மேல்வரு முணர்ச்சி யின்மையின் காட்சி யிற் செய்தலன்றி யனுமானித்து நடக்க வோண்ணுமையி னிவர்கள் குற்றமுடைய ராகா ரெனவரின், அதற்கு விடை கூறி கூறியதையே யிதில் வற்புறுத்துகின்றார்.:—

அறு மைரீதன் வினைத்தொகை *யாகவி னிறந்தகாலத்தாற் கூறிப் பொருள் கொள்க. வறுமையுற்றோரும், குளிருற்றோரும், வெப்ப முற்றோருந் தன்முயற்சியாற் கற்பகத்தையுங், கனலையும், புனலையு மடைந்தா லன்றி யவைதாமே யிவரை யடுத்து அவற்றைப் போக்காத வாறுபோல வீசனைச் சீவர்க ளடைந்து ஈடணாத்திரயத்தா லுண்டாகுந் தாபத்திரயத்தை நீக்கிக்கொள்ள வேண்டுவ திவர்கள் குற்ற மன்றி யீசன் குற்ற மன் றென்ற வாறு.* உவமானங்க ணிரைநிறைப் பொருள்கோள். கற்பகத்தைக் கூறியது ஆகமப்பிரமாணத்தா லென்க.

*ஈச னடைந்தவர்க் கருள்செய்வா னகன்றவர்க் கருள்செய்யா னென்பதற்கு ஆகமம். "வாழ்த்துவதும் வானவர்களாம் வாழ்வான் மன நின்பாற், றாழ்த்துவதுந் தாமுயர்ந்து தம்மையெல்லாந் தொழவேண்டி, சூழ்த்துமது கரமுரலுந் தாரோயை நாயடியேன், பாழ்த்த பிறப்பறுத்திடுவா னியானு முன்னைப் பரவுவனே."* இத்திருவாசகத்தா லுலகி லுயர்தலே யன்றி, வீட்டினும் பிணி நீங்கி யுயர்ந்தவாறுங் காண்க.

*"ஆற்றோடு தும்பை யணிந்தாடு மம்பலவாணர்தமைப், போற்றாதவர்க் கடையாள முண்டேயிந்தப் பூதலத்திற், சோற்றாவியற்றுச் சுகமற்று சுற்றத் துணியுமற்றே, ஏற்றாலும் பிச்சைகிடையாம லேக்கற் றிருப்பர் கறே."* இது அகன்றவர்க் கருள் செய்யாமை.

*'அறத்தா றிதுவென வேண்டா சிவிகை, பொறுத்தானோ டூர்ந்தா னிடை.'* இது வாழ்வு தாழ்வுகளை யோக்கக் கூறியது. 'எண்ணி நீ யறி' *என்றது கருதலளவையா னென்க.*

ஈற்றேகார மசை. ஏனைய பொருள் வெளி. (சுக)

*ஒன்று கேண்மகனே புமான்முயற்சியா லுரைத்து மானிடர்க் கீச, னன்று செய்யவே காட்டிய நூல்வழிநடந்து நல்லவர் பின்னே, சென்று அட்டவாதனை விட்டு விவேகராய்ச் செனித்த மாயையைத் தள்ளி, நின்று ஞானத்தை யடைந்தவர் பவங்கள் போநிட்சய மிதுதானே.* (கஎ0)

இதுகாறுஞ் சீவச்சேய லிவையென்றும் வகைப்படுத்தி யேது பயனுடன் கூறி முடித்து இச்சீவச்சேய லிம்மைச்சுக மாத்திரந் தருமல் லது மறுமை யின்பழந் தருமோ வென்று வருமையத்திற்கு விடை கூறலாகிய மற்றொரு பயனுங் கூறற்கும் மேல் மோக்ஷத்திற்குச் சாதனங் கருமமா? அல்லது ஞானமா? வென்ற வையத்திற்கு விடை கூறத் தோற்றுவாயுமாக விடை நிறீஇக் கூறுகின்ற நீதில்:—

(இ—ள்.) **மகனே, ஒன்று கேள்** = *கூறியவற்று ளொரு கருத்து முளது அதனையும் விளங்கக் கூறுவ னீ யதனை யமைதியாகக் கேள்;* **ஈசன், மானிடர்க்கு நன்று செய்யவே உரைத்துக் காட்டிய நூல்வழி** = *இகபர வின்பங்களைக் கொடுக்கும் பொருட்டே கிருபையால் வெளியிட்ட நிகமாக மத்திற் கூறியபற்றறுதியான துறையில்;* **புமான் முயற்சியால் நடந்து** = *அம்மக்களு ளதிகாரியாயினன் றனது முயற்சியாற் புகுந்து;* **நல்லவர் பின்னே சென்று; நல்லவர்** = *அறிஞர்.* **இவர் குரவ ராதம். இவரைப்** *பற்றுக் கோடாக வந்நூலை யாராய்ச்சிசெய்து;* **துட்ட வாதனை விட்டு** = *இவ்வொழுக்கா லக்காமாதிகளைத் தன்னினின்றும் விலக்கி;* **விவேகர் ஆய்** = *இவைகாரணமாகத் தத்துவ விவேகராய்;* **சேனித்த மாயையைத் தள்ளி** = *இவ்விவேக மின்மையா லுண்டாகிய வஞ்ஞானத்தைக் கெடுத்து;* **நின்று** = *கேட்ட வத்துவில் மனனசகாயத்தான் மனத்தை நிலை பெறுத்தி;* **ஞானத்தை யடைந்தவர்** = *அபரோக்ஷஞானத்தை யடைந்தவர்;* **பவங்கள் போம்; இது தானே நிட்சயம்** = *இச்சோபானமே வேதத்தி னிண்ணய மென்றவாறு.* **ஈற்றேகார மசை. தான் தேற்றப்பொருளது.**

**செய்யவே** *என்றதின் ஏகாரத்தை மானிடர்க்குங் கூட்டி யேனை யறுவகைத் தோற்றத்தினின்று நீக்குதலாற் பிரிநிலை* **யேகார** *மாம், என்னை? தேவர்களுக்கு ஞான முண்டானதாயும், 'கிருமி கீடம் பதங்க மானிடவரோடு சுராசுர ரனைவருக்கு ஞானமுண் டவனருளாலே' என மானிடவரோ டேனைய தோற்றத்திற்கு ஞான முண்டென்று* **ஒடு உருபால்** *வெளிப்படக் கூறிய சுருதிப்பொரு ளிருக்க* **மானிடர்க்கே** *யென்று* **பிரித்த** *தெனின்? தேவர்களுக்குங்கூட ஞானத்தைத் தானே யடைதற் கருமை யென்று* **ஞானமடைதலி னருமையும்,** *இறைவனரு ளுண்டாயின் புழு முதலியவையு மெளிதி லதனை யடையுமென்று* **இறைவன் பெருமையுங்** *கூறிற்றன்றி யவர்களை யதிகாரப்படுத்தி* **சுருதி கூறிற்றில** *வென்க.*

**இம்மானுடரை மாத்திர மதிகாரப்படுத்தியதற்குச் சுருதி :—அதா தோ ப்ரஹ்மஜிஜ்ஞாஸா** *என்றெழுந்தது. இவ்வாக்கியத்தில், அத = அத என்ற மூற்பதத்திற்குப் பொருள் கருமஞ் செய்து முடித்ததனாற் சித்தசுத்தி யுண்டானதின்பிற கென்றவாறு. இக்கருமஞ் செய்து முடித்தல் வனை*

யறுவகைத் தோற்றத்தோர்க்கு மதிகார மின்மையா லவர்க்குச் செய்து முடித்த லமையாமையி னங்ஙனங் கூறிய தென்க.

இக்கருத்து, மேற் "சாதியாசாரமே செய்தவஞ் சுகம்" என்றதில் விரித்துக் கூறப்படும். ஏனையோர் முற்று முணர்தற்பாற்ற ரல்லாமையா 'லீசன் காட்டிய நூல்.' என்றார். ஆகலின் வினையி னீங்கி விளங்கிய வறிவனாற் கண்ட வேதமே யன்றி யிவ்வேதா விரோதமான வாக்மமும் புராணமுங் கொள்க வென்க. ஈண்டு நன்று = மோட்சவின்பம். இதனால் 'செய்யவே' என்று தேற்றேகாரந் தந்தார். இறைவன்வழி நடப்போ ரர்ச்சை யுற்றோரு மாசை யுற்றோரு மாயினும், வேண்டிய வேண்டி யாங்கெய்தலா லிவன் வஞ்ச முரைத்தோனு மன்று என்க. இதனால் 'ஒன்றுகேண் மகனே' எனக் குறிப்பா லுணர வுரைத்தார். இதனை மேலும் 'தினமுமண்ணுகர் பிள்ளை' என்பது முதலியவற்றால் விரித்துரைப்பர்.

'நடந்து சென்று விவேகராய்த் தள்ளிநின்று ஞானத்தை யடைந்தவர்' என முடிக்க. பவங்களென்ற பன்மை, நால்வகை யோனியினு மெழுவகைத் தோற்றத்து எண்பத்து நான்கு நூறாயிரமான பேதங்களை யென்க.

மாயையு மதன் காரியமான பிறவியுங் கெட்டொழிய வின்பமுண்டாத லொருதலை யாதலி னவ்வின்பங் கூறமே யமைந்த தென்க. அன்றி, முற் கூறிய நன்றை ஈண்டுக் கொள்ளினு மமையு மென்க. கேடு மென்னுந் போ மென்றது மாயை மித்தை யாகலி னென்க. 'நின்று ஞானத்தை யடைந்தவர்' என்றது வருஞ் செய்யுளுக்குத் தோற்றுவாய். (கஉ)

இந்த ஞானந்தான் வருவ தெப்படியெனி லிட்டவிடா விசா
ரத்தால், வந் தடைந்திடும் விசாரந்தா னேதெனின் மனுதியாஞ்
சரீரத்தி, லிந்த நானெவன் சித்தெது சடமெது விரண்டுமொன்
றாய்க் கூடும், பந்த மேது வீடெதென வுசாவுதல் பகர்விசார
மதாமே. (கஎக)

"ஞானத்தை யடைந்தவர் பவங்கள்போ" மென்றதனுன் ஞான மடையப்படல் 'யாதினல்' என்பது, கருமத்தாலா? விசாரத்தாலா? என்றதை. வரு மென்ற வினுக்களைக் கொண்டு இதுமுத லெழுபத்தா றவது செய்யுள்காறு மதற்கு விடையுங் கூறுபவ ரீதி லஞ்ஞானத்திற்கு நேரே காரணம் விசார மென்று மத னிலக்கணமுங் கூறுகின்றார்:—

இது, 'நல்லவர் பின்னே சென்று நூல்வழி நடந்' தென்றதனு லமையவு மீண்டுக் கூறல் புனருத்த மன்றோ வெனின்? அன்று. ஆண் டிலக்கணமும் வகையும் பெறுமையா லென்க.

(இ—ள்.) இந்த ஞானந்தான் வருவது எப்படி எனின் = மோட்ச சாதனமாக விப்போது நீர் கூறிய ஞானமான துண்டாவ தெந்த வேதுவா லென விஞவிடின்? இடைவிடா விசாரந்தால் வந்து அடைந்திடும்; இது, சுழுத்திவருமளவும், மாணம் வருமளவு மதை யுரைத்து மதை நினைத் திருத்தல். விசாரந்தான் ஏதெனின் ? = விசாரத்திற் கிலக்கணம் விஞவிய வாறு. மனுதியாம் சரீரத்தில்; ஆதி என்றமையா லிந்திரியமுந் தூலதேக முங் கொள்க. இந்த நான் எவன் ? = சித்தாயுள்ள நான் யாவன் ? சித்து எது? = அச்சித்திலக்கண மிவற்றி லெதனிடத் திருக்கின்றது ? சடம் எது? = சடமாயுள்ள பொருளியாது ? இரண்டும் ஒன்றய் கூடும் பந்தம் எது? = கூறிய சிற்சடங்க டம்மிற் கலக்கும் பந்தத்தி னியல் பேது ? வீடு எது? = இப்பந்தத்தின் விடுதலே யாது ? என உசாவுதல் பகர் விசா ரம தாம் = இவ்வாருக வாராய்தல் கூறிய விசாரத்திற் கிலக்கண மாகு மென்றவாறு.

இடைவிடா விசார மென்றது, ஞானம் பிரதிபந்த மின்றி விளங்கு மளவு மெனக் காலவெல்லேக் குறிப்பாலுணர்த்திய வா றென்க. ஞானம் = பிரம்மான்ம வைக்கிப வுணர்ச்சி. மேல் வரு மிடங்கடோறு மிதுவே பொருள். மனுதியாஞ் சரீர மென்று மன முன்னுகத் தூலதேக மிறுதி யாகக் கொண் டவித்தை யாகிய காரணசரீரத்தை விலக்கியது, நானெனின் றபிமானத்திற் கிடமாக நிற்ற லிவைபோ லதனிடத் தின்றென்பதா லென்க.

இனி, 'நான் பிராமணன்' எனத் தூலதேகத்தின் றர்ம்மாத்தியாசமும், 'நான் கண்டேன், கேட்டே' னென்னும் ஞானேந்திரியத்தின் றர்ம் மாத்தியாசமும், 'நான் சங்கல்பித்தேன், நிட்சயித்தேன்' என்னும் மனோ விருத்தி புத்திவிருத்திகளின் றர்ம்மாத்தியாசமும் 'நான் கருத்தா, நான் போக்தா' வென்ற வந்தக்காணத்தின் றர்ம்மாத்தியாசமும் ஆன்மாவினி டத்திற் காணப்படுகிறபடியா லிவையே பந்த மாகலி னிவற்றை விலக்க வேண்டுவ தொருதலே யாகலின், 'மனுதியாஞ் சரீரந்தி லிந்த நானெவன்' எனக் கூறினர். செய்யுட்கெங்கு மாகலின், 'என்ற கட்டளையால்' சுட்டு மூ [illegible] னின்றது.

இங்ஙன மன்றி யிச்சுட்டை யறுதியா மென்றவற்றிற்குக் கூட்டவோ ரதனுற் போந்த பய னின்மையி னவ்வுரை போலி யென்க. அவ்வாறு கலந்து நிற்றலி னும், ஆன்மாவின் சம்பந்தாத்தியாசங் கரணங்களிலும், கா ணத்தின் சொரூபாத்தியாச மான்மாவிலுங் காணப்படுகையா லிவற்றை வேறுபிரித்தல் சிற்சடவிலக்கணந்தா லாகலின், 'சித்தேது சடமேது'

எனவும், இவ்வா றத்தியாசப்பட்டு நிற்றற்குக் காரண மாரம்ப மென்பதே லின், 'இரண்டு மொன்றாய்க் கூடும் பந்தமே' யெனவும், இவ்வத்தியாசங் களை யத்தியாசமென் றுணர்ந்து, "யதார்த்த வான்ம சொரூபமாய் ஐயம் விபரீத மற நிற்றலே" மோட்ச மாகலின், 'வீடேதென வுசாவல் விசார' மெனவுங் கூறினா ரென்க.

இக்கருத்தை, மேல், 'மோக மாத்திரந் தன்னும் வுத்திபுத் தரல்' என்பத னும், 'இங்கு மப்படி சச்சிதாநந்தத்தி லிடர்சடம் பெயர் மூன்றுந், தங்கு மாயையின் கற்பித மன்றி சகச வாஸ்தவ மன்றே' என்றதனானு முணர்க வென்க. ஈற்றேகார மசை. (கூ கூ)

போன ஜன்மங்க டமி லநுட்டித்த நற்புண்ணிய பரிபாக
ஞான மாக்குமே விசாரமே னென்றிடி னுமுரைத்திடக் கேளா
யான புண்ணிய மீசுரார்ப்பணஞ் செயி னசுசிபோஞ் சுசியாகு
மான தம்பினை விசாரித்து ஞானத்தை மருவுமென் றறிவாயே. ( )

இனி ஞானத்திற்குச் சாதனவிசாரஞ் செய்பவர், வேதத்தின் பூர்வ பாகானுஷ்டானமான சத்கருமமே ஞானத்தைக் கொடுக்குமே விசார மியாதுக் கென்னுங் கருமவாதியின் பக்கத்தைக் கூறிச் சமாதானமு மிதுமுதற் பதின்மூன்று செய்யுட்களாலுங் கூறி முடிப்பவரீதி லவ்வி னைவந் தொடங்கி கருமத்திற்குப் பயன் கூறி மேல் விசாரமும் வேண்டு மென்றுங் கூறுகின்றார்:—

(இ—ள்.) போன ஜன்மங்கள் தமில் = கழிந்த பல பிறப்பில்; அநுட்டித்த நற்புண்ணிய பரிபாகம் = செய்து வந்த நித்திய நைமித்திக முதலிய நல்வினையின் பயனானது; ஞான மாக்குமே = கூறிய ஞானத்தை யுண்டாக்குமே; விசாரம் ஏன் என்றிடில், ஆன புண்ணியம் = அந்நல் வினையால் விளைந்த புண்ணியத்தை; ஈசுரார்ப்பணம் செயின் = தனைக் காக்கிக்கொள்ளா தீசனுக்குக் கொடுத்துவிடில்; மானதம் அசுசி போம் சுசி யாகும் = அப்பயனை யவ ரேற்று அதற்குப் பயனாக வச்சீவனது மனத் திலுள்ள மல விக்ஷேபங்களை நீக்கிச் சுத்தி செய்தலி னசுசி நீங்கச் சுசி யாகும்; இவ்வளவே யிக்கருமத்திற் காற்றல்; ஆகலின், பின்னை = இச்சித்த சுத்தி வந்ததின்பின்னர்; விசாரித்து = ஆவரண நிற்றலி னதனை விசாரத்தா னீக்கி; ஞானத்தை மருவும் என்றறிவாயே = ஒருசீவன் ஞானத்தை யடைவனென் றறிவாயாக வென்றவாறு.

ஈண்டு கரும மென்றது, யதிநைட்டிக வன்னி யேகழிந்தோரது கரும மென்க. அவ்விருவருக்குங் காமியகன்ம மின்மையா னென்க.

ஏகாரமிரண்டு மசைகள். 'நான்முறைத்திடக் கேளா' யென்றதற்கு விடையை யென்க. நீ தோன்றுவெழுவாய் (கச)

பத்தியும் வைராக்கியமும் பரலோகமு மணிமாதி
சித்தியுந் தவநிட்டையு மியோகமுந்தியானமுஞ் சொரூப
முத்தியுந் தரும்விசித்திர கருமங்கண் மோகமாத்திரந்தள்ளும்
புத்திதந்திட லருமையோ விசாரமேன் புண்ணியகுருமூர்த்தி. ()

கூறிய பயன்களைத் தரும் வலி கருமத்திற் கிருக்க ஞானங் கோடாததற்குக் காரணமிதில் வினவுகின்றன்:—

(இ—ள்.) புண்ணிய குருமூர்த்தி=என் புண்ணியமே யொரு திருமேனியா யெழுந்தருளிய குருமூர்த்தி. 'பத்தியும்' என்றமையா லிதுவுங் கருமப்பய னாகலின் ஞானத்திற்கு நேரே சாதன மன் றென்றவாறு.

சொரூபமுத்தி=சாரூபமுத்தி, இது சாயுச்சியமுத்தி யாகாமையின் வினையவையோடும் விலக்கினர். புந்தி = கூறிய ஞானம். ஏனைய பொருள் வெளி. (கரு)

வேடமாறிய பேர்களை யறியவே வேண்டினன் மகனே கேள்
கூடமாமவர் சுபாவங்கள் சீலங்கள் குறிக ளாய்ந் தறியாம
லோடியுங் குதித்துந் தலைகீழ்நின் று முயர்ந்த கம்பத் தேறி
யாடியும் பல கருமங்கள் செய்யினு மவருண்மை தெரியாதே()

அதற்குவிடை கூறுபவரிதிற் றிட்டாந்தங் கூறுகின்றார்:—

(இ—ள்.) வேடம் மாறிய பேர்களை=மாறுவேடங் கொண்டோனை அறியவே வேண்டினால்=இம்மாறுவேடத்து ணின்ற வுண்மைவடிவினை யொருதலையா யறியவேண்டின்; மகனே கேள்=மைந்த வதற் குபாயங் கேள்; அது, கூடமாம் அவர் சுபாவங்கள்=மறைந்துள்ள வவர தியல்பினை; குறிக ளாய்ந்து அறியாமல்=வேடத்திற் கேற்ற கருத்தை யாராய்ந்தியா லறியாமல்; ஓடியுந் குதித்து மென்பன முதலியவை வெளி.

'பல கருமங்கள் செய்யினும்' என்றதை, ஆடியுஞ் செய்வன வாய பல கருமங்க ளென்ப தன்றி, பாடுதல் பழித்த லன்னமிடல் முதலியவுங் கொள்ளினு மமையு மென்க.

வேடமாறியோரை தொழிலா லறியப்படாமையை, "முற்றத்துறந் தமுனிவன் போற்கொண்ட வரக்கனது வஞ்ச வேடத்தைச் சீட்டருக்குரிய பணிபுரிந் தின்மை யுணர்ந்த வெம்பிராட்டி மீண்டுசாவுதலாற் றன்னைப்.

புகழ்த லாதிய சில வாராய்ச்சியா லர்க்கனென் றுணர்ந்து வருந்தினமையா லும்," "சுபத்திரையுந் தனஞ்செயனது கரந்த வேடத்தை மெய்வேடமா கக் கொண்டு பணிபுரிந் துண்மை யுணராது பல்லின் பூசிசவீணை காட்டிய ஞாண் டின்றோ வென்று கண்டு களித்த தென்னு மாகமப் பிரமாணத்தா லும்," "இப்போது மெம்போன்ற வலியினிலைமையார் பூண்டொழுகும் வல்லுருவம் நல்லுருவமென்றே யறியாது பணிபுரிந் தயருங் காட்சியானும்" முணர்க வென்க.

'அறியவேண்டாமையு மிருத்தலி னறியவே' என்ற வேகாரம் பிரி நிலைப்பொருள தென்க. ஈற்றேகாரம் தேற்றம். கருத்துணர்த வாராய்ச் சித் கன்றித் தொழிற் கொருபோது மமையா தென்றவாறு. (கசு)

**இன்னவா றந்தப் பிரமத்தைய றிவிக்கு மிலக்கணத்தால் வேதஞ்,**
**சொன்ன ஞானமும் விசாரத்தால் வருமன்றிச் சுருதிநூல் படித்**
**தாலு, மன்னதா னங்க டவங்கண் மந்திரங்க ளாசாரங்கள் யா**
**கங்க, ளென்ன செய்யினுந் தன்னைத்தா னறிகின்ற நிலைகளால்**
**வாராதே.** (கஎரு)

இதிற் றிட்டாந்தத்தைக் கூறிச் சமாதானத்தை முடித்துக் கூறுகின் றார்:—

(இ—ள்.) இன்ன ஆறு=கூறிய நெறித்தாய்; அந்தப் பிரமத்தை= சீவன் செகத்தாக மாறிக் காட்டிய வப்பிரமத்தை; வேதம் இலக்கணத் தால் அறிவிக்கும்=உபநிடதமானது தடத்தஞ் சொரூப முதலிய விலக்க ணங்களா லதிகாரிக் கறிவிக்கும்; அறிவித்ததனை, வேதம் சொன்ன ஞான மும் விசாரத்தால் வரும் அன்றி=இது கூறிய விசாரத்தால் வருமல்லது; ஏனைய வெளி.

இனி, வேதம் பிரமத்தை யறிவிக்கும் இலக்கணத்தால்=வேதம் பிரம வத்துவினை யதனிலைமையா லறிவிக்குஞ் சச்சிதாநந்த முதலிய விலக்கணங் கருவியாக, எனக்கூறினு மமையு மென்க. இக்கருத்து 'மனைக் குள் வைத்த பண்டங்களை மறந்தவன்' என்ற செய்யுளில் முடித்துக் கூறு கின்றார்.

சுருதிநூல் உம்மைத்தொகை. சுருதி படித்தல் 'பதஞ் சடை கிரமங் களோடு அத்தியயனமாத்திரம் பூர்வோத்தர சுருதிகளைச் செய்தல்.' நூல் படித்தல்=ஏனை யாறங்கங்களையும் வாதவூக்கத்தால் படித்தல். அன்னதான முதலியவற்றைப் பன்மையாகக் கூறியது, ஒவ்வொன்றுஞ் சத்துவாதிகுண பேதத்தால் வேறுபட்டுப் பலவா யிருத்தலினு லென்க.

'அத்துவிதப்பிரமம்' என்று படர்க்கையாற் கூறினமையால் பிரமம் பரோக்ஷமாய் வேறோ வென்னு மைய மகற்றவு மப்பிரமமே தானென் றுணர்த்தவு மீண்டுந் 'தன்னைத்தா னறிகின்ற' தென்றார். அதிகாரியை அதிகாரத்தாற் கொள்க. 'அதிகாரிக்கு வேதஞ்சொன்ன ஞானமும் வாராது,' 'தன்னைத்தா னறிகின்றதும் வாராதே' என வாராதே, என்ற தீரிடத்து மியைந்து நின்றது. அன்னதான முதலியவை செய்வேண். ஏற்றேகாரந் தேற்றம். இவ்விரண்டு செய்யுளு மொருதொடர். (௬௭)

துளங்கு தர்ப்பண மழுக்கறக் கைக்கொண்டு துலக்கினாற் போலன்றி, விளங்கு புத்தியா லுலகிலார் துலக்கினார் விமலதேசிக மூர்த்தி, களங்க மாகு மஞ்ஞானமு மப்படி கருமத்தாற் கழுவாமல் துளங் குறித்த ஞானத்தி லெப்படி யொழியு மீதருள் வீரே. (௧௭௬)

உலகிற் பொருள்களைச் சுத்திசெய்த றெழிலா லன்றி யுணர்வா லுண்டாகா வாறு போல அஞ்ஞானமுங் கருமத்தா லன்றிக் குறித்த மறிவாற் போகாதென்று மீண்டும் வினவுகின்றான்:—

(இ—ள்.) துளங்குதர்ப்பணம் = இயல்பாய் விளங்குகின்ற கண்ணாடி; அழுக்கற = தன்னிடத் தேறிய வழுக்கானது கெட; கைக்கொண்டு = கை கருவியாகக் கொண்டு; கையை மாத்திரங் கூறினும், புளி சாம்பல் முதலிய வுடன் றுணையையுங் கொள்க. துலக்கினால் போமன்றி = தேய்த்தா லவ்வழுக்கு நீங்கு மல்லது; விளங்கு புத்தியால் உலகில் ஆர் துலக்கினார்? = ஒருவருந் துலக்க வில்லையே; அதுபோல, ஆன்மாவினிடத் துள்ள களங்கமாகு மஞ்ஞானமும், கருமத்தால் கழுவப்படாமல் உளங் கருவியாகக் கருதிய ஞானத்தி லெவ்வகையா லொழியுஞ் சற்குருமூர்த்தியே! இதற்கு விடை யருள்வீர், எ-று.

கழுவுதல் படு விகுதி தொக்கது. ஏற்றேகார மசை. (௬அ)

தர்ப்பணத்தினிற் களிம்பு வாஸ்தவமலஞ் சகஜமாகலின் மைந்தா, கற்பளிங்கினிற் கருநிறஞ்சகஜமாக் கறுத்த தன்று ரோபம், தர்ப்பணத்தினி லழுக்கற வேண்டினாற் சாதனத் தொழில் வேண்டும், கற்பளிங்கி லாரோபமே கறுப்பெனக் கண்டிட மனம் போதும். (௧௭௭)

இது முதலிரண்டு செய்யுளாலு மதற்கு விடை கூறத் தொடங்கி த்வோ நவனேதுவி லாபாசங் கூறி மறுத்து வேறே ரேதுவால் கூறியதை வற்புறுத்துகின்ற ரிதிற் றிட்டாந்தங் கூறுகின்றார்:—

(இ—ள்.) மைந்தா, தர்ப்பணத்தினில் = செம்புக்கண்ணடியில்; களிம்பு = நீ யழுக்கென்று கூறுங் களிம்பானது; சகஜ வாஸ்தவம் = கல்பனை யன்றி யியல்பாய் சமஸத்தையா யுள்ளது; ஆகலின் = இவ்வியல் பிற் றாகலின்; தர்ப்பணத்தினில் அழுக்கற வேண்டிடினும் = அக்கண்ணாடியி லழுக்கற விருப்ப முண்டாயின்; சாதனத்தொழில் வேண்டும் = அக் களிம்பிற்குச் சமஸத்தையா யுள்ள சாம்பல் முதலிய சாதனமுந் தேய்த்தல் முதலிய தொழிலும் வேண்டா நிற்கும்; இச்சாமானிய தருமங்க ளான்மாவினிடத் தோவ்வாமையா லவ்வேது வாபாச மாகலின் மறுக்கப்படுகின்றது.

இங்ஙன மன்றி, கற்பளிங்கினில் கருநிறம் சகஜமாயி கறுத்தது அன்று; பின்னையோ, ஆரோபம், இது, தனதபாவாதிகரணத்திற் றனதவபாசம், ஆகலின், கல் பளிங்கில் ஆரோபமே கறுப்பு என கண்டிட மனம் போதும்; என்னை? அவ்வதிகாணத்தோ டொத்த தாகாது பிராந்தியால் கற்பிக்கப்படவி னக்கற்பனை நீக்கந் தொழிலா லன்றி மனத்தா னுணரு முணர்ச்சிவலியா லவ்வதிஷ்டானத்தி னுண்மையுநவம் வெளிப்படலா லென்க. இத்திட்டாந்தத்தின் விரிவை விசார சாகரம் விருத்திப் பிரபாகர முதலியவற்றில் காண்க.

தர்ப்பணம் செம்புக்கண்ணடி யென்பது முற்காலத்தாட்சி. தர்ப்பண மாசிடையிட்ட வெதுகை. தர்ப்பணம், கற்பளிங்கென மீட்டுங் கூறியது சுட்டின் பொருள். (சுக)

இங்கு மப்படி சச்சிதாநந்தத்தி லிடர்சடம் பொய்மூன்றுந்
தங்குமாயையின் கற்பிதமன்றியே சகஜவாஸ்தவமன்றே [குந்
பங்கமாகுமஞ்ஞானத்தைக்கருமங்கள் பகைசெயாவுறவாக்
துங்கஞானமே கருமவஞ்ஞானத்தைச் சுடுகின்றநெருப்பாமே.

இதிற் றிட்டாந்தத்தை விளக்குகின்றார்:—

(இ—ள்.) இங்கும் அப்படி = ஆன்மாவினிடத்திலு மத்திட்டாந்தம், போல; சச்சிதாநந்தத்தில் = இம்மூன்றிலும்; இடர் சடம் பொய் மூன்றும் = என்றது, சத்தில் மித்தையாத்துவமும், சித்தில் சடத்துவமும் ஆநந்தத்திற் றுக்கமும் என்றது. ஆக விம்மூன்றும், தங்கும் மாயையின் கற்பிதம் அன்றி = தானு மாகாது தனக்கயலு மாகாது நின்றுள்ள மாயையினாற் கற்பிக்கப்பட்ட தன்றி; சகஜ வாஸ்தவம் அன்றே = இயல்பா யுண்மையாவ தல்லவே; ஆகலின், பங்கமாகும் அஞ்ஞானத்தை = மற் றொன்றால் கெடு மியல்பினை யுடைய வஞ்ஞானத்தை; கருமங்கள் பகை செயா = முக்கரணங்களாலு மியற்றுங் கருமமானவை பகைத்துக்

கெடுக்கா; பின்னேயோ, அம்மாயாகாரிய மாகலின் காரணத்தைக் கெடுக்காமல், உறவு ஆக்கும் = தாமு மக்காரணத்தோடு கலந்துநட்பையே யடையும்; ஆகலின், துங்க ஞானமே = அப்பிரதிபந்தாபரோக்ஷ ஞானமே; கரும அஞ்ஞானத்தை = இவ்விரண்டையும், அல்லது கரும ரூபமான வஞ்ஞானம், அல்லது கருமத்தை விளைக்கும் அஞ்ஞானம், அல்லது கருமத்தோடு நட்பான வஞ்ஞானம் எனினு மொக்கும். சுடுகின்ற நெருப்பும் ஆம் என்றவாறு. இடர் சடம் பொய், எதிர் நிரை நிறைப்பொருள்.

சச்சிதாநந்தத்தி லிம்மூன்றையுங் கற்பித்தது, மாயை யன்றி யிவையவற்றி லியல்பா யன்மையாற் கருமத்தாற் கழுவப்படா வென்பதாம். ஞானத்தை நெருப் பென்றமையால் கருமத்தை விறகெனக் கொள்க. கருமஞ்ஞானத்திற் றுறவாதல், அஞ்ஞானம் போலத் தானும் பிறவியை யாக்கல். ஞானமே யென்றதி னேகாரம் தேற்றமும் பிரிநிலையு மாம். ஏனைய வேகார மூன்று மசைகள். (எ0)

*மனைக்குள்வைத்தபண் டங்களைமறந்தவன் வருடநூ றழுதாலு, நினைத்துணர்த் துணர்ந்தபின் கிட்டுமெப்படி யிந்த நிர்ம்மலவான்மாவு, மனர்த்தமானதன் மறதியைக்கெடுத்துத்தன் னறிவினுற் காணுமல், கனத்தகன்மங்க ளூறுகஞ்செய்யினுங் காணுமோ காணுதே.* (கஎக)

கூறிய வுவமான வுவமேயங்கள் முன்னிலையி லயலாகக் காணப்படலி னன்மா வேறென வரு மாசங்கைக்குச் சமாதானமாக வேறே ராற்றலும் ஞானமே யஞ்ஞானத்திற்குப் பகையென் றிதிற் கூறுகின்றார்:—

இவ்விரு விடையு முன்னதனே டியையபுடையன.

(இ—ள்.) மனைக்குள் வைத்த பண்டங்களை மறந்தவன் = அவற்றை வைத்த தான் மறப்பானுயின்; வருடம் நூறு அழுதாலும் = அம்மறதியைக் கெடுக்காது வாளா வளவிறந்த கால மழுதலாகிய தொழிலைச் செய்தாலும்; கிட்டா = அவை யவனுக் ககப்படா; பின்னேயோ, நினைத்து உணர்ந்தபின் கிட்டும் = அத்தொழிலை விட்டு யாண்டு வைத்தோ மென்னு மாராய்ச்சியா னினைப்புண்டாக வைத்த விடத்திற் போய்க் கண்ணுற் பார்த்தபின் னப்பொரு ளவனுக்குக் கிடைக்கும்; அப்படி, மறதியைக் கெடுப்பது தொழிலன்றி, நினைப்பே போல, இந்த நிருமல வான்மாவும், மறதியாற் றன்னை யுணராவிடினும், அனர்த்தமான தன் மறதியை = தனக்குக் கேடு விளைப்பதாய தன்னிடத்தே யுள்ள மறதியை; தன் அறிவினுல் கெடுத்து = தன்னுள்ளே யதற்குப் பகையாக வுண்டாகும் விசார

ஞானத்தா லதனைக் கெடுத்து; தன்னறிவினால் காணாமல் = அவ்விசார ஞானங்காரணமாகக் காணாமல்; களைந்த கன்மங்கள் நூறு உகம் செய்யினும் காணுமோ = இவை செய லாகலி னிதற் கவ்வாற்ற லுண்டோ; காணாதே = இல்லையாகலி னிதனாற் காணப்படா வென்றவாறு.

ஓகார வினாவே யெதிர்மறைப் பொரு ளுணர்த்தி நிற்க மீட்டுங் காணா தென்றது வலி யுறுத்தற் பொருட்டு. தன்மறதி தன்னினை வென்ற மையாற் கூறியது கூற லன்று. ஈற்றேகார மசை. (எக.)

நன்மையாங்குரு வேசுகந்தருவது ஞானமே யெனும்வேதந்
தன்மபாவமிச் சிரங்களாற்றேவர்க டருவிலங்குகண் மாந்தர்
சென்மமாகுவ சாதியாசாரமே செய் தவஞ் சுக மென்று
கன்மகாண்டத்தில் விதித்ததென் விதித்துள காரணமுரையீரே
(கஅ0)

இவ்வா றத்மலாபத்தை யடையும் வழி கூறிய வுத்தரசுருதி பூர்வ மீமாஞ்சையில் பயனை விரும்பின் அறத்தைச் செய்க வென்று கூறிய தின் கருத்தை யுணரவேண்டி யிதுமுத லைந்து கவியானு மவ்விசா ரத்தை முடிப்பவ ரிதில் மாணுக்கன் வினவைக் கூறுகின்றார்:—

(இ—ள்.) நன்மையாம் குருவே, நன்மையாம் சுகம் தருவது = உயர்ந்த வுயர் நலந் தருவது; ஞானமே எனும் வேதம் = கூறியஞானமே யென்னு முத்தரசுருதி; மாந்தர்க்கு, தன்மம் = சத்கரும பலத்தால்; தேவர் சென்ம மாகுவ; பாவம் = பாவவினைப் பயத்தால்; தரு விலங்கு கள் சென்ம மாகுவ, மிச்சிரங்களால் மாந்தர் சென்ம மாகுவ; ஆகலின் நீ பாவத்தை யொழித் தினியு மதை யடையாதிருத்தற்கு, சாதியாசாரமே செய் தவம் = அவ்வாசாரமே நினக்குத் தவமாகும்; சுகம் என்று = அத்த வத்தால் சுகமுண்டா மென்று; கன்ம காண்டத்தில் = பூர்வ பாகத்தில்; விதித்தது என் விதித்துள காரண முரையீரே = அக்கருத்தைக் கூறுவீ ராக வென்றவாறு.

ஏகார மூன்றனுள் முன்னவை யிரண்டுந் தேற்றம், ஈற்ற தசை.

நன்மை சுகத்திலுஞ் சென்று கன்மகாண்டத்திற் கூறிய சுகத்தை விலக்கி நிற்றலின் பிறிதோடியைபு நீக்கிய விசேடண மாயது. 'தேவர்க டரு விலங்குகண் மாந்தர்' நிரைநிறைப் பொருள். சென்மம் முன்ன வற்றிற்குங் கூட்டுக. மூன்றனுருபு மவ்வாறே.

இத்தன்ம பாவ மிச்சிரங்கள் ஒவ்வொன்றும் பலபட நிற்றலின், அவற்றைப் புராணம் பிராயச்சித்தகாண்ட முதலியவற்றிற் காண்க.

வென்க. சாதியாசார மெனப் பொதுப்படக் கூறினமையின் நான்கு சாதியாருக்கு மாசாரம் விதித்த வெனக் கொள்க. அவற்றை, கீதை, தொல் காப்பிய முதலியவற்றானு முணர்க. இவ்வுணர்ச்சி யில்லாதார் பக்ஷத்தார் பயனின்றிக் கூறுவர். (எஉ)

தினமுமண் ணுகர் பிள்ளைநோய்க் கிரங்கியே தீம்பண்ட மெதிர் காட்டிக், கனமருந்துக ளொளித்துவைத் தழைக்கின்ற கருணை யாந் தாய்போல, மனையறங்கள்செய் மகங்கள்செய் நன்றென்று மலர்ந்தவாசகஞ் சொல்லு, நினைவுவேறுகாண் சுவர்க்ககாமிக ளிந்த நிண்ணயந் தெரியாரே. (கஅக)

இதி லவற்றிற்குச் சமாதானங் கூறுகின்றார்:—

அக்கூற்று வேறு கருத்துப் பற்றி யென.

(இ—ள்.) "நோய் வருமென் றறியாது மண்ணை நுகர்ந்து அதனா னோயுற்று வருந்து மிளஞ்சேய்க்குத் தாயாயினா ளந்நோயைத் தீர்த் தச்சே யைக் காக்க வினிமை நுகர்த்தும் வாயிலாகக் கட்டி காட்டி கடுவூட்டிய கருணையைப் போல, அஞ்ஞானத்தான் வரம்பின்றி விடய நுகர்ந் ததனாற் பல விழிபிறவிகளிலுஞ் சென்று துன்புறுஞ் சிறுவர்க்கு "அறத்தான் வரு வதே யின்ப மற்றும், புறத்த புகழு மில" வென் றறிவுறுத்திக் கூறு மலர் ந்த வாசகங்களி னினைவுவேறு ஆயினு மிந்நிண்ணயத்தைச் சுவர்க்க காமிகள் தெளிந்து கொள்ளார் காண்" எ-று.

அங்ஙனஞ் சொல்லும் வாசகத்தி னினைவு,நன்மையாஞ் சுகம்'. 'மனை யறங்கள் செய் மகங்கள் செய், நன்றென்றமையா வில்லறத்தானுக்கே யிவ்வொழுக் கென்றவாறு. இக்காண்டத்திற் 'றுற' வென்பது, 'அலிபங்கு முதலியோருக்கும் கரும மாற்றும் வலியற்ற எழுபத்திராட்டை யுடைய தளர் பருவத்தற்குங் கூறியது.' இது ஒருவாற்றா லுடன்படினு மிதி லிகழ்ச்சிக்குறிப்பே புலப்படுகின்றது.

இக்கருத்தானே, நாயனாரும் "அறனெனப்பட்டதே யில்வாழ்க்கை மற்றதும், பிறன்பழிப்ப தில்லாயி னன்று" என்று துறவைப் பராமுகப் படுத்தி இவ்வாக்க வொழுக்கத்தையே வலியுறுத்திக் கூறினா ரென்க. இவற்றின் வகை மேல் வருதலினானுமுணர்க.

ஏகார மிரண்டனுள் முன்னது தேற்றம், பின்னது அசை. காண் முன் னிலை யசை. (எஙு)

போகமாருயிர் கண்டதை யுண்பதும் புணர்வது மியல்பேகா ணாகமங்களுஞ் சுபாவத்தை விதிக்குமோ வத்தனை தெரியாதோ

காகமே கருந்திடு நெருப்பேசுடு கசந்திடு வேம்பே நீ
வேகவாயுவே யசையென வொருவரும் விதித்திட வேண்டாவே.

அங்ஙனமாயி னொழிந்த லொழுக்க மன்றே கூறல் வேண்டும், அங்ஙன மன்றி இயல்பிற்கு விதிப்பதிற் பயனென்? 'காகமே நீ கருத்திடு, நெருப்பே நீ சுடு, வேம்பே நீ கசந்திடு, வேகவாயுவே நீ யசைந்திடு என வொருவர் விதித்தல் வேண்டாமையி னென விறுவுகின்றான்:—

(இ—ள்.) வெளி. போகம் ஆர் உயிர் என்றது, கண்டதை யுண்பதுங் கண்டதைப் புணர்வதுந் தன்க்கியல்பாய வுயிர். வரை யின்றி நுகருமுயி ரென்றவாறு. கண்டது புணர்வதற்குங் கொள்ளும். ஆகம முற்றுணர்வுடைய தாதலின், 'சுபாவத்தை விதிக்குமோ வத்தனை தெரியாதோ' வென்றான். ஆகமம் என்றது விதித்தவனைக் கருதி நின்றது. ஈண்டாகமம் பூர்வகாண்டம். நீ யென்பதை யேனையவற்றிற்குங் கூட்டுக.

ஏகார மாறனுள் முன்னது தேற்றம், ஈற்ற தசை, ஏனைய விளி. ஓகார மிரண்டு மெதிர் மறையில் வந்த வினா. (எசு)

கள்ளு மூனுநீ விரும்பினுல் மகங்கள்செய் காமத்தின் மனதானுற், கொள்ளும் பெண்டொடு கலவிசெய் யெனிவ்வன் குறையெலாந் தொடா னன்றே, தள்ளும் வேதத்தின் சம்மதஞ் சகலமுந் தவிர்வதே கருத்தாகும், விள்ளு மிவ்விதி யென்னெனிற் பூருவ நியமமாம் விதியன்றே. (கஅ௩)

இதுமுத லிரண்டு செய்யுளாலு மதற்கு விடை கூறுபவர், பூர்வபாகச் சுருதியின் விதியையு, மவ்விதியின் கருத்தையு, மதன் பயனையுங் கூறிக் கரும விசாரத்தை முடிக்கின்றார்:—

(இ—ள்.) கள்ளும் ஊனும் நீ விரும்பினல், மகங்கள் செய் = கூறிய யாகங்களைச் செய்துண்; ஊன் வாளா வுண்ணக் கூடாமையி னினம் பற்றிச் சோற்றையுங் கொள். இவை புனித மாதற்கு மகங்கள் செய் யென்றார். இங்ஙன மன்றி 'வாளா வுண்ணிலோ பாப முண்டா மதனுலிழிபிறவி யடைந்து துன்புறுவை'. ஆகலி னென்க. அற்றன்று. யாகமின்றிய வவ்வுணவால் பாப முண்டாயின், தான மந்திர விரத வோமங்களாற்றவிர்த்துக்கொள்ள லாகாதோ வெனின்? பாபத்தினு லுண்டாந் துன்பமாற்றாது வருந்து நீ பிராயச்சித்தஞ் செய்து அவ்வருத்தத்தையு மனுபவிப்பாயென்பது, 'துப்புக் கெட்டவனுக்கு இரட்டைப்பங்' கென்பதற்கொக்குமென் றிகழவரு மென்க. இது கொள்ளாப் பெண்டிரோடு கலவி

**செய்யார்க்கு** மொக்கு மென்க. **காமத்தின் மனது ஆறல் கொள்ளும் பெண்டொடு கலவி செய்**, இவ்வருந்தல் பொருந்த லநாதியாய் நீ யாற்றி வரலி னவ்வாசனை மிகுதியை யிவ்வொரு ஜன்மத்தி லறுதியா யொழிக்க வலியிலாமையா லென்க.

**எனில்** = வரைவின்றி நுகர்வோனுக்கு இவ்வரையறை கூறில்; **துறை யெலாம் தொடரான் என்றே தள்ளும்** = இவ்வாக்கியத்தில் கட்டுண்போன் விதித்தவை யன்றி விலக்கியவற்றைக் கையாளானென் றிவற்றை விலக்கிற்று. ஆயி னிதுவே யிதன் கருத்தோ வெனின்? வேதத்தின் சம்மதம் **சகலமும் தவிர்வதே கருத்தாதம்**, இக்கருத்தை வருஞ் செய்யுளிற் காண்க வென்க. அற்றாயி னிங்ஙனங் கூறுவானேன்? **விள்ளும் இவ்விதி என் எனின்**? கூறிய விவ்விதி பயனற்ற தாமோ வெனின்? அன்று; **பூர்வ நியமம் ஆம்** = கூறிய மகவின்றித் தாட்டாந்தம் போலக் கருத்தின்றிக் கூறலால்; **விதி அன்று** = இவ்விதி சித்தாந்த மல்ல வென்றவாறு. முன்னைய விரண்டேகாரமுந் **தேற்றம்; ஈற்றேகார மசை**.

**அருந்தல் பொருந்தல்களை விதியால் விலக்கல்**, "அறத்தான்வருவதே யின்ப மற்றும், புறத்த புகழு மில" என்பன. **விருப்பம் நுகர்தற் பொருட் டாகலின் நுகர்ச்சி யவாய்நிலையான்** வந்தது. 'கொள்ளும் பெண்டொடு கலவி செய்' என்பதற்கு **முதனூல் வாக்கியம்**:- 'இனிக்காம நன்றாமாறுண்டு' சுவர்க்கத்தின்கட் சென்று போகந் துய்ப்ப லென்றும்; உத்தர குருவின்கட் சென்று போகந் துய்ப்ப லென்றும், நன்ஞானங் கற்று வீடு பெறுவ லென்று மெழுந்த காமங் கண்டா யன்றே.' மேன்மக்களாலும் புகழப்பட்டு மறுமைக்கு முறுதி பயக்கு மாகலி **னிக்காமம் பெரிது முறுதி யுடைத் தென்பது. உடைத்தா மாறு**: அறுவகைப்பட்ட பாஷாண்டிகரு மிணைவிழைச்சி **தீதென்ப**. அஃதுண்டா மிடத்துச் **சுற்றத் தொடர்ச்சி** யுண்டாம்; உண்டாகவே, **கொலையே, களவே, செறுக்கே, மானமே** என்றித் **தொடக்கத்துதுற்ற நிகழு** மென்பது. அது **கேட்டுத் தலையாயினர் தன்கணின்று நீங்குவர். இனி யிடையாயினர்**: பெண்ணென்ப தெற்புச்சட்டகம், முடைக்குரம்பை, புழுப்பிண்டம், பைமறியா நோக்கப் பருந்தார்க்குந் **தகைமைத்து**.

ஐயும், பித்தும், வளியுங், குடரும், கொழுவும், புரளியும், நரம்பும், மூத்திர புரீடங்களு மென்றிவற்ற **தியைப்பொரு ளன்று**. பொருளாயின், பூவே, சாந்தே, யணிகலனே, பாகே, யெண்ணெயே யென்றிவற்றாற் **புனையவேண்டாம்**. தானே யியல்பாக நன்றாயினென் றத னசுபத் தன்மை **யுரைப்பக்கேட்டு நீங்குவர். கடையாயினு** ரெத்திறத்தாவது **நீங்கார்**. என்னை? பல பிறப்பிடை யாணும் பெண்ணுமாய்ப் பயின்று

போகந் துய்த்து வருகின்றமையின், அவர்க்கிது காட்டப்பட்டது. என்னை? பேதையைக் காதல் காட்டிக் கைவிடுக்க வென்றதனல், அவன் தாழப்பட்ட வினைவிழைச்சியினுள்ளே மிக்கதோன்று காட்டப் பட்டது. எஞ்ஞான்று மூப்புப் பிணி சாக்காடில்லது, நீச்சலு நிறப்பி டும்பை யில்லது. இவனும் பதினாறுட்டைப் பிராயத்தானு யிவளும் பன்னீராட்டைப் பிராயத்தாளாய், ஒத்து பண்பும், ஒத்த நலனும், ஒத்த வன்பும், ஒத்த செல்வமும், ஒத்த கல்வியு முடையாராய்ப் பிறிதோன்றிற் கூன மின்றிப் போகந் துய்ப்பாரென்று காட்டப்பட்டன. என் போல வோ வெனின்? 'கடுத்தின்னுதானைக் கட்டிபூசி கடுத்தீற்றிய வாறு' போலவும், 'கலங்கற் சின்னீர் தெருளாமையா னுண்பானை யறிவுடையா னொருவன் பேய்த்தேரைக் காட்டி, உது காணுய் நல்லதொரு நீர் தோன்றுகின்ற துண்ணீர் பருகாய், சேற்று நீர் பருகி யென் செய்தி, என்று நன்னீர் காட்டி யூட்டியது' போலவும், தானொழுகாநின்ற தோரிணைவிழைச்சியுள்ளே மிக்கதோரொழுக்கங் காட்டினன்.

காட்டக்கேட்டது பெறுமா றென்னைகொல்லோ வென்னும். என வே மக்கட் பாட்டினுலும், வலியானும், வனப்பானும், பொருளானும் பெறுவ தன்று. தவஞ்செய்தாற் பெறலாம். என்னை? "வேண்டிய வேண்டியாங் கெய்தலாற், செய்தவ மீண்டு முயலப்படும்." என்பதாக லின் என்பது. அது கேட்டு இனியானுந் தவஞ் செய்து இதனைப் பெறுவ னென்று தன்மாட்டு வேட்கையாற் றவஞ் செய்யும். செய்யா நின்றானைப், 'பாவி இதன் பாத்ததோ வீடுபேற்றின்பம்,' என்று வீடு பேற்றின்பத்தை விரித்துரைக்கும், என்பன. இதன்றொடர் வருஞ் செய்யுளினுலு முடியு மென்க. (எ௫)

மதுவிறைச்சிக ளுண்ணென்ற சுருதியின் மணந்து பாரெனல் பாராய், மிதுனவிச்சையும் புத்திரோற் பத்தியால் விரும்பென்ற விதி பாராய், இதையும் விட்டொழி யதிகைட்டிக வன்னிக் கிகழ்ச்சி யற்றதும் பாரா, யதையறிந்து கன்மங்க ளாசைக ளொழிந் தானந்த மடைவாயே. (கஅச)

முன் விதித்த விதியை விலக்கி வேறு விதியா லொழிவு கூறுகின் றதைக் கூறி யிதில் விடையை முடித்துக் கூறுகின்றார்:—

(இ—ள்.) மது இறைச்சிகள் உண் என்ற சுருதி, பின் மணந்து பார் எனல் பாராய்=அங்ஙனமா வுண்பதிலு முகந்து எறிந்துவிடலே நலன் என வவ்விதியை விலக்கி யுண்ணுமை யான வேறு விதியைக் கூற லைக் கூர்ந்து பார்; அன்றியும், மிதுனவிச்சையும் புத்திர உற்பத்தியால்

நீ விரும்பு என்ற விதியையும் பாராய் = அப்பெண்ணோடு புணர்தலுங் கருத்த வுரோம முள்ளபோழ்தே பிதுர்க்கட னீங்க ஒரு நன்மகவைப் பெறுவதன்பொருட் டாசைப்படு என்று மற்றொரு விதி விதித்தலையும் ஆராய்ந்து பார்; என்னை, யிதிற் காமம் விலக்கியவா றெனின்? இப்புத்திர னுண்டாவதற்கு வரைந்த நாளே நாளாகலி னிவ்வரைவும் விலக்காயின வாறு காண்க.

இனிப் புத்திர வுற்பத்தியா லென்றமையால் காமத்தின் பொருட் டன்றென்ற வாறுமாம். இனிப் புத்திர வுற்பத்தியா லென்றதனு லிவ் வுற்பத்தியின் பின்னு மவ்விருப்பம் வேண்டா மென்ற வாறுமாம். இனி, இதையும் விட்டு ஒழி யதிக்கு இகழ்ச்சியற்றதும் பாராய் = இப்பிதிர்க்கடனுதிய வைவகைக் கடன்களையு மிவற்றிற்குத் துணையாய மனையாளிடத் தன்பு முதலியவையும் விட்டு ஒழித்த லொழுக்கமாகிய துறவினை யடைந்த சன்னியாசிக்கு முன்னின்ற வில்லற மாற்றுமையா லச்சுருதி யிகழாமையும் பார்; அன்றியும், இதையும்விட்டோழி நைட்டிக வன்னிக்கு இகழ்ச்சி அற்றதும் பாராய் = இவ்வில்லறமே பூணுது பெருஞ்சுமை யென்று அநித்தந் துக்க மசுத்த முதலியவை கண்டிதனை விட்டொழித்த நைஷ்டிக பிரமசாரிக்கு மத்துறவியோ டொக்க வுலகம் புகழ்தலை நீ பாராய்; இவன் வீஷ்டுமன் சுகன் வியாதன் முதலியோ ரென்க. இவரது புகழ்ச்சியை பாரதம் பாகவத முதலியவற்றிற் காண்க வென்க. மனைதுறந்தோன் யாக்கியவல்கியன் சிகித்துவசன் முதலா யினோ ரென்க.

இதை அறிந்து = கரும காண்டம் அருந்த லாதிகளை விதியாமற் றன்கருத்தை செய்மைக்கண் மறைத்ததற்குச் சோபானமாகச் சிறுகச் சிறுகக் கழித்துப் படியேற்றி வீட்டின்பைக் கொடுக்கு மிக்கருத்தை விதி யன் றென்றும் வஞ்சக மன்றென்று நீ யறிந்து; கன்மங்கள் ஆசைகள் ஒழிந்து = நித்திய நைமித்திக கருமங்களே நமக்கு விதி யென்பதையு மொழித்து அவற்றைச் செய்து அவற்றின் பயனையு மடைய வேண்டு மென்னு மாசைகளையு மொழித்து; ஆநந்தம் அடைவாயே = அதன் முக் கிய சித்தாந்த மாகியும் பிற்காண்டத்திற் கூறு மாநந்தத்தையே யடையக் கடவாய். எ-று.

ஈண்டாநந்தம் வைராக்ய வின்பம். தேசுறேகார மேஞ்சியது. இக் கருத்தை 'சங்கரவிஜயம்-ஒன்பதாவதத்தியாயம், கூஎ-ம் பக்கமுதல், எ0-வது பக்கம் வரையிலும்' காண்க. ஒழித்தலை நைஷ்டிகவன்னிக்கும்,, இகழ்ச்சி யற்றலை யதிக்குங் கூட்டுக. ஒழிந்தென்பதை கன்மத்திற்குங் கொள்க. ஈற்றேகார மசை. பிரமசாரியனை வன்னியென்ற துபசாரம். கன்னுண் ணுமைக்குக் 'கன்னுண்ணுமை கூறுங் துறளா' லறிக.

மிதுனவிச்சையும் புத்திரோற்பத்தியால் விரும்பென்றதற் குதார ணம்:— "மங்கலமென்ப மனைமாட்சி மற்றதற்கு, நன்கல நன்மக்கட் பேறு." என்பது. நன்மக்களாவார், 'பும்' என்பதோர் நரகம், இதினின் றும் வாங்கப்படலால் 'திரா' இவற்றைத் தொடர்பு படுக்க புத்திர னென் றாயிற்று, என்க. விரிவஞ்சி யிவ்விசாரத்தை யீண்டு விரிக்கில மென்க மக்கட்பேறுங் கூறினமையா லிவ்விதிகளி லேற்பன அருகி சூத்திரனுக் குங் கொள்க, (எசு)

உலகமான வஞ்ஞானமுங் கருமமு முறவென்ற வழி கூடும்,
பலவுமான வஞ்ஞானமு ஞானமும் பகையென்ப துள தானு,
னிலவிலே மறுப்போல வஞ்ஞானமு நிமல ஞானத் தோடே,
குலவிநின் றிந்தச்சிருட்டிகள் செய்யவுங் கூடுமோ குரு மூர்த்தி.
(கஅ௭)

இதுகாறு ஞானத்திற்கு நேரே சாதனம் விசார மெனவும், கரும மோராற்றல் விசாரத்திற்குச் சாதனமாயினு மஃதஞ்ஞான சோதய மெனவுங் கூறி முடித்து, "முன் வம்பியன் மாயைதன்னை மாயையான் மாய்ப்பார், பின்னைத் தம்பமா வதுவுங்கூடச் சவஞ்சுடு தடிபோற் போமே." என் றதின் வகையை யிது முதற் பதினெரு கவியானும் விரி த்து, அஞ்ஞான மித்துணையை வென்று மவற்றி லஞ்ஞானத்திற்குச் சாதக மிதுவென்றும், பாதக மிதுவென்று மவற்றின் பயனுங் கூறுவா ரிதில் ஞானஞ்ஞானங்களுக்குத் தம்மில் விரோத முளதாயி னதைக் காட்டா தொன்றுபட நின்று சிருட்டியாதிகளை விளைப்பதற் கேது வென்னை யென்னும் வாதியின் சங்கையை மேற்கொண்டு மாணக்கன் வினவு கின்றன்:—

(இ—ள்.) உலகமான அஞ்ஞானம் = காரிய வடிவமாகப் பரிண மித்த வஞ்ஞானமும்; கருமமும் = சாதனத்தோடு கூடிய கருமமும்; உறவு என்றவழி கூடும்=சடமாயு மசித்தமாயு மிருத்தலிற் றம்மி லியைபொக் கும்; இங்ஙன மன்றி, பலவுமான அஞ்ஞானமும் = அவ்வஞ்ஞானமும்; ஞானமும் பகை யென்பது உளது ஆனல்; அப்பகைமையைக் காட்டாது, நிலவிலே மறுப்போல=இவை தம்முள் விரோத மின்றிக் கலந்து விளங் குவது போல; நிமல ஞானத்தோடே = சொப்பிரகாச சைதன்னியத் தோடே; அஞ்ஞானமும் குலவி நின்று, இச்சிருட்டிகள் செய்யவுங் கூடுமோ குருமூர்த்தி; எ-று.

குலவி நிற்றல் = நானஞ்ஞானி யென்று சேதனமு மஞ்ஞானமு மொன்றுபடக் காட்டல். சிருட்டிகள் செய்தல், சுழுத்தியிலும்

மஹாப்பிரளயத்திலுஞ் சாக்கிர சொப்பன வாசனைகளோ டடங்கி மீண்டு வெளிப்படல். இதை முன் சிருட்டி கூறலாலும், மே லஞ்ஞானபூமி கூறலாலும் விளங்கு மென்க. (எஎ)

சொரூப ஞானமும் விருத்திஞானமு மன்று சோதிஞான மிரண்டாஞ், சொரூப ஞானமே விருத்திபின்ஞானமாய்த் தோன்றும் வேறிலை மைந்தா, சொரூப ஞான மஞ்ஞான சத்துருவென்று சுழுத்தியிற் கண்டாயே, சொரூப ஞானத்தின் மருவு மஞ்ஞானத்தைச் சுடும் விருத்தியின் ஞானம். (கஅசு)

அதற்குச் சமாதானங் கூறுகின்றவர் ஞான மித்துணைய வென்று மவற்றி லஞ்ஞானத்திற்கு விரோதி யிது வென்றும் யுத்தி யநுபவங்களோடு மிதிற் கூறுகின்றார்:—

(இ—ள்.) **சொரூப ஞானமும் என்றும்** = சாமான்னிய சொரூப ஞானமெனவும்; **விருத்தி ஞானம் என்றும்** = விருத்தி சம்பந்த விசேஷக் ஞான மெனவும்; **சோதிஞானமும் இரண்டாம்** = சொப்பிரகாச சைதன்னியமே யவ்விரு பகுதியதாகும்; கூறிய விரண்டிலும், **சொரூப ஞானமே விருத்தியின் ஞானமாய்த் தோன்றும்** = அச்சொரூப ஞானந்தான் விருத்தி யவச்சின்ன ஞானமாய் விளங்கும்; **வேறு இலை** = விருத்தி யவச்சின்ன சைதன்னிய மச்சொரூப சைதன்னியத்திற்கு வேறுபட்ட தன்று; இவற்றின் வகை யிவ்வாறாயினும், **சொரூபஞான மஞ்ஞான சத்துரு வென்று சுழுத்தியில் கண்டாயே** = இல்லையென்ற வாறு; என்னை? சத்துரு வன்மை. சத்துரு வாயின், நீரு நெருப்பும் போல வோராதிகரணத்தி லிரண்டு நில்லாவாகலி னங்ஙன மன்றி நானொன்று மறியா துறங்கினே னென்னுமிடத் தறியாமையு மறிவு மாண்டோக்க காணப்படலி னென்க.

இங்ஙன மோக்க நிகழ்தற்குக் காரண மேல் 'மாயாவிலக்கணங்' கூறுமிடத்திற் காண்க. இவ்வநுபவத்தான் மாயைக்குஞ் சுத்த சைதன்னியத்திற்கும் விரோத மின்றென்ற வாறு. பின்னையோ? **சொரூப ஞானத்தின் மருவும் அஞ்ஞானத்தை** = அவ்வா றச்சொரூபத்திற் றாதான்மியப் பட்டுள்ள வஞ்ஞானத்தை; **விருத்தியின் ஞானம் சுடும்** = கூறிய விருத்தி சம்பந்தமான விசேஷ க்ஞானந்தான் சுடு மென்ற வாறு.

என்னை? சுத்தத்திலு முபாதி யுடைமை வேறுகவி னிதற் கவ்வலியுண்டாயிற் றென்க. இவ்விருத்திஞான மஞ்ஞானத்தை யெரிக்குமாற்றை மேல் வருங் கடாவிடைகளால் காண்க வென்க. (எஅ)

துருத்தி மாயையைச் சுழுத்தியிற் சுடாதது சொரூபஞானந் தானே, விருத்தி ஞானமாய்ச் சுட்டதெப்படியெனின் வெய்யி லா லுலகெங்கும், பரித்த சூரியன் சூரியகாந்தத்திற் பற்றி யக் கினி யாகி, யெரித்த வாறுபோற் சமாதியில் விருத்தியா லெரிக்கு மென் றறிவாயே. (கஅ)

இரண்டும் ஞானமாக வொன்றிற் கஞ்ஞானத்தைக் கெடுக்கு மாற் றலு மற்றொன்றிற் கஃதின்மையு மியாங்ஙன மென்னும் வினவிற் கஃ திவ்வாற்ற லெனினும் விடையு மிதிற் கூறுகின்றார்:—

(இ—ள்.) துருத்தி மாயையை = தன்னிடத் தேகதேசமான மாயையை; சுழுத்தியில், சுடாதது = தன்னிடத் தேற்றது; சொருபஞா னம்; அங்ஙனமாக, மீண்டும், தானே விருத்தி ஞானமாய் சுட்டது = அவ்வஞ்ஞானத்தைச் சாக்கிரத்தே யெரித்தது; எப்படி யெனின்=எத் தன்மையா லென்னை யாயின்? வெய்யிலால் உலகு எங்கும் பரித்த சூரியன் = இயல்பாய்த் தன்னுடைய கிரணத்தா லிவ்வுலகிலுள்ள பொரு ளைக் காத்த பரிதியானவன்; சூரிய காந்தத்தில் பற்றி=இக்கல்லி லவ்வெ யிற் றங்கி; அக்கினி யாகி = தங்கிய காரணத்தாற் றன்னியல்பு நீங்கி வேறு வகையா யவ்வக்கினி வடிவ மாகி; எரித்த ஆறு போல் = அப்பொ ருள்களை யெரித்த விதம் போல; சமாதி இல் விருத்தியால் எரிக்கும் = சுழுத்தியில் விரோதமாக விருந்த வஞ்ஞானத்தை மனனசகாயத்தா லுண் டாகு நிதித்தியாசனத்திற் றன் முகமான வகண்ட விருத்தியிற் றுன் றங் கிய பரோக்ஷஞான மென்னும் பெய ரடைந்து அதனுற் றன்னை மறைத்தி ருந்த வாவரணத்தைக் கெடுக்கு மச்சொரூப ஞானம்; என்று அறிவாய் நீ, எ-று.

ஏகார மிரண்டனுண் முன்னது தேற்றம், ஈற்ற தசை. ஆற்றிடைக் குறை போல, ஆன்மாவி லேகதேசத் திருப்பதால், துருத்திமாயை யென் னப்பட்டது. அந்தக்கரண விருத்தி யின்மையே சுழுத்தியும், அதன் றோற்றமே சாக்கிரமு மாகலின், விருத்திஞான மென்றதைச் சாக்கிரம் என்றும்.

சாமானிய வெய்யிலுக் கின்றிய வாற்றல் காந்தத்தின் சம்பந்தத்திற் குண்டாவது போல, சொரூபஞானத்திற் குண்டாய வாற்றல் விருத்தி ஞானத்திற் குண்டென்ற வாறு. சமாதியில் என்றமையா லகண்ட விருத்தி யென்றும். சிலர்பக்கம் விருத்தி யொன்றுமே சாலு மென்பார். இவ்விருத்தியுஞ் சடமாகலி னிதிற் சேதன சம்பந்த வேண்டுமென்பா ரிவர், சொருப ஞானந்தானே சமாதியில் விருத்தியா லெரிக்கு மென்றார்.

இதனுன் 'முன்னும் விருத்தியும் பலமுங் கூடும் விகாரமே மன மென்பார்.' என்றார். விருத்தியா லென்றமையான் விருத்தியிலுள்ள ஞான மஞ்ஞானத்திற் கேது விருத்தி சகாய மென வறிக. 'வினைவுஞ் செப்பே வினை வெதிர்வரினே' என்றமையால் கண்டாயே, என்ற வினை விடையின் பக்கலாய் இல்லை யென்னும் பொருளை யுணர்த்திற்று. (எக)

அருளு மையனே திரிவிதகரணத்தா லாகிய தொழி லெல்லாங்,
கரும மல்லவோ விருத்திஞானமு மந்தக்கரண காரிய மன்றோ,
உரிய கர்ம்ம மஞ்ஞானத்தைக் கெடுக்குமென் றோதினு லாகா
தோ, பெரிய ஞானமென் றதற்கொரு பேரிட்ட பெருமையை
யுரையீரே. (கஅஅ)

முன் கருமமு மஞ்ஞானமு முறவென்றீ ரீண்டக்கரும சாதனத்து ளொன்றன விருத்தி யஞ்ஞானத்திற்குப் பகை யென்றீ ரிவை மாறுகோளா மேன்று வினவுகின்றன்:—

(இ—ள்.) திரிவித கரணம் = மனம் வாக்குக் காயம். இவற்றி லொன்றான மனத்தின் விருத்தியைக் கரும மென்னது ஞான மென்றதற் கேது வினவியவாறு. ஏனைய பொருள் வெளி. ஓகார மூன்றும் வினா. ஈற்றேகார மசை. (அ௦)

விருத்தி ஞானமு மந்தக்கரணத் தொடுவிருத்தி யாகினு மைந்தா,
ஒருத்தி மக்களே தங்களிற் பகைக்கின்ற துலகெங்குங் கண்டோ
மே, கருத்த னுகிய புருடதந்திரங்களாங் கருமங்க ளவைபோல,
வருத்த ஞானமோ புருடதந்திர மன்று வத்துதந்திர மாமே.
(கஅக)

அதற்கு விடை கூறுபவ ரீதி லவ்விருத்திஞான மீருதிற னென்னிலக்கணத்தோடுங் கூறுகின்றர்:—

(இ—ள்.) மைந்தா, விருத்திஞானமும் அந்தக்கரணத்தினது விருத்தியாகிலும், தம்மில் விரோத முண்டு; எதுபோல வெனின்? ஒருத்தி மக்களே தங்களில் பகைக்கின்ற துலகெங்குங் கண்டோமே, யாமிருவரும்; அதுபோல, கருமங்கள் பாகிய விடயமாய், கருத்தன் ஆகிய புருடதந்திரங்களாம் = கருத்தத்துவ புத்தி யுடைய புருடப் பிரயத்தினத்தாலுண்டாகு மந்தக்கரண விருத்தியின் பரிணும காரியமாகும்; இவைபோல, புருடதந்திரம் அன்று வருத்த ஞானம்; வருத்த ஞானமோ = பின்னை யிஞ்ஞானமோ? வஸ்து தந்திரமாம் = ஆன்ம சொரூப மெவ்வாறோ வவ்வாறே யதன் சுபாவமாகப் பரிணமித்தல்; ஆகலி னிவ்விரண்டு மூரணி வேறுபடு மென்றவாறு.

ஒடு ஆறனுருபுப் பொருண்மயக்கத்தில் வந்தது. ஒம் விகுதி படர்க்கையாரையுந் தழுவி நிற்பினு மீண்டு மாணாக்கன் மாத்திர முன்னிலையிலிருத்தலி னிவ்வாறு கூறப்பட்டது. வேண்டுமே லுனைவரு மெனப் பொருளுரைக்க. ஏகாரம் தேற்றம்.

வருத்த ஞானம் மூன்று மியையு மென்க. வருத்த ஞானம், அஞ்ஞானத்தைத் தீய்த்த ஞானம். 'இவ்வந்தக்கரண விருத்தி யஞ்ஞானத்திற்குப் பகையும், கரும விருத்தி யஞ்ஞானத்திற் குறவு' மாதலே தணவேறுபாடென்க. திட்டாந்தத்திலுங் குணவேறுபாடே கொள்க. அவை: ஒருவன் செட்டையனு யிராசதகுண் முடையனுதல், மற்றொருவன் சமவடிவமாய் சத்துவகுண முடையவ னுதல், மற்றொருவன் பருத்த காத்திர முண்டயவனுய்த் தாமத குண முடையவனுதல். இன்னும் பல்லாற்றாலு முளா. ஈற்றேகார மசை. (அக)

**வருத்த கன்மங்கள் செய்யவுந் தவிரவு மற்றொன்றாக்கவுங் கூடு,**
**மிருத்த ஞான மப்படியன்று தியானமும் விவேகஞானமும் வே**
**றே, செகத்தி லொன்றை யொன்று யிவன்பாவிக்குந் தியானங்**
**கற்பிதயோக, முகஸ்தமாக் கண்ட ஞானமே வாஸ்தவ மோக**
**மாய் மயங்காதே. (கசுo)**

கருமம் புருடதந்திர மென்பதற் குத்திகூறி ஞான மதற்கு வேறெனக் கூறுவோர் ஞானத்தி னுட்பிரிவுங் கூறுகின்ற ரீதில்:—

(இ—ள்.) வருத்த கன்மங்கள் செய்யவும் தவிரவும் மற்றென்று ஆக்கவும் கூடும். வருத்த கன்மங்கள் = வருணச்சிரமங்களுக் கியைய வகுக்கப்பட்ட கருமங்கள். செய்தலாவது, தன்மாட்டு வேட்கையுடையன் விதித்தவாறொழுகல்; தவிர்தலாவது, அறியாமை சோம்பு மறவி முதலியவற்றாற் செய்யா தொழிதல்; மற்றொன்றாக்கல், அக்கருமப்பலனை யன்னியனுக்குக் கொடுத்தல்; அல்லது, ஈச்சுரார்ப்பணஞ் செய்தல் எனினு மொக்கும். அன்றி, விதித்த கன்மமன்றி விலக்கிய கரும மாற்ற லெனினு மொக்கு மென்க.

இனி, மிருத்த ஞான மப்படி யன்று = என்னை? கூறிய வாற்றாலென்க. ஆயினும், அந்த ஞானமு மிரு திறப்படும். அவை, தியானமும் விவேகமும் வேறே; வேறென்பது தியானத்திற்கு மியையும். அவ்வேறுபாட்டிற் கிலக்கணம்: செகத்தில் ஒன்றை = குரு முன்னிலையில் பெற்றுக் கொண்ட பாணம், சாளக்கிராம முதலியவற்றி லொன்றை; ஒன்றாய் = அதாவது நிரையே, "அஞ்சலென்ற காதலமுங் கணபண கங்கணமுமரைக்கிசைந்த புலி யுடைய மம்புலி செஞ்சடையு, நஞ்சையுண்ட மிடறு

மூன்னூன் மார்பு நலங்கிளர் வெண்ணீற் றொளிர்வு மழுமானுங் காமுங், கஞ்சமலர்ச் சேவடியுங் கணைகழலுஞ் சிலம்புங் கருணைபொழி திருமுகமுங் கண்களொரு மூன்றும், பஞ்சடிச்சிற்றிடை மடந்தை யொப்பனை பாகமு மாய்ப் பால்வண்ண ருளத்திருக்கப் பயமுண்டோ வெனக்கே" எனவும், "நீல நெடுங்கிரியு மழைமுகிலும் பவ்வநெடு நீருங் காயாம்பு நிகர்த்த மே னிக், கோலமுஞ் செங்கதை வாளுங் கோதண்டமெனும் படையுங் குளிர்ந்த நாவு, மாலை நறுந்துழாய் மார்பு மணிக்கழுத்துஞ் செவ்விதழும் வாரிசாதக், கால்மலரெனச் சிறந்த முகமுஞ் சோதிகதிர் முடியு மிம்மையிலென் கண் ணுற்றேனே" என்பனவற்று ளொன்ருக இவன் பாவிக்குந் தியானம்; **கற்பித யோகம்** = யாதினு லெனின்? மாயாகாரிய வடிவங்களைத் தன் மனத்தாற் கற்பித்தும் பாவிக்கின்ற பாவனையாகலி னென்க. பின்னையோ, **முகஸ்தமாய் கண்ட ஞானமே வாஸ்தவம், மோகமாய் மயங்காதே** = இப்பொருள் சுருதிசித்த மாகலி னீ யையப்பட்டு மயக்கத்தை யிதி லடை யாதே யென்றவாறு.

**இவ்வேகாரம் தேளி யென்னும் பொருளைத் தரலின் பிரிநிலை. முன்னின்ற வேகார மசை. இடை நின்றது தேற்றம்.** (அ௨)

**கண்டறிந்தது ஞானங் கேட்டது தனைக்கருது பாவனை யோகங், கண்டபேர் சொலக் கேட்டது மறந்துபோங் கண்டது மறவாது, கண்டவஸ்து மெய்தியான வஸ்துக்கள் பொய்கறுவி யஞ்ஞா னத்தைக், கண்டவக்கணங் கொல்வது ஞானமே கருமமன் றறி வாயே** (கக௯க)

**கூறிய விரண்டிற்கு வேறுபா டநுபவத்தாற் காட்டிக் கருமஞானநி க்கீதுப் பயன் முடித்துக் கூறுகின்றார்:—**

(இ—ள்.) **கண்டு அறிந்தது ஞானம்** = ஒரு பொருளின் றருமகுண விசேடங்களைச் சவிகல்பமாகக் கண்டு பிரமாண ஜென்னியமா யுண்டான தருமி அல்லது குணி யெதுவோ வதுவே ஞானமென்பதாகும்; **கேட்டது தனைக் கருது பாவனை யோகம்** = ஆகமத்தா லாகுத லாப்தனு லாகுதல் கேட்டதைக் கேட்டவண்ணங் கருதுகின்ற பாவனையே **யோக** மென்னும் பெயருடையது; இக்கேள்வி, ஏனைய நேத்திர முதலிய பிரமாணங்களா லறிந்தது போலு மன்றிச், சொரீக்காதி சேய்மைப் பொருளாகலின், **மஹாவாக்கிய விசாரத்தினும்** வேறென்க.

**கண்டபேர் சொலக் கேட்டது மறந்து போம்**; தனக்குப் பிரமாண ஜென்னிய மாகாமையின், **கண்டது மறவாதே**, இப்பிரத்தியக்ஷ ஞான விடயம் ஸ்மிருதியா யுண்மை யநுபவமாய் நிற்றலி னென்க. **ஏகாரம்**

தேற்றம். இதனால், கண்ட வஸ்து மெய், தியான வஸ்துக்கள் போய், கண்ட அக்கணம் = ஆன்மாவைக் காணுங் காலத்தே; அஞ்ஞானத்தை = அவ்வான்மாவை மறைத்திருந்த வாவரணத்தை; கறுவி = விரோதித்துக்; கொல்வது ஞானமே, கரும மன்று = பகிர்முகமாய்க் கருத்தாவினாற் கற்பிக்கப்பட்ட விருத்தி யன்று; அறிவாய்; எ-று.

ஏகாரம் தேற்றம். கரும மாதபெயர். "தியானத்தா லுமஞ்ஞானங் கெடாமையின் கருத்தத்துவ புத்தி யாகலானும், கரும மன்று" என்றுடன் கழிக்கப்பட்டது. ஈற்றேகார மசை. அஞ்ஞானத்தைக் கறுவிக் கொல்வது ஞான மென்றமையால், பிரகாசாபாவ மந்தகார மென்னு நையாயிகர் மதத்தை மறுத்துப் பிரகாச விரோதி யென்பதைக் கூறிய வாறாயிற்று. முன்னும், "மோகத்தமம், ஞான வான் கதிர் பரந்தா லுண்டோ" என்ற ரீதுபற்றியே யென்க. (அ௩)

சருவ முத்தியைத் தருகின்ற தியானமுஞ் சத்தியமன் றென்றாற், சருவ முத்தியுஞ் சத்திய மன்றென்று சங்கியாதே நீகேள்; உருவங் கேட்டவன் றியானிக்கும் பொழுதி லவ்வுருவம் வாஸ்தவமன்றே, யுருவமாகு மப்பொழுது கண்ணாற் கண்ட வுருவம் வாஸ்தவமாமே. (கசுஉ)

பிரமாபரோக்ஷந் தியானத்தா லுண்டாகாதோ வுண்டாயின், சதுணுபாசனைக்கு மிதற்குஞ் சமசத்தை யின்மையாற் சாதக மெவ்வாறு மென வரு மாசங்கைக்குச் சமாதான மிதிற் கூறுகின்றார்:—

(இ—ள்.) சருவ முத்தி = சாரூப முத்தி முதலியவை; ஐ = இவற்றை; தருகின்ற தியானமுஞ் சத்தியம் அன்று என்றால், சருவ முத்தியுஞ் சத்தியமன்று; யாதினா லெனின், ? கானற்சலந் தாகத்தைத் தணிவியாது; தணிவிக்கு மெனின்? அவன் மலடிமைந்தனே யன்றி யியல்பாக வழங்கு மகனின் றண்ணீரின் வேட்கை யாகா வாறு போல, என்று சங்கியாதே; என்னெனின், அதற்கு விடை நீ கேள்; உருவம் கேட்டவன் தியானிக்கும் பொழுதில் அவ்வுருவம் வாஸ்தவம் அன்றே; யாதினா லெனின்? அப்போதிவன் கண்ணாற் காணாது மனத்தாற் கற்பித்து பாவித்தலின்; பின்னை, உருவமாகும் அப்பொழுது = சகுணமாக வாகுதல் நிர்க்குணமாக வாகுதல் தானவ்வுருவ மாகும் போது; கண்ணால் கண்ட வுருவம் வாஸ்தவமாமே = உருவமாயின் முகக்கண்ணாலு மருவமாயின் மனக்கண்ணாலுங் காண்ட வியல்பாய வடிவமே; யென்றவாறு.

வடிவங்க ளியாண்டுங் கற்பித மாகாமையி னென்க. தியானம் பொய்யாயினுந் தியானத்தின் விடய மதுவாகலி னீண் டக்கடாவிற்குப்

பயனின் றென்க. ஏகார மிரண்டுந் தேற்றம். 'சங்கியாதே' என்பதி னேகார முன்னிலை யேவ லொருமையில் வந்தது. (அச)

சடமதாகிய தியான மெய்யாகிய சருவ முத்தியை நல்குந், திட மதான தெப்படி யெனி லவரவர் தியானமே பிறப்பாகு, முடல மாசையாற் றியானிக்கிற் றியானித்த வுடல்களாகுவர் மைந்தா, தொடர்பவங் கெடச் சொரூபமே தியானிக்கிற் சொரூபமாவர் மெய்யே. (கஉங)

உண்மை யுணராத தியான முண்மையை யெவ்வாறு தரு மென்னு மாசங்கைக்குச் சமாதான மிதிற் கூறுகின்றார்:—

(இ—ள்.) சடமது ஆகிய தியானம் = பொருளறியாது வேறொருவர் கூறியவாறு தியானிக்குந் தியானம், (பொய்த்தியான மென்றபடி); மெய்யாகிய சருவ முத்தியை நல்கும் திடமது ஆனது எப்படி எனின்; ஏனைய பொருள் வெளி. ஏகார மிரண்டுந் தேற்றம்.

ஆன்மஸ்புரணம் பகிர்முகப் பட்டமையின், அவ்விச்சை காரணமாகப் பல பிறவிக ளுண்டாயின. அந்த ஸ்புரணமே தன்னை நோக்கியதை யிச்சிக்கிற்றுரு மென்பார், அவரவர் தியானமே பிறப்பாகு மென்றார். 'அவரவர்' என்றடுத்துக் கூறியது, அஞ்ஞான வழி ஞானவழி யென்னு மிரண்டு வழி யிருத்தலி னென்க. இவற்றை மே லவ்விரு பூமியுங் கூறு மிடத்திற் காண்க. ஆது மென்று தன்னனுபவமாகக் கூறியது, இது சுருதி கூறியபடித் தன்னனுபவ மாகலி னென்க. (அரு)

பிரம ரூபத்தைத் தியானித்த பேர்களும் பிரம மாகுவ ரென்று, னரசரீரமாங் குரவனே விசார மேன் ஞானமே னென்னுதே, பிரமபாவனை பரோக்ஷ மாம் பின்பந்த பரோக்ஷமே யபரோக்ஷந், திரவிசாரமே ஞானமாமுத்தியாந் தீர்வை யீ தறிவாயே. (கஉச)

முன் ஞானத்திற்குக் காரணம் விசாரமென்று மீண்டுத் தியானமே காரண மென்றுங் கூறலி னைய மாமே யென்று வினவினனுக் கவ்வைய நீங்க விடை யிதிற் கூறுகின்றார்:—

(இ—ள்.) வெளி. பின்பு அந்த பரோக்ஷமே அபரோக்ஷம்; யாதினு லெனின்? திரவிசாரமே ஞானமாம்; ஆதலி னிஞ்ஞானத்தாலே யபரோக்ஷ மென்க. இவ்வபரோக்ஷத்தால் முத்தியாம் என்க. இதை 'முன் பத்தராவான் றிட்டாந்தத்தாலு' மறிக வென்க.

ஆண்டுப் பத்தாவ னுண்டென்று நிச்சயித்த நிச்சயமே மீண்டும் விசாரத்தால் வெளியாயது. இவ்வாறே பிரம முண்டென்ற நிச்சயத் திற் கொரு வாதை யின்மையின் விசாரத்தா லதுவே வெளிப்பட்டி னென்க. இதனுன் 'பரோக்ஷமே யபரோக்ஷம்' என்று தேற்றந் தந்து கூறினு ரென்க. 'என்னுதே' என்ற வேகாரத்திற்கு 'சங்கியா தே' யென்ற பொருள். மேல் வருவனவு மன்ன. ஈற்றேகார மசை.(அசு)

வீடதாம் பரிபூரண சொரூபத்தில் விருத்தி ஞானமுங் கூடி
சேடமாயினு லகண்டமா மனுபவ சித்தி யெப்படி யென்றாற்,
சாடிநீர் மண்ணைப் பிரித்த தேற்றும் பொடிதானு மண்ணொடு
மாயு, மூடிஞானமு மறிவிலாமையைக் கெடுத் தொக்கவே கெடுந்
தானே. (கசுரு)

அங்ஙன மவித்தையைக் கெடுத்த ஞான மெவ்வாறமோ வென வரு மாசங்கைக்குச் சமாதான மீதிற் கூறி, அஞ்ஞானத்திற்குச் சாதக பாதக மிஞ்ஞான மென்ற விசாரத்தை மீண்டு முடித்துக் கூறுகின் றார்:—

ஆயின், 'தம்பமா மதுவுங்கூடச் சவஞ்சுடு தடிபோற் போமே' என்ற தனு லிவ்விசார முடிந்திருக்க வீண்டுக் கூறல் புனருத்த மன்றோ வெனின், வம்பியலல்லாத மாயையைத் தியானம் ஞான மென விரண்டாகப் பகுத்துக் கூறி யிவ்வகண்ட ஞானமே யஞ்ஞான விரோதியாய்ச் சாக்ஷாத் மோக்ஷசாதன மென்பதை விரித்துக்கூறி வற்புறுத்தலி னன்றென்க. இதுவும் பிரமேயகத சந்தேகமும் நிவர்த்தியு மாகலினுனு மென்க.

(இ—ள்.) வீடது ஆம் பரிபூரண சொரூபத்தில் = வீடு—சர்வா னர்த்த நிவர்த்தி, அது—சுட்டு, ஆம்—பண்புருபு. பரிபூரண சொரூபத் திற்கு வீடு விசேடணம். அனைத்தும் விடப்பட்ட பரிபூரண சொரூப மென்றபடி. பரிபூரண சொரூபம் = தேச காலவஸ்து பரிச்சேதரகித சொரூபம். இவ்வாறுகலின், இதில், விருத்தி ஞானமுங் கூடி = அறியா மையைக் கெடுக்க வெழுந்த மஹாவாக்கிய ஜென்னியமான வந்தக்கரண விருத்தி யவ்வஞ்ஞானத்தைக் கெடுத்துத் தான் கெடாது அச்சொரூபத் தோடு தானுங் கலந்து; சேடம் ஆயினுல்='திரவிசாரமே முத்தி' என்ற படி யெஞ்சி நிற்கின்; அகண்டம் ஆம் அநுபவம் = இவ்விருத்தி பரிச் சின்ன மன்றி கூறிய வியாபகமான வநுபவம்; சித்தி எப்படி = இவனுக் குச் சித்திப்பது ஏவ்வாறு; என்றல், சாடிநீர் மண்ணை பிரித்த தேற்றும் பொடி தானும் மண்ணொடு மாயும். என்னை யெனின்? அம்மண்ணைப் பிரித்த தா னந்நீரோடு வேறுபட்டு நில்லாதும், அந்நீரினின்றுந் தன்னைப்

பிரிக்க வேறு சாதன மாண்டின்றாயினு மம்மண்ணின் பிரிவே தன் பிரி விற்குங் காரணமாய் நிற்றலின் றானு மம்மண்ணொடு மாயு மென்க.

நீ கூறிய வாறன்றி, இத்திட்டாந்தம் போல, ஞானமும் = கூறிய ஞானமும்; அறிவிலாமையை ஊடி கெடுத்து, ஒக்கவே = அவ்வஞ்ஞா னங் கெடுங் கணத்தே; தானேகெடும் = தன்னைக் கெடுக்கப் பிறிதொரு சாதனம் வேண்டாது அவ்வஞ்ஞானத்தின் கேடே தன்கேட்டிற்குஞ் சாத னமாகக் கொண்டு அவ்வஞ்ஞானத்தோடுந் தானே கெடு மென்றவாறு.

என்னை? அஞ்ஞானமு மந்தக்கரண விருத்தியுஞ் சமசத்தை யாக லின், பாதகந் தம்மி லாயிற் றென்க. 'தானே' என்ற தேற்றேகாரம், பிறிதொரு சாதன மின்றென்று கருதிப் பிரித்துக் காட்டலின், பிரிநிலையு மாயிற்று. இவ்விடை யுடம்பொடு புணர்த்தி யினைப் பொருளுணர்த்தும் விடை யென்க. ஆயின், " அநுபவாநந்த வெள்ளத்தழுந்தியே யகண்ட மாகி " என்ற வநுபவத்திற்கு மாறன்றோ வெனின்? மாண்டும் விசார ஞான மிறந்து ஸ்மிருதி மாத்திர நிற்றலி னன்றென்க. முன்னின்ற வேகாரம் தேற்றம். (அஎ)

இந்த நிச்சய முத்தரு ளனுபவ மிருப்ப தெப்படி யென்றாற்
சிந்தையற்ற பூமண்டல விராசனுஞ் சிசுவும் போற் சுகமாவர் [வா
பந்தமுத்தி கண்மறந்து போமுண்டென்று பலர் சொலி னையா
ரந்தரத்தை யுண்டு மிழ்ந்ததோர் கொசுகெனு மவர்களை நகையா
ரோ. (சகசு)

இதுகாறும் விசாரஞானத்தி னிலக்கணமும் பலமுங் கூறி யிச்சு வாநுபவ முள்ள சீவன்முத்த னிலக்கணங்களை யிதுமுத லிரண்டு கவி யாற் கூறுகின்றவ ரிதிற் பிராப்தி பிராப்பியத்தைக் கூறுகின்றார்:—

ஆயின் முன் றத்துவ விளக்கப் படலத்து மிப்படலத்து மிவரிலக்க ணங் கூறவு மீண்டுக் கூறற்குக் காரண மென்னையோ வெனின்? ஆண் டுக் கூறல் குணங்களை யன்றி யிதுபோற் றன்மை யன்மையி னிதுவே யது வென்க.

(இ—ள்.) இந்த நிட்சய முத்தர் = கூறிய திடப்பிரஞ்ஞையை யுடைய சீவன்முத்தர்; உள் நிட்சயம் இருப்பது எப்படி = ஸ்திரப் பிரஞ்ஞன் என்ன கூறுவான், என்ன செய்வான், என்ன சிந்திப்பா னென்றபடி; அவை யனைத்தையுங் கூட்டி யுள்நிக்ஷய மெப்படி யிருப்ப தென்றான்; என்றால் = என்று வினவரின்; சிந்தை அற்ற பூமண்டல இராஜனும்; பூமண்டல விராஜ னெனவே, இந்நில முழுது மொரு

குடைக்கீழாளு மரசனென்றாக. சிந்தையற்ற வென்னு மடை, 'இவனும் பதினெண் பிராயத்தானாய் அவளும் பன்னீராட்டைப் பிராயத்தாளா யொத்த வழகு மொத்தபண்பு மொத்த குலமு மொத்த நலனு மொத்த கல்வியு மொத்த செயலு முடையராய்ப் பிறிதொன்றற் கூனமின்றி யொத்த வின்பு நுகருமிடத்துப் பகை பிணி மூப்பவலக்கவலை முதலிய வையு மின்றி யெதிரி லாட்சி யுடைமையாற் கவலை கெட்டிருத்தலை யுணர்த்தலின் பிறிதோடியைபு நீக்கிய விசேடண மென்க.

சிந்தையற்ற சிசுவும், செவிலித்தாய் கைத்தாய் தாய் முதலியோரா லடிக்கடி பேணப்படலின், பசி பிணி முதலியவையாலுங் கவலை யற்றிருக்கு மிளஞ் சேயும் போலும்; சுகம் ஆவர் = மூன்று தேகத்தாலும் வரும் பல தாபங்களு நீங்கி யடைய வேண்டிய தற்றாமையாற் செய்ய வேண்டியது மற்று அசங்க சாக்ஷி சொரூப சுகவடிவின ராவர்; பந்தம் முத்திகள் மறந்து போம் = இவை மனத்தின் றொழி லாகலி னம் மாயாதீதனான தனக்கவை தோன்றா தென்றபடி; உண்டு என்று பலர் சொலின் நகையா வார் = திரிசியந் தோன்றலி னவை யுண்டென்று சைன முதல் சைவசித்தாந்தி யீறானோருங் கூறினாரேனு மவ ரிவரா னகைத்தலுக் கிடனாவர்; என்னை? அந்தரத்தை = வியாபக வாகாயத்தை; ஓர் கோது உண்டு உமிழ்ந்தது எனும் அவர்களை நகையாரோ = உலகர் நகைப்பரே, அக்கொசுகிற் கத்துணை மிடறும் வயிறு மின்மையினானு மாகாயத்திற் கயலிட மின்மையினானு மென்க.

இது போல, அசங்க வியாபக வான்மாவை மாயையு மதன்காரிய மும் பந்தப் படுத்தவும் விடுக்கவு மியலாமையி னென்றவாறு. முத்த ரென்ற பன்மை, வரியான் வரிட்ட னீறாகிய நால்வரை யென்க. பந்த முத்திக ளுண்டென்பார் கூற்றையும் பிரபோத சந்திரோதயத்தில் விரிவாய்க் காணப்படு மென்க. இங்கை யிழிவாகில் வந்தது. ஒரு வென்பது ஓர் என விகாரமாயிற்று. ஓகார மறைப் பொருள். (அஅ)

மலடி மைந்தனுந் தானுவிற் புருடனும் வான்மலர் முடிசூடி
இலகு கந்தர்ப்ப நகரிலே சுத்திகை யிரசிதம் விலைபேசிக்
கலக மாய்முயற் கொம்பினாற் குத்தியே களைத்திருவரு மாண்டா
ரலகை யாயினா ரெனும் விவகாரத்தை யறிந்தவன் மயங்கானே.
(௧௯௭)

ஆயின் பூர்வ சுருதி ஸ்மிருதி புராணங்கள் கூறும் விவகார பதங்களுக் கர்த்த மியாதோ வெனவரி னக்கூற்றிக்கதை போலு மென்று கூறியதை வற்புறுத்துகின்றார்:—

(இ—ள்.) வான் மலர் முடி சூடல் = தும்பை. போர்க்கோலங் கோடலா மென்க. இருவரு மாளல், சுந்தோப சுந்த நியாயம். அலகை யாயினு ரென்பது, "வீவதன் முன் வானுலக மேவுவர்கண் மேன்மே" லென்ற கட்டுரைக்கு மாறுமே யெனின்? களைத் திருவரு மாண்டமையின் வீர மாய்ந்தமையின் களைப்பினு லலகையாத லொருதலை யென்க. ஒருவர் கூற வென்பது, தோன்று வெழுவாய். இக்கதைக்குப் பொரு ளின்மை போலச் சுருதியாதிகளுக்கும் ஞானதசையிற் பொரு ளின் றென்க.

ஏனைய பொருள் வெளி. இடை நின்ற வேகாரந் தேற்றம். ஏனைய வேகார மசை. இவ்விவகாரத்தின் பொரு ளறிந்த வொருவ னதனிடத்து மயங்கா னெனக் கொள்க. (அக)

மாயை யென்பதும் பொய்யெனி லதுபெற்ற வகையெலாம் பொய் யாமே, தாயை யன்றி மக்களுக்கொரு பிறவியுஞ் சாதியும் வே றுண்டோ, சேய சொர்க்கமு நரகமு நன்மையுந் தீமையும் பா ராமல், தூய சத்துச் சித்தானந்த பூரண சொரூபமா யிருப்பா யே. (ககஅ)

கூறிய கதைக்கு மயங்காதவன் போல மாயையு மதன் காரியமு மென வுணர்ந்து தெளிந்த சீவன் முத்த னநுபவ நினைக்து மாதுக வென் றிதில் மாணுக்கனுக் காசீர்வதிக்கின்றார்:—

(இ—ள்.) தாயை அன்றி மக்களுக்கு ஒரு பிறவியும் சாதியும் வேறு உண்டோ = தாய் என்பது பொதுச் சொல்லாகலி னிருதிணைக்கு மாயவாறு போல, மக்க ளென்பதையு மிருதிணை யிளம்பருவத்திற்குங் கொள்க. அது, "மாற்றருஞ் சிறப்பின் மரபியல் கிளப்பின், பார்ப்பும் பா ழுங் குட்டியுங் குருளையுங் கன்றும் பிள்ளையு மகவு மறியென் றொன்ப துங் குழவியோ டிளமைப் பெயரே." என்ற பொது விதியாற் பெற்றும். அன்றி, சாதி வகுத்துக் கூறுமிடத்தும், "மகவும் பிள்ளையும், பாழும் பார்ப்பு மவையு மன்ன வப்பாலான." என்று குரங்கிற்குக் கூறுங்கால மாட்டேற்று லன்னவென்று சுட்டிக் கூறினமையினு முணர்க.

இம்மரபு செய்யுள் வழக் குலகியல் வழக்கே யன்றி, தேய வழக்கு, பாடை வழக்கு, நகர் வழக்கு, நாட்டு வழக்கானு மறிக வென்க. அல்லது, 'மானிடர்க் கீசனன்று செய்யவே காட்டிய நூல்வழி' என்று மக்களுக்கே நூலுணர்ச்சியும் அவை கூறிய சாதியு மாகலின் மக்களுக்கே கொள்ளினு மிழுக்காது. பிறவி யாவது தாயின் மரபு. சாதியாவது அவற்றி னுட் பிரிவு. அவை பிறவி குறுக்கு யோனி, நெடுக்கு யோனி. சாதி, அந்த ணன் அரசன் முதலியவையும், பசு எருமை யாடு முதலியவையு மாம்.

இவை யின்றுய வாறு போல, "மாயை யென்பதும் பொய் யெனில் அது பெற்ற வகை யெலாம் பொய்யாமே." மாயை தாயாகலானு மது பெற்ற வகையாகிய மகதத்துவ முத லுமரூபப் பிரபஞ்ச மனைத்திற்கும் பொய்த் தன்மை யுண் டென்ற வாறு.

ஆகலின், சேய சொர்க்கமும் = யாவருக்கு மெளிதி லடையக் கூடாமையால், சொர்க்கஞ் சேய்மை யாயிற்று. அது நன்மை யாற்று வோர் மிகவரிய ராகலி னென்க. நரகமும் = சொர்க்கஞ் சேய்மை யாதலி னண்மை நரகமெனக் கொள்க. அது பாவவினை யாற்று வோர் பலராகலி னென்க. ஈண்டு சேய்மையண்மை, குறைவு மிகுதியின் மேற்று. இவற் றிற்குக் காரண, நன்மை தீமைகளைத் தரும் வினைகள். பாராமல் = என்னை யெனின்? இவை கர்த்தாவாய்ப் பரிச்சின்ன ரானோர்க்கே யுரிய தாகலின், நீ யவ்வாறன்றி, தூயசத்து சித்து ஆனந்த பூரண சொருப மாய் இருப்பாய் = இங்ஙன மிருக்கக்கடவா யென்றவாறு. இங்ஙன மிருக்கி னம்மாயாகாரியம் நின்னைப் பந்தப்படுத்தா வென்றவாறு. ஓகார மெதிர்மறை. ஏகார மிரண்டு மசைகள். (௯0)

பங்க யாசனன்முதற் பல தேவரும் பாருள பெரியோருங்
கங்கை யாதியார் தீர்த்தமுந் தேசமுங் காலமு மறைநாலு
பங்க மாறு மந்திரங்களுந் தவங்களு மசத்தியமெனச் சொன்னு
லெங்க ளுபகனை யதனுற் குற்றங்க ளில்லையோ மொழியீரே. (௧௯௯

"அது பெற்ற வகை யெலாம் பொய்யாமே" என்றதி லுண்டா மோர் ஐயத்தை வினவுகின்றார்:—

கூறியவற்று ளொவ்வொன்றிற்கும் பாவம் வெவ்வேறு யிருத்தலின், குற்றங்க ளென்று பன்மையாற் கூறினர். அது வென்னு மொருமைச் சுட்டு சாதியொருமை. ஏனைய வெளிப்பொருள். இவை சொற் பொருள் விரித்தல். ஆயினு மிவை தொகையே யன்றி வகை விரிகளை விரிந்த நூலிற் காண்க. இப்பொருள் வரும் விடைகட்குமாம். (௯௯)

சொப்பனந்தனிற் கண்டதைப் பொய்யென்று சொல்வதும்பிழை
யானு, லற்பமாயையிற் றோன்றிய சகங்களை யசத்தெனர் பிழை
யாமே, சொர்ப்பனந்தனிற் கண்டதைப் பொய்யென்று சொல்
லலா மெனின் மைந்தா, அற்பமாயையிற் றோன்றிய சகமெலா
மசத்திய மென லாமே. (௨00)

அதற்கு விடை யிரண்டு கவியாற் கூறுகின்றவ ரிதிற் றிட்டாந்தத் தோடும் விளக்குகின்றார்:—

(இ—ள்.) வெளி. சொப்பனந்தனிற் கண்டது திரிசிய மாயவிடய சாதி யொருமை நோக்கி, அது வென் றொருமையாற் கூறப்பட்டது. அக்காட்சி தாய் தந்தை முதலிய வழிபடத் தக்காரின் றோற்ற மென்க. திரிபுடியு மிதனு ளடங்கு மென்க. இத்தோற்றம் பிராதி பாசிக சத்தை யாகலின், இவரை நனவில் விழித்தவர் பொய்யென்று சொல்வதா லெவ்வாறு பாவ மணுகாதோ வவ்வாறே பிரமாபரோக்ஷம் வாராமுன் னுண்மை யாயினும் வந்தபின் றெருதலையாய்ப் பொய்யாதலிற் பாபமணுகா தென்ற வாறு. கண்ட தென்றதனாற் காணுங் கரணமுங் காண்பானு மவ்வாறே கொள்க. அற்ப மாயை 'துருத்தி மாயை' யென் றுங்குரைக்க. (கஉ)

பொய்யை மெய்யென்ற மூடர் புண்ணியரென்று புராணங்கூப் பிடு மானுன், மெய்யை மெய்யென்ற ஞானிக்குக் குற்றங்கள் விதித்தசாத்திர முண்டோ, பொய்ய தேதெனி னும ரூபங்களாம் பூதமாகிய மாயை, மெய்ய தேதெனிற் சச்சிதா நந்தமாய் வியாபிக்கு மான்மாவே. (உ0க)

நூற்கருத் திதுவென்று கூறி விடையை முடிப்பவர் வேறே ராற்றற் றன்கூற்றல் வினவி கூறியதனையே வற்புறுத்த விடையு மிதிற் கூறுகின் றார் இச்சுருதியா லவ்வுத்தியை யேன்க.—

(இ—ள்.) பொய்யை மெய் என்ற மூடர் = இவர் மூட ராயவாறு மயங்கிக் கூறலின் என்க. இவ ரதிகார நோக்கிக் கூறலி னுண்மை யுணர்ந் தோரே யாயினு மிவரை யங்ஙிலைக்க ணங்ஙனங் கூறினு ரென்க. பொய் யது எதெனின்? நாம ரூபங்களாம் பூதமாகிய மாயை, புண்ணியர் என்று புராணங் கூப்பிடல், மஹாபாரத முதலியவற்றிற் காண்க. மெய்யை மெய் யென்றல், பிரஸ்தானத் திரயம். 'மெய்யதே .......... மான்மாவே' —இஞ்ஞானிக்குக் குற்றங்கள் சாத்திரம் விதிக்கவில்லை யென்றவாறு. ஒகார மெதிர்மறை. ஈற்றேகாரம் தேற்றம். 'பொய் கூறுவோரைப் புகழு நூல் மெய் கூறுவோரை யிகழா' வென்றவாறு. (கங)

மாயை யென்பதே துடையரா ரெப்படி வந்தது வருவானேன், மாயை யென்பதும் பிரமத்தின் வேறெனின் வஸ்துவு மிரண்டாமே, மாயை யென்பதும் பிரமமு மொன்றெனின் வஸ்துவும் பொய்யாமே, மாயை யென்ற மேகங்களுக் கொருசண்ட மாருத குருமூர்த்தி. (உ0உ)

"இந்த நிட்சயமுத்தரு ளிருப்ப தெப்படி" என்ற வினாத் தொடங்கி, "பொய்யை மெய்யென்ற மூடர் புண்ணிய ரென்று புராணங் கூப்பிடு

மாறு" லென்பது காறுஞ் சீவன் முத்தனது நிலையை வேறோமாற்றால் விரித்துணர்த்தித், தத்துவ விளக்கப்படலத்திற் சிறுட்டி கூறிய வெடுத் துக் கொண்டவர் மாயையின் காரிய முதலியவற்றைக் கூறி யம்மாயையி னிலக்கணமு மாசிரய முதலியவுங் கூறப் பெறுமையி னவற்றை யீண்டு விரிப்பவர், முன் "பொய்யதே தெனி னும நபங்களாம் பூதமாகிய மாயை" என்ற தொடர்பாட்டா லம்மாயை, 'முயற்கோடு' முதலியன போன்று சொல்வழக்கு மாத்திரமாய்ப் பொய்யோ? பேய்த்தேர் போலத் தோற்றன் மாத்திரமாய் வெளிப்பட்ட பிழம்பாய்ப் பொய் யோ? அல்லது கருமை முதலியன போன் றேன்றற்த விசேடணமான குணமோ? அல்லது தனித்த திரவியமோ? என்பன் முதலியனவாகக் கொள்ளுமதத்தர் கருத்தை யெடுத்து விளக்கு வினுக்களை யுட்கொண்டு இது முத னூற்றைந்தாவது செய்யுட்காறு மதனிலக்கண முதலியவற் றைக் கூறுவோ ரிதில் மாணுக்கன் கொண்ட வறுவகை வினவையு மவன் கூற்றாக வினவுகின்றார்:—

(இ—ள்.) 'மாயை என்பது ஏது' *என்ப, ததன் றன்மை வினுவிய வாறு.* தன்மை, *சத்தா, அசத்தா வென்பன.* ஏதென்னும் வினு *தன் மையைச் சுட்டி நின்றது; அல்லது* மாயை *யென்ற சொற்குப்* பொருள் வினவிய வாறு *மாம்.* உடையார் ஆர் *என்பது சீவனிடத்ததா? ஈசனிடத் ததா? என்றவாறு.* ஆரையுடைய *தென மாறுக.* இதனுற் றனக்கிருப் புங், தன்னுடைய செயல் செல்லு மிடமும் வினவப்பட்டன. ஆசிரய *முடம்பொடு புணர்த்தி வினவப்பட்டது.*

'எப்படி வந்தது' *என்பது, வருதற்காறு வினுவியவாறு.* 'வருவான் ஏன்' *என்பது, காரணம் வருதற்கு வினுவியவாறு.* 'ஏன் வருவான் *எனக்கூட்டி* எக்காரணத்தால் வந்தது *எனப் பொருள் கொள்க.* 'ஏன்' *என்ப தெவனென்னுஞ் சொல்லின் றிரிபாகலி* னெக்காரண மென்னும் பொருட்டென்க. மாயை என்பதும் பிரமத்தின் வேறு எனின்? வத்து வும் இரண்டு ஆமே = *மாயை பிரமம் போலத் தானொரு பொருளாயின் அத்துவிதத்திற்கு விரோதமா மென்றவாறு.*

மாயை என்பதும் பிரமமும் ஒன்று எனின் வஸ்துவும் பொய்யா மே = *பிரமமும் மாயா வியல்பினதாய்த் தனக் கின்மையே வடிவு போலப் பிரமமு மில்லா வடிவினதாகு மென்ற வாறு.* 'மாயை என்ற மேகங்க ளுக்கு ஒரு 'சண்டமாருத குருமூர்த்தி' *என விளித்தலா லிம்மாயா விசாரங் களைச் செய்து முடிவிட்டிருக்கு நீ ரிவ்வையங்களைத் தீர்த்தருளு மென்று விண்ணப்பித்த வாறாயிற்று.* 'மாயை என்ற மேகங்கள்' *என்று பன்மை மாயைக்குக் கூறியது,* ஆவரண வ்க்ஷேப *மென்ற பிரிவினை யுடையதா யொவ்வொன்றும் பலபட நிற்றலா லென்க.*

வேதாந்தமே யன்றி யிதற் கங்கமாகிய தருக்கம் வியாகரண முத லியவற்றிலும் வல்லுந ரென்றற்குச் சண்டமாருத மென்றார். மாயையை மேக மென்றமையா லதைப் போக்க விவரைச் சண்டமாருத மென்றார். இவற்றிற்கு விடையருளு மென்ப தவாய் நிலையான் வந்தது. (கச)

*அதனை யின்னதென் றுரைத்திடப் படாமையா லவாச்சிய வடிவாகு, மிது தனக் குளதுட லியானுலகு மெய்யெனு மவருடை யோர்கள், கதையிலாதபொய் வந்ததிப்படி யென்று கண்டபே ரிலை மைந்தா, விதனமாயை யேன்வந்த தென்றாற் புத்திவிசார மற்றத னாலே.* (உ0ரு)

கூறிய வினாக்களு ணிரையே முன்னா ரீகிற் கிதில் விடை கூறுகின் றார்:—

(இ—ள்) அதனை = அம்மாயையை; இன்னது என்று உரைத்தி டப் படாமையால் = சத்து அசத்து என்றவற்று ளின்ன தன்மைத் தென் றுறுதிப்படுத்திக் கூறக் கூடாமையினால்; அவாச்சிய வடிவு ஆகும் = உரைத்துக் காட்டக் கூடாத வடிவின தாகும்; என்னை? சத்தாயின், "ஞானக்னி தக்த கர்மாணி" என்றபடி ஞானத்தா னாச முறா திருத்தல் வேண்டும். நாசமுறுதலி னத்தன்மையு மன்று. அசத்தான துச்சரூப மாயின் முயற்கோடு போல முக்காலத்தினுந் தோன்றா தாதல் வேண்டு மிங்ஙன மன்றித் தத்துவஞானத்தின்முன் றோன்றி நிற்றலி னித்தன் மையு மன்று. இவ்விரு சொற்பொருளு மொருங்கே யமையாமையி னநிர்வாச்சிய மென்ப.

'மாயை' என்ற சொற்குப் பொருள், யா = யாதொன்று, மா = இல்லாத வியல்பினதோ, ஸா = அது, மாயா = மாயை யென்ற பொ ருள். இங்ஙன மன்றி, நவவிதத்தாலுங் கூறக் கூடாதென்றுரைப்பின், மாயை யென்பதும் பிரமத்தின் வேறெனின்? என்று பின்னு பின்னத் தை விதந்து மேற் கூறப்படலாற் கூறியது கூறலா மெனவிடுக்க.

இனி, இது தனக்குளது உடலியான் உலகு மெய் எனும் அவர் உடையோர்கள் = இப்பொரு டன்னது எனவு மிப்பொருளுடைமைக் கேதுவாகிய விச்சரீரமே யானெனவு மிவ்வாறு காட்சியாற் காணப்படலி னிவ்வாறாய வுல குண்மையெனக் கருதிக் கூறுவோ ரம்மாயையை யுடை யோர்; 'இவரீசனும் ஞானியு மொழிந்த சீவர்கள்.' கூறிய யானென தென நிற்ற லிவ்விருவருக்கு மின்மையி னென்க. இச்சீவர்க ளிக்கருத் தோடு நிற்றலா லிவ்வாசிரய மபிமான வாசிரயம். தன்னுடைய செயலா கிய மறைப்பு மிச்சீவர்களிடத்துச் சேறலு மொக்க வுணரப்படு மென்க.

இவ்வாறு கூறினும், பிரம மதிஷ்டான வாசிரயமா மென்க. ஆயி னுங் கூறியபக்கஞ் சிவாசிரிதமும் பிரமவிடயமுமா மென்க. இவ்விசா ரஞ் சிருட்டி கூறுமிடத்து முன் சிறிது குறிப்பா லுணர்த்தி யிருக்கின்றன ரென்க.

கறைதுஇலாத பேரமும்வந்தது இப்படி யென்று கண்டபேர் இலே = இப்படி — இவ்வாற்றால் வந்தது என்று சொல்லுங்கறை யில்லாதது, என்னை யெனின்? கண்டபேர் இல்லே—வந்தவற்றைக் கண்டவ றிந் தாறு மொருவரு மில்லாமையா லென்க.

ஆதலால் பேரம்; இவ்வாறு கூறவே இம்மாயைக்கு வித்தில்லை யென்றபடி. இதனாலன்றோ, "விச்சதின்றியே விளைவு செய்குவாய்" யென்றது திருவாசகம். ஆயி னிதன் வரத்துத்தா னியாதனிடத்தெனின், அது வருஞ் செய்யுட்களாற் பெறப்படு மென்க. விதன மாயை யேன் வந்தது என்றால், 'விதன மாயை' துன்பத்தை விளக்கு மாயை. புத்தி விசார மற்றதனுலே = புத்தியினிடத்தே யிதனியல்பைக் குறித்து விசா ரஞ் செய்யாமை யாகிய காரணத்தாற்றான் என்றவாறு.

ஈற்று வினவை வருவித்தமையா லேனைய மூன்றையு நிரைப்படக் கொள்க. மைந்தா—ஞாபகவிளி. ஏகாரம் தேற்றம். (௧௫)

அருவ மாகு மாயா விவித்தைகள் விளையாடுமுன் றெரியாவே
உருவ மாம்பல கந்தர்ப்ப சேனையா யுதித்தபின் வெளியாகும்
பிரம சத்திக ளனந்தமா மதைக் கண்டு பிடித்திடல் கூடாதே
பரவு பூதங்கள் கண்டனு மானத்தாற் பலருக்கும் வெளியாமே.
(உ௦௪)

இனி, ஐந்தாறு வினுக்களுக்கு விடைகூறுவா ரம்மாயையி னியல் பை யிது முத லிரண்டு கவியானுங் கூறி யுடம்பொடு புணர்த்தி மாயை மித்தையன்றி யதனதிட்டான மித்தை யாகா தெனவுங் கூறுகின்றார்:—

(இ—ள்) மாயா விவித்தைகள் அருவம் ஆதும் = விண்ணிற் கந் தருவநகரங் காட்டுபவருடைய வித்தியாசத்திக ளிவன்போ லுருவன்றி யரு வமா யிருக்கின்றன; ஆகலின், விளையாடு முன் தெரியாவே; பின்னையோ? உருவம் ஆம்பல கந்தர்ப்ப சேனையாய் உதித்தபின் வெளியாகும் = வடி வங்களாக நால்வகைப் படையாய் விளையாடி வெளிப்படுத்தியபின் இக்காரி யத்திற் குபாதானமான சத்திக ளிவனிடத் துண்டென்று கண்கூடா யறி யப்படும்; இத்திட்டாந்தம் போல, பிரமசத்திகள் அநந்தமாம் = காரிய மளவிறந்தன வாகலின், என்க.

அவை கண்டு பிடித்திடல் கூடாதே = அப்பிரமத்தின் சத்திகளிருவமா யப்பிரமத்தோ டபேதமா யிருத்தலி னென்க. பின்னையோ? பாரு பூதங்கள் கண்டு = இவ்வகையான பூதங்களு மவற்றின் காரியங்களையுங் கண்டு; அனுமானத்தால் = இக்காரியங்களை யாக்குஞ் சத்திகளு முளவென் றிவ்வேதுவா லனுமித்து; பலருக்கும் வெளியாமே; பலவினுமவர்=மாயையை யுடன்பாடுடைய மதத்தர். வெளியாதல் — அவ்வனுமானத்தா லுண்டாகுஞ் சாத்தியத்தினிண்ணய மென்றவாறு.

பலரு மனுமானமும் உவமானத்திலுங் கூட்டுக. ஏகார மூன்றனுணடு நின்றது தேற்றம். ஏனையவைக ளசைகள். ஒருமைச்சுட்டு காணலின் மேற்று. ஈண்டனுமானம் பூதோற்பத்தியாகிய வேதுவை யென்க. சத்தியாகிய சாத்தியமுஞ் சித்தித்தலின் பக்ஷமு முண்டேன்றவாறு. இவ்வாறே யுவமானத்திற்குங் கொள்க. (௯௬)

காரியங்களுஞ் சத்தியா தாரமுங் காணு மற்றது மாயம்
பாரினின்ற மாயாவியுஞ் சேனையும் பார்ப்பவர் கண் காணும்
வீரியந்திகழ் வித்தை யாயின சத்தி வெளிப்படாதது போலப்
பேரியல் பிரமத்திற்கு முலகிற்கும் பிறிது சத்திக ளுண்டே. (உ0௫)

(இதுவுமது.)

(இ—ள்) காரியங்களும் சத்தி ஆதாரமும் = சத்திகளுக் காதாரமான பிரமமும்; காணும் = விசாரிப்பவருக்குக் காணப்படும்; மற்றது மாயம் = இடைநின்ற மாயை யவருக் கொருவாற்றாலும் புலப்படா; பாரில் நின்ற மாயாவியும் சேனையும் பார்ப்பவர் கண் காணும் = அவ்வித்தையை நோக்குவோருடைய கண்ணிற்குக் காணும்; வீரியந்திகழ் வித்தையாயின சத்தி வெளிப்படாது, அதுபோல வென்க; பேரியல் = பெரிய வியல்பினையுடைய; பிரமத்திற்கும் உலகிற்கும் பிறிது சத்திகளுண்டே யென்றவாறு.

கண்காணு மென்றதை, கருவிப்பொருளில் வந்த வேழவாயாகக் கொண்டு கண்ணனது காணு மென் றுரைக்கினு மமையுமென்க. வீரியந்திகழ் வித்தை = ஆற்றல் விளங்கிய வித்தை. ஈற்றேகார மசை. (௯௭)

சத்தி சத்தனைத்தவிர வேறன்று காண் சத்தனு மாயாவி
வித்தை காட்டிய விந்திரசாலம் பொய் வித்துவான் மெய்போலப்
புத்தி மைந்தனே சத்திமா னாகிய பூரண வான்மாவில்
வத்து நிர்ணயஞ் சொன்ன திட்டாந்தத்தின் வழிகண்டு தெளிவாயே. (உ0௬)

மாயை கூறியவாற்றல் பிரமத்திற்கு வேறு மாகாது நிற்பினும் மது போல நித்தியமு மன்றென் றிதிற் கூறுகின்றார் :—

(இ—ள்.) சத்தி சத்தனை தவிர வேறு அன்று="பிறிது சத்திக ளுண்டே" என்றதனன், மாயை யென்பதும் பிரமமும் வேறெனின் வஸ்துவு மிரண்டாமே யென்னற்க, அச்சத்தியானது தனது சத்தனைவிட வேறுபட்டிராது; சத்தன் ஆம்=அச்சத்தனது தன்மையேயாகும்; இத னாற் பொரு ளிரண்டின் றென்க. இனி, அங்ஙனமாயி னிச்சத்திபோல வச்சத்தனும் பொய்யாவனோ வெனின்? மாயாவி=இவனது; வித்தை காட்டிய இந்திரசாலம் பொய்=வித்தையானது தன்னாற் காட்டப்பட்ட விந்திரசாலக் காரியத்தோடு பொய்யாய்; வித்துவான் மெய்போல; சத்திமான் ஆகிய பூரண ஆன்மாவில்; வத்து நிர்ணயம்=பொருணிச் சயத்தை; சொன்ன திட்டாந்தத்தின் வழிகண்டு தெளிவாயே. அவ் வழி, காரியப்பிரபஞ்சமு மிவற்றின் சத்திகளுஞ் சுழுத்தி பிரளயங்களி லபாவமாயினுஞ் சேதன மங்ஙன மாகாது, அவ்வபாவத்தைக்கண்டே யிருத் தலை யென்க.

காண் முன்னிலை யசை. 'புத்தி மைந்தனே காண்' என வியைப் பினு மியையு மென்க. ஈற்றேகார மசை. (கூஅ)

இல்லையாகிய சத்தியை யுண்டென்ப தெப்படி யெனக் கேட்கிற்
புல்லையாதியா மசேதனப் பொருளெலாம் பூத்துக் காய்ப்பன பா
நல்லையா மகனே யதிற் சிற்சத்தி நடந்திடா திருந்தக்கா ற்[ராய்
றொல்லையாய் வருஞ் சராசர வுயிர்க்கெலாஞ் சுபாவங்கள் வேறு
மே. (உ0எ)

"வித்தை காட்டிய விந்திரசாலம் பொய்" என்றீர், "பிரமசத் திக ளனந்த மாம்" என்றீ ரிவற்றிற் கோடற்பால தியா ததனைக் கூறு வீ ரென வருஞ் சங்கைக்குச் சமாதான மிவ்வாற்ற லென விதிற் கூறு கின்றார் :—

'புல்லை' என்பதி லைகார மோனை நோக்கியதோர் சாரியை. நல்லை, விடலை யென்பதோர் பெயர். நல்லையா மகனே=உபசாந்த வறிவினையுடைய மகனே, 'நல்லையா மகனே கேட்கில் காய்ப்பன பாராய்' எனவும், 'நல்லையா மகனே வேறுமே' எனவு முடிக்க. 'நல்லையா மகனே' என்ப திரண்டிடத்து மியையு மென்க.

(இ—ள்.) ஏனைய வெளி. ஈற்றேகார மசை. (கூகூ)

அவை கண்டு பிடித்திடல் கூடாதே = அப்பிரமத்தின் சத்திகளா யரு வமா யப்பிரமத்தோ டபேதமா யிருத்தலி னென்க. பின்னையோ? பாவு பூதங்கள் கண்டு = வெளிப்பட்ட வைவகையான பூதங்களு மவற்றின் காரி யங்களையுங் கண்டு; அனுமானத்தான் = இக்காரியங்களை யாக்குஞ் சத்திகளு ண்டென்று இவ்வேதுவா லனுமிதித்து; பலநுக்தும் வெளியாமே; பல ராவார் = மாயையை யுடன்பாடுடைய மதத்தர். வெளியாதல் — அவ்வனு மானத்தாலுண்டாகுஞ் சாத்தியத்தினிண்ணய மென்றவாறு.

பலரு மனுமானமும் உவமானத்திலுங் கூட்டுக. ஏகார மூன்றனு ணடு நின்றது தேற்றம். ஏனையவைக ளசைகள். ஒருமைச்சுட்டு காணலின் மேற்று. ஈண்டனுமானம் பூதோற்பத்தியாகிய வேதுவை யென்க. சத்தி யாகிய சாத்தியமுஞ் சித்தித்தலின் பக்ஷமு முண்டென்றவாறு. இவ்வாறே யுவமானத்திற்குங் கொள்க. (௬௬)

காரியங்களுஞ் சத்தியா தாரமுங் காணு மற்றது மாயம்
பாரினின்ற மாயாவியுஞ் சேனையும் பார்ப்பவர் கண் காணும்
வீரியந்திகழ் வித்தை யாயின சத்தி வெளிப்படாதது போலப்
பேரியல் பிரமத்திற்கு முலகிற்கும் பிறிது சத்திக ளுண்டே.
(உ0௫)

(இதுவுமது.)

(இ—ள்) காரியங்களும் சத்தி ஆதாரமும் = சத்திகளுக் காதாரமான பிரமமும்; காணும் = விசாரிப்பவருக்குக் காணப்படும்; மற்றது மாயம் = இடைநின்ற மாயை யவருக் கொருவாற்றாலும் புலப்படா; பாரில் நின்ற மாயாவியும் சேனையும் பார்ப்பவர் கண் காணும் = அவ்வித்தையை நோக்குவோருடைய கண்ணிற்குக் காணும்; வீரியந்திகழ் வித்தையாயின சத்தி வெளிப்படாது, அதுபோல வென்க; பேரியல் = பெரிய வியல் பினையுடைய; பிரமத்திற்கும் உலகிற்கும் பிறிது சத்திகளுண்டே யென்றவாறு.

கண்காணு மென்றதை, கருவிப்பொருளில் வந்த வேழவாயாகக் கொண்டு கண்ணனது காணு மென் றுரைக்கினு மமையுமென்க. வீரி யந்திகழ் வித்தை = ஆற்றல் விளங்கிய வித்தை. ஈற்றேகார மசை. (௬௭)

சத்தி சத்தனைத்தவிர வேறன்று காண் சத்தனு மாயாவி
வித்தை காட்டிய விந்திரசாலம் பொய் வித்துவான் மெய்போலப்
புத்தி மைந்தனே சத்திமா னுகிய பூரண வான்மாவில்
வைத்து நிர்ணயஞ் சொன்ன திட்டாந்தத்தின் வழிகண்டு தெளி
வாயே. (உ0௬)

மாயை கூறியவாற்றல் பிரமத்திற்கு வேறு மாகாது நிற்பினு மது போல நித்தியமு மன்றென் றிதிற் கூறுகின்றார் :—

(இ—ள்.) சத்தி சத்தனை தவிர வேறு அன்று="பிறிது சத்திக ளுண்டே" என்றதனுன், மாயை யென்பதும் பிரமமும் வேறெனின் வஸ்துவு மிரண்டாமே யென்னற்க, அச்சத்தியானது தனது சத்தனைவிட வேறுபட்டிராது ; சத்தன் ஆம்=அச்சத்தனது தன்மையேயாகும் ; இத னுற் பொரு ளிரண்டன் றென்க. இனி, அங்ஙனமாயி னிச்சத்திபோல வச்சத்தனும் பொய்யாவனோ வெனின்? மாயாவி=இவனது ; வித்தை காட்டிய இந்திரசாலம் பொய்=வித்தையானது தன்னுற் காட்டப்பட்ட விந்திரசாலக் காரியத்தோடு பொய்யாய் ; வித்துவான் மெய்போல ; சத்திமான் ஆகிய பூரண ஆன்மாவில் ; வத்து நிர்ணயம்=பொருணிச் சயத்தை ; சொன்ன திட்டாந்தத்தின் வழிகண்டு தெளிவாயே ; அவ் வழி, காரியப்பிரபஞ்சமு மிவற்றின் சத்திகளுஞ் சுழுத்தி பிரளயங்களி லபாவமாயினுஞ் சேதன மங்ஙன மாகாது, அவ்வபாவத்தைக்கண்டே யிருத் தலை யென்க.

காண் முன்னிலை யசை. 'புத்தி மைந்தனே காண்' என வியைப் பினு மியையு மென்க. ஏற்றேகார மசை. (கூஅ)

இல்லையாகிய சத்தியை யுண்டென்ப தெப்படி யெனக் கேட்கிற்
புல்லையாதியா மசேதனப் பொருளெலாம் பூத்துக் காய்ப்பன பா
நல்லையா மகனே யதிற் சிற்சத்தி நடந்திடா திருந்தக்கால் [ராய்
றெல்லையாய் வருஞ் சராசர வுயிர்க்கெலாஞ் சுபாவங்கள் வேறு
மே. (உ0எ)

"வித்தை காட்டிய விந்திரசாலம் பொய்" என்றீர், "பிரமசத் திக ளனந்த மாம்" என்றீ ரிவற்றிற் கோடற்பால தியா தெனக் கூறு வீ ரென வருஞ் சங்கைக்குச் சமாதான மிவ்வாற்று லென விதிற் கூறு கின்றார் :—

'புல்லை' என்பதி னைகார மோனை நோக்கியதோர் சாரியை. நல்லை, விடலை யென்பதோர் பெயர். நல்லையா மகனே=உபசாந்த வறிவினையுடைய மகனே, 'நல்லையா மகனே கேட்கில் காய்ப்பன பாராய்' எனவும், 'நல்லையா மகனே வேறுமே' எனவு முடிக்க. 'நல்லையா மகனே' என்ப திரண்டிடத்து மியையு மென்க.

(இ—ள்.) ஏனைய வெளி. ஏற்றேகார மசை. (கூகூ)

கருப்பைமுட்டையுட் பறவைகள் பலநிறங் கலந்த சித்திரம் பாரா
யருப்பமாஞ்சத்தி நியம மில்லாவிடி லரசிலா நகர் போலா
நெருப்பு நீர்களாங் கசப்புமே மதுரமா நீசனு மறை யோதும்
பொருப்பு மேகமாங் கடலெல்லா மண்களாம் புவன மிப்படி போ
மே. (உ0௯)

தோலில்லையாய் வருஞ் சராசர வுயிர்க்கெலாஞ் சுபாவங்கள் வேற
தலை யொருவாறிதில் விரித்துக் கூறுவோர், 'இல்லை' யாகிய சத்
தியை யுண்டென்பதையு முடன்படுத்தும் வேறே ராற்றலுங் கூறி முடிக்
கின்றார் :—

(இ—ள்.) மைந்தனே! இல்லையாகிய சத்தியை யுண்டென்பதை
யும் வேறோராற்றாற் கூறுதும்; அது, கருப்பை முட்டையுள்=கருப்பை
யுள்ளும் முட்டையுள்ளுங் கட்டுண்டு வரும்; பறவைகள் பலநிறங் கலந்த
சித்திரம் பாராய்=பறவைக ளானவை தாங் கட்டுண்டிருக்கு மக்கருவு
முட்டையு மொரு நிறனாகத் தமக்கு நிறம் பலவாகக் கலந்த வினோதத்
தைப் பார்ப்பாயாக; இங்ஙனமிருத்தல், அருப்பமாஞ் சத்தியின் சம்பந்
தத்தா லென்க, அருப்பமாஞ் சத்தியின் நியமம் இல்லாவிடின்; அஃதாவது
வெளி.

நெருப்பு முதலியனவை நீர் முதலியவையாதல், அரசில்லாத நகரத்
தவ ரெவ்வாறு கட்டுப்பாடு கடந்து நடப்பரோ வவ்வாற மென்க.
அவை, நெருப்பி னுஷ்ண சத்தி யில்லாமையா னீரின்றன்மை யாதலும்,
வேம்பு முதலிய பொருள்களில் கைப்பின் சத்தி நீங்கலால் கட்டியாம்;
நீசனிடத்து மறையோதுஞ் சத்தியுண்டாதல், வருணாச்சிரம நியதிசத்தி
நீங்கலா லென்க. பொருப்பு மேக மாதல், திண்மை சத்தி நீங்கலால்;
கடல் மண்ணாதல், சிநேக சத்தி நீங்கலா லென்க. உலக மிப்படி போமே
யென்றது, ஏனைய திரவிய குணங்க டன்றன் சத்தி நீங்கலால் வேறுதன்
மடைதலை யென்க.

நகர்—ஆகுபெயர். கடலுமது, முன்னேகாரம் ஏனைய விடத்துஞ்
சென் றெண்ணி நின்றது. ஈற்றேகாரமசை. கருப்பை முட்டை, உம்
மைத் தொகை. கருப்பையுட் பறவை—வௌவால். அவை யிருகருமும்
பறவையுங் கலந்த பிறப்பு. இவ்வாறு கூறினமையால், சத்தி ஈசனிக
னெனவும், அவனது சத்திக்கே செயலுண்டெனவும் கூறிய
வாறுமாயிற் றென்க. (௬00)

ஆர்க்குங் காணவு மறியவும் படாதென்று மவாச்சிய வடிவென்று
சேர்க்கு நாமரூபப் பயிர் வித்தென்றுஞ் செப்பிய சிற்சத்தி [யென்]
பேர்க்குமா றெங்ஙன் பிரித்திடப் படாதெனிற் பிரமபாவனையொ
பார்க்குமா றெங்ஙன் முத்தியாகுவ தெங்ஙன் பரமசற் [றென்றுய்ப்
குருமூர்த்தி. (௨0௯)

இவ்வாறன மாயையி னீக்கி யுழுக்கத்தா லத்துவிதா நந்தத்தை யிழுத்த ஞன்ற கவியாலுங் கூறுபவ ரிதி லம்மாயை நீங்கி னல்லன்றி யத்துவிதாநந்தங் கூடாதென் றதிற் சேர்ண்ட மாணுக்க னுசங்கையை மூன்று வகையாக வவன் கூற்றாக வினவுகின்றார் :—

அவை, பேர்க்குமா றெங்ஙன்? பிரித்திடப்படா தெனின், பிரம பாவனையொன்றாய் பார்க்குமா றெங்ஙன்? முத்தி யாகுவ தெங்ஙன்? என்பன வென்க.

(இ—ள்.) வெளி. "ஆர்க்குங் காணவும் ...... செப்பிய சிற்சத்தி" என்றது காறு மனுவதிப்பு; ஞாபகக்குறி. குருமூர்த்தி (நீர்) செப்பிய சிற்சத்தி எங்ஙனென முடித்துக் கொள்க. (௧0௧)

வாயுத்தம்பனஞ் சலத்தம்பனம் மணிமந்திர மருந்தாலே
தேயுத்தம்பனஞ் செய்திடலதிற் செறிந்த சத்திகளங்கே
நீயச்சச்சிதானந்தமாய் வேறென்று நினைந்திடா திருப்பாயேல்
மாயைசத்திபோ மீதன்றி மந்திரமறைகளிற் காணோமே. (௨௧0)

இதில் முதல் வினாவிற்கு விடை கூறுகின்றார் :—

(இ—ள்.) பேர்க்குமாறு. மணி=இரசங்கலந்த குளிகை; மந்திரம்=அக்கினித்தம்பன மந்திரம்; மருந்து=பச்சிலை முதலியவை; இவற்றாலே=இவை கருவியாக; வாயுத்தம்பனம், ஜலத்தம்பனம், தேயுத்தம்பனம் செய்திடல், அதிலதிற் செறிந்த சத்திகள் அங்கே; சலன சத்தியும் நெகிழ்ச்சி சத்தியும் உஷ்ண சத்தியும் தன்றன் செயல்களைக் காட்டாமல் அப்பொருள்களி லடங்கி யிருக்கின்றன வல்லவா - அவை போல-; நீ வேறென்று நினைந்திடாது = என்பது திரிசியங்களி லொன்று மொன்றும் வென்று கருதாமலென்றபடி; அச்சச்சிதாநந்தமா யிருப்பாயேல்= சமாதியிற் கண்ட சச்சிதாநந்த சொரூபமாகவே சிந்தித்திருப்பாயேல்= மாயை சத்திபோம்=கூறிய மாயாசத்தி யொழியும்; ஈதன்றி=இவ்வுபாய மல்லது; மந்திரம்=அம்மாயையைக் கெடுக்கு முபாயம்; மறைகளில் காணோமே=காண்டத்திரயங்களிற் காண்கிலம் எ—று.

வாயுத்தம்பன முதலியவற்றையு மவற்றின் கருவியாகிய மணி முத லியவற்றின் செயல் வகையையு மியோக நூலிற் காண்க. அப்பிரமா காரமான சீவன் முத்தர்களையே யச்சத்திகள் சேட்டியா வென்க, பிர மம் போ லென்க. ஈது, விகாரம். இஃதேகதேச வுவமம். 'காணேம்' என்ற உளப்பீட்டுத்தன்மை, படர்க்கையா யுள்ள வேனை யாசிரியரையு முளப்படுத்தியது. சிறந்த சத்திகளெங்கே யெனவும் பாடம்.

ஏகார மூன்றனு ணடு நின்றது வினு; ஏனையவை யசைகள். 'எங்கே' என்ற வினு 'நீ யறியவில்லையா' என்ற பொருள். கேடுத்தற் கென் பதிசை யேச்சம். கேடுத்தற்கு மந்திர மெனக் கூட்டுக. (கOஉ)

மேவு மண்ணி லவ்வியத்தமே வியத்தமாம் விவகரித்திட வேண்டி
நாவினுன் மண்ணைக் குடமென்ப ரக்குட நசிப்பது நாவாலே
பாவு நாமரூபங்களை மறந்து மண் பார்ப்பதே பரமார்த்தஞ்
சீவபேத கற்பிதங்களை மறந்து நீ சின்மய மாவாயே. (உகக)

இதில் பிரமபாவனை யோன்றும்ப் பார்த்தற்கும், முத்தியாவதற்கும் யுத்தி கூறுகின்றர் :—

(இ—ள்.) மண்ணில் மேவும் அவ்வியத்தமே=மண்டிரளையிற் பொருந்தி வெளிப்படாத கடசத்தியே; வியத்தமாம்=வாய் குவிந்து பண்டி வடிவத்தோடும் வெளிப்பட்டது; விவகரித்திடவேண்டி=வெளிப் பட்ட வச்சத்தியை வழங்கற் பொருட்டு; நாவினல்=சொல்லளவால்; மண்ணை=அக்கடசத்தியோடுங் கூடிய மண்டிரளையையே; குடமென் பர்=குடமென்று பெயரிட்டு வழங்குவ ருலகர்; அக்குடம் நசிப்பதும் நாவாலே=வழங்கிய வக்குடமென்னுஞ் சொற்குப் பொருள் மண்ணை யன்றி வேறின்மையால் குடத்தை மண்ணென் றழைக்கின் மண்ணேயா யிச்சொல்லா லச்சொன் மறைந்துவிடும்; பாவும் நாமரூபங்களை மறந்து மண் பார்ப்பதே பரமார்த்தம்=கூறியவாற்றால் குடமென்னும் பெய ரும் பண்டி வடிவமும் பொய்யாகலி னவற்றை மறந்து மண்ணை மண்ணு கப் பாக வியல் புணர்தலே யுண்மை; சீவ பேத கற்பிதங்களை மறந்து கூறிய வுவமானம்போ லக்காரிய மாதற்குமுன் சித்தினிடத்தே யடங்கி யிருந்த சிற்சத்தி யச்சித்தைத்தானே சடசேதனமாக வெளியிட லினிக் கற்பிதங்களை மெய்யென்பதை மறந்து; நீ சின்மய மாவாயே=நீ யிவற் றிற்கு விவர்த்தோபாதானமான வதிஷ்டான சின்மாத்திர சொரூபமே யாகுவா யென்றவாறு.

நாவு—ஆகுபெயர். பரிணும மாரம்பங்களைப்போ லாகாமையின் மண்ணை விவர்த்தோபாதான மென்றும். இது, சாந்தோக்கியக் கூற்

றகலின் ‘ என்பர் ’ என்றார். இப்பன்மையால் பிரகதாரண்ணியத்திலு மிவ்வவ்வியத்தம் வியத்தங்களைக் கூறியதையுங் கொள்க. இவ்வாறே, சீவ னென்னும் பெயரும் பல ரூபமும் பொய்யாகலின் சிற்சொரூபமொன்றே மெய் யென்றார். சீவபேதம்—சீவன் முதலிய பேதம்.

மாயா நீக்கங் கூறவேண்டினோர் ‘ சீவ பேத கற்பிதங்களை மறக்க’ வென்று காரியத்தைக் கூறியது, காரண காரிய வொற்றுமை நயம் பற்றி யென்க. காரியத்தை யன்றிக் காரணத்திற்கு வேறு சொரூபமின்மையா லென்க. இவற்றை மறக்கி னென்மா சேடிக்கு மென்பது, கொள்ளக் கிடந்தது. சீவ பேத கற்பிதங்களை மறக்கவே யொன்றாகிய பிரமபாவனை யும், ஆண்டே சின்மய மாதலா லதுவே முத்தியுமா மென்பதாம்.

“வேறொன்று நினைந்திடாதிரு” வென்றது வாத தீட்டியு, மிக் கூற்று மித்தையாதிட்டியும், மேல் வருவது பிறவிலாபதிட்டி. இவை பாடியக்காரர் கருத்து. (௬0௧)

பூரிக்குங் கனசச்சிதா நந்தத்திற் பொய்சடந் துயர் மூன்றுந்
தூரத் தாயினுந் தோன்றுபாழ் விபரீதந் துடைப்ப தெப்படியெ
னீரிற்றோன் றுந்தன்னிழ றலைகீழதாய் நின்றலையினுநேராய்[ன்று
பாரிற் றோன்றிய தன்னைநோக்கிடி லந்தப் பாழ்நிழல் பொய்யா
மே. (உ௧உ)

பிராந்தித்தலத்தில் பிராந்தி நிவர்த்தியின் பின் னதிஷ்டான மாத் திரம் விளங்குவ தல்லது மீட்டுங் காரியந் தோன்றுமோ? தோன்றிற் செய்யுஞ் செயலியாது? என்ற வினுக்களுக்கு, இவை நித்தியாசனத் தாற் றீரு மென்ற விடையு மிதிற் கூறுகின்றார்:—

(இ—ள்.) பூரிக்குங் கன சச்சிதாநந்தத்தில் = அணுவிற் கணுவாய் நிறைந்து திணிந்த சச்சிதாநந்த சொரூபத்தில்; பொய் சடம் துயர் மூன்றும் = அவற்றிற்கு மாறாய விம்மூன்று வியல்பினை யுடைய காரணகாரி யப் பிரபஞ்ச மனைத்தும்; தூரத்த ஆயினும் = இல்லாதனவாயினும்; அகரம் தொகுத்தல் விகாரம்.

தோன்றும் = மாயாசத்தி போமென்றபடி, அத்தியந்தாபாவ மாகின் றில, பின்னையோ தோன்றுகின்றன; தோன்று பாழ் விபரீதம் = அப்ப டித் தோன்றுகின்ற பாழான விபரீதத்தை; துடைப்பது எப்படி என் றல்; நீரில் தோன்றும் தன் நிழல் = கரைக்க ணொருவனிற்க வதை யடுத்த நீரினிடத்தே தோன்றுகின்ற தன்னிழலானது; தலை கீழாய் நின்று அலையினும் = தனக்கு மாறாகத் தலைகீழ்ப்பட்டு மலைதலை யுடைத் தாயினும்; நேரே பாரில் தோன்றிய தன்னை நோக்கிடில் = அத்தோற்

றத்தைப் பாராது பாரில் நேராக நின்ற தன்னியல்பை யுணரின்; அந்த பாழ் நிழல் பொய்யாமே = அவ்விபரீதச் சாயை பொய்யாகு மல்லவா ; அது போலச் சச்சிதாநந்த சொரூபமான தன்னை யுள்ளவாறு நோக்கத் திரி சிய சொரூபமாய்ப் பகிர்முகமான மாயை யொழிந்துவிடு மென்றவாறு. இது, பிறிதுமொழித லென்னு மணி.

ஏற்றேகாரம் வினா, இது விடைப்பொருளில் வந்தது. இனி, பூரித்துக் கன சச்சிதாநந்த மென்பதை— 'சச்சிதாநந்த கனமாகப் பூரித்து' என்று கூட்டியும் முத்தன்மையாகத் தடித்து நிரம்பிய வெனக் கூறினு மமையு மென்க. 'பொய் சடந் துயர்' என்று தன்மை கூறினமையா லவ்விமொழிந்தேகை. பொய்யாப் போதல்—அநிர்வசநீயமாதல். 'விப ரீதம் தோன்றும்' என்றது, தன தபாவாதி காணத்திற் றன தவபாச மென்க. 'அவ்வயினும்' என்றவும்மையை நின்றென்பதனோடுங் கூட்டி முற்றும்மையாகக் கொள்க.

பழுதையிற் பாம்பு போலச் சாதனத்தைக் கொண்டாராயு மிடத்தின் முற்றுந் துடைபட வில்லை யென்பான், 'விபரீதந் துடைப்ப தெப்படி' யென்றான். சோபாதிகம் நிருபாதிக மெனப் பிரமையிரண்டனு ளிப்பிர பஞ்சங் கூறிய திட்டாந்தம் போல சோபாதிகப்பிரமை யாகலின் பொய் யெனத் தாண்ப தொழிய வத்யந்தாபாவ நிவர்த்தி கூடா தென்பார், "நீரிற்...........பொய்யாமே" யென்றார். ஈண்டு "பொய் சடம் துயர்" மூன்றுந் திரிபுடியோடுங் கூடியன வாகலின், விடையும் விப்பப் பிரதி விம்பநியாயத்தாற் கூறினாரென்க.

தலைகீழாய் நிற்றலும், நீரின்கலைவைத் தன்பா லேற்றலு மில்லாத தன தியல்பை நோக்குவதே பொய்யெனக் காண்பது போலக், கர்த்தா போக்தா முதலிய பரிச்சின்னத்துவமும், சுகதுக்காகாரப் படுவது மான வந்தக்கரண தருமத்தை யேற்றல் விசிட்ட சீவனுக்கன்றி யவந்தக்கரணோ பாதிகனுணர்தனக்கில்லை யென்று நோக்குவதே விபரீதத்தைப் போக்கு நிதித்தியாசன மென்பதாம். இவையும் பிரமேயகத சந்தேகத்தின்பாற் பட்ட வினாவும் விடையு மென்க. (கoச)

ஞானங் காரண மறிதல் காண் காரிய நாமரூபப் பேர்க
ளான தெப்படி யழிந்த தெப்படி யென வாய்குதல் பலனன்றே
மான மைந்தனே தீர்க்க சொர்ப்பன சகம் வந்ததும் பாராமற்
போனது நினையாம லஞ்ஞபோதமாய்ப் பூரணமா யிருப்பாயே. ()

இதுகாறு மத்துவிதாநந்தத்தையு முடம்போடு புணர்த்திக் கூறி முடிப்பவரிவ்வாறு மாயையை விசாரிக்கப் புகின் முடிவு பெறாமை

யாதும் பயனின்மையானு மமைத்துச் சித்தாந்தமாக விசாரிக்கவேண் டியதையு மவ்விசாரத்தின் சொருபத்தையும் பலத்தையு மிதுமுதலிரண்டு கவியினுலுங் கூறுபவரிதி லச்சொருபத்தைக் கூறுகின்றார்:—

'முடிவு பெறுமை யாவது' கூறியவாறு ஒன்பது வகையானு முடியாமையன்றித் திரவியமோ? குணமோ? திரவியமெனின், நித்தியத் திரவியமா? அநித்தியத் திரவியமா? நித்தியத் திரவிய மெனின், சாபேக்ஷிக நித்தியமா? நிரபேக்ஷிக நித்தியமா? அநித்திய மெனின், தத்சரூப வநித்தியமா? துவம் ஸரூப வநித்தியமா? குணமாயின், இருபத்துநான்காக வெண்ணினவற்று ளொன்றா? வேறா? ஒன்றெனின், யாதாகும்? வேறாமெனின், தன்மை யென்ன? அதற்குக் குணி யாது? ஆன்மாவெனின், இவ்விரண்டுஞ் சமசத்தை யன்மையாற் குண குணி பாவம் யாங்ஙன மென்பன முதலாகப் பலவாய் வருத லென்க.

(இ—ள்.) ஞானம் காரணம் அறிதல் = கூறிவந்த ஞானவிசாரத்திற்கு முடிந்தகருத் திதுவாகும். என்னை? ஞானமென்று சொல்வது, ஜெகத் காரண வறிவு சொரூபத்தை யறிதலே யாகும்; இதுவே பயனன்றி. காரியம் நாம ரூப பேர்கள் = பொய்யான காரியமாயும், செயல்பற்றி-யிடப்பட்ட பெயராயு, மப்பெயரை யேற்றவடிவங்களா யுள்ளவற்றை; ஆன எப்படி அழிந்த எப்படி என்று ஆய்ந்தல் பலன் அன்று = கூறிய விசாரத்திற்குப் பல னல்லவாகும் என்றது முடிவு பெறுதன்றி, யிதனுன் மோக்ஷமுஞ் சித்தியா தென்பது. ஆகலின், மான மைந்தனே = பேரறிவை யுடைய மாணுக்க; சகம் தீர்க்க சொர்ப்பனம் = சொர்ப்பனம்போல நிக்ஷயிக்கக்கூடாதென்பதாம்

வந்ததும் பாராமல் = புத்தி விசார மற்றதனு லெனக் கூறினு மந்ஙன மாகுத லிவ்வாறெனக் காணப்படாமையால் வந்த வாற்றை விசாரியாமலும்; போனதும் நினையாமல் = போ மாற்றையுங் கருதாமலும்; பூரணமாய் உன் போதம் ஆயே இருப்பாயே = திரிவித பரிச்சேத சூனியமான வுனது ஞான வடிவாக விருக்கக்கடவா யென்ற வாறு.

வந்ததும் போனது மப்போதே என்று மென்பது கருத்து. இவ்வா றுகூறாது, "ஞானங் காரண மறிபொருள் நாம ரூபப் பேய்கள்" எனப் பாடங்கொண்டு ஞானத்தைக் கருவியாகக் கூறாது பயனிலைக்குப் பெயராகக் கூறின், கூறிப்போந்த விசாரத்திற்கு மிதில் "ஆய்குதல் பலனன்றே" என்ற வெதிர்மறைப் பயனிலைக்கு ஞானகாரணமும் பெயராயிது பயனில் கூற்றாய் முடிவு மாகலி னிப்பயனிலுமை போலி யென்க.

அன்றியும். "ஞானங்காரணமறித" லென்பதனை, 'முன் பிருட்டிகூறுமிடத்து' "உன்னை நீ யறிவாயாகி லுனக்கொரு கேடுமில்லை" என

வும், இப்படலத்தும், "இந்த ஞானந்தான் வருவதெப்படி யென்று விடைவிடா விசாரத்தால் வந்தடைந்திடும்" எனவு மிந்ஞானத்தையே கருவி யாதவுங் கூறியனவற்றிற்கு முரணு மென்க.

"நாம ரூபப் பேர்க" ளென்றதிற் 'பெயர்' என்றது, "எத்தனை பேர் நட்ட குழி யெத்தனை பேர் தொட்டமுலை" என்பன போலப் பொருண்மே னின்றது. பிறவாக வனாதியாகலின், "தீர்க்க சொர்ப்பனச்சம்" என்றார். போனசத்தென்பது, போவதொருதலை யாகலி னிறந்த காலத்தாற் கூறினா ரென்க. அன்றி, இப்போது விசாரத்தா னீங்கிய தெனினு மமையு மென்க.

காரணத்தை யறிதலே ஞானபல மென்பதற் குதாரணம்: "எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருள், மெய்ப்பொருள் காண்ப தறிவு" எனவும், "தஸ்மிந் த்ருஷ்டே பராவரே" எனவும், "ப்ரஹ்மவித் ப்ரஹ்மைவ பவதி" எனவும் வரும் சுருதி வாக்கியங்களாலு மறிக. இதுபற்றியே யிவரும் "அதை யுரைத்து மதை நினைத்து மிருப்பதன்றோ ஞானிகளுக்கான நீதி" என முன்னருங் கூறினா ரென்க.

இனிப், பஞ்சதசியிலும் 'மாயா காரியத்தை யேகதேசமாக விசாரிக்க வேண்டு மென்றும்' 'முற்றும் விசாரிப்ப தான்மாவை' என்றுங் கூறினா ரென்க. (க0௫)

அசத்தி லெம்மட்டுண் டம்மட்டும் பராமுக மாகினா லம்மட்டு
நிசத்தி லுள்ளவிழிப் பார்வையா யிப்படி நிரந்தரப் பழக்கத்தால்
வசத்தி லுன்மன நின்று சின்மாத்திர வடிவமாகிடின் மைந்தா
கசத்த தேகத்தி லிருக்கினு மானந்தக் கடல்வடிவா வாயே. உகசு

திரிசிய மசத்தாயும் நிஷேதிக்க யோக்கிய மாயினு மத்திரிசிய முன் றோன்றுவதன்றி, இதுபோலச் சொருபம் பிரத்தியக்ஷமாகவில்லையே யாகலி னத்திரிசியத்தை யன்றே முற்றுந் துடைக்க வேண்டு மந்நீக்கத் திற் கேது யாதென்றும் நீங்கினும் பயன் யாதென்று முண்டாஞ் சங்கை களுக்குச் சமாதான மிதிற் கூறுபவர் நிரையே கூறுகின்றார் :—

(இ—ள்.) மைந்தா, உன் மனம் அசத்தில் எம்மட்டும் உண்டு அம் மட்டும் பராமுகம் ஆகினால்=திரிசியத்தி லளவிறந்த காலம் பராமுகமா யிருந்தமையா லுனக்குத் திரிசிய வாசனை யடிக்கடி தோன்றுகின்றது; அம்மட்டும்=அத்திரிசியந் தோன்று மளவும்; நிசத்தில்=ஆன்மாவினிடத் தில்; உள்விழிப் பார்வையாய்=அகம் பிரம மென்னும் பாவனையாய்;

இப்படி நிரந்தரப் பழக்கத்தால் = இப்பாவனை யிடைவிடாது செய்து வருவதால்; உன் மனம் உன் வசத்தில் நின்று = உன் மனத்தில் திரிசிய வாசனை தோன்றாது; சின்மாத்திர வடிவ மாகிடின் = இவ்வாறாயின்; கசந்த தேகத்தி லிருக்கினும் ஆனந்தக் கடல் வடிவம் ஆவாயே. எ-று.

கசந்த = உன்னால் வெறுக்கப்பட்ட. மூன்றும்மை யெஞ்சியது. ஏகாரம் தேற்றம்.

இனியோருரை:— அசத்தில் எம்மட்டு உண்டு உன் மனம் அம்மட்டும் பராமுகம் ஆகினும் = இதுகாறு மியாங் கூறிய விசாரத்தைத் தனக்காக்கிக்கொண் டுண்முக மாகாது பகிர்முக மான வசத்தில் எவ்வளவுகால மிருக்கின்றனை யவ்வளவு காலமும் நீ பகிர்முகனே யாகலி னதற்குப் பிராயச்சித்தம்; அம்மட்டும் நிசத்தில் உள்விழி பார்வையாய் = அவ்விபரீதக் தீருமட்டு நிதித்தியாசஞ் செய்க, என்பது. ஏனைய வெளி.

அசத்து நிசம் என்பவை தன்மைகளா யாகலின், பொய் சடம் என்பவை போலக் கொள்க. திரிசிய வாசனை யிருந்தோறுஞ் சொரூபபாவனை செய்க வென்பதாம். இப்பாவனையே யோகு. இதனாற் றிரிசியந் தோன்றாது ஞானவடிவாதலே திரிசியநீக்கம். ஆனந்தக்கடல் வடிவாதலே பயனென்க. (௧0௬)

தானன்றி வேறொன்று மில்லாத பூரண சச்சிதானந்த குணமாய், யூனின்ற வுயிர்தோறு மொன்றாகு மென்றா லதெதாக்கின்றபடி கண்டிலே, னனென்ற சீவன்கள் சத்தான-வகையொக்கு ஞானங்கள் வெளிகண்டதா, மானந்த மிவைபோல வெளியாக வுதியாத வடைவேது குருநாதனே. (உகரு)

இதுகாறும் விபரீத வாசனையாகிய மாயாநீக்கங் கூறி இதுமுதல் ௧௩௫-ஆது செய்யுள்காறு மிம்மாயா வதிஷ்டான பிரமத்தி னிலக்கணமாய சச்சிதாநந்தங்களின் றன்மைகளையு மவற்றி னொருமைப்பாட்டினையுங் கூறுவோ ரிதிற் சத்துஞ் சித்தும்போல வானந்தமு மியாவருந் தம் வெளியாமோ வென்னு மையப்பாட்டினைத் தன் கூற்றாக் வினவுகின்றான்:—

இவ்வினா, "ஆனந்தக்கடல் வடி வாவாயே" எனக் கூறிய வாசிரியர் கூற்றா னிகழ்ந்த தென்க. இதுவும் பிரமேயகத சந்தேகம்.

(இ—ள்.) குருநாதனே, தான் அன்றி வேறு ஒன்றும் இல்லாத பூரண சச்சிதாநந்த குணமாய் = சண்டற்பரூந் தனக்கு வேறு யில்லாத விவ்வியல்பினதாய்; ஊன் நின்ற உயிர்தோறும் ஒன்றாகும் என்றால் அது

ஒக்கின்றபடி கண்டிலேன்; இதற்கேது, நானென்ற சீவன்கள் சந்தான வகை ஒக்தும்; அநாதியேயிருந்து இவ்வாறு கூறி வருதலின், ஞானங்கள் வெளிகண்டது ஆம்; அவஸ்தாத் திரயங்களை யறிந்து வருதலா லதுவு மொக்கும்; ஆனந்தம் இவை போல வெளியாக உதியாத அகூடவு எது=ஆன்மானந்தமானது கூறிய விரண்டிலக்கணமும் போல வியவகார காலங்களில் வெளித்தோன்றாத விதமியாதுகாரணம்பற்றி யென்றவாறு.

ஆகவி 'னிம்மூன்று மொன்றின் றன்மையென் றெவ்வாறு கருதப் படு' மென்பது கருத்தென்க. முன், 'நிசத்தில்' என்றமையாலும், 'சின்மாத்திர வடிவம்' என்றமையாலும், 'ஆநந்தக்கடல் வடிவாவாயே' என்றமையாலு மிம்மூன்று மொன்றெனக் கொள்ளக் கிடந்தது. இவற் றைக் குணமென்றது, தன்மையை யென்க. இது, மேல் 'பிரமத்தின் குணங்களல்ல பிரமமாஞ் சொரூபந்தானே' என்றதனு லமையு மென்க. ஊன், உடலுக்காய் அந்தக்கரணத்தை யுணர்த்தலி னுதுபெயர்.

ஈண்டு ஊனின்ற உயிர், அந்தக்கரணவச்சின்ன கூடஸ்தன் என்க. அன்றி, 'உயிர்' என்றதை யாபாச னெனக் கருதுவார் கூற்று. மேல் 'சச்சிதாநந்தச் சுபாவங்க ளான்மாவின் வடிவாயினும்' என்ற விடைக்கு மாறுபடலி னவ்வுரை போலி யென்க. பூரணம், சச்சிதாநந்தம் என்பது. மகர வொற்று வலித்தல் விகார மாயிற்று.

ஈண்டு, 'நான்' என்றது 'அகமெனு மான்மா பூரண மேக' மென் பது போலக் கொள்க. சீவன்களென்ற பன்மை, 'சாவதிலை யாவர்களு' மென்றது போல உபாதியை நோக்கி வந்தது. இவ்வேகத்துவ பாவனை நோக்கியே, 'ஞானங்க' ளெனப் பன்மையாற் கூறினும், 'வெளி கண் டது' என ஒருமைப் பயனிலையாற் கூறினரென்க. 'ஆகும்' என்றது ஆ மென்று விகார மாயிற்று. (௧௭)

உருவங்க ளிரதங்கள் பரிசங்க ளொருபூவி லொன்றாகு மென் றாலுமே, கரணங்க ளொவ்வொன்றி லோரொன்று தெரியுங் கணக் கின்றி வாராதுகா, ணருமைந்த சச்சிதாநந்தச் சுபாவங்க ளான்மா வின் வடி வாயினும், பிரபஞ்ச மயமாம் விருத்தி பேதத்தினாற் பேதங்களா மைந்தனே. (௨௧௬)

இதுமுதல் மூன்று கவிகளானு மதற்கு விடை கூறுகின்றவ ரிதி லுவமானத்தை விளக்கி யுவமேயத்தைத் தொகுத்துக் கூறுகின்றார்:—

(இ—ள்.) வெளி. உருவங்கள், பரிசங்கள், இரதங்கள் என்ற பன்மை, கருமை திறமே யன்றி, வட்டஞ் சதுர முதலியவு முருவத்து

ளடங்கலாலும், ஒரு புறம் வன்மையு மொரு புற மென்மையு மிருத்தலா லும், அவை பற்றிய பரிசங்களும் காணப்படலாலு மென்க. அன்றி, 'ஒரு பூவில்' என்றதை யொவ்வொரு பூவி லென்னு மபேக்ஷைபற்றி வந்த பன்மை யொருமைமயக்க மெனக் கொண்டு பல பூக்களினும் பல நிற முதலியவைகளெனக் கொள்ளினு மமையு மென்க.

அன்றி, ஒரு பூவினிடத்தே ஒரு புற மோருருவாயு மற்றொரு புற மோருருவாயு மிருத்தலைக் கொள்ளினு மிழுக்காது. காரணங்கள், சுரோத் திர முதலிய ஞானேந்திரியங்கள் ஒரொன்றில் ஒரொன்று தெரிதல், கண்ணினு லுருவமும், நாவினு லிரதமும், தொக்கால் பரிசமு மறியப் படல். இல், மூன்றுவதின் பொருண் மயக்கம. காண்க முதனிலையசை.

'அருமருந்தன்ன பிள்ளை' என்றபாலது 'அருமந்த பிள்ளை' யென் றாற் போல "அருமந்த சச்சிதாநந்த" மென்றார். கூறிய வுவமான மேக தேசம். விருத்தியும் பௌதிகத்து ளடங்கலின், 'பிரபஞ்ச மயமாம் விரு த்தி' என்றார். அன்றி, பிரபஞ்சமயமாக வெழும் ராசத தாமதமெனினு மமையு மென்க. அன்றி, சத்துவத்தையுங் கூட்டிப் பொருள் கொள்ளின், சத்துவத்தி லாநந்தம் பலிப்பதென்னு மிவர் கூற்றிற்கு மாறுகலினது கருத் தன்று. பிரபஞ்ச மயமாம் விருத்தி மேற்கூறுகின்றார்.

தாமத மிராசதஞ் சாத்துவித முக்குணத்தால் வரும் விருத்தி மூன்று, மாமவை கண்மூடமுங் கோரமுஞ் சாந்தமு மபிதான மாகுமகனே, ஏமுற விருக்கின்ற சச்சிதா நந்தங்க ளென்றெ ன்று மொன்றாயினு, நாமுரைக்கும் விருத்திப்பிரிவினுற் சொரூப ஞானதி பிரிவாகுமே. (உ௩௭)

விருத்திபேத மென்ற வவை யிவை யென்று மவற்றிற்குப் பெய ரின்னவென்று மவற்றின் பாதபாடு கூறி யான்மவியலு மிவற்றல் வேறனதொரசையு மீதிற் கூறுகின்றார் :—

(இ—ள்) தாமதம் இராசதம் சாத்துவிதம் (என்ற) முக்குணத் தால் வரும்=மூவகையான குணவிகல்பத்தா லுண்டாகாநின்ற; விருத்தி மூன்றும்; அவை, மூடமும்=தாமத குணத்தோடு பரிணமிக்கு மூடவிருத்தி யும்; சாந்தமுங்கோரமும்=இராசத குணத்தோடு பரிணமிக்குங் கோர விருத்தியும்; சாந்தமும்=சாத்துவித குணத்தோடு பரிணமிக்குஞ் சாந்த விருத்தியுமாம்; அபிதானமாகும்=இவையே யவற்றிற்கு நிரையே பெய ராகும். இவையே பெயரெனக் கூறினும், கந்தகுணத்தோடு கூடிய மண் பரிணமித்த குட மக்கந்தகுண முடைய மண்ணே யாவது போல வுக்

குணங்களோடுங் கூடிய வந்தக்கரண விருத்திக்குணமே குணம், கோரமாதி யவே வடிவமெனக் கொள்க.

மூழற இருக்கின்ற சச்சிதாநந்தங்கள் என்றும் என்றும் ஒன்றாயி ரும்=ஒன்றை யொன்றகலா திருக்கின்ற சத்தாதிக ளெக்காலு மொரு மைப்பா டுடைய வாயினும்; நாம் உரைக்கும் விருத்தி பிரிவினால் சோருப ஞானந்த பிரிவு ஆகும். எ—று.

இப்பிரிவு வருஞ் செய்யுளிற் காண்க. ஆதி—என்றதால் சத்து மா நந்தமுங் கொள்க. சிருட்டி கூறிய விடத்து மிப்படலத்துஞ் சுத்தமாஞ் சத்துவமென, அந்தக்கரணத்தை சத்துவமாகக் கூறினும், ‘மற்றிரண்டும் வந்து கலந்தன’ என்றமையா லீண்டும் ‘முக்குணத்தால் வரும் விருத்தி மூன்றென்று’ ரென்க. ‘மகனே ஆகும் ஆகுமே’ எனக் கூட்டுக. ஈற் றேகார மசை, (௧0௧)

சடமான மூடத்தருக் கல்லு மண்களிற் சத்தொன்றுமே தோன்று மால், விடமான காமாதி கோரத்தி லானந்தம் விளையாது மற்ற வைகளாந், திடமான வொழிவுறு சாந்தத்திலே சச்சிதானந்த மூன்றும் வெளியா, மடமான மூடங்கள் கோரங்கள் விடுசாந்த மனமாகி லானந்தமே. (௨௧௮)

‘சோருப ஞானந்த பிரிவாகும்’ என்றதையின்னதை யின்ன வின்ன விருத்தியிற் காணென்று பிரித்துக்கூறி விடையை முடிக்கின்ற ரிதில்:—

(இ—ள்.) சடம் ஆன மூடம் தரு கல்லு மண்களில் சத்து ஒன் றுமே தோன்றும்; என்னை யெனின்? சுழுத்தி மூர்ச்சை முதலிய சட விருத்தியிலுந் தரு கல்லு மண்கள் போலப் பகுப்பின்மையா லவற்றில் ‘மனமுண்டு கல்லுண்டு தருவுண்டு மண்ணுண்’ டென்று ஸத்தாஸ்பூர்த்தி யொன்றுமே காணப்படும், ஏனைய சித்து மானந்தங்களுங் காணப்படா வென்க. மூடத்தரு—வலித்தல் விகாரம். அன்றி, மூடத்தைத் தருவிற் கடையாக்கிக் கூறுவாரு முளர். விருத்தி மூன்றென்றதை அவர் மறந்தார் போலு மென்க. ஆல்—அசை.

விடம் ஆன காமாதி கோரத்தில் ஆனந்தம் விளையாது மற்றவை களாம்; என்னை? விடத்திற்குச் சமானமாக வெழு பிறவியிலுங் கொல் லுங் காமக்குரோத முதலிய பலவகையான தீக்குண வடிவமான கோர விருத்தி சலிப்பையுடையன வாகலி னச்சலன சுபாவத்திலு மாநந்தந் தோன்றற் பால தல்லு; பின்னையோ? அவ்விருத்திக ளுண்டென்னுஞ்

சத்தாஸ்பூர்த்தியு மறிதற்றன்மை காணப்படலால் சித்தின் சுபாவமும் வெளிப்படு மென்க.

இனி, திடம் ஆன ஒழிவு ஆதி சாந்தத்தில் சச்சிதாநந்தம் மூன்றும் வெளியாம்; என்னை? கூறிய விரண்டு மொருதலையா யொழிவு பெற் றது முதலிய வைராக்கிய முபரதிக ளவதிகாறு நிறைந்துள்ளது. சாந்த மாதலி னிதற்கு மான்மாவிற்கு மொரு நீர்மை தோன்றலி னம்மூன்றும் வெளியா மென்க. இதன் தன்மை விரிவை 'களங்கமற்ற கண்ணுடை தன் முன்' என்ற செய்யுளிற் காண்க, ஆன்மாவிற் கிம்மூன்று மொரு நீர்மை யாயினுஞ் சத்துத் தூல மாகலின் றாமத குணத்திலுந் தோன்று மெனவும், சித்து அதனினுஞ் சூக்கும மாகலினிராசதத்தில் விளையு மென வும், ஆநந்த மதி சூக்கும மாகலிற் சாந்தத்தில் வெளியா மெனவுங் கூறினு ரென்க.

ஆகலின், மடம் ஆன மூடங்கள் கோரங்கள் விடு. (விட்டால்) சாந்த மன மாகில் ஆனந்தமே; எ—று. இவ்வானந்த மனுபவிக்கக் கூறிய விரண்டினையும் விடற்கு, அநச்சாதனம் புறச்சாதனங்களை— சுத்த சாதகம் வாசிட்ட முதலியவற்றிற் காண்க வென்க.

"மனமாகி லானந்த" மென்ற துபசாரம். இது, மே லானந்தங் கூறுமிடத்திற் காண்க. ஏகார மிரண்டுந் தேற்றம். (௧௧௰)

இகமான குருநாதனே சச்சிதானந்த மெனு மிலக்கண மறிகிலே
னகலாத சத்தாவதேது சித்தாவதே தானந்தமே தென்றிடின்
மிகுகால மூன்றுங் கெடாதிருப்பது சத்து வேறுபாட்டறிதல்
சித்தா, மகிழ்காம நுகர்போது சுகமாகு மனுபூதி வாழ்வென்பது
தானந்தமே. (உ௧௧)

இதுகாறுஞ் சச்சிதாநந்தந் தோன்றுதற் கதிகாரணங் கூறப்பட்டன. இனி யச் சச்சிதாநந்தத்தி னியல் கூறப்புக்கா ரவற்றியலைத் தோதத் திதிப் கூறுகின்றார்:—

(இ—ள்.) வெளி. இகம் ஆன=இவ்வுலகி லென்க்காக வெழுந்தரு ளிய; 'அகலா' என்பது, அவை மூன்றுந் தம்மிற் பிரியாத வென்றவாறு. மகிழ் காம நுகர்போது சுகமாகு மனுபூதியை—விடயானந்தங் கூறுமிடத் திற் காண்க.

இனி, "நானென்ற சீவன்கள் சத்தான வகை யொக்கு, ஞானங்கள் வெளி கண்டதாம்" என்றது, அவை விளங்கு மிடமாகலின், புனருத்த

மன் றென்க. இவை மூன்றி னியலை வருஞ் செய்யுட்களால் விரித்துக் கூறப்படும். (ககக)

நாசச் சரீரத் திருக்குஞ் சரீரிதனை நால்வேத மாவாக்கிய, நீசச்சி தானந்த மென்றிடினு மாசிரியர் நீபிரம மாகுமெனினு, மாசற்ற சச்சிதானந்த நானென்ன விவன்மன்னு மனுபவ மெங்ஙனே, கோசப்புரங் களையிடித்துத் தகர்த்தமதக் குஞ்சரக் குருநாதனே.

நீர் கூறிய கூற்று சுருதி கூறியவாறு பரோக்ஷமன்றி யனுபவ மாகா மையி னஃதா மாறு கூறுமென விதில் வினவுகின்றான் :—

(இ—ள்) நாசச் சரீரம்=கணமு நிலையாமை யியல்பினதுடைய சரீரம். நிகழ்வி லிவ்வாறாக விறப்பெதிர்விற் கூறாதே யிந்நிலையுடைய வென்பதற்கு வினைத்தொகையாற் கூறினார். சகர வொற் றின்றொகை பற்றி விரிந்தது. சரீரி—பூரணவான்மா. என்னை? "இடம்படவு மற் றிது தெரிந்துணரு மெய்யைக், கடம்படு முயிர்ப்பொரு ளெனப்பகர்வர் கற்றோர்" எனவும், "உடம்பிலே நின்ற வீசனே" எனவுங் கூறு மந் திரியாமியின் றிருவாய் மொழியா லென்க. இங்ஙன மன்றி, கர்த்தா போக்தா வென்பார், அவ்வியல்பினை யுடையான் றனியே யொரு பொரு ளாயின் முத்தியிற் றன்னியல் கெடாமையி னன்னியோன்னியாபாவமாய், 'சிவனென யானுந் தேறுதல்' கூடாமையி னவை யுபாதி வயத்தன வென்க. இதன் விரிவை வேதாந்த சூடாமணி யுரையிற் காண்க.

நால்வேதம் மாவாக்கியம்=நான்கு வேதத்திலே யுள்ள மாவாக்கியம் என்க. அன்றி, உம்மைத் தொகையாகக் கொள்ளினு மமையு மென்க. ஏனைய பொருள் வெளி. முன்னிலையாரையுந் தழுவற் பொருட்டு, 'ஆசிரிய' ரெனப் பொதுப்படக் கூறினா னென்க. 'மாசற்ற சச்சிதா னந்த' மென்றது இயைபின்மை நீக்கிய விசேடணம். கோசங்களைப் புரமாக்கினமையா லாசிரியர் களிறாயினார். (ககஉ)

சென்மாந் தரஞ்செய்த வினைகளுட னருமெனிற் செல்கால மிவ னுண்டலோ, கன்மானு பவநரக சொர்க்கமெனின் வருகின்ற காலத்து மிவனுண்டலோ, உன்மாத யாதனுவுடல் கடவுளுடன் மனுடனுடன் மாறிமாறி வரினும், றன்மாய வுடல்கெடினு மிவ னிருப்பது கொண்டு சத்தென்ப தொக்குமகனே. (உஉக)

வினவிய மூன்றனுள் சத்தி னனுபவத்தை யன்வய வியதிரேகத் தா லிதிற் கூறுகின்றார் :—

(இ—ள்.) சென்ம அந்தரம் செய்த வினைகள் உடல் தரும் எனின் செல்காலம் இவன் உண்டு அலோ=என்னை யெனின்? வினை யின்றி யுடல் வாராதென்னு மருத்தாபத்தியா லென்க. அதுவு மிப்போதுள்ள வித்து இப்போதுள்ள பைங்கூழிற்குக் காரண மாகாது முன்னிட்ட வித்தே யிதற்குக் காரணமாய வாறுபோ லென்க. இவ்வந்நுவய வுத்தியை யறுதி தொட்டுங் கொள்க வென்க.

இனி, யிவ்வாறே, கன்ம அனுபவம் நரகம் சொர்க்கம் எனின் வருகின்ற காலத்தும் இவன் உண்டு அலோ? என்னை? இச்சமஸ்சாரத்தோடு மிவனிருந்தே யனுபவிக்கவேண்டு மாகலி னென்க. இங்ஙனமாகலின், உன் மாத யாதன உடல் கட்வுள் உடல் மனுட உடல் மாறி மாறி வரினும்; வந்தது மன்றி, தன் மாய வுடல் கெடினும் இவன் இருப்பது கொண்டு சத்து என்பது ஒக்கும் மகனே. எ—று.

ஒருவன் வினை யொருவனுக்குடலாக வாராமையின் முன்னீட்டிய பாவ வினைக்கு உன் மாத யாதன வுடலும், (உன் மாதம்—மயக்கத்தோடுங் கூடிய, யாதன வுடல்—துன்பத்தைத் தரு முடல்.) புண்ணிய வினைக்குத் தெளிதலுஞ் சுகமுமுடைய தேவ வுடலும் பாவ வினைக் குன்மாதங் கூறினமையா லிதற்கேற்ற தேகஇந்திரியவற்றைக் கொண்டாம். கொளவே, மேல்வரு மிரு வினையின் பயனை மானுட வுடலுக்கு இன்ப துன்பக் கலப்பைக் கொள்ளப்படு மென்க.

இவ்வின்ப துன்பானுபவங்கள் விகார பரிச்சின்ன சீவனுக்கன்றி, நிர்விகார பரிபூரண வான்மாவிற் குண்டாகுமோ வெனின்? அதிஷ்டானத்தையன்றி யாரோபத்திற்குச் சொரூபம் வேறின்மையானு, மிவ்வாரோபத்தின் சாமானிய சொரூபமே யவ்வதிஷ்டான மாகலானு, மிவ்வாரோபத்தினிடத்துச் சத்தாஸ்பூர்த்தி யிருத்தலானு மூபசரித்துக்கூறப்பட்டது.

இவ்வாறன்றி யச்சத்தாந் தன்மையை யநுமித்துக் காட்ட வேறேதுவு மின்றென்ற வாறு மென்க. இங்ஙனமன்றி யிவ்வதிகாரிக்கு வேறேது கூறினது யுக்தி சூக்கும மாகலின் அதனை விலக்கினு மென்க. தன் மாய வுடல்=தனதனித்திய மாயவுடல். தேவர்களுக்கு மனித்திய சரீரமென்பது சுருதிப்பிரசித்தம் என்க. இவ்வாறு சரீர வைசித்திர மிருப்பது கொண்டு அதற்குக் காரணமாய வினையு மதை யியற்று முன்வினை யுடலு முண்டென்ற வாறுயிற் றென்க. இதனைத் திருவருட்பாவில் விரித்துணர்க.

(கரு)

ஈண்டு வாழ்வு—காரியவாத பேயர். சுகத்திலும் வரு மென்ற வெச்ச வும்மை விகாரத்தாற் றெக்கது. விடயத்தில் பிரியந்தோன்றல்—ஏது, அது தனதாதலின், சாத்தியம், மகளிர் முதலிய விடயவின்பிற் போல—திட்டாந்தம். ஆக விம்மூன்றுறுப்புங் கூடிய பாரார்த்தானுமான மென்க. (௧௧௭)

அந்நபா னாதிசுக சாதனம தாகையா லார்க்குவெகு பிரியமாகு மின்னவா றான்மாவை யானந்த சாதனமெனக் கருதல்பொரு ளல்லவே, சொன்னவான் மாவையொரு சுகசாதனங்க ளொடு சொல்லுவா யாகின்மகனே, யுன்னதா னந்தம்வே றனுபவிப் பதா முபய வான்மாவு முளவோ. (௨௨௧)

“அநுகாத பிரியம் சுகத்தில் வரு” மென்னீர், அங்ஙனமாயின் விச் சுகம் விடயக்கூட்டுறவா லுண்டாகின்ற தவ்வாறே யான்மாவுஞ் சுகம் விளைதற் கோரு சாதன மாமோ? என வரும் வினாவிற்கு விடையிரண்டு கவிகளாற் கூறுகின்ற ரீதி லான்மா வே றனந்தம் வே றன்றென்றற் கோருத்தி கூறுகின்றார்:—இவ்வினு வவாய்கிலையான் வந்தது.

(இ—ள்.) அந்ந பான ஆதி சுகசாதனம் அது ஆகையால்=ஆதி யென்றமையால், பெண்ணுடை யாபரணம் பெய்தைலந் தாம்பூல முன்னை லிணைசந்தனம் வசதியான விட முதலியவவையுங் கொள்க. இவை சுகம் விளைதற்குச் சாதனமாகலின்; ஆர்க்கும் வெகு பிரியம் ஆகும்—ஆர்க்கு மென்றது, பொருள் வலி யழ கதிகார முடையோரே யன்றி நோயினருக் கும் வறியருக்கும் முய்க்கும் வலி யில்லோர்க்குங் கொள்க வென்றற்கென்க. அன்றி, யார்—என்ற வினுவடியாகப் பிறந்த பெயரை அஃறிணைக்குங் கூட்டி, விலங்கு புள் முதலியவு மிவற்றை வேண்டலி னவற்றையுங் கொள்க வென்க.

இன்ன ஆறு=இங்ஙன மாயவனுமானங் காணப்படலின்; ஆன்மாவை, ஆனந்த சாதனம் எனக்கருதல் பொருள் அல்லவே; என்னை? சொன்ன ஆன்மாவை ஒரு சுக சாதனங்க ளோடு (கூட்டிச்) சொல்லுவாய் ஆகின் மகனே; உன்னது ஆனந்தம் வேறு (உன்னால்) அனுபவிப்பது ஆம்; உபய ஆன்மாவும்=இரண்டாவதான ஆன்மாவும்; உளவோ=உன்னுறு பயத்தி லிருக்கின்றனவா? எ—று. இல்லை யென்றபடி யென்க. இவ் வில்லாமைச் சேதுவு மனுபவமும் வருஞ் செய்யுட்களா லுணரப்படு மென்க. மகனே! பொருளல்லவே; பொருளாயின், ‘உபயவான்மாவு முளவோ’ வெனக் கூட்டுக. (௨௨௧)

விடயசுக மதில்வருதல் பிரியமாத் திரமாகும் வெகுபிரிய மான் மாவிலாம், விடயசுகம் வருபிரிய மாறிவரு மான்மாவில் வெகு பிரிய மாறு துகாண், விடயசுகம் விடலுமாங் கொளலுமா மான் மாவை விடுவதெவர் கொள்வ தெவர்பால், விடயசுக போகங்கள் விடுமவனை யவனால் விடப்படாதொரு நாளுமே. (உ௩௪)

இதி லுபய வான்மா வில்லாமைக் கேது மூன்று கூறி யீற்றடியா லவற்றை வற்புறுத்துகின்றார் :—

(இ—ள்.) விடயசுகம் அதில் வருதல் பிரியம் மாத்திரம் ஆதும்= அற்றன்று, ஆன்மா விரண்டே யெனக் கொள்வோ மெனின்? அக் கொள்கையி லித்துணையான வேதத்து வாபாசங் காணப்படுகின்றன. என்னை? விடய முன்னிலையில் காணப்படுஞ் சுகம் அவ்விடயத்தி லுண் டாதல் பிரியமாத்திர மாகுவதன்றி யவ்விடயம் பிரியவடிவ மாகாது; இது நிற்க, வெகு பிரியம் ஆன்மாவில் ஆம்=வெகு பிரியம்—என்பது, பிரி யமே வடிவாயிருத்தல்; இது தன்னிடத்திலேயே யாகின்றது. அன்றி யும், விடயசுகம் வரு பிரியம் மாறி வரும்; என்னை? பெண்டாட்டி கலாயியவிடத்து அவள் முன்னிலையி லுண்டாகுஞ் சுகத்தில் வாராநின்ற பிரியமானது முன்போலன்றி மாறுபட்டேவரும்; (இதுபோல) ஆன்மா வில் வெகு பிரியம் மாறதுகாண்=சுகங்காரணமாக வுண்டாயிருக்கும் பிரியமான தெக்காலத்து மெவ்வாற்றானு மாறுபடாமையைக் காண்பாயாக; அன்றியும், விடயசுகம் விடலும் ஆம்; என்னை? தனக்கு நோய் வறுமை பகை யச்ச மியலாமை முதலிய வுலகியல் காரணமாகவும், துக்க மசுத்த மநித்தம் பரிச்சின்ன முதலிய வீட்டியல் காரணமாகவு மென்க.

கொளலும் ஆம்=கூறியவற்றிற் கெதிரியவை யுற்றுழி கொள்ளவுங் கூடு மென்க. ஆன்மாவை விடுவது எவர் கோள்வது எவர் பால்; என்னை? அயலன்றித் தன்வடி வாகலி னென்க. இவ்வேதுக்களாலும், விடயசுக போகங்கள் விடு மவனை; அவனால்=தன்னால்; விடப்படாது ஒரு நாளுமே. எப்போதுந் தானாகவே யிருப்ப னென்றவாறு.

சுகம் தான் தனியே யில்லாமையின் ஒரு பொருளினிடத்தே யிருந்து கோடலியல்பாகலின், "எவர்பால்" எனக்கூறல் பாடமன்றென்க. நற் றேகார மகை. (௧௧௬)

வேகின்ற கோபங்களா லென்னை நான்கொன்று விடுகிறே னென்று சிலபேர், சாகின்ற படியினாற் றன்னையே தான்கொன்று சாவனெனல் சங்கையலவே, தேகந்த னைக்கொலது மவனால்

*விடப்பட்ட தேகமவனல்ல மகனே, யாகந்த னிற்கோப மலது*
*தனை யொருநாளு மான்மா வெறுப்பதில்லையே.* (௨௨௫)

'விடயசுக போகங்கள் விடுமவனை யவனால் விடப்படா தேந் நாளுமே' என்று கூறிய விலக்கணத்திற்கு மாறாக சிலர் துக்கங் காரணமாக தேகத்தை விடப்படலி னவ்வியாத்திக் குற்ற மாமே யெனின்; தேகோக மெனல் பிராந்தி யாகலி னற்றன்றென்று விடையு மிதிற் கூறுகின்றார்:—

வேகின்ற கோபங்களால்=*குடர் முதலியவற்றை வேகவைக்கின்ற பல்லாற்றால் வரும் கோபவகைகளால்;* என்னை நான் கொன்றுவிடுகிறேன் என்று சிலபேர் தன்னையே தான்கொன்று தான்சாகின்றபடியினால் தான் சாவன்; எனல்=*என்று கூறல்;* சங்கை அலவே; என்னை *யெனின்?* தேகந் தனைக்கொல்லும் அவனால்=*அக்கோபங் காரணமாகத் தேகத்தைப் போக்காநின்ற வத்தேகியால்;* விடப்பட்ட தேகம் அவன் அல்ல மகனே! (*ஆதலாலும்*) ஆகந்தனில் கோபம் அலது=*அக்கோபம் தேகத்தளவன்றி;* தனை=*அத்தேகத்தை வெறுத்த தன்னை;* ஒருநாளும்=ஒரு போதும்; ஆன்மா வெறுப்பது இல்லையே=*தான் வெறுப்பதில்லை யென்றவாறு.* இதனானு மென்க. இதனா லான்மா பிரியவடிவனென் றாயிற்று.

*தேகத்திற் கோப மத்தியாசத்தாலன்றி விவேகத்தா லின்மையாலு மக்குற்ற மின்றென்க. வேகின்ற கோபம்—'துறந்தார்' என்பது போல பிறவினைப் பொருளில் வந்த தன்வினை. அவை, மனைவி கற்பழித்தலாலும், மக்கள் மாற்றாராய் நிற்றலாலும், தன் றேகத்தி னோய் மிக்கு வருத்தலாலும், வறுமை, தாயத்தார் கொடுமை, கள்ளர் கொடுமை, அரசர் கொடுமை முதலியவுமா மென்க. இவ்வகைகளால் வருங் கோபங் களும் பலவாயின வென்க. ஏகாரங்கட்டேற்றம். தான் என்றதை சாதலுக் குங் கூட்டுக.*
*இவ்விசார மீண்டெழுந்தது, தூலபுத்தி யுடையாரைக் குறித் ததென்க.(க*

*தாகப்படும் பொருளிலும் மகன்பிரியமாந் தனயனினு முடல் பிரி*
*யமா, மாகத்திலும் பிரிய மிந்திரியமாங் கரணமதனிலும் பிரிய*
*முயிரா, மேகப்பிராணனிலும் வெகு பிரிய மான்மாவி னித*
*வான்மா முக்கிய, மேகத்திறுற் கௌணமித்தை கர்த்தாமூன்று*
*மொன்றினென் றறிக மகனே.* (௨௨௬)

தேக முதலியவை தனக்கன்னியமாயின் அவற்றி லொன்றென்றை யான்மா வென்று மாகலி னவ்வவற்றிற் பிரியம் வைப்பானாக வேண்

முந் கருதி கூறுவானே னெனவரி னவற்றிந்த விடை மூன்று செய்யு ளாற் கூறப்புக்கா ரிதிற் பிரியம் வைத்த லின்னுழி யென்று மிதுகாறு மென்றுங் கூறுகின்றார் :—

(இ—ள்) தாகப்படும் பொருள்—யாதலினுலெனின்? இப்பொருளைப் பேணாது கூடாவொழுக்கிற் செலவிட்டு வறுமை நோய் முதலியவே யிம்மைப் பயனாக வனுபவித்து மெழுமையுந் துன்ப மனுபவிப்போரைக் குறித்துப் "பொருடனைப் போற்றி வாழ்" என்றுங் கூறிய தென்க. அங்ஙனம் போற்றுங்காற் போந்த பயன்: "பொருளல்லவரைப் பொருளாகச் செய்யும், பொருளல்ல தில்ல பிற." என்றுடன்பாட்டானு மெதிர்மறையானுங் கூறி, யங்ஙனம் வாளாப் போற்றலு மதன்பாற் பிரியம் வைத்தலும் விடுத்து; பொருளிலும் மகன் பிரியமாம்—யாதினுலெனின்? அப்பொரு ளோராற்றான் மறுமைப்பய னளிக்கினும், "எழுமையுந் தீயவை தீண்டா, பழிபிறங்கா பண்புடைமக்கட் பெறின்" என்பது கேட்டு, அம்மக்களைப் பெறற்கு புத்திரகாமேட்டி முதலிய நல்வினையாற்றலும் பிறந்த மகனுக்குப் பசி, பிணி, வறுமை, சிறை முதலிய வாராது காப்பானும், கோலங்காணல், ஓதுவித்தல், மன்றல் செய்வித்தல், மகப்பெறுவித்தல் முதலிய வுலகிய லாற்றற் கப்பொருளைச் செலவிடலா லென்க.

இனி, அங்ஙனந் தாகப்படுந், தனயனிலும், உடல் பிரியமாம். என்னை? கூறிய பசி முதலியவற்றி லேற்பவையுந் தீப்பற்றல் முதலான வுண்டான விடத்து மகனை வெறுத்துத் தன்னுடலி லன்புகாட்ட லியல்பாகலின் றொடர்பாய பொருளை விட்டு மகனைக் கோடல்போல வங்ஙனமாய மகனை விட்டுடலைக் கோடலானு மென்க.

இனி, ஆகத்திலும் பிரியம் இந்திரியம் ஆம். யாதினுலெனின்? காதடைப்புக் கண்ணோய் நாவரோசிக முதலியவை யுண்டாகத்தக்கதான சுர முதலியவை யுண்டானவிடத்துப் பத்தியத்தா னுடலை வாட்டல் முதலியவை செய் திந்திரியங்களுக் காக்க முண்டாக்கலா லென்க.

காரணம் அதனிலும் பிரியம் உயிராம். என்னை யெனின்? உயிர்க்கொலை நேரும்போ துயிரை யோம்பற்பொருட்டுக் கண் முதலிய புறக்காரணங்களை யவ்வுயிர்க்கு மாறாகக் கொடுத்தலாகிய கண்ணூலல் முதலியவற்றைச் செய்தலை யொருவன் சம்மதித் துயிரை யோம்பலா லென்க. பிராண னகக்காரண மனைத்தினுக்கு மாசாகலா னுபலக்கணமாகக்கொண்டு அந்தக்காரண மனைத்துங் கொள்க.

அகப்பிராணனிலும் வெகு பிரியம் ஆன்மாவில்; யாதினு லெனின்? மோட்சத்திற்காக கெங்காப் பிரவேச முதலியவை செய்தல், அல்லது, பிரா

ணைனைத் தடை செய்தல் முதலிய காணப்படலின், ஏனைய பொருண்முதல் காண மீறானவற்றி லான்மவியல் கூறியபடி யவற்றி லான்மபாவமுங் கொண்டவற்றிலுள்ள பிரியங்கண் மற்றொன்றாற் றனக்கருகானவற்றைக் குறித்தேனையவற்றிற் பிரிய மாறுபடல் போல விப்பிராணனிலு மியல்பாய தன்றான்மாவி லியல்பாய பிரியமே வடிவமா யிருத்தலி னென்க.

ஆகலின், இந்த ஆன்மா முக்கியம். இதற்குப்பொருள் மேற் கூறுது மென்க. இங்ஙன மாதல் நீர்வாடை படலினு நீரை யடுக்க வடுக்க வெப்பம் பெருகத் தணிதலுந் தட்ப மிகலுங் காணப்படல்போ லான்மானந்தத்தை யடுக்க வடுக்கத் துக்கந் தணிந்து வரலு மானந்த மேலிடலு மநுபவமா மென்க. இங்ஙன மாதலே விலங்கு புள் முதலியவும் விடயானந்தத்தை விட்டுச் சுழுத்தியானந்தத்தை யநுபவித்தலே யநுபவ மென்க.

இனி, ஊகத்தினல்= கூறிய விவ்வுத்தியால்; கௌணம்=கௌணாத்மா வெனவும்; மித்தை=மித்தையான்மா வெனவும்; கர்த்தா= கர்த்தாத்மா வெனவும்; மூன்றும்=கூறியவையே யிம்மூன்று வகையாகவும்; ஒன்றின் ஒன்று அதிகம் மகனே. இவை யதிகமாதலை வருஞ் செய்யுளால் கூறப்படும். (கக௮)

கெடலான பொழுதிவன் காணிக்கு மகனான கௌணவான் மா முக்கியம், விடலாத வுடலம் பரிக்குநா னுடலான மித்தையான்மா முக்கியந், திடமான நன்மைகதி வேண்டினாற் கர்த்தனுஞ் சிவ வான்மா முக்கியம், சடமாயு முத்தியினின் ஞானவான் மாவான தானே மகாமுக்கியம். (உ௨எ)

மேல், 'மூன்றி லொன்றி னொன்றதிகம்.' என்ற ரதந்துக் காரண மூன்றிதிற் கூறுகின்றார். முன் செயல்பற்றிக் கூறலாலு மீண்டபிமான மாத்திரையாற் கூறலின் புனருக்தமன் றென்க. மூன்றான்மா வாதல் பலவாகக் கூறி யிதி லவற்றைத் தொகுத்து மூன்றுக் கூறற்கேதுவு முடம்பொடு புணர்த்தித்திற் கூறுகின்றார்:—

(இ—ள்.) கெடல் ஆன பொழுது இவன் காணிக்கு மகன் ஆன கௌண ஆன்மா முக்கியம். என்னை யெனின்? "சுத்தி விருத்தி கயிற்றை யறுத்தலொழி" என்ற பூர்வவாக்கியம், நீ யிறந்தபின் னவ்விலிருந்து பிதிர்க்கடன் கடத்தி யவரைத் திருத்திசெய்தற்பொருட்டு மவ்வில்லிற் குரிமை பூண்ட விவனே யவனான கௌணவான்மா வச்சமயத்திற்கு முக்கியமா மென்க. "தக்கார் தகவிலா ரவரவ ரெச்சத்தாற் காணப்படும்", மாதலின், தனசம்பந்தங் கௌணமென்றாயிற்று. "காணிக்கு மகன்" என்றமையால், தாசப்படும் பொருளு மகனே யொன்றாயிற் றென்க.

இனி, **விடலாத உடலம் பரிக்குநாள்**=நியதியன்றித் தானே விடக்கூடாத வித்தேகத்தைக் காக்கு நாளாகிய நிகழ்காலத்தில்; உடல் ஆன **மித்தை யான்மா முக்கியம்.** என்னெனின்? இவ்வுடலினிடத்தே பிராம்மணாதி தரும விசிட்டத்தோடுங் கூடிய வகம் புத்தியோடு மைவகை வேள்வியு மோம்பலைக் கூறியவாறு நடத்தவேண்டலி னிவ்வான்மபாவ மப்போதுண்மையி னென்க. இது மேல்வருநிலையிற் பொய்யாகலி னிதனை மித்தை யென்றாரென்க. இத்தேகத்தோடு மிந்திரியமு மடங்கின வென்க. ஒருவா றித்தோற்ற மறிவிலிகட்கு மொக்கு மென்க.

இனி, **திடமான நன்மைகதி வேண்டினல் கர்த்தனும் சீவ ஆன்மா முக்கியம்.** என்னெனின்? இவ்வுடலான தியாண்டேனுங் கழிதற்பாலதாகலி னிவ்வசுத்த வனித்த துக்கவுடலை யொழித் திதனினுஞ் சுத்தஞ் சுக நித்தியமான வுடலோடு மத்தகைய போகங்களை யடைக வென்றதைக் கேட்டு, இவ்வுடலோடு மவற்றிற் குரிய கன்மைகளை யாற்றி யவற்றைத் துய்க்கக் கருதும்போது சூக்கவுடலோடுங் கூடிய கர்த்தத்துவசீவன் அந்நிலைக்கு முக்கியமாகலி னென்க,

அழிவுபாட்டுடைய விவ்வுலக தேக போகங்களை நிலை யென்றது, தேவ வுலகி லெழுநூறு சதுர்யுக பரியந்தமும், பிரமனுலகு, விண்டுவுலகு, உருத்திரவுலகு, மகேசுவுலகு, சதாசிவவுலகு முதலிய வுலகங்களி லவ்வவ்வாய வுள்ள வரையிலு மிருந்தனுபவித்தலி னிவ்வுலகைக் குறிக்க வவை திடமாயின வென்க. பிராணனேடு கூட வந்தக்கரணசகித வாபாசன் கர்த்தா வென்னுஞ் சொற்குப் பொருளாகலின் கூறியதற்கு முரணின்றென்க. **இது கரும காண்ட வியல்.**

**இனி ஞானகாண்ட வியல்:—சடமாயு முத்தியினின் ஞானவான்மாவான தானே முக்கியம்** 'சடம் மாயும்' என்றமையால் கூறிய வான்மாக்கள் சடமெனவும் மாயுந்தன்மையுடைய வெனவும் பொருளாயின வென்க. சடமாதி யவை துக்கமாகல் கூறுதே யமையு மென்க. இவற்றின் விரிவை, திருப்புகழ், திருவருட்பா முதலியவற்றிற் காண்க வென்க.

இனி, 'சடமாயு முத்தி' என்றது சச்சிதாநந்த சொரூபமானமுத்தி யென்க. சடநீக்கிய முத்தி யதுவாகலி னென்க. சடமாய்தல், நாமரூபப் பிரபஞ்சந் தன் காரணத்தோடு ஞானக்கினியாற் றக்தமாத லென்க. இந்த ஞானத்தி னியலை முன்னர் கூறப்பட்டது. இதனை மீண்டும் 'ஞானவான் மாவான தானே' என்றார். இவ்வான்மா வேறு முத்தி வேறாகாமையின், 'முத்தியினின் ஞானவான்மாவான தானே மகா முக்கியம்' என்றார். "மகா முக்கிய" மென்றது இந்நிலையின் மேலாய வான்ம நிண்ணயமும் முத்தி நிண்ணயமு மின்மையை யென்க. இந்நிண்ணயத்தை முன் மக

வாக்கியக் கூறுமிடத்திற் காண்க வென்க. 'தானே' யென்ற வேகார முத்தி வேறின்மையிற் பிறிதோ டியையு நீக்கிய விசேடணம். (௩௩௧)

புலியு மனுகூலமெனி லிட்டமாம் பகைசெயிற் புதல்வனெனி
னும் வெறுப்பா, முலகி லிருவகையு மல்லாத புல்லாதியி லுதா
சீனமா மாதலான், மலினமறு சின்மயன் பலவகையு மிப்படி
மகிழ்ச்சியில் விருப்புமிக, னலகிலா னந்தவடி வாகுமுன் சொரு
பத்தை யாராய்ந்துபார் மைந்தனே. (௨௨௮)

கௌணான்மா முதலியவற்றை நீரேற்று கழிப்பானே னெனி லந்நு வய யுத்தி தடைப்படலினென வனுபவத்தாலு மான்மா வேறெனை வற்புறுத்தி விடையு மிதிற் கூறுகின்றார் :—

இது பிறர்தம் மதமேற்கொண்டு கூறு வென்க.

(இ—ள்.) மைந்தனே! கூறியதற் கநுபவங் கேள் :—உலகில்= உலக விடயங்களில்; புலியும் அநுகூலம் எனில் இட்டம் ஆம்=தன் னொழிந்த வேனைய வுயிர்களைத் தறுகண் செய்யும் புலியுந் தனக்கொரு காரணம் பற்றி யநுகூலமாகப் பெறுமாயி னக்காலத் ததனிடத் திட்டமுண் டாகும்; இதனு லஃதஞ்சுதலென்னும் பொருணிண்ணயத்திற்கு மாறுண் டாகின்றது. உம்மை யிழிவு சிறப்பு. அதனிடத் தூறு செய்தற்றன்மை யிழிவென்க. இனி யிவ்வும்மையை யெச்சவும்மை யாக்கிப் பகைவர் அயலவர் முதலியோரைக் கொள்ளினு மமையு மென்க.

இனி, புதல்வன் எனினும் பகை செயில் வெறுப்பு ஆம்=எழு பிறப்புந் தீயவைத் தீண்டாப் பழி பிறங்காப் பண்புடை மக்களே யாயினும் தனக்குப் பிரதிகூலஞ் செய்யின், அவன் வெறுத்தற்கு விடயமாவன்; இதனு லவன் பிரியவிடனே யென்பதும் விபசார மாயிற்று. மனைவி முதலானவை யிருக்கப் புதல்வனைக் கூறியதற் கேது, "கெடலான பொழு திவன் காணிக்கு மகனுன" வென்றதனு லறியப்படு மென்க.

இருவகையும் அல்லாத புல்லாதியில் உதாசினமாம் :—என்னை யெனின்? புலி முதலியவை போலத் தறுகண் செய்யாமையாலும், மைந் தன் போல நன்மை செய்யாமையாலு மென்க. 'ஆதி'யென்றமையால், புழுதி யொதுக்குங் குப்பை முதலியவையுங் கொள்க. உதாசினம்=நொ டுதுமல். ஆதலால்=உலக விடயங்க ளிங்ஙன மிருத்தலால்; மலினம் அறு சின்மயன்; இப்படி, மகிழ்ச்சியில்=மகிழ்வில்லாத வெறுப்பும்; விருப்பும்=இடையிட்ட பிரியமும; இகழான்=உதாசின்மு மான; பல வகையும் ஆகான்.

பின்னையோ? அலத இல் ஆநந்த வடிவு ஆதம் உன் சொருபம்; இத்தை ஆராய்ந்து பார்=இவ்வநுபவத்தை மனனத்தா லூகித்துப் பாரென்றவாறு. அலகு—எண். அளவுபடாத வாநந்தம்—பிரமாநந்தம். அங்ஙன மந்நுவய யுக்தி தடைப்படலி னதிவியாத்தி முதலிய குற்றங்களில்லாத சொரூப விலக்கண முடைய தான்மா வென்றவாறு, முடிந்தது முடித்தலா லான்மாநந்தத்தை முடித்துக் கூறியவாறுமா மென்க. (௧௨௦)

மானஞ் சிறந்த குருநாதனே யானந்தவகைக ளெத்தனை யென்னிலோ, ஞானந் திகழ்ந்த பிரமானந்தம் வாசனானந்தம் விடயானந்த மென், றானந்த மூன்றுவகை யெட்டுவகை யென்பர்சில ரவ்வைந்து மிதிலடக்க, மானந்த வகைசொலக் கேண்மைந்தனே யெட்டுமஃ தின்னதின்ன தெனவே. (௨௨௯)

இதுமுதற் பதினொரு கவிகளானுந் தொடர்பாட்டாற் கூறத்தொடங்கிய வானந்தங்களின் வகைகளும் பெயர் முதலியவு மிதிற் கூறுகின்றார்:-

(இ—ள்) மானம் சிறந்த குருநாதனே! மான முறனு மாற்றலு முடைமையே தவத்திற்குப் பெருமை யென்க. முன், "பாரிற் றோன்றிய தன்னை நோக்கிடி லந்தப் பாழ்நிழல் பொய்யாமே." என்றீ ரதனாலத்துவிதாநந்த சொரூபமே யான்மா வென்றுகின்றது. அத்துடனமை யாது, ஈண்டு "மலகி லானந்த வடிவாகு முன் சொரூப" மென்றீர், இதனா லான்மாவே யானந்த மாகின்ற திங்ஙனம் பலபட வானந்தத்தைக் கூறலின், ஆனந்தவகைக ளெத்தனை; என்னிலோ=என வையப்பட்டு வினவுவை யாயின்; ஞானம் திகழ்ந்த பிரமாநந்தம், வாசனாநந்தம், விடயாநந்தம் என்று ஆனந்தம் மூன்று வகை; (இவற்றையே) எட்டு வகை என்பர் சிலர், அவ்வைந்தும் இதில் அடக்கம்; ஆநந்த வகை சொலக் கேள் மைந்தனே! எட்டும்இஃது இன்னது இன்னது எனவே யென்றவாறு.

வாசனாநந்தமும் விடயாநந்தமும் ஞானத்திகழ்வுடையன வாயினுங் கேவலம் பிரமாநந்த நிருபாதிக சொப்பிரகாசமாய் விளங்கலினானு மவையிரண்டு முபாதியோடுங் கூடி விளங்கலானும் பிரமாநந்தத்திற்கு ஞானத்திகழ்வு கூறினா ரென்க. இவ்விலக்கணங்களை மேற்கூறு மிடங்களிற் காண்க வென்க. ஈண்டு கூறிற் கூறியது கூறலாம். வேறொன்றாகக் கூறலு மாறுகோளக் கூறலா மென்க.

இது—வென்னு மொருமைச் சுட்டு மூன்றென்றுந் தொகை முற்றோடு முடிந்தது. அடங்கிய வாற்றைப் மேற் கூறப்படும். அன்றி,

இது—வென்னுஞ் சுட்டை யடங்கிய வாற்றா லொவ்வொன்றிற்குந் தனித்தனி கூட்டினு மமையு மென்க. இதனைக் கல்லாடத்தும் "உலகியல் கூறிய பொருளிது வென்ற" சூத்திரத்திற் குரையாசிரியரும், "இது வென் னொருமையாற் சுட்டியது" என்றெடுத்து விரித்தமைத்தமையாலு முணர்க.

'இஃது இன்னது இன்னது' என்றவை யிலக்கணங்களை யென்க. இன்ன தின்ன தெனவே சொலக்கேளென முடிக்க. ஏகாரந்தேற்றம். (௧௨௧)

போகத்தில் வருசுகம் விஷயசுக நித்திரைப்போ துளது பிரமசுக மாம், மோகத் தனந்த லிற்சுகம் வாசனைச்சுக முழுப்பிரிய மான்ம சுகமாம், யோகத்தி லுளது முக்கியசுக முதாசினமுற்றசுக நிஜ சுக மதா, யேகத்தை நோக்க லத்துவிதசுகம் வாக்கியமெழுந்த சுக ஞானசுகமே. (௨௩௦)

இதி லவ்வெட்டிற்கும் பொதுவிலக்கணங் கூறுபவ ரேனைய வைந்தின் பெயரு முடம்போடு புணர்த்திக் கூறுகின்றார் :—இப்பெயர்கள் காரணம் பற்றியே வந்தன வென்க.

(இ—ள்.) வெளி. மோகத்து=நித்திரா மோகத்து; அனந்தல் சுழுத்தி; இல்=இல்லாத; சுகம்=இன்பம். இவற்றிற்குத் தொடரா யியைபுண்மைப்பொருள், மே லிலக்கணங் கூறுமிடத்திற் காண்க. ஆமென்பதை யேனையிடத்துங் கூட்டுக. ஈற்றேகார மசை. (௧௨௨)

(வேறு)

இவ்வா றுரைசெயுஞ் சுகபேதங்களி னியல்பா மவைசொல மகனே கே, ளொவ்வா நனவினி லுழல்வா னிடர்கெட வுறங்குஞ்சயனம துறுநேரஞ், செவ்வா மனமக முகமாமதி லொளிர்சித்தின் சுக நிழல் சேருங்கா, ணவ்வா றிவனுள மகிழ்வா மனுபவ மதுதான் விடயசுகானந்தம். (௨௩௧)

இது முதல் ௪௩௦-வது செய்யுள் வரையிலு மைந்தாநந்தங்களின் சிறப்பிலக்கணங்களைக் கூறப்புகுந்து இதில் விடயாநந்தத்தின் சிறப்பிலக்கணங் கூறுகின்றார் :—

(இ—ள்.) இவ்வாறு, உரை செயும்=சுருதி கூறும்; சுகபேதங்களின், இயல்பாம் அவை=தன்மைகளை; சொல கேள்=யாம் வகை

படுத்திக் கூறக் கேட்பாயாக; ஓவ்வா நனவினில் உழல்வான்=பல் வேறு வகைப்பட்ட விடயங்களை யின்பென் றவற்றி லவாவுற் றுழலாநின்ற வொரு புருடன்; ஓவ்வாமை—ஒன்றற்கொன் றுயர்வு தாழ்வு கிட்டுதல் கிட்டாமை முதலியன வென்க.

இடர்கெட=அவை யங்ஙன மாகலி னத்துன்பை யொழித்து; கெட-என்பது செய்தெனெச்சத்திரிபு. கெட்டு உறங்கு மென முடியு மென்க. அன்றி, கெடும்பொருட் டுறங்குமென வெதிர்கால வினையெச்சமாகக் கொண்டு பொருள் கூறினு மமையு மென்க.

உறங்கும் சயனமது உறும் நேரம்=உறக்க முண்டாதற் கேதுவான வணையின்மீதமர்ந் தவ்வுறக்க மொழித்து மகளிரோடுற்றுழி; (அந்நுகர்ச்சி முடிவில்) மனம் செவ்வாம்=அக்கலவிகட் டீளர்ந்த மனம் விக்ஷேப மொழிந்தே காக்கப்படும்; அகமுகம் ஆம்=அவ்வேகாக்கிரமுள்ள மனந் தன்முக (ஆன்மாகார) மாகும்; அதில்=இத்தன்மையுடைய விருத்தியில்; ஒளிர் சித்தின் சுகம் நிழல் சேரும்=ஒளிர்தலையுடைய் யாதொரு மறைப்பு மின்றி யென்றபடி. பிரமத்தி னாநந்தாம்ஸத்தின் சாயை தங்கும்; அவ் வாறு=தங்கியவழி; இவன் உளம் மகிழ்வு ஆம்=அப்புருடனது மன மானது மகிழ்வடைந்திருக்கும்; அநுபவம்=தங்கியதற் கநுபவமாகும்; அதுதான்=அவ்வனுபவமே; விடய சுகாநந்தம்=இது போக முன்னிலை யில் வந்தமையா லிப்பெயர்த்தாயிற் றென்க. காண்— முன்னிலை யசை.

"இவ்வா றுரைசெய்த சுகபேதங்களி னிய" லெனப் பொதுமையிற் கூறினும், எற்புழிக்கோடலா லேந்தே யீண்டுக் கூறுவார், நீநீ இயவாறே, யோகத்தில் வருசுகம் விடயசுக மென்றதை யீண்டு விரித்துக் கூறினா ரென்க.

இனிப் 'போக' மெனப் பொதுமையிற் கூறினும், கண்டு கேட் டுண் டுயிர்த் துற்றறியு மைம்புலனு மொண்டொடி கண்ணே யாகலின், மகளிர் விழைவே கொள்ளற்பால தென்க. ஈண்டுச் சயன—மென்று ரென்க. சயன—மிடக்காடக்கல். மகளிரோடு தனித்திருக்கு மிடத்தை (சைய்யயனை) யென்பதோ ருலகவழக் கிஃதென்க.

இங்ஙனமின்றி, 'சைய்யயே செம்பொருளாகக் கொள்ளில், நோயுற் றிருக்கும் பசித்தோர்க்கு மச்சையையா லின்ப முண்டாகாமையி னன்னு வய யுத்திக் கொவ்வாதென மறுக்க. 'செவ்வாம்' என்றது, செம்மை—யென்னும் பண்புச்சொல்லின் றிரிபாகிய முதனிலைப் பண்படியாகப் பிறந்த பெயரென்க. (கஉ௬)

ஈனந் தருசுக விடயந் திரிபுடி யிடராமெனமனமசையாமற், சேனந்
தனதுகு லாயந்தனில் விழுசெயல்போ னித்திரைசெறி சீவன், று
னந்த மில்பரனொடு மொன்றுவ னொருதனை யல்லது பிற நினையாம,
லானந்த மயமாவன் சுகமிகு மதுதா னுயர் பிரமானந்தம்.(உ௬உ)

இதிற் பிரமானந்தத்தின் சிறப்பிலக்கணங் கூறுகின்றார்:—

(இ—ள்.) ஈனந்தரும் விடயசுகம்=அஷ்டயோகத் தொன்றாய வனையிற் றயிறலா லுண்டாகிய வாநந்தமும் விடயத்தளவாய்க் குறைபட்டு நிற்றலு மன்றி; திரிபுடி=ஞாதுரு ஞான ஞேயங்களாய் நிற்றலால்; இடர் ஆம் என=அவற்றிற் கிடருண்டா மென்று கருதி; மனம் அசையாமல்=அத்திரிபுடி விட்டகன்று சலனமடையாமல்; சேனம்=பருந்தானது; தனது குலாயந்தனில்=தனதுறையுளாய கூட்டில்; விழுசெயல் போல்=இரு சிறகினையு மொடுக்கி யதிவேகமாக விழுகின்ற தொழிலைப் போல; நித்திரை செறி சீவன்=அவ்வொருமைப்பாட்டோடுங் கூடிய மனத்தோடு சுழுத்தியை யடைந்த சீவன்; தான் அந்தம் இல் பரன் ஒடும் ஒன்றுவன்=அந்நித்திரா மோகத்தோடுங் கூடிய சீவனுக்காண்டு வேறிடமின்மையின் வியாபகமான பிரமத்தோடுந் தானபேத மாவான்; ஒருதனை யல்லது பிற நினையாமல்=ஆனதா னாநந்தமே வடிவ மாகலி னதுவே வடிவாய்ப் பிறிதொன்று நினையாது; ஆநந்தமயம் ஆவன்=ஆநந்தமே வடிவ மாவன்; சுகம் மிகும் அதுதான்=அகண்ட நிரதிசய சுகத்தை விளைக்கு மந்நிலையே; உயர் பிரம ஆநந்தம்=இவ்விடயாநந்தத்தினு மேலான பிரமாநந்த மென்றவாறு

விடயசுக மீனந்தரலா லிடர் விளைக்கின்றது. இடராவது—கருதியவாறு கடைபோகாது, பசி, பிணி, வறுமை சாதனக் குறைவு முதலியவற்றாற் றடைப்படல். ஈண்டு விடயமெனப் பொதுமையிற் கூறினமையானுமாணடும் போகத்தில் வருசுக மென்றமையானும், பெண்ணுடை யாபரணம் பெய்தைலந்தாம்பூல முண்ண லனை சந்தனத்தோ டோரோட்டுங் கொள்க வென்க.

குலாயன்ம்—பறவைக்கூடு. குலாயமென விகாரமாயிற்று. விழு செயல்—வினைத்தொகை. விழுகின்ற செயலு மங்கிருத்தலுஞ் சாமானிய தருமம். திரிபுடியோடுங் கூடிய வாநந்தம் பிரமாநந்த மாகாமையாலாநந்தமய மாவனென்று ரென்க. இது, திரிபுடியுடைய விடயாநந்தத்தினும் வேறென்க. (௧௨௪)

தூங்குஞ் சுகமது பிரமச்சுகமெனல் சுருதிப்பொருள் விழிதுயில்வோர்க, டாங்கு மலரணை நன்றாகச் சிலர் சம்பாதிப்பது தானூகந், தீங்கு நன்மையு மாண்பெண் முறைமையுந் தெரியாதமளிசெய் பொழுதேபோ, லாங்குள் வெளிகளு மறியா வநுபவ மதனாலது பிரமாநந்தம். (உகூகூ)

இச்சுழுத்தியாநந்தத்தைப் பிரமாநந்தமென யாங்கூறியது புனைந்துரை யன்று. சுருதி யுத்தி யநுபவத்தா லேயத்ததேன் ற்றிப் கூறுகின்றார்:—

(இ—ள்.) தூங்குஞ் சுகமது பிரமச் சுகம் எனல்=என்று யாங் கூறல் கற்பனை யன்று; பின்னையோ, "உறங்குங்காலை, மன்னிய தமத்தி லுட்புகுந் தொன்றொழியாம லிறந்த வவ்விடத்தே தன்னுருவான வின்பமே புசிக்கும்" என்ற 'சுருதிப்பொருள்.' சுருதி கூறினும் யுத்தி யுண்டோ வென வரின்? விழி துயில்வோர்கள் தாங்கும் மலர் அணை நன்றாக சிலர் சம்பாதிப்பது தான் ஊகம். மலரணை சம்பாதிப்பது சிலர்க்கன்றி யாவர்க்குங் கூடாமை; இவர் பலராத னேற்பார் சிலர், நோலார் பலராகலி னென்க.

இனி, 'மலரணை' என்றதை யுவமைத்தொகை யாக்கி மலர்போலு மணை யெனக்கொண்டு கூறுமிடத்து, அவரவர் பழகிய தேயவ ரவர்க்கு மலரணை யாகலி னவ்வியாத்தியுமின்று. இது, 'நன்றாக' என்றதனாற் கொள்ளப்படு மென்க. இன்னும் பூவணையே பலர்க்கு மாகலின், சில ரென்றதனாலு மிழுக்கன்று. இனி, அநுபவம்: தீங்கும், நன்மையும் இவ்விரண்டும் விடய முன்னிலையில் வரப்பட்டன வென்க.

ஆண் பெண் முறைமையும்; தெரியாது=அவ்விரு பாலாருக்குந் தெரியவாராது; அமளி செய் பொழுதே போல=அந்நித்திரா காலத்திற் றெரியாவாறுபோல; ஆங்கு=அச்சுழுத்தியில்; உள்=யாமுள்ளாமேம்; வெளிகளும்=யாம் வெளியுள்ளேம்; (எனவறியு மறிவானது) அறியா அநுபவம் அதனால்=அறியாதிருக்கின்ற அநுபவத்தாலே; அது பிரமாநந்தம்=அந்நிலையே பிரமாநந்த மென்றவாறு. இத்திட்டாந்தம் சுவபக்கமாம்.

அன்றி, 'அவளிசை பொழுதே' யென்று பாடங்கொண்டு, அம்மகளிர் கூட்டுறவி லுண்டாகு மந்நிலைபோல வெனக் கொள்ளினு மமையுமென்க. அங்ஙனங் கூறுமிடத்து, 'அவளா லிசைந்தபொழுது' எனவும், 'அவளிடத்தே யிசைபொழுது' எனவு மிருபொருள் படு மென்க.

'அமளிசெய் பொழுதும், பிரமாநந்தாநுபவத்துக் கர்த்தத்துவ மின்மையே' சாமானிய தரும மென்க. இவ்வநுபவ மொவ்வொரு கோரிடத்து நிகன்தலி னீதெனத் தந்து காட்டவேண்டா வென்க. (௧௨௫)

உதவும் புவியினி லொருவ னநுபவமொருவன் மனதினி னுதி யாதே, மதியுங் கெடுகிற துயில் கொண்டாநந்த மயனன்றோ சுக முறுகின்று, னிதுவிஞ் ஞான மயனுஞ்சிந்தையி னினைவாய் வந் திடுமெனல் கண்டேன், சுதைவிண் ணோர்புகழ் குருவேநீரிது சொல்லீர் சகலமும் வல்லீரே. (உ௬௪)

அது, 'பிரமானந்தம்' என்பதோக்கும்; ஆயினு மவ்வநுபவ மாநந்த மயனதாக மீண்டும், விஞ்ஞானமயனுக் கெங்ஙனம் புலப்பட்டதென வினவுகின்றன் :—

இவ்வினு தொடர்பாட்டா லிடைப்பிறுவால்.

(இ—ள்.) உதவும் புவியினில்=முன்னீட்டிய வினைவசத்தா லிப்போ தொருவனுக்கு மற்றவற்றைப் போகமாதற்பொருட் டுதவு மிவ்வுலகில்; ஒருவன் அநுபவம்=சாத்தனனுபவித்த வநுபவம்; ஒருவன் மனதினில் உதியாதே=மற்றொரு கொற்றன் மனதிற்குப் புலப்படாதே; இருவரும் வேறுபட்டவ ராகலி னென்க.

இத்திட்டாந்தம் போல, மதியுங் கெடுகிற துயில் கொண்டு=விஞ் ஞான மயனைக் கெடுக்கிற நித்திரா மோகத்தைக் கருவியாகக் கொண்டு; ஆநந்தமயன் அன்றோ சுகம் உறுகின்றன்; இங்ஙனமாக, இது=இவ் வாநந்த மயாநுபவம்; விஞ்ஞானமயன் ஆம் சிந்தையில் நினைவாய் வந் திடும் எனல் கண்டேன்=ஸ்மிருதி ரூபமாக வருவதை நாடோறுங் காண் கின்றனன்; சுதை விண்ணோர் புகழ் குருவே நீர் இது சொல்லீர்= இங்ஙனம் வரற்குக் காரணத்தை விளக்க வடியேனுக் கருளுவீர்; சகலமும் வல்லீர்=எத்துணையான வையங்களுக்கும் விடைகூறு மாற்றலுடையீ ரென்றவாறு.

'மதி, விஞ்ஞானமயன், சிந்தை' என்பன வொரு பொருட் கிளவி. 'மதியும் கெடுகிறவென்பது' பிறவினைப் பொருளில் வந்த தன்வினை யென்க. மதியும் என்ற விறந்தது தழீஇய வெச்ச வும்மையால் மனோ மயனையுங் கொள்க. இவ்விருவரும் விக்ஷேபராகலி னாநந்தாநுபவம் பெறற் கேலாமையா லவ்வநுபவ முடைய வாநந்தமயனின் றநுபவம் விஞ்ஞான மயனிடத் துண்டாவதே னென்பது வினு. சுதை விண்ணோர்=சுதையை யநுபவித்த விண்ணோர். (௧௨௬)

*நெய்யும் வெண்ணெயு மிருபேர்களு மறிநினைவிற் பிறி வறிவினி லில்லை, செய்யுந் நனவினிலிறுகும் மனதொடு சேருஞ் சின்மய விஞ்ஞானன், நையுந் துயர்மன நழுவும் பொழுதுணர் ஞானச் சுக முணு மானந்தன், செய்யுந் துளிகளு நீருங்குளமொடு பாரும்போ லிவர் பிறிவன்றே.* (உகூ௫)

**கூறிய விருவரு மோன்றெதற் குத்தி கூறி விடையை யீதிற் முடிக்கின்றார்:—**

(இ—ள்.) **நெய்யும் வெண்ணெயும் இருபேர்களும்**=*நெய்யென்ற பெயராற் கூறப்படும் பொருளும், வெண்ணெயென்ற பெயராற் கூறப்படும் பொருளும்;* **அறி நினைவில் பிறிவு**=*தாம் வேறுபட்டு நிற்கும்போதறிகின்ற நினைவின் மாத்திரமே வேறுதலன்றி;* **அறிவினில் இல்லை**=*அவ்விரண்டிடத்தும் நின்ற தன்மையை நோக்கும்போ தொன்றே யாகலினவ்வேறுபா டதனிடத்தில்லை;* (இங்ஙனமே) **செய்யும் நனவினில்**=*தொழில்களைச் செய்யாநின்ற சாக்கிரத்தின்கண்;* **இறுகும் மனதோடு**=*தோன்றும் விடயாகாரமாகத் தடித்த புத்திவிருத்தியினிடத்து;* **சேரும் சின்மயம்**=*சேர்ந்த சிற்சொரூபம்;* **விஞ்ஞானன்**=*அப்போது விஞ்ஞானமயனென்னும் பெயர் பெறும்.* ஒடு—*ஏழனுருபுப் பொருண்மயக்கம்.*

**நையும் துயர் மனம் நழுவும் பொழுது**=*அவ்விஞ்ஞானன் திரிபுடிரூபமா யவ்விடயத்தை யநுபவிக்கும்போ தவற்றில் மொத்துண்டவற்றான் மெலிவடைந்து வருந்திய மனமானது அத்துன்ப நீங்கும் பருவம் வரவதனுலவை நீங்கும் பொழுதாகிய சுழுத்தியவத்தையில்;* **உணர்**=*அவ்விஞ்ஞானமயனே சூக்குமாவத்தை யடைந்து;* **ஞானசுகம் உணும்**=*ஆண்டுள்ள பிரமானந்தத்தை யநுபவிப்பன்;* **ஆநந்தன்**=*அப்போதவனுக் கானந்தமயனென்று பெயர்; இவையே வேறுபாடன்றி சொரூபத்தில் வேறுபாடன்று.*

*இங்ஙனஞ் செய்கையாற் பெயர் வேறுபட்டிருப்பினு முரு வேறுபட்டதன் றென்றற்கு வேறு திட்டாந்தமு மூண்டு :—அவை,* **பெய்யும் துளிகளும் நீரும்போலும்**=*வான் வழங்குந் துளிக்கணங்களும், அவையொன்றுபட்ட நீரு மிரு பெயர் பெறினும் வடிவொன்றுதல் போலும்;* **குளமோடு பாரும்போலும்**=*நாற்புறமுஞ் சூழ்ந்துள்ள வயாணையைக் கையெனினு மவ்வரையிற் குட்பட்டதைக் குளமெனினு மிப்பெயர்களா லப்பொருள் வேறுபடா வகை போலவும்;* **இவர் பிறிவு அன்றே**=*இவ்விஞ்ஞானமயனு மாநந்தமயனுஞ் சொரூபத்தாற் பிறிவுபட்டவ ரன்றென்றவாறு.*

ஆகலி னாநந்தமயனா யிருந்தநுபவிக்குஞ் சுகாநுபவமவனே விஞ்ஞான மயனாய் வருதலி னிவனுக்கு சமஸ்காரமாக வருதல் கூடு மென்க.

இம்மூன்று செய்யுளாலும் பிரமாநந்தத்தை விளக்கிக் கூறுகின்றரு தொடர். (௧௨௭)

ஒன்றாகிய பிரமாநந் தன்சுக மொழிவானே னன் வெளிவரு வானே னென்றான் முன்செய்த கருமம் வெளியினிலிழுக்குஞ் சுழுத்தி விட் டெழுந்தோனு, நன்றாயின சுகமகலான் வெளியிலு நடவான் மறதியும் பெறமாட்டா, னன்றாமென விருந்துறங்குஞ் சிலகரும மதுவே வாதனை யாநந்தம். (௨௬௮)

அங்ஙனமாய பிரமாநந்தத்தோ டமையாது மீண்டு விஞ்ஞானமய னாக வருவானே னென்ற வினாவிற்கு விடை கூறும் வாயிலாக வாசனா நந்தத்தின் சிறப்பிலக்கணங் கூறுகின்ற ரீதில்:—

(இ—ள்) ஒன்றாகிய பிரமாநந்தன் :—பிரமத்தோ டபின்னனான விவ்விஞ்ஞானமய னப்பிரமாநந்தமய னாகவு மவன்; சுகம் ஒழிவான் ஏன்= அப்பிரமாநந்தத்தினு மிக்கதோ ராநந்த மின்மையா லச்சுகத்தைத் தணத்தல் செய்வானேன்; வெளி வருவான் ஏன்=அச்சுகநிலை பெறாது வெளியிட மாகிய சாக்கிரத்தில் வந்ததியாது கருதியோ; என்றல்=என்பனவாக வுன் மனதினில் வினா நிகழுமாயின் கூறுதும்.

முன் செய்த கருமம் வெளியினில் இழுக்கும்=அச்சுகாநுபவ நீங்கும் படியாகவும் விட்சேபத்தை யநுபவிக்கும்படியாகவு முள்ள முன்செய்த கருமமானது அவ்வாறு செய்தன வென்க.

இனி, சுழுத்திவிட்டு எழுந்தோனும்=அக்கரும வசத்தாற் சுழுத் தியை விட்டு சாக்கிரத்தே வரப்பட்டவனும்; நன்றாயின சுகம் அகலான்= இடையூறின்றி யநுபவித்த வப்பிரமசுகத்தை முற்றும் விடான்; (முற்றும் விடானெனவே பெரும்பான்மையும் விட்டதென்றபடி யாயிற்று.) அது திரிபுடிசய யோரான்றாற் றணந்து நின்ற நிலையை விட்டதென்க.

வெளியிலும் நடவான்= 'சுகமகலான்' எனவே, நன்றாயின சுகத் தினு நின்றிலன், நிற்காவிடி னச்சுகத்தை முற்றும் விட்டு சாக்கிரத்தே வந்தானு மல்லன்; மறதியும் பெறமாட்டான்=வாராவிடினுந் தானின்ற வந்நிலையில் முன் சுழுத்தியி லநுபவித்த பிரமாநந்தாநுபவத்தை மறந்தானு மல்லன்; இங்ஙன மாகலின், அன்று= இந்நிலை கூறிய பிரமாநந்தா நுபவமு மன்று; ஆம்=அன்றாயினும், அச்சுக சமஸ்கார மிவ்விருத்திய

விருத்தலின் அப்பிரமாநந்தலேசமு மாம்; என இருந்து=என்னு நிலையாக விருந்து; உறங்கும்=ஓராற்று னவ்வுறக்கத்தை யடையும்; சில கருமம்='சில' வென்றது, இரண்டு மூன்று வகைப்பட்ட வொரு செயலன்று; பின்னையோ? அதிக காலத்தினின்று நீக்கிய சிறுபொழுதை யென்க. ஆகலின், சில நேர மப்போகத்தை யூட்டுங் கருமம், அதுவே வாசனையாநந்தம்=அச்சுகாநுபவமே வாசனையாநந்த மென்னும் பெயர்த்தாயிற்று என்றவாறு.

என வென்பது சொன்மே னின்றது. உறங்கு மென்பதை முற்றுக்ககாது, எச்சவினை யாக்கின், கன்மத்தைக் காரணவாகுபெய ராக்கிக் கன்மப்பய னெனக் கொள்க. ஏகாரந் தேற்றம். (௧உ௮)

அந்தக் கணமுட லகமென் றிடர்களி லலைந்தேசுகந் தனை மறந்தே போ, மூந்தச் செயுவினை சுகதுக்கந்தரு மோனந்தரு நடுவடிவேகாண், எந்தப் புருடனு மொருசிந்தையு மறவிருந் தேனென லநுபவமாகு, மிந்தப் படிதனு தாசீனச்சுக மிதுவே நிசமெனு மாநந்தம். (உ௩எ)

இது னிசாநந்தத்தி னியல்பு கூறுகின்றது:—

(இ—ள்.) அந்தக்கணம்=அவ்வாசனாநந்த மநுபவிக்குஞ் சமயத்தில்; மூந்தச் செயும் வினை உடல் அகம் என்றிட=மற்றொரு ஆழானது தேக நானெனச் செய்ய; (அதனால்) சுகதுக்கம் தரும்=அவ்வினை யிவ்விரண்டையுந் தரு மிவ்விரண்டினாலும்; இடர்களில் அலைந்தே=அச்சுகதுக்க காரமான வித்துன்பங்களி லலைப்புண்டு; சுகந் தனை மறந்தேபோம்= அவ்வாசனாநந்தத்தை யதுகாரணமாக மறந்தேபோவன்; அவ்வாசனாநந்தா நுபவஞ் சற்றுமின்றி மறத்த லொருதலை யென்ற பொரு ளுணர்த்தலி னேகாரந் தேற்றம். ஈண்டுச் சுகம் விடய சுகம்.

(மறக்கினும்) நடுவடிவு மோநந் தரும்=அச்சுகாநுபவத்திற்குந் துக்காநுபவத்திற்கு மிடையே விருத்தி யாதொரு பரிணமத்தையு மடையாமையா லந்நிலை மௌனத்தைக் கொடுக்கும்; "அப்பரிணம மின்மையே மௌன" மென்க.

இதற்கநுபவம்:—எந்தப் புருடனும்=எந்தப் புருடனுமாவது, (பெருநலந்தப்போ னுகுதல், வறிய னுகுதல் என்றபடி யென்க.) ஒரு சிந்தையும் அற=யாதொரு நினைப்பு மின்றி; இருந்தேன்=இப்போது வானா விருந்தனன்; எனல்=என்று மற்றொரு விருத்தி யுண்டா

குங்கால் பிறனுக்குக் கூறல் ; அநுபவம் ஆகும்=இதுவாகு மென்க. இந்தப்படி=இவ்வநுபவ தாரத்தால்; தன் உதாசீனச் சுகம்=தனது உதாசீன காலத்திற் றோன்றுகின்ற விச்சுகமானது; இதுவே நிசமேனும் ஆநந்தம் ; காண்=இதையு முன் னநுபவத்திற் பார், எ—று.

'இதுவே' யென்னு மேகாரம் வாசனாநந்தத்தினின்று நீக்கலால் பிரிநிலை யென்க. ஏனைய வேகாரங்க ளசை. "இது வாசனாநந்த மாகாதெனினும், பிரமாநந்த மாகாதோ வெனி னிதற்கு விடை மேற் கூறுகின்று" ரென்க. (௧௨௩)

நிசமா னதுமுக் கியமோ குடத்துள நீரன்றே வெளியீரந்தான், வசமா மகங்கார மறைந்தா னிசமது படிந்தான் முக்கியவகையாகுந், திசையார் கிரிசிய மறியாதே துயில் செறியாதே யுடறறிபோலே, யசையா தேமதி சமமாகிய நிலையது தான்முக்கிய வாநந்தம் (உ௩அ)

இதில், முக்கிய வாநந்தந்தி னிலக்கணமு மிது நிசாநந்தத்தின் வேறென்பதுங் கூறுகின்றார் :—

(இ—ள்.) உடல் தறிபோல்=தூலசரீரமானது பதுமாசன முதலிய வாசன சாதன சகாயத்தாற் குத்துக்கட்டை போல; அசையாதே ; சமம் ஆகிய நிலை=கம்ப மின்றி செந்நிலையி னிற்கவும்; (தறிபோல வென்ற வுவமானத்தா லுடலென்றதைத் தூல சரீர மென்றும். ஏகார மசை.) மதிசமம் ஆகிய நிலை=புத்தியானது விசாரத்தை யொழித்துஞ் சமநிலையி னிற்பது ; (அந்நிலை) திசையார் கிரிசிய மறியாதே=என்பது புறக்காரணவாயி லாகிய ஞானேந்திரியவயப் பட்டு திக்குகளி னிறைந்த கிரிசிய விடயங்களை (விட்சேபம்) யறியாமலும்; துயில் செறியாதே= லயாவஸ்தையை யடையாமலும் சுத்த சத்துவமான வான்மாவோடொத்த நிலை, அல்ல தேகாந்தநிலை.

அதுதான் முக்கிய வாநந்தம்=இதிற் றோன்று மாநந்தமே முக்கியாநந்த மாகும். 'இது' என்ற தாதுபேயர், "கூறிய வாசனாநந்தம் பிரமாநந்தங்களு மன்ன."

அற்றாயின், நிசாநந்தத்தினு மிது வேறாய தெங்ஙனமெனின் ? வசமாம் அகங்காரம் மறைந்தால் நிசம்=சீவனோடு சகசதாதான்மிய மாயுள்ள கர்த்தத்துவத்திற் கேதுவான வகங்காரமானது ஒரோதவினு லவித்தையி லடங்குமேயாயி னச்சமயத்திலுண்டாகு மாநந்தம் நிசாநந்தமாம் ; (இதன் விரிவை முற்செய்யுளிற் காண்க.) அது படிந்தால்=அவ்வகங்காரமான

தான்மாவில் லயமாயின்; முக்கிய வகை ஆதும் = அப்போது தோன்று மாநந்த முக்கியாநந்த மென்ற பகுதியதாகும்; (ஆகலின்) நிசமானது முக்கியமோ = நிசாநந்தமானது முக்கியாநந்த மாகா தென்றவாறு.

ஆயி னிரண்டிடத்து மகங்கார மறைதலு மாங்குத் தோன்றலு முள வாக வேறுபடுப்பானே னெனின்? வேறுபட்டிருத்தலி னென்க. என்னே? குடத்துள நீர் அன்றோ வெளி ஈரந்தான் = குடத்தின்கண் ணுள்ள நீரி னது ஈரமல்லவா வக்குடத்தின் புறம்பே பொசிந்துகாணுமீரம்; (அது போல) அகங்காரம் படிதலாகிய முற்றக் கெட்டவிடத் துண்டாகு முக்கி யாநந்தத்தின் சாயை யல்லவா வவ்வகங்கார மவித்தையி லடங்கும்போதுண் டாகு நிசாநந்த மென்க. நீ-ராதுபெயர். தான்-தேற்றம்.

அகங்கார மறைதலவித்தையிலும், படிதலான்மாவிலு மாகலி னவ் விரண்டு மவாய்நிலையான் வந்தன. ஓகாரம் எதிர்மறை விடையிற்போந்தது. 'குடத்துள நீரன்றோ வெளியீரம்' என்பது பிறிதுமொழிதல். அல் லது, (முன் கூறிய) 'வசமா மகங்கார மறைந்தா லிசமது படிந்தால் முக் கிய வகையாகும்' என்பதை மீண்டுமேய மாகக் கொள்ளினு மமையு மென்க. இங்ஙன மமைத்துக் கூறுமிடன், வினாவின்றி விடை நிகழ்தலும், உவமானமும் பொருந்து மொவ்வாமலும், பிறவுக் கூறலு மா மென்க. அன்றி, முக்கியாநந்த விலக்கணமும் முடிவு பெறு மென்க. முக்கியாநந்தத்திற் கங்கமான போகநிலையு முடம்பொடு புணர்த்துக் கூறப் பட்டது. முன்னின்ற வேகாரம் வினா. அறியாதே, செறியாதே, அசை யாதே என்ற வேகாரங்க டேற்றம். இச்சமாதி வகைகளை விசாரசாகர முதலிய விரிந்த நூலிற் காண்க

(இனி யோருரை)

நிசம் ஆனது முக்கியமோ = கூறிய நிசாநந்தமானது கூறப்படு முக் கியாநந்த மாகாதாகலின், முக்கியாநந்தங் கூறுவானே னென்னற்க. என்னே? குடத்துள நீரன்றோ வெளி ஈரம் தான் = மட்குடத்துள்ள நீரினீர மல் லவா வக்குடத்தின் புறம்பேயுள்ள பொசிந்த வீரம்; அந்நீரி னீரமன்றி வெளி யீரத்திற்கு வேறு சொரூபமில்லாத வாறுபோல, வசம் ஆம் அகங் காரம் படிந்தால் நிசம் = துக்கத்தான் மொத்துண்டு அதைவிட் டான்ம வசப்பட்டுள்ள வகங்காரமான தவித்தையில் மறைந்தா லது நிசாநந்தமாகும்; இங்ஙனந் தன் சொரூபத்தோடு மறையாது, அது = அவ்வகங்காரமானது; படிந்தால் = சொரூபாகாசமா யான்மாவி லயமாயின்; முக்கிய வகை ஆதும் = இப்பெயருடைய வேறானவாநந்தவகை யாகும். இது படிதற்கேது; "திசையார் திரிசிய மறியாதே துயில் செறியாதே உடல்தறிபோல அசை யாதே மதிசமம்ஆகிய நிலை." அதுதான் = இவைபோ லவ்வேது. அது

வென்பது, சாதனந் தொகையின் மேனின்ற வேற்றுமைச்சுட்டு. முக்கிய ஆனந்தம் = இக்காரணத்தா லிது முக்கியாநந்த மென்னும் பெயர்த் தாயிற்று

இன்னண மாய சாதன முன்னிலையிற் றோன்ற னிசாநந்தத்திற் கின்மையி னிது வேறென்க. இவ்வாறு ஆற்றொழுக்காய்க் கூறினுந் தத்துவார்த்தீபங் கருத்தாகாமையின், அவ்வுரை போலி யென்க. இது வழிநூ லாதலிற் றிரிபு வேறுபாடுடைமையி னானு மென்க. விரிவஞ்சி மறுக்கிலம். கூர்ந்துணர்க. இந்நிசாநந்தமும், முக்கியாநந்தமும் நிரையாய் வாசனாநந்தத்தும், பிரமாநந்தத்து மடக்கமென்க. ஏகதேசவிருத்தியோடுங் கூடி நிசாநந்த நிற்றலாலும் அவ்விருத்தி யிறந்து முக்கியாநந்த நிற்றலாலு மென்க. (௧௯௦)

மனுடன் மனுடகந் தருவன் தேவகந் தருவன் பிதிர்கருமத்தே
வன், றனுடன் சுரன் சுரனிந்திர னீசானும் பிரசாபதி யானோன்,
கனகன் விராட் டிரணியகருப்பன் முறைகருதுமிப் பதினொரு
பேர்கள், பினவா னந்தங்க ளுரையாம் பிரளயவெள் ளக்கடல்
பிரமாநந்தம். (௨௯௧)

தைத்திரியந்திற் கூறு மிப்பதினோராநந்தத்தையுங் கூறிக் கழிந் தெஞ்சிய பிரமாநந்தத்தின் சிறப்பையு மிதிற் கூறுகின்றார் :—

இது, கூட்டிப்பிரிக்க லென்னுமுத்தி.

(இ—ள்.) மனுடன் : இச்சொல் லாநந்தத்தைச் சுட்டி நிற்றலால், ஆகுபெயர். இது ஏனைய மக்களை விலக்கி நிற்றலின், பிறிதினியைபு நீக்கிய விசேடணமுமாம். ஏனையவு மன்ன.

இம்மனுடாநந்தமாவது:—இந்நிலவுலகில் கரவிலுந் திருவுடையராய், பதினாறாட்டைப் மழவு, மகவு முதலிய பருவத்து நன்மையே யடைந்து, பிராயத்தானும், அழகு, வித்தை, அறிவு, ஆரோகம், வலி, ஊக்கம், வெற்றி, புகழ், பொருள் முதலியவைகளை யுடையோனு மியற்று மொவ்வு வகை யொத்த மனையாளா மமைச்சு, நட்பு, அரண், படை, குடி, கூழ் முதலியவற்றை யொருங்குடையவனும், பஞ்சாட்கொடி பூசாம்பிராச்சியத்தைத் தன்னொருகுடைக்கீழாண்டு, எதிரற்ற வரசனுமாயிருந் தநுபவிப்பவனுடைய வின்பு. இதனைக் குறள்—பொருட்பாலிலும், பிருது சக்கிரவர்த்தியின் சரித்திரத்திலுங் காண்க வென்க. இவனைச் சார்வபௌமனென்ப. (௧)

மனுடகந்தருவன் = இவ்வாநந்த மிங்கு மனுடனா யிருந்தா னொருவன் முனாற்றிய புண்ணிய விசேடத்தா லவ்வுலகிற் கந்தருவபதத்தை யடைந்தோ னனுபவிக்கு மாநந்தம். (உ). இது மனுடாநந்தத்தினு நூறத்தனை யதிக மென்க. இவ்வாறே யேனையவையு முயர்த்திக்கொள்க வென்க.

தேவகந்தருவன் = இவ்வாநந்தம், முன்கற்பத்திலேயே தானாற்றிய புண்ணிய மிகுதியா லிக்கற்பத் தொடக்கத்திலேயே தேவகந்தருவனாய்ப் பிறந்து அநுபவிக்கு மாநந்தம். (ந)

பிதிர்கருமத்தேவர் = இது, பிதிரருங் கருமத்தேவருமா யிருந் தநுபவிக்கு மாநந்தம். இவ்வாநந்தாநுபவம் தேவகந்தருவாநந்தத்தினு நூறத்தனை யதிக மாயினு மிதற்குச் சில காலத்திற்குப் பின் இக்கற்பத்திலேயே மாறுத லுண்டென்பது. அக்கினிஷ்வாத்தாதிய ரென்ப திவர் பெயர். (ச)

சுரன் = இது, இவ்வுலகி லஸ்வமேதாதி யாகங்களைச்செய்து, அந்நல்வினைப் பயத்தின் விசேடத்தா லவ்வுலகி னெடுங்கால மிருந் தவ்வாஜானு தேவராலும் பூசிக்கப்பெற் றநுபவிக்கு மாநந்தம். (ரு)

சுரன் இந்திரன் = அச்சுரர் முதலியோருக்குத் தலைவன். (சு) ஈண்டுச் சுரராவார்: அஷ்டவசு, ஏகாதசவுருத்திரர், துவாதசாதித்த ரிம் முப்பத்தொருவரு மாம்.

ஆசான் = இவ்விந்திராதியோருக்குக் குரு. (எ) இவ்விருவர் பெயரும், பதவியும் புராணங்களில் வெளி

பிரஜாபதி = இது, பிரஜைகளை யுண்டாக்குங் கஸ்யபப் பிரஜாபதி முதலியோ ரநுபவிக்கு மாநந்தம். (அ)

கனகன் = இவ்விரணியகருப்பனிலும் வேறு. (கூ)

விராட்டு = பிரமனாயிருந் தநுபவிக்கு மாநந்தம். (கo)

இரணியகருப்பன் = விண்டுவாயிருந் தநுபவிக்கு மாநந்தம். (கக)

முறை கருதும் = இவ்வுயர்வு முறையைச் சுருதி சிந்திக்கும்; இப்பதினொரு பேர்களும், பின ஆநந்தங்கள் நுரையாம் = ஒன்றற்கொன் றுயர்வு தாழ்வாக மாறுபட்ட வாநந்தங்க ளாகலின், பிரமாநந்தக் கடலி னுரைகளாம்; பிரளய வெள்ளக்கடல் பிரமாநந்தம், எ—று

அவற்றை நுரை யென்றதும், பிரமாநந்தத்தை வெள்ள மென்றதும், நீரின்கண் ணுள்ள நுரை முதலியவை நீரையன்றி யமையா வாறுயினும், நுரையினிடத்தே தன்னியல்பி லிரமுள தாகாது, நீரி லுள்ள விரத்தி னேக

தேசத்தி னமிசத்தைப் பெற்றுத் தட்பமா யிருப்பது போல, விரணிய கருப்ப மிறுதியாய பதவிகளி லானந்தந் தனக்கென வின்றிப் பிரமானந்தத் தின் லேசத்தைப் பெற்று ஆநந்தம் போன்றிருத்தலி னென்க.

இங்ஙன மன்றிப், பாடந்திருத்தி வேறு நூற்பொருள் கொண் டுரைப்பி னஃது இந்நூலாசிரியரை யறியாமை யுடையவ ராக்கலு மன்றி சந்தவின்பச்சிதைவு, தொடரோசை யின்பச்சிதைவு, வண்ணச்சிதைவு முத லியவை சிதைந்து, பொருளேபோலச் செய்யுளும் பயனற்றதா மென்க.

உட னென்பது, எண்பொருட்டாய தோரிடைச்சொல். முற்கூறிய வெட்டானந்தங் குவம்பதத்திலு மிக்கூற்றுய பதிஞேரானந்தமும் தற்பதத்து மடங்கிப், பிரமானந்தத்தை யீரிடத்து மியைத்து, ஒரு பொருட்பேத்திக் கூறினு மமையு மென்க.

நடுநின்ற வும்மையை யேனையிடத்துங் கூட்டி எண்ணும்மை யாக்கி, உட னென்பதை யுடனிகழ்ச்சிப் பொருளாய்க் கொள்வது மொன்று. (௧௩௧)

தக்—சாரியை.

எவனுகிலு மிந்தத் துரியாதீதத்தி லேழாம் பூமியி லிருந்தானே, லவனாரதன் சுகன்சிவன் மாலயன் முதலறிவோ ரநுபவசுக போதன், விவகாரதிர் சியமிதுவே யநுபவ மென முன்சொல்லிய விவகாரி, உவமானமு மறிமகனே யவனடி யுதிரும் பொடிக ளென் முடிமேலே. (௨௪0)

சீவன் முத்திக்க விலட்சணமான வித்துரியாதீத சுகத்தி லிருப்பவ னது பெருமையை யிதிற் புகழ்கின்றார் :—

(இ—ள்.) எவன் ஆகிலும்=' பொல்லாத மிலேச்சருக்கும் விதேக முத்தி தரு ஞானபூமி ' என்றபடி, வருணச்சிரம முள்ளவ னுனு மில்லவ னுனும், யாவ னுனும் ; இந்த=கூறிய ; துரியாதீதத்தில் ஏழாம் பூமி யில் இருந்தான் ஏல்=துரியாதீத மாகிய ஞானசத்த பூமியிற் சென்றங் குத் தங்கி யிருப்பானேல் ; அவன்=இச்சுட்டு, சீவன் முத்திக்கு வில க்ஷணமான சுகாநுபவ முடையவ னென்பதைக் குறித்ததென்க. அன்றி, வரிட்ட னெனினு மாம் என்க.

நாரதன் சுகன் சிவன் மால் அயன் முதல் அறிவோர்=முதல் என்ற தால், நாரதருடன் வசிட்டாதி தேவவிருடியரையும், சுகரொடு வாமதேவர் முதலிய பிர்ம்மரிஷிகளையும் ; (செய்யுளாகலின் பிறழக் கூறினும், மால யன் சிவனெடும், மகேச சதாசிவாதிகளையும் கொள்க) அநுபவ சுக போதன்=அநுபவிக்கும்படியான சுகாநுபவத்தை யுடையவன் ; (இச்

சுகமே யிவனுக்கு வடிவ மென்றபடி.) இது: "அனைவருக்கு மேவுமிட மதுவே யாகு மறிஞருக்கு மெய்யுருவ மதுவேயாகு" மென்றதனுற் பெற்று மென்க. சண்டறிதல், மெய்யுணர்தலாதலின், சிந்திக்கிளை யன் றென்க.

விவகார அதீரீசியம் இதுவே = உலக விவகாரங்களுக்கும் பிரமாண வாராய்ச்சிக்கு மறியப்படாததா யிருப்பது மிந்நிலையே; அல்லது, உலக விவகாரங்க ளிந்நிலையி லறியப்படாத வியல்பெனினு மொக்கு மென்க. இதுவே அநுபவம் = இந்நிலையினையே யநுபவநிலை யென்ப; அல்லது நமதநுபவமு மிதுவே; என = என்பதாக; முன் சொல்லிய = முன் 'தத்துவ விளக்கப் படலத்தில்,' "அநுபவாநந்த வெள்ளத்... .... சுபாவமானன்." எனவும், "அடிமுடி நடுவுமின் ..... பதமடைந்திருப்ப" ரென்றும், "அன்னியர் தம்மாற் றன்னு லறியாதோன் வரிட்டனுமே" எனவும் கூறிய; உவமானமு மறிமகனே! அவன் அடி உதிரும் பொடிகள் என் முடிமேல் எ—று. சற்றேகாா மரை. அகரம் தொறுத்தல் விகாரம் இவ்வுவமானம் சபக்க மென்க ; ன்றி, பிரமாநந்த முதலியவை யுவமான மெனினு மொக்கு மென்க.

இனி, 'எவனுகிலும்' என்றற்கு, கவி, கவிமகன், வாதி, வாக்கி— எனக் கொள்ளினும், இவையின்மையோ னெனக் கொள்ளினு மமையு மென்க. இக்கோள், "கிளர் சுருதி மயக்கத்தாற் கிடைப்பட்டானேனு மாவதுஞ் செய்துந் தவிர்த்தும் பயனென்றில்லை, யிமகிரியுங் கடல்போ லியல்பாய் நிற்பர்." என்பதனு லென்க. துரியாதீதமே ஏழாம்பூமியாகலி னித்தொட ரிருபெயரொட்டு. இல் —தவிர்வழி வந்த சாரியை. இருந்தானே லென்ற வைய மிருத்த லரிதென்பதை விளக்கிற்று. (நாரதர், சனத்குமாரரிடத்தி லிந்நிலையைக் கேட்டா ரென்பதும், சுகர், வியாசர், சனகனுதியோரிடத் திந்நிலை தெளிந்தா ரென்பதும், அயனும் விண்டுவும், பரசிவத்திடத்திற் றெளிந்தா ரென்பதும், பரசிவத்திற் கிந்நிலை யியற்கை யென்பதும், சுருதி ஸ்மிருதி புராணங்களிற் பிரசித்த மென்க.)

இனி, 'போதம்' எனப் பாடங்கொண்டு, 'சின்மய மாவன்' எனப் பொருளுரைப்பின், திணைவழு வாதலு மன்றிப், பொருளு முடிவுபெறு வென்க.

"அவனடி யுதிரும் பொடிக ளென்முடிமேலே" என்றது, இந்நிலை, யுபரதி வைராக்கிய மேது சொரூப மவதியோடு முற்ற வுடையவனுக்கே இச்சிரவண மனனத்தின் பலனுகிய நிருவிகற்ப சமாதி சதா சித்திக்கு மென்னு மித னருமையும் பெருமையுந் தோன்றக் கூறினு ரென்க.

இவற்றை விரிவாக வுணர வேண்டின், வாசிட்டம், தேவிகாலோத்திரம், சிதம்பர சுவாமிகள் நெஞ்சுவிடு தூது முதலியவற்றி லுணர்க வென்க.
(௧௩௨)

இந்தவா றைந்துசுகஞ் சொல்லினோம் வித்தைச்சுக மினிமேற்
சொல்லுவோம், முந்தமா யையுஞ் சச்சிதானந்தப் பொருளுமே
மொழியும் போதி லந்தமா மத்துவிதசுக மான்மசுக மிரண்டு
மங்கே சொன்னோந், தொந்தமாற் றியமகனே யின்னமுனக் கைய
முண்டேற் சொல்லு வாயே. (௨௪௧)

ஆநந்த மேட்டென்றவற்றுள், "இவ் வாறுமா செயுஞ் சுக" என்றது முதல் இதுகாறு மைந்தாநந்தங் கூறி முடிந்தனவும், எஞ்சியவை கூறுமிடமுங் கூறியவிடமுங் கூறி மேல்வருமவற்றிற்குத் தோற்றுவாயுஞ் செய்கின்றார் :—

(இ—ள்.) இந்த வாறைந்து சுகஞ் சொல்லினோம் என்றது, இதுகாறுங் கூறியவற்றின் றொகை. வித்தைச் சுகம் இனிமேல் சொல்லுவோம் என்றது, விச்சையாநந்தத்தை யீற்றிற் கூறல். முந்த மாயையும் சச்சிதாநந்தப் பொருளுமே மொழியும் போதில், அந்தமாம் அத்துவித சுகம் ஆன்மசுகம் இரண்டும் அங்கே சொன்னோம் என்றது, கூறியவிடம். இது நிறைநிறைப்பொருள்கோள் சச்சிதாநந்தத்திற்குப் பொருளாவன, பதந்திற்குப் பிரதிபதமாகிய கோவைப் பொருள். ஈண்டுக் கூறிய வாநந்தத்திற்குப் பொருள், சிறப்பிலக்கணத்தோடும் விரி. அந்தமென அத்துவிதத்திற் கடை கூறியது; ஏனையாநந்தங்களினு மிது முடிவுடைத் தென்றவாறு.

'துவந்துவம்.' என்பது தொந்தமென்று மருவியது. துவந்துவமாவன: நல்வினை தீவினையாற் சுகதுக்கபோகமும், இவற்றா னல்வினை தீவினையுந் தொடர்ந்துவரலுமாம். இவை மாற்றியவாற்றை 'பஞ்சினையூழித்தீபோல்' என்றதனு லுணர்க வென்க. ஈற்றேகார மசை. (௧௩௩)

குகன்றனையு மெனையுமுலகினையு மீன்றளித் தருளுங்குருவே கே
ளீர், புகன்றசச் சிதாநந்தப் பதங்க டனித்தனியே பொருள்வே
றுறு, லுகண்டமன முறைப்ப தெங்ஙன் பரியாயபதங் களைப்போ
லுறவுங்காணே, னகண்டமா யொருசுவையாத் தேனீக் கூட்டிய
மதுப்போல வருள்செய்வீரே. (௨௪௨)

ஐயமுண்டென்று அவ்வையத்தின் பதத்தி யிதிற் கூறுகின்றார்:—

(இ—ள்.) தானென்றனையும் எனையும் உலகினையும் ஈன்று அளித்து அருளும் குருவே! என்று கூறியது, "ஐயனே யெனதுளே நின்று அனந்த ஜென்மங்களாண்ட, மெய்யனே யுபதேசிக்க வெளிவந்த குருவேபோற்றி" என்ற பொருளுடைத்து. தகன்=முருகன். கேளீர்=முன்னிலையண்மையில் விளித்துக் கேட்பித்தது.

உகண்டமனம்=சொரூபானந்தத்தை யடைந்த மனம். உகளல்=கடத்தல். இது இறந்த காலத்தால் வந்தமையான் மாயையைக் கடந்த மன மென்றுயிற்று. ஒருசுவையாய் தேன் ஈ கூட்டிய மதுபோல=தேனைக்கூட்டும் ஈ பல பூக்களிலுஞ் சென்று கொணர்ந் தோரிடத்திற் கூட்டிய தமதிகாரணமான பல பூவின் பல சுவையை விட்டு ஒரு தன்மையவாகத் தேனைக் கூட்டிய வகைபோல, சச்சிதானந்தப் பதங்கள் தனித்தனிப் பொருள் வேறேனல், ஒன்றாயுணரக் கூடாமையின், அவற்றை யொன்றுபடுத்தி யருள் செய்வீ ரென்றவாறு. என்னை? அஸ்தம், கரம், பாணி என்பனபோலப் பரியாய பதப் பொருளாய்க் காணுமையி னென்க. ஏனைய வெளி. (௧௩௪)

குளிரிளகல் வெண்மை யென்ற பதங்களினு னீர்மூன்று கூறாயிற்றோ, ஒளிதவளஞ் செம்மை யென்ற பதங்களினு லக்கினியு மொரு மூன்றுமோ, வெளிமுதலாஞ் சகமசத்து மூடமிடரெனப் பிரித்து விலக்கி வேத, மெளிதறிய முரண்மொழிந்த சத்தாதி யெனும் பிரம மேகந்தானே. (உ௪௩)

அதற்கு விடை திட்டாந்தத்தோடு மிதிற் கூறுகின்றார்:—

(இ—ள்) குளிர் இளகல் வெண்மை என்ற பதங்களினல் (கூறின்) நீர் மூன்று கூறாயிற்றோ=ஒவ்வொன்றிற்குந் தனித்தனிப் பொருளாய் மூன்று வகையாக வாயதோ? (இன்னு மிவ்வாறே), ஒளி தவளம் செம்மை என்ற பதங்களினல் அக்கினியும் ஒரு மூன்றுமோ? ஆகா வாறு போல, வெளி முதலாம் சகம். முதலா மென்றமையால் காரியகாரணப் பிரபஞ்ச மனைத்துங் கொள்க

மூடம் அசத்து இடர் என பிரித்து விலக்கி=கூறிய மூன்றியல் பினை யுடைமையி னிவை பிரம மன்றென வேறு பிரித்து நேதித்து; (நின்ற பிரமத்தை) எளிது அறிய=நேதித்தவளவானே யப்பிரம முமூட்

சுக்களுக் கெளிதி னறியப்படாமையி னவ்ருக் கவ்வன மறியும்பொருட்டு; வேதம் புராண மொழிந்த = அவ்வசத்துச் சடந்துக்கங்களுக் கெதிர்கூறிய, சந்தாதி எனும் பிரமம் = சத்து, சித்து, ஆநந்தமென்ற பெயர்களுக்குப் பொருளாயுள்ள பிரமமானது; ஏகந்தானே = மூன்று வகைப்படா தொன் றென்றே யறிவாயாக வென்றவாறு.

குளிரிளகல் வெண்மை முதலிய தன்மைப்பெயர்களாலும், பண்புப் பெயர்களாலு மிந்நீராய பொருள் ஒன்றே யாதல் போல, சச்சிதாநந்த முத லிய தன்மைகளாற் பல பெயரிட்டுக் கூறினும், பிரம மொன்றே யென் பதா மென்க அக்கினியை யடுத்துக் கூறியது, பல வுதாரணங்களாலு மிவ்வேகத்துவஞ் சாதித்தற் கென்க. இதனான், 'நீர் மூன்று கூறுபிற் றோ? எனவும், அக்கினியு மொரு மூன்றுமோ?' எனவுங் காலவேறு பாட்டாலுங் கூறினா ரென்க.

வெளி முதலாஞ் சகத்தை யசத்து மூட மிடரென்று சச்சிதாநந்தங் களுக் கெதிர்கூறியது, இச்சச்சிதாநந்தங்கள் விலக்குப்பற்றி வந்த பெய ரென்றும், மேல்வரும் விதிவிலக்குகளுக்குத் தோற்றுவாயுஞ் செய்தமையி னிவ்வசத்து மூட மிடரென்பன மற்றொன்று விசித்த லென்னுங் குற்றந் தங்கற் கிடனின்றென்க. சந்தேகாரம் பிரிநிலை. (கடு)

நித்தியம் பூரணமேகம் பரமார்த்தம் பரப்பிரம நிதானஞ் சாந் தஞ், சத்தியஞ் கேவலந் துரியஞ் சமந்திருக்குங் கூடஸ்தன் சாக்ஷி போதஞ், சுத்தநிலக் கியஞ்ச ஞதனஞ் சிவன்றத்துவம் விண் சோதி யான்மா, முத்தம்வி புருக்கும மென்றிவ் வண்ணம் விதிக் குணங்கண் மொழியும்வேதம். (உசச) (க)

அசல நிரஞ்சன மமிர்தமப் பிரமேயம் விமலம் வசனாதீத, மசட மனுமய மசங்கமதுல நிருமல மசோசர மகண்ட, நிசம னந்தம விஞசி நிர்க்குண நிஷ்கள நிரஞ்சன மனுதி, அசரீ ரமவிகார மத் துவித மெனவிலக் காம னேகமுண்டே. (உசரு) (உ)

முன். "புராண மொழிந்த" என்றமையா லப்புராண மென்னுஞ் சொல் விருபெ ருள்பட்டு நின்றது. அப்பொருளாவன:—அசத்து முத லியவைகட் கெதிராய் நிற்றல். அவை, சத்து, நித்தியம், பூரண முத லியவை இவை, தமக்கெதிராய வுலகப்பொருளி லெதிர்மறையே ழுத்தைப் பெற்று அப்பொருளாய் நிற்றலின் றனக்கப்பெயர் விதி

யெனப்படு மென்க. மற்றென்று, 'கடம்' என்பது முதலியவை கட் சேத்திரியதாய கடமசல நிரஞ்சன முதலியவை. இவை, தமக் சேத்திரமாய வுலகப்பொருளி லெதிர்மறைப்பொருளை யுணர்த்து மகா மேலாமையா லவ்வகாத்தைத் தானேற்று நிற்றலி னிவை விலக்கே னப்பட்ட தென்க. இவ்விதி விலக்கென்ற பெயர்ப்பொருளை நினை பே யிவ்விரண்டு செய்யுளிலுங் கூறுகின்றர்:—

*அகரம், நகரம், வகர விகாரங்க ளொரு பொருளன.*

*இவற்றிற்குப் பொருள் இலக்கணைநிருத்தி முதலிய விரிந்தநூலிற் காண்க வென்க. இன்னு மிவ்விதிவிலக்கு நாமங்களின் விரிவை திருவ ருட்பா-திருவடிப்புகழ்ச்சியிற் காண்க. நூலாசிரியரும் விரிவஞ்சிச் சச் சிதாநந்தங்கட்குப் போல விந்நாமங்கட்கும் பொருள் கூறாராயின ரென்க.*
(கநகூ-கநஎ)

*இன்னவகை விதிவிலக்குக் குணங்க ணன்றாய்ச் சேர்ந்தொருமித்
தெல்லாங் கூடிச், சொன்னபொரு ளொன்றன்றி யிரண்டில்லை
யொருபொருளைச் சொல்லுஞ் சொற்கள், பின்னபதமா மதனாற்
சத்தாதி குணப்பொருளாம் பிரம மேகம், மன்னபொரு ளொரு
மையறிந் தகண்ட பரிபூரணமா யாவாய் நீயே.* (உசகூ)

இச்செய்யுளாற் கூறுவது, அஸ்தங் கரம் பாணி யென்ற வொரு பொருட்கே பரியாயச் சொற்போ லன்றி யிப்பெயர்ப்பொருள் வெவ்வேறு பொரு ளிருப்பினு மப்பொருளை யுடைய வடி வொன்றேயென் றென் றந்தன்மையை யென்க:—

(இ—ள்.) இன்ன வகை விதிவிலக்கு குணங்கள் நன்றாய் சேர்ந்து ஒருமித்து எல்லாம் கூடி சொன்ன பொருள் ஒன்று அன்றி இரண்டு இல்லை; (*யாதினு லெனின்?*) ஒரு பொருளை சொல்லும் சொற்கள் பின்னபதம் ஆம் அதனால் = *ஒரு பொருளினது பரியாய பத மன்றாயினும் விதிவிலக்கு முதலிய குணங்களைத் தழீஇய பல பெயர்களு மொரு பொரு ளையே வேறு பெயரிட்டுக் கூறலின்*; சத்தாதி குணப்பொருள் ஆம் பிரமம் ஏகம் = *சச்சிதாநந்தாதி குணங்களையுடைய பொருளான பிரமமானது ஒன்றே யாம்*; மன்ன பொருள் ஒருமை அறிந்து = *அவ்வாறாய பொரு ளொருமையைக் கூறிய சுருதி யுக்தி யநுபவங்களா லறிந்து*; நீயே அக ண்ட பரிபூரணமாய் ஆவாய் *என்றவாறு. வேதஞ் சொன்ன பொரு ளெனக் கூட்டிப் பொருள் கொள்க.* ஈற்றேகார மசை. *பொருளொ ருமை மேற் கூறப்படும்.*
(கநஅ)

*நிர்க்குண வஸ்துவின் குணங்க ளுரைப்பது தாய்மலடியென நிக*
*ரென்றோதே, சற்குணனேவஸ்து நிலையுரையாம லறியவல்ல சதுர*
*ருண்டோ, நற்குண வேதங்க ளிந்தச்சீவன் முத்திபெறப் பிரம*
*ஞானந் தோன்ற, சொற்குணங்கள்பிரமத்தின் குணங்களன்று*
*பிரமமாஞ் சொரூபந் தானே.* (உசஎ)

நூற்றெட்டுக்கத்தில், "இப்படிப்போல நாமரூபங்க ளிரண்டுமின்றி" எனவும், இப்படலத்தில், "குணவிசேடங் கூடாமலிருக்கையாலே" எனவுங் கூறி, சச்சிதானந்த முதற் பல குணங்க ளுண்டென்று கூறி னையமாமே யென்று மாணுக்க னாசங்கையைக் கொண்டு இங்ஙனங் கூறியதற்கு விரோதம் பரிகரித் திதிற் கூறுகின்றார்:—

(இ—ள்) சந்தனனே! நிர்க்குண வஸ்துவின் = "*நாமரூபங்க ளிரண்டு மின்றி*" என்றதனால், *குணவிசேடங் கூடாமலிருக்கையாலே யித்தன்மையான வப்பிரமத்திற்கு*; குணங்கள் உரைப்பது = *கூறிய சச்சிதானந்தாதி குணங்களைச் சுருதி கூறுவது*; தாய் மலடி என நிகர் என்றோதே = *தாயென்னும் பெயருடையாளை மலடியென்ற பெயரா லழைக்கப்படல்* போலென்னற்க; என்னை யெனின்? *மகப் பெற்றவட்குத் தாயென்றழைத்த லுலக வழக் கங்ஙனமாக*, அம்மகப் *பேறில்லாதாளை மலடியென் றழைக்கும் வழக்கைக்கொண் டவளை யங்ஙனங் கூறல் பொருந்தாமை போல*, இச்சச்சிதானந்தாதி குணங்களைக் *கூறுஞ் சுருதிமுன் னிற் குணமெனலா மென்க. யாதினா லங்ஙனங் கூறப்பட, லிங்ஙனங் கூறற்குப் பயன் யாதோ வெனின்?* வஸ்து நிலை உரையாமல் அறிய வல்ல சதுரர் உண்டோ = *மோட்ச சொரூபமான வப்பிரமத்தி னியல்பித் தன்மைத்தென்று குணவாயிலாக வேதங் கூறாது தாமே யந்நிலையை யறிந் தடையும் வித்தக ரிவ்வுலகி லொருவ ருண்டோ?* இல்லை *யென்றபடி*.

இதனால், நற்குண வேதங்கள்; இந்தச் சீவன் = இம்முமூட்சுவான வன்; முத்திபெற = *அந்நிலையை யடைய*; பிரமஞானந் தோன்ற = *தற்கு நிமித்தகாரணமான பிரமத்தை யுணர வுணர்ச்சி யுண்டாக*; சொற் குணங்கள் = *சொல்லிய சச்சிதானந்தாதி குணங்கள*; பிரமத்தின் குணங் கள் அன்று; (*பின்னையோ?*) பிரம மாஞ் சொரூபந்தானே. எ—*று*.

பிரமஞானந் தோன்றலே *யங்ஙனங் குணமாகக் கூறியதற்குப்* பய னும், *அங்ஙனங் குண மென்றது* சொரூபத்தை *யாகலின்* விரோதமு மின்றென்பதாம் (ககூ)

*மோக விருள்கெடக் கோடியருணனென வருகுருவே மொழியக்கேளீ, ரேக பரிபூரணமா மென்சொரூப மென்னுளத்திவிருக்கும் வண்ண, மாக மங்கள் சொன்னபடி யென்னைய கண்டார்த்தமா யறிந்தேனையா, லூசு முமொத்திட வுரைத்தாற் பசுமரத்தி லாணிபோ லுரைக்குநெஞ்சம்.* (உசஅ)

இனி, மனனத்திற்குத் தருக்க வநுமானங்கள் போலன்றி, யுத்தியின்றி யமையா வவயவமாய் நிற்றலி, னிச்சச்சிதாநந்தத்தி னொருமைப்பாட்டிற் சுதனை யிதுமுதுனைந்த கவியானுங் கூறுவா ராகமங்கள் சச்சிதாநந்தங்களை யான்ம சொரூபமாகக் கூறினு மவை மதி யிந்து உவா வென்னைபோலப் பரியாயபத மாகாமையின், றனித்தனியே பொருள் கொண்டு நிற்றலி னவை யொன்றதப் புத்தி கூறுகவென்று வினவுகின்றன்:—

மோக இருள் கெட கோடி அருணன் என வருகுருவே! என்றது, இவ்வாறுன சிரவண, மனன நிதித்தியாசங்களா லசத்தாவரண, மசித்தாவரண, மாநந்தாவரண முதலியவற்றைப் போக்குவா னெழுந்தருளிய திருமேனியாகலி னனந்தங்கோடி தின மணியு மித்திருமேனிக் கொப்பன்றென்றவா றுயிற்றென்க. சண்டுத் திருமேனி முக்காரணங் களையு மென்க.

*சொரூபத்தை மறந்ததளமு மதனை நினைத்தது மம்மனமாகலி* னென்னுளத்தி லிருந்தும் வண்ணம் என்றார்.

*பட்டமரந் தன்னுள் ளமைந்துள்ள வாணியைப் பசுசயற் றமையாற்*

*கவராமையி னொருக்கால் கழலாநிற்கும்; பசுமரத்தாணி யப்பசுமையாலவ்வாணியைக் கவர்ந்து பற்றிநிற்றலி னிம்மனமும் சுருதி யவலியுறுத்தி நிற்றலி னிபற்றுசு லம்மனத்தை நிரிசிபப்படுத்தா வென்பான்* 'பசுமரத்தில் ஆணிபோல் உரைக்கும் நெஞ்சம்' என்றான். ஏனைய பொருள் வெளி. (கசுo)

*சத்தே சித்தாகு மயலெனி லசத்தா மசத்தாற் சாட்சியெங்கே, சித்தே சத்தாகு மயலெனிற் சடமாஞ் சடங்களுக்குத் திதியுமில்லை, யொத்தே தோன்றி யசத்துஞ் சித்து நல்லசுகமாகு மூகத்துக்கோர், விந்தே யன்னிய மாகிற் சடமசத்தாஞ் சுகாநுபவம் விளைந்திடாதே.* (உசகூ)

கூறிய வினாவிற்கு விடை யிதுமுதன் மூன்று கவியானுங் கூறுபவ ரிதிற் சச்சிதாநந்தாதி தன்மையை யுடைய பொரு ளொன்றென்றற் றுத்தி யந்நுவயத்தாலும் வியதிரேகத்தாலு மிதிற் கூறுகின்றார்:—

(இ—ள்.) சத்தே சித்தாதும், அயல் எனின் = சத்திற்குச் சித்து வேறெனக் கூறுவையாயின்; அசத்தாம் = சத்தல்லாத பொரு ளசத்தா யிருத்தலி னிச்சித்து மசத்தாகும்; அசத்தானல் = அசத்தானாற் படு மிழுக் கென்னை யெனின்? சாட்சி எங்கே? மூன்றவத்தையிலு மிருந் தறித லாகிய பிரபஞ்சத்திற்கு சாட்சித்தன்மை யவ்வசத்தான சித்திற்கு எவ்வா றமையும்; இச்சாக்ஷித்துவஞ் சுருதி கூறலி னென்க.

இனி, சித்தே சத்தாதும், அயல் எனின் = சித்துத்தன்மை யல்லா தது சத்தென்பை யாயின்; சடம் ஆம் = சித்தல்லாத பொருள் சடமாகலி னிச்சத்துஞ் சடமாகும்; (சடமாயின் படு மிழுக்கென்னை யெனின்?) சடங்களுக்கு தீதியும் இல்லை = சடமான பொருள்க டாமே விளங்குதல் செய்யா; ஆகலி னிச்சத்தும் விளக்க மில்லாததாக முடியு மென்க.

இங்ஙனமின்றி, ஒந்தே தோன்றிய சத்தும் சித்தும் = சத்தாயிருத் தலே விளங்கியும் விளக்கமான சித்து மிருத்தலி னிவ்விரண்டு மொத்தே தோன்றுகின்றன; (ஆகலின்) சத்தும் சித்தும் நல்ல சுகம் ஆதும் = இவ்விரு தன்மையா யுள்ளதே யானந்த வியல்பினதாகும்; அன்னிய மாகில் = அச்சத்து சித்திற்கு இவ்வாநந்தம் வேறாயின்; சடம் அசத்து ஆம் = கூறியவாறே யிவ்வாநந்தமும் சடமாயு மசத்தாயு மாகிவிடும்; (அங் ஙனமாயின்) சுகாநுபவம் விளைந்திடாதே = இச்சத் சித் சொரூபத்தி னிடத்தில் அகத்தினது அநுபவம் காட்டாதே; காட்டலி னவ்விரண்டிற்கு மிவ்வாநந்தம் வேறன் றென்க.

ஊடிருத்துக்கு ஓர் வித்து = இவ் வத்தி யேனையவை போலாது, அவை கட்கெல்லா மொப்பற்ற முதன்மை யுடைய தென்றவாறு.

ஏகார மமர்ந்தனு ஞன்காவ தசையு, மீற்றது பிரிநிலையு மேனை யவை தேற்றமு மாம். எங்கே யென்ற வெதிர்மறைவினா விடைப்பொரு ளில் வந்தது. சத்துஞ் சித்துமாகிய விவ்விரண்டுமே, என்றதின் றேற்றே காரம் விகாரத்தாற் றொக்கது. இவ்வந்நுவயவியதிரேக வுத்தியை மே லநுபவங் கூறலாலும் விளங்குமென்க. (கசக)

*வியாத சத்து முன்னம் விளங்குவது தன்னலோ வேறொன்று லோ, வாயால்வே றெனி லதுவுமசத்தோ சத்தோ வசத்தேன் மலடிமைந்தன், பேயாகா ரியஞ்செய்யுமோ விப்படி யதையும் பிரித்துச் சொன்ன, லோயாத வவத்தையாங் குதர்க்க விகற் பங்களை விட்டொழிந் திடாயே.* (உ௫ப)

‘அங்ஙன மம்மூன்று மேக மாவானேன்? ஏகமா யிராது தனித் தனி யிருக்கின் படுமிழுக் கென்னையோ? வென்னும் வினவிற்கு வி டை யிதுவென் றிதிற் கூறுகின்றார்:—

(இ—ள்.) வியாத சத்து முன்னம் விளங்குவது தன்றலோ? வேறு ஒன்றலோ? வாயால் வேறு எனில், தானாக விருந்து விளங்குவ தன்று; வேறாகவே யிருந்து ஒன்று விளக்க விளங்குவதென்று சொல்லவா வாற் கூறினும்; அதுவும் = அச்சத்திற்கு வேறாக விருந்து விளங்குஞ் சித்தும்; அசத்தோ சத்தோ = அசத்தாக விருந்து விளங்குகின்றதா? சத்தாக விருந்து விளங்குகின்றதா? அசத்தேல் = அசத்தாக விருந்து விளங்குமாயின்; பேயா = பேய்கோட் பட்டோனே; மலடிமைந்தன் காரியம் செய்யுமோ? செய்யானே; அவனே யில்லாமையாற் சொரூபா சித்தி யாகலின், வினைமுத லில்லாமையால் வினை நிகழா தென்றவாறு. சத்தல்லாத சித்து மசத்தாகலிற் றனக்கே சொரூப மில்லாதிருக்க, தானி ருந்து மற்றொன்றை விளக்கு மெனல் பேய்த்தன்மையே யென்க.

இனி சத்தென, இப்படி அதையும் பிரித்து சொன்னால் = அற் றன்று; அச்சத்துப்போல விச்சித்தும் வேறொரு சத்தாக விருந்தே அச் சத்தை விளக்குமெனின்? ஓயாத அவத்தை ஆம் = என்னை யெனின்? அச்சத்தந்தரம், சொப்பிரகாச மப்பிரகாச மென்ற விரண்டனுள், சொப் பிரகாசமாயி னிவ்விலக்கண முன்னைய சத்திற்கு மேற்றல் வேண்டு மங் ஙன மேற்புழி, மற்றொரு சத்தினா லச்சத்து விளங்கு மெனல் பயனற் றது தானே, சொப்பிரகாச மாகலி னென்க அன்றியு மற்றொரு சத்து வேதாந்திகட் கங்கீகார மன்றென்க.

இனி, அற்றன்று. முன்சத்து சடமாதலால் வேறொரு சித்து சத்தா யிருந்தே யிச்சத்தை விளக்கல் வேண்டு மெனின்? முன்சத்துப்போல மற்றொரு சத்துந் தானே விளங்காமையி னதை விளக்க மற்றொரு சித்துஞ் சத்தா யிருந்தே யிச்சத்தை விளக்கல் வேண்டும். கூறிய குற்ற மச்சத்தி னிடத்து முண்டாதலா லதை விளக்க மற்றொரு சத்து வேண்டு நின்று, ஒன்று முடிவு பெறாமையி னவத்தை யுண்டா மென்க, இவ்வுத்தியை

வேறோ ராற்றாலும் விகற்பித்துக் கூறுவர். அதனை, தத்துவார்த்ததீபத்திற் காண்க. இங்ஙனங் கூறுஞ் சுருதிக்கொத்த யுத்திக்கு மொவ்வாமையாற் குதர்க்கவிகற்ப மாயிற்றென்க.

இனி, இதனானே, முன்னரும், 'வாயால் வேறெனி' லென்றாரென்க. குதர்க்கமும் விகற்பத்தோ டொருங்கு நிற்பதாகலின், 'குதர்க்கவிகற்ப' மென்றார். அவ்விகற்பம், சொல்பம் விதண்டைக ளாயவகை.

இனி, 'அசத்தென விப்படி யதையும் பிரித்துச்சொன்னு லோயாதவவத்தை' என்று, மீட்டும் பாடங்கொண்டு 'அதையு மிப்படி யசத்தெனப்பிரித்துச் சொல்லுவை யாயின் முடிவு பெறா தனுவஸ்தாதோ டபலமாக முடியுமே யிதென்ன விபரீதம்' என வுரையுங் கொண்டார். இவ்வுரைப் பாடங்கட் களவைநூல்வழியிற் பொருளுக்கு மேற்கோள் சாதித்தாருமில்லை. இவரே தம்மை யாற்றின் வழியாக வளவைநூற் கற்றவரென்று மீக்கூறிக் கொள்கின்றனர். தம்மவர் வியக்கப்போலும் இவர், 'குருடருக்குக் குருடர் நெறிகூறு' மென்னு மிலக்கணத்திற் கிலக்கிய மாவர் போலும். இதுவாதல், கூறியதே யன்றி, ஆசிரியர் வினுக்கூற்றில், "அசத்தோ சத்தோ" என்றதையு முணராமையாற் குருடரென்றுமென்க.

இனித் தானு மிதென்ன விபரீத மென்றார், தன் விபரீதத்தை வினக்கப்போலும். இதனு லுலகும், வருஞ்சொல் வாயி லென்றது. இனி, இவ்வுத்தி, "சத்தே சித்தாகு மயலெனி லசத்தா ..........நல்லசுக மாகுமூகத்தோர் வித்தே" என்பதனுற் பெறுதோ வெனின்? அது நிலைபெறற்பொருட்டே வேறோராற்று லிவ்வுத்தியைக் கூறினு ரென்க. அவ்வாறு, சத்தே சித்தாக விருந்து விளங்கிற் றென்றும், சித்தே சத்தாக விருக்கின்றதென்றும் முன் கூறியதற்கு மாறாக, சத்துத் தானே விளங்காது வேறொன்றால் விளங்கிப் படுமிழுக் கின்னவென்று கூறியதே யென்க. ஓகாரங்கள் வினு; ஈற்றேகார மசை. (௧௪௨)

சுருதியுத்தி யொத்ததுபோ லநுபவமுங் கேள் சுழுத்திசுக வாநந்த, மிருதிவடி வாதலி லவ்வாநந்தமே யறிவாம் வேறங் கில்லை
கருதுபிர ளயஞ்சுழுத்தி யிரண்டிலு நீயிருந் திருளைக் காண்கின்றாயே, இருதயத் திப்படி நோக்கி யேகபரி பூரணமா யிருந்திடாயே. (உ௫௧)

முன், "புகன்ற சச்சிதாநந்தப்பதங்க டனித்தனியே பொருள் வேறு லுகன்ற..........வறிவிப்பீரே" என்ற (கஙச)வது செய்யு ளிற் கடாவிய வினுவிற்குப், பின்னைந்து கவிகளாற் சுருதி கூறியதை யெடுத்துக்கூறி மே லதற்குத்தி யிதுகாறுங் கூறி, யிதி லநுபவமுங் கூறி, யிங்ஙன மூன்று மொத்தலி னிவை முதலிய வேத்துணை நாமங்க ளுஞ் சொரூப மொன்றையே வெவ்வேறு தன்மைப்படுத்திக் கூறலி னவற்றி னேகத்துவமுங் கூறுகின்றார்:—.

(இ—ள்.) சுருதி யுத்தி ஒத்தது போல் = சச்சிதாநந்தாதிகளி னே கத்துவத்திற்குக் கூறிய வாற்றாற் சுருதியு மதற்கிசையுமான தர்க்கமான யுத்தியு மொத்து நிற்பது போல; அநுபவமும் கேள் சுழுத்தி சுக ஆநந் தம் = நமது சுழுத்திகாலத்துள்ள சுகரூபமான வியல்பைத் தரு மாநந்தா நுபவமானது; மிருதி வடிவு ஆதலில் = வெளியில் வாசனையாக வரும் போது இவ்வாசனைக்குக் காரணமான ஸ்மிருதிவடிவாகவே சுழுத்தியி லிரு த்தலின்; அவ் வாநந்தமே அறிவாம் = அவ்வாநந்த வடிவாயுள்ளதே யிந்த ஸ்மிருதி ரூபமான வறிவே யாகும்; (யாதினு லெனின்?) வேறு அந்த இல்லை = அச்சுழுத்தியிலறிவு வேறாயு மாநந்தம் வேறாயு மிருந் தவ்வாநந் த்தை யநுபவியாமையாலும், வேறா யிருந்தே நீரின் மூழ்கினோன் தன் வெப்ப நீங்கி யின்ப மடைந்தது போல வெனின்? வெப்புற்றோ னங்கீரா லவ் வெப்பொழிப்பொன்றே யன்றி யாநந்த மிவனிடத் துள்ளதாகலி னுக்காட் டிண்டேலா வென்க. இதனை யான்மாநந்தங் கூறுமிடத்துக் காண்க வென்க.

சுழுத்தி = இங்ஙனமாய சுழுத்தியிலும்; பிரளயம் = ஊழிக்காலத் தும்; இரண்டிலும் = ஆகிய இவ்விரு காலத்தும்; நீ இருந்து = நீ கெடா திருந்து; இருளைக் காண்கின்றயே = ஆனந்தவடிவா யிருத்தல் போலவே யக்காலங்களி லுள்ள விருள்களை யிருந்தே காண்கின்றை யல்லவா; கரு து = இவ்வநுபவத்தை யநுமானித்துப் பார்; இது சுயார்த்தாநுமானம் என்க.

(பார்த்து), இருதயத்து இப்படி நோக்கி = இவ்வநுமானத்தா லுனது அகத்து இவ்வாறே யச்சச்சிதாநந்தங்களி னொருமையைத் தரி சித்து; ஏகபரிபூரணமாய் இருந்திடாயே, அச்சச்சிதாநந்தமே ஏகமாயும் பரிபூரணமாயு மிருத்தலா லென்றவாறு. ஏனைய நாமங்களின் பொருள் களையு மிவ்வாறே காண்க வென்ப தினம்பற்றிக் கொள்க வென்க. ஏகார மிரண்டனுள் முன்னது தேற்றம், பின்ன தசை. தேற்றேகாரத்தை சித்திற்றுங் கூட்டப்பட்டது. (கசுக)

பலகலையு முணர்ந்தகுரு மொழிந்தபடி யிவனு மனுபவம் விடா
மற், பலமலரின் மதுப்போலச் சச்சிதா நந்த மொன்றும் பரமா
ர்த்தத்தைப், பலபொழு துங்கண் மூடிச் சமாதியிருந்தான்
விழித்துப் பார்த்தபோது, பலவடி வாஞ்சராசர சித்திரங்க ளெ
லாந் தோன்றுமொரு படமானனே. (உ௫உ)

மூன் றத்துவத்தை விளக்குமுகத்தா லுண்டாகிய வான்மாநுபவத்
தை மீட்டு மிவ்வான்மா பிரமானுதீத னென்கை முதலியவாகக் கூறு
மனனத்திற் கங்கமான யுத்தி தருக்கங்களுக் கொத்தவாறு ஆராய்ச்சி
செய்து, அவை யநுபவத்திற் கொத்திருத்தலை சுவாநுபூதியா லுணர்
ந்து சேகப்பிராந்தி நீங்கிச் சசசாநுபூதி சித்திபெற்ற னென்றிதிற்
கூறுகின்றார்:—

(இ—ள்,) பல கலை = ஆறங்கத்தோடு நியாயம், மீமாம்ஸை. ஸ்மிருதி, புராண மென்பன. முன், 'சுருதியுணர்ந்ததை,' "இலக்க மாயிரஞ் சுருதியால்" என்றவிடத் துணர்க. இதனு லிச்சுருதியை யிக்கலைகளோடு முணர்ந்தவ ரென்றுயிற் றென்க.

இங்ஙன முணர்தலை, 'அறிவுக்கு மறிவுசெய்யு மறிவுவே றுண் டென் றெண்ணும்' என்பதனுலும், 'சத்தென விப்படி யதையும் பிரித் துச் சொன்னு லோயாத வவத்தையாங் குதர்க்க விகற்பங்களை விட்டொ ழிந்திடாயே' என்றதனுலும், நான்கு பிரமாண மங்கீகரித்தமையாலு மிவர் தருக்க முணர்ந்தவ ரென்பதும், நியாய முணர்ந்தவ ரென்பதுங், கருமவிசாரம் செய்தமையால் பூர்வமீமாம்ஸை யுணர்ந்தவ ரென்பதும், சுருதியே மேற் சந்நியாச முதலியவற்றைக் கூறலா லிவற்றைக் கூறுஞ் ஸ்மிருதி யுணர் ந்தோ ரென்பதும், சூதசம்மிதை முதலியவு முணர்ந்தோ ரென்பதும், இந்நூலு ளுத்தரமீமாஞ்சையி னுணர்ச்சிவலியையு யன்றி, முணர்க வென்க. இவ்வதிகாரிக்குப் பயன்படாத விவற்றின் விரிவு நுட் பங்களையு மேனைய வங்க முதலியவற்றையு மொழித்தன ரென்க. இது, ஏற்புழிக்கோட லென்னு முத்திக்கினம்.

இனி, 'பல கலை' யென்றதை தமிழ்வழக்கின்படி, ஒன்றல்லன பல்வாகலின், வடகலை தென்கலை யெனக் கொண்டு, இவ்விரண்டிலும் வல்லுந ரென்பதை யேற்கினு மமையு மென்க. இக்கூற்றைக் கூறிய வடகலைப்பொருளை யித்தமிழ்ச்செய்யுளி லிரண்டு பாடையின் வியாகரணத் திற் கொக்க வமைத்திருத்தலாலு மென்க. இவற்றை யுவமானத்தாலுங் கொள்க.

'பல மலரிலுள்ள மதுக்களை மதுகர மொன்றாகக் கூட்டி வைப்பது போல' என்றதனு லென்க. இதனுன் பிரஸ்தானத்திரயத்தின்படி யப்பொருளைச் 'சுருங்கச்சொல்லல்' முதலிய வழக்கு ளமைத்து தவாடி புனைந்த தலைமையோ ராயினு ரென்க. இதனுல், குரு மொழிந்தபடிச் சச்சிதாநந்த மோன்றம் பரமார்த்தத்தை யிவனு மநுபவம் விடாமல் பல பொழுதுங் கண்மூடிச் சமாதி யிருந்தான்; 'பரமார்த்தத்தை' என்ற விரண்டனுருபு ஏழனுருபுப்பொருண் மயக்கம். ஆகலின், குரு மொழிந்தபடி பரமார்த்தத்தில் கண் மூடிச் சமாதி யிருந்தா னென முடிக்க. இருந்து விழித்துப் பார்த்தபோதென மேன் முடிக்க. ஏனைய பொருள் வெளி.

இங்ஙனஞ் சமாதி, யில்லர்தா ருணர்ந்த கலையுணர்ச்சி 'பளிதஞ் சுமந்த கழுதை' போலு மென்க. இதனை- விசார சாகரம், பாணி, வாசிட்ட முதலியவற்றுள்ளுங் காண்க வென்க. பல மலரின் மது தானே யொன்றாகாமையால் வினைமுத லவாய்நிலையான் வந்தது. ஒன்றுதலை யுவமானத்திலுங் கூட்டுக. இங்ஙனங் கற்றே வீடுணர வேண்டு மென்பதற்கு உ—ம், "கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர், மற்றீண்டுவாரா நெறி," "கற்றல் கேட்ட லுடையார் பெரியார்", கற்றவர் தொழுதேத்துஞ் சிற்கரையுரிற் பாண்டிக் கொடுமுடி" யெனவும் வருவன. இது பற்றியே யிவரும், 'இந்த ஞானந்தான் வருவதெப்படி யெனிவிடை விடா விசாரத்தா' லென்றார் என்க.

இங்ஙனமே, யியனூலாரும், "எழுத்தறியத் தீருமிழிதகைமை தீர்ந்தான், மொழித்திறத்தின் முட்டறுப்பானாது, மொழித்திறத்தின், முட்டறுத்த நல்லோனே முதனூற் பொருளுணர்ந்து, கட்டறுத்து வீடு பெறுமால்" என்றன ரென்க. "கல்லாநெஞ்சி, னில்லா னீசன், சொல்லா தாரை, யல்லோ நாமே" என விதற்கெதிர்மறையுங் கூறினர் பாலறு வாயரு மென்க.

தனக்கு விதிர்த்த மின்றி, ஒன்றாயும், பரமார்த்தமாயும் இவனுனமையால், நானுவாயும் பரமார்த்தமாயு முள்ள செகத்து, படத்திற் சித்திரம் போன்றதவி னிவன் படம் போன்றதயின னென்க. படம் போன்றனை படமென்ற துவமையுருவகவாத பெயர். (கசச)

இதயமொத்த சற்குருவே நமக்கிதுவே விநோத மன்றி யினிவேறுண்டோ, வதையுரைத்து மந்தைநினைத்து மிருப்ப தன்றோ ஞானிகளுக் கானநீதி, முதலுரைத்த துரியாதீதமு மேழாம் பூமியு

முக்கியமா மென்ற, பதமுமதின் வகையுமெனக் கெளிதாகத்
தெளியும் வண்ணம் பணித்திடீரே. (உ௬௩)

இவ்வாறு சகசாநுபவத்தை யடைந்த மாணக்க னிம்மநநஞ் சமாதி யினுஞ் சிறப்புடைத்தா யிருத்தலின் மீட்டு மிவ்வான்மாநுபவத்தையே வினவுவா னச்சத்தா லாசிரியரை மகிழ்விக்க மேற்கோட்காட்டி யிது காறுஞ் செய்த மநநத்தில் வாதுசமய நோக்கிக் குறிப்பாக வாசிரியர் கூறியதை விளக்கிக்கோள்வா னெடுத்து வினவுகின்றன் :—

(இ-ள்) இத்யம் ஒத்த சற்குருவே! இதய மொத்தல்=தான் வினவும் வினக்களுக்கெல்லாம் உவர்ப்பின்றி விடை யளிக்கத் தன்னிடத்தே யன்பு வைத்தல். நமக்கு இதுவே விநோத மன்றி இனி வேறு உண்டோ; (யாதினு லென்பீராயின்?) அதை உரைத்தும் அதை நினைத்தும் இருப்பது அன்றே ஞானிகளுக்கு ஆன நீதி; இவ்விரண்டிலும், "மநநத்தாற் கழிவதே யுயர்வாணு" ளென்றதனு 'லினி வேறுண்டோ' என்று னென்க.

இனி, விநோத மென்றமையான், ஞானிக்கு எனைய வாற்றாற் பிராரத்தங் கழிதலினு மிது வருந்துத லின்றி கழியு மென்க. 'இது' வென்று சுட்டினமையா னிம்மநநத்தைக் கொள்ளப்படும். செய்துவருவ தஃதாகலி னென்க. வினவில் வந்த வேகார மெதிர்மறை.

'நீதி' என்றமையாற் றன் கற்பித்துக் கூறியதன்றி, "[illegible]" எனவும், [illegible] என்ற சுருதி ஸ்மிருதிகளாற் பெற்றானென் றுயிற்றென்க. ஆகலின் 'யான் சில வினவுவ' னென்ப தவாய் நிலை. அவை, முதல் உரைத்த துரியாதீதமும் எழாம் பூமியும் முக்கியம் ஆம் என்ற பதமும் அதின் வகையும் எனக்கு எளிதாக தெளியும் வண்ணம் பணித்திடீர் எ-று. 'குருவே' என்ற வேகாரம் விளி 'இதுவே' என்ற வேகாரம் தேற்றம். ஈற்றேகார மசை.

முதலுரைத்தலாவது, பாயிரத்துள், "எழ்நிலங்களினு மிக்க வெழுநில மவற்றின் மேலா னன்னில" மென்றதனுனும், இப்படலம், (கஉ) வது செய்யுளில், "எவனுகினு மிந்தத் துரியாதீதத்தி லேழாம்பூமியி லிருந்தானேல்" என்றதனுனும் கூறியன வென்க.

இனி, 'இதயமொத்த' வென்றற்கு எத்துணையானும் வினவுகினும் அவற்றிற் கெல்லாம் முகவமைதியோடும், விளக்கத்தோடும்; புன்னகை

யோடுங்கூடி, மேல் நோக்கி யாராய்தல், சிறிதுகாலந் தாழ்ந்து நிற்றல், குற்றங் கூறிப் பின் னதனைத் திருத்திக்கொள்ளல், மறந்து கூறுதல், மாணுக்கன் கருத்தறியா தொழிதல், பொருளல்லாப் பொருளைக் கூறுதல் முதலிய குற்றங்க ளின்றி, நியாயத்தோடு மூகத்தோடும் பொருந்துமாற் றால் என்மனங் கொளக் கூற லெனினு மமையு மென்க.

இனி, 'உரைத்து நினைத்து' மென்றமையால், சாதுக்களோடு கூடி னுரைத்தும், தனித்திருப்பி னிப்பேறப் பேற்றை நினைத்துக் களித்து மெனக் கொள்க வென்க. (கசங)

வினவுமிடத் தஞ்ஞான பூமிக ளேழ் ஞானபூமிகளேழென்பா ரினியவற்று ளஞ்ஞான பூமிக ளேழையு முந்தியியம்பக் கேளாய் தனித்து சாக்கிரஞ் சாக்கிரமகா சாக்கிரஞ் சாக்கிரத்தைச் சார் ந்த, கனவுகளுக் கனவுசாக்கிரஞ் சுழுத்தியென் றேழுபேர் கணி த்தார் மேலோர். (உருச)

அஞ்ஞானபூமிகளின் றேகையுங் கிடக்கைமுறையாற் பெயரு மிதிற் கூறுகின்றார் :—

என்னை ? இங்ஙனங் கூறின் விடைவழுவாம். பிறவெனின் ? அஞ்ஞான்பூமியு மோராற்ற லபவாதயுந்தி யாகலி னவ்வபவாத மத்தி யாரோப மன்றி யமையாமையி னிவ்வஞ்ஞானபூமியு முடன் கூறப்பட் டன. ஆதலின், 'மிகைபடக் கூறல்' 'மாறுகொளக்கூறல்' முதலிய விடைவழூஉ வின் றென்க. இக்கூற்றைக் கூறும் பத்துக் கவிகளானு முணர்க வென்க.

(இ-ள்) வினவும் இடத்து என்றது, நீ வினவிய ஞானபூமியைப் பற்றி யாராய்ச்சி செய்யுமிடத்துத், தத்துவங்களைக கழிக்குஞ் சாதனமுஞ், சொரூபமும், பயனுமாக நிற்றலி னக்கழிவிற்குச் செயப்படுபொருளாய செய்பொருள் வேண்டி நிற்றலின், அஞ்ஞான பூமிகள் ஏழ்=அச்செயப் படுபொருளாகிய அஞ்ஞானபூமிகள் ஏழெனவும், ஞானபூமிகள் ஏழ் என் பார்=அவற்றைக் கழிக்கத் தக்கதாகிய ஞான்பூமிக ளேழென்றுங் கூறு வர் வசிட்டர் முதலானோ ரென்க.

இனி, அவற்றுள் அஞ்ஞானபூமிகள் ஏழையும் முந்தி இயம்பக்கே ளாய்; இது கேட்டா லன்றி மேல் நியதி கூடாமையி னென்க. ஏனைய, மேற் சொரூபங் கூறுமிடத் துணரப்படு மென்க. கணித்தலாவது, கருதுத லல்லது எண்ணிவைத்த லென்றவாறு. மேலோராவார், முன் கூறினோர். இதனால், மேலோர் என்பா ரென முடியும். (கசக)

மூந்த வகண்டத் தெழுமோ ரறிவுமாத்திர மதுதான் முதல்வித் தாகு, மிந்த வறிவிற் பண்டில்லா வகந்தைமுளை போலாமிது நனவாம், வந்து வந்து பிறவிதொறு மகமமதை வளருமது மகா நனவா, நந்து மகங் கொடுநனவின் மனோராச்சியஞ் செயலே நனுக்கனவே. (உ௫௫)

இது முதல விரண்டு கவிகளானு மவ்வேழு பூமியி னிலக்கணங் கூறுவோ ரீதி னுன்கிற் கிலக்கண முதாரணத்தோடுங் கூறுகின்றார்:—

(இ—ள்.) மூந்த அகண்டத்து எழும் ஓர் அறிவு மாத்திரம் அது தான் முதல் வித்து ஆகும் = என்னை யிது முதல்வித்து ஆனதெனின்? இச்சங்கற்பாதி யவத்தைகள் டோன்றற்குமுன் னிப்பிரிவுபா டின்றிய வக ண்ட பிரமசொரூபத்தினின்று முண்டாகின்ற விகற்ப மின்றிய வறி வாய்த் தானுண்டாய் நிற்றலா லென்க. 'மூந்த' வென்பதை யறிவிற்குங் கூட்டுக.

இனி, இங்ஙன மன்றி, 'அகண்ட' மென்பதை 'மாயாசபளித, சைதன்னிய' மென்பார் தத்துவார்த்ததீபக்காரர். உபக்கிரமத்தில் "இப்படிப் போல நாமரூபங்க ளிரண்டு மின்றி, யொப்பமா யிரண்டற் றொன்று யுணர்வொளி நிறைவாய்நிற்கு, மப்பிரத்திற்றோன்று மைம்பூத விகாரமெல்லாம்" என நேரே பிரமத்தி லுற்பத்தி கூறி யிருத்தலாலும், "சித்திலே நின்றோரறிவு பேரின்றிச் செறிமலமின்றி மேல்வந்து வத்தி யாநிற்கும்" என்று முன்னூலான வாசிட்டத்தில் கூறியிருத்தலாலும், இது சார்புநூ லாகலின், திரிபு வேறுடையது மிது வாகாமையானு மவ் வுரை போலி யென்க.

அன்றியும், இது கிரமசிருட்டி யன்றி சிருட்டி திருட்டி வாத மாக லினுனு மது மாயையிலிருந் துண்டாயிற்றென்பது கருத்தன்று. இவ் வாதத்தை, "தோன்றிடும் பொருள்களெல்லாந் தோன்றுவ............... தோன்றிடு நினைவிலென்றே தோன்றிடு நினைவுதானும், தோன்றிடுஞ் சொரூபத்தென்றே தோன்றிடும் பொருள்களெல்லாஞ், சொரூபமே யென்று கண்டான்" எனத் துறவுநூலுங் கூறிற்றென்க.

இனி, இந்த அறிவில் பண்டு இல்லா அகந்தை முளை போல் ஆம் இது நனு ஆம், என்னை? இது நனுவாயது எனின்? இதில் வித்து சாக்கிரமாகிய முதல்வித்தில், இல்லாத நானென்னும் பாவனையானது மாத்திரன் வித்திற்கு முளைபோல வுண்டாகலி னென்க. இதனை முளை

போல வென்றமையான் முன்னறிவைப் பிரபஞ்சத்திற்கு வித்தெனக் கொள்க. இதனை விதையை தனிவித்தென விருபொருள் பட பெயரிட்டா ரான்றே ரென்க. இவை யிங்ஙன மாகவே, மேல் வருபவை-துளிர், கொடி, இலை, பூ, காய், பழ முதலியவாகவுங் கொள்க வென்க.

பிறவி தோறும் வந்து வந்து அகம் மமதை வளரும் அது மகா நனு ஆம்:— இது மகா நனவாயது, இடையே யுண்டாகிய விவ்வகந்தை காரணமாக ஒவ்வொரு பிறவியிலுந் தேகேந்திரியாதிகளை யானென்று மெனதென்றும், புறப்பொருள்களை யெனதென்று மபிமானித் தவ் வறிவு தளிரை யுடைய கோடி போல வளர்ந்து வரலி னென்க.

இனி, நந்தம் அகம் கோடு = வளராநின்ற வவ்வகங்காரங் காரணமாக; நனவில் = இச்சாக்கிரத்தின்கண்ணே; மனோராச்சியம் செயலே = மனத்தால் வேண்டிய வாறு நினைத்தாளுவதே; நனுக்கனுவாம் = சாக்கிரத்தைச் சார்ந்த சொப்பன மென்றாகு மென்றவாறு. ஈற்றேகாரமசை.

'கொடு' என்பதை இரண்டாவதின் உருபும் பொருளு முடன்றொக்க தொகைச்சொற்குப் பயனை குறிப்புவினைவினையெச்சமாகக் கோடலினும், கருவிப்பொருளில் வந்த மூன்றாவதினுருபாகக் கோடலமைவுடைத்தென்க. (கசஎ)

உண்டுறங்கி மனோராச்சியஞ் செயலே சொப்பன மெனும்பே ருடையதாகும், பண்டுகணுக் கண்டுமறந்ததை மீண்டு நினைப்ப தே சொற்பன நனுவா, மண்டுமிருண் மூடுவது சுழுத்தியாகு மஞ்ஞான வகைகள் சொன்னோம், விண்டு நிறை முத்திதரு ஞானபூமிக ளேழும் விளம்பக் கேளாய். (உருசு)

ஏனைய மூன்று பூமிகளி னிலக்கணங்களும், ஞானபூமிக்குத் தோற்றுவாயு மிதிற் கூறுகின்றார்:—

(இ-ள்.) உண்டு உறங்கி மனோராச்சியம் செயல் சொப்பனம் எனும் பெயர் உடையது ஆகும். உறங்கற் குண்ணலை சிறப்புடை யாக்கியது, மிகப்பசித்தோனுங் கவலையுடையோனு முறங்கினுங் கனுக் கண்ணினு மவ்வுறக்கிற் காணும் பசித்தோன் புசிப்பும், கவலையுடையோன் றனிக்கமுஞ் சாக்கிரத்தின் வாசனையே பெரும்பாலு மன்றி, இவ்வுண் டோ னுறங்கு முறக்க மியல்பாய்க் கனுக் காட்டல்போ லாகாமையிற் பிறிதோர்டியைபுநீக்கிய விசேடணமா மென்க. 'உறங்கி' என்னும்

வினை யெச்சம், 'உறங்க' வென்னும் நிகழ்காலவினையெச்சத்தின் றிரி பென்க. ஆகலின், உறங்க வதுகாரணமாக வதனிடத்தே மனோராச்சி யஞ் செய லெப்பொருள் கொள்க.

பண்டு கனு கண்டு மறந்ததை மீண்டு நினைப்பதே சொற்பன நனு ஆம்: "பன்றி நனுக் கண்டு மறந்தது சொற்பன நனு" எனப் பாடங் கொள்ளில், மூன்றெனுகை கூறு மிடத்து கனவுசாக்கிர மென்றமை யாலும், ஈண்டு மதற்கேற்ப 'சொற்பனநனு வாம்' என்றமையாலும், நனவு சொப்பன மாகாமையாலும், அது பாடப்பிறழ் வென்க.

இனி, மண்டும் இருள் மூடுவது சுழுத்தி ஆதம்—கூறிய சாக்கிர சொப்பனங்க ளின்றித் திண்ணிய விருள்போன்ற வவித்தை மூடுவது அகந்தையோடுங் கூடிய சீவனை சுழுத்தியென்னும் பூமி யாகும்; இருள்-என்றமையால் சாக்கிர சொப்பன மில்லாமை பெறப்பட்டது இருள் போன்றதை யிருளென்ற துவமையாகு பெயர். அவித்தையை யன்றி யாண்டு வேறிரு ளின்மை யினென்க. அந்நானவகைகள் சொன்னேம்; வகைக ளென்றமையா லேழென்பது செவ்வென்னுற் பெறப்பட்டது.

விண்டு நிறை முத்தி தரும் ஞானபூமிகள் ஏழையும் விளம்பக் கே னாய்: ஞானபூமிக்கு விள்ளலை அடையாக்கியது, இஞ்ஞானபூமி யன்றி யவ்வஞ்ஞானபூமிகளைக் கெடுக்கு முபாயம் வேறின்மையா லென்க. ஆகலி னஞ்ஞானபூமி விள்ள" இவ்வஞ்ஞானபூமி விண்டு' எனக்கொண்டு, இது விண்ட காரணத்தா னிறை முத்தியைத் தாந்தகனவாயின வென்ற வாறு. இவை கெடுத்தல் கைலாசாதி பதமுத்தி யன்மையின் நிறைமுத்தி யென்றா ரென்க. ஏகாரங்கள் பிரிநிலை யென்க. (கசஅ)

புலவர்புகழ் முதற்பூமி சுபேட்சை விசாரணை யிரண்டாம்பூமி யாகு, நலதனுமா னசிமூன்றும் பூமிஸத் துவாபத்தி நாலாம் பூமி சொலுமசஞ் சத்திப்பேரும் பதார்த்தா பாவனைப்பேருந் துரியப் பேரு, மலினமறு மகனே யைந்தாறேழு பூமிகளா வகுத்தார் மேலோர். (உருள)

ஞானபூமிக ளேழென்ற வவற்றின் பெயர் கிடக்கை முறையா லிதிற் கூறுகின்றார் :—

இ—ள்.) அமைந்த வாறே யமையும் பெயருங் காண்க வென்க. புலவ ராவார் : சனகாதி நால்வரும், அவர்பாற் கேட்ட நாரதர் முதலா னோரு மென்க மேலோ ராவார் : வியாதனுதியோர் எழுந்தருளிய

சக்கிரவர்த்தியின் பேரவையில் இராமபிரானைப் பார்த்து அயனோர் முனிவரான வசிட்ட மஹாமுனி கூறிய வசிட்டோபாக்கியானத்திலும் பத்திப்பிரகரணத்திலு முபசாந்தப்பிரகரணத்திலு மிவற்றை வகுத்ததை யென்க. புலவர் புகழும்படியாக மேலோர் வகுத்தாரெனா முடிப்பினு மமையு மென்க. சொலும் அசம் சத்திப்பேறும் பதார்த்தா பாவனைப்பேறும் துரியப்பேறும். நிரையே, ஐந்து ஆறு ஏழு பூமிகள் என்பன நிரைநிரைப் பொருள். 'மலினமறு மகனே மேலோர் வகுத்தார்' என முடிக்க. (கசுக)

துர்ச்சங்க நிவர்த்திவந்து சிவஞானம் விரும்புவது சுபேட்சை யாகு, நற்சங்க மொழிவினவி ஞானநூல் பழகல் விசாரணையா நம்பி, முற்சங்க வீடணைகள் விடாறனுமா னசியிந்த மூன்றி னானுஞ், சற்சங்க மனதிலுண்மை யறிவுறுத்தல் சத்துவா பத்திதானே. (உ௬அ) (௩)

தத்துவத்தின் மனமுறைத்து மித்தையெலா மறுத்த லசஞ் சத்தியாகு, மத்துவிதா நந்தம்வருந் திரிபுடிபோம் பதார்த்தா பாவனை யதாகும், வத்துநிலை யிருந்தபடி யிருந்தமௌனஞ் சுபாவந் துரிய மாகு, மித்துரிய பூமியை முன் றுரியாதீதப் பதமென் றதுவுங் கேளாய். (உ௬௯) (உ)

முன்வகையாகக் கூறிய ஞானபூமிகளி னிலக்கணங்களை யிவ்விரண்டு கவியினானும் விரித்துக்கூறி மே லித்துரியபூமி துரியாதீதமாகக் கூறந்தத் தோற்றுவாயுங் கூறுகின்றார்:—

'உண்மையறி' வென்பதற் கேற்ப, 'தத்துவத்தின்' என்றார்.

(இ—ள்.) வ ○ஃ ஸ○ஃ = என்பது, துர்ச்சங்கம், துர்ச்சங்கமென்ற விரண்டு முடி வெய்தும். இவற்றுள், துர்ச்சங்க மெனப் பாடங் கொள்ளுத லாசிரியரிட்ட வேதுவாக.

துர்ச்சங்கமாவது, பாஷாண்டி, உலகாயுதன் முதல் சைவசித்தாந்தி யீறானோ ரென்க. இதனைப் பஞ்சதசியிலும், "சமயவாதி கடத்தந் மதங்களே யமைவதாக வறற்றி மலைந்தனர்." என்ற திருவாசகத்திலுங் காண்க வென்க. இது சமயாதீதமத மாகலின், 'மிண்டிய மாயாவாத மென்னுஞ் சண்டமாருதஞ் சுழித்தடித் தார்ப்ப' என்பது திருவன் றென விடுக்க

நிவர்த்தியாவது, புண்ணிய பேற்றிற்கேற்ப காலவசத்தா லதுவதனி னின்று நீங்குதல் இதுவரவே, காரணந் தூய்மை யாதலின், சிவஞா னத்தை விரும்புவதாயிற்று. சிவஞானம் இருபெயரொட்டுப் பண்புத் தொகை. அன்றி, சிவத்தை யறியு ஞானத்தை விரும்புவது எனினு மமையு மென்க. 'சிவத்தை' என்பது சிவத்தினது உண்மையை யென்க. 'ஞானத்தை' என்பது அவ்வுண்மையை யாராயு மறி வென்றவாறு. இதனால், சுபேச்சை என்னும் பெயர்த்தாயிற்று. சுபம் = மங்களகரம். இதனான், 'சிவ' மென்பது 'சுப' மாயிற்றென்க. இவன் 'நித்தியா னித்திய வஸ்து விவேக' முடையவனாகலி னிவ்வாறு விரும்பினா னென்க. இவை யுணராதார் வேறு வேறாகப் பொரு ளுரைப்ப. இதனை, "ஞூயாடிதாவெ ஹஜிஞூாஸா" என்றதனானு முணர்க.
ஞ

சத்சங்கம் = பிர்ம்ம நிஷ்டர் குழூஉ. மொழி வினவல், அவர் சொற் கேட்டு நடத்தல். ஞானநூல் = பிரஸ்தானத்திரயம் பழகலா வது, சடுவித லிங்கத்தோடு மாராய்ச்சி செய்தல். நம்பி = இவ்விசா ரணையிற் றேர்ந்த பொருளை நம்பி. மூற்சங்கமாவது = அனாதியாய் வந்த அகப்பற்று புறப்பற்று. இவையே யிச்சைக்கு விடய மாகலி னிவை யிடணை யாயிற்று விடல் = இவை பற்றற வொழிதல். இவை யவ்வா றொழிந்தாலன்றி மனஞ் சூக்குமத்தை யடையாது. 'சூக்குமத்தை யடை தல்,' சுத்தசத்துவமாய் நிற்றல். இங்ஙனஞ் சற்சங்கத்திற்குரிய மன மாய் நிற்றலி னிது சற்சங்கமன மாயிற்று உண்மையறிவு = தன தெதார்த்த சொரூபம். இதனை, 'தஞ்சமாங் குருவுஞ் சொன்ன' என்ற செய்யுளிற் கூறிய வறிவுநிலையிற் காண்க. இதுவு யோரவத்தை யென்க.

அத்துவிதானந்தம் வருதலும், திரிபுடி போதலும், "அநுபவானந்த வெள்ளத் தழுந்தியே யகண்டமாகித் தநுகரணங்களாகி சகலமு மிறந்து சித்தா" யென்றதனாலும், "வஸ்து நிலை யிருந்தபடி யிருந்த மௌனத் தைத, நனவினிற் சுழுத்தியாகி நன்மகன் சுபாவ மானான்" என்ற விடத்தி லும் விளங்கும். ஈண்டுக் கூறிய வத்துவிதானந்த மகத்தில் விருத்தி யிறந்து தோன்று மாநந்தம். இரண்டிடத்துந் 'திரிசியந் தோற்றற வொழிந்தவிடத் தாநந்த முண்டாவதே யத்துவிதானந்த' மாகலின், 'முந்த மாயாவிலக்கணங் கூறுமிடத்துக் கூறிய வத்துவிதானந்தத்திற்' கிது வேறன் றென்க.

'இத்துரியபூமியை முன்துரியாதீதப்பத மென்றதுவும் கேளாய்' என்றது, "அவனுமிலு மிந்தத் துரியாதீதத்தி லேழாம்பூமியி லிருந்தா னேல்" என்ற விடத்திற் கூறியதை யீண்டுக் கூறுவா மென்றவாறு

துரியாதீதத்தில் ஏழாம்பூமி யென்றதை, "ஏழாம்பூமியாகிய துரியாதீதத்தில்" எனக் கொள்க வென்க.

தத்துவவிளக்கப் படலத்தில் சாதனசதுட்டயந் தொடங்கி வரிட்டனீறாகக் கூறிய, அல்லது, விதேகமுத்திபீறாகக் கூறிய ஞானசாரங்களை யீண்டுத் தொகுத்து 'ஞானசத்தபூமி' யெனப் பெயரிட்டுக் கூறினமையா லிவற்றின் பொரு ளாண்டே யுணரக்கிடத்தலி னீண்டு விரிக்கில மென்க. இப்பொருளை வருஞ் செய்யுட்களினுஞ் சிறிது விளக்கிக் கூறுவா மென்க. (௧௫௦), (௧௫௧)

முற்புவிமூன் றினுமுலகந் தோன்றுதலாற் சாக்கிரமா மூன்றற்
கப்பாற், சொற்பனமா மதுவுமெள்ளநழுவு மஞ்சாம் பூமியே
சுழுத்தியாகு, மற்புதமாஞ் சுவாநுபவ மிகுமா றாம்பூமி துரிய
மதற் கப்பாலோர், கற்பனையி லாதவிட மதீதமென்று மௌன
மாக் காட்டும் வேதம். (உ௯௦)

இப்பூமிகளின் முடிவி னின்ற துரிய மெனும் பேறுடையதை துரியாதீதமென் றழைத்தற்குக் காரணங் கூறுபவ ரிப்பூமிகளை யைந்தவத்தைகளாக வகுத் தீதற் கூறுகின்றார் :—

(இ—ள்.) முன் புவி மூன்றினும் உலகம் தோன்றுதலால் சாக்கிரமாம்: என்னை யெனின்? தேகாதிப் பிரபஞ்சங்களின் துக்க மசுத்த மனித்த மென்பனவற்று ளிகலோக பரலோக விடயங்களை யநுபவிக்கும் போ துண்டாகுந் தாபத்திரய முன்னிலையி லுண்டாந் துக்கம், பிரத்தியக்ஷமா யநுபவிக்கப்படுகையாலும், இந்திராதி தேவர்களின் சரீரங்கள் பூதகாரிய மாதலா லிரத்த குடர் நரம்பாதி யவயவம் சுத்தமாகலானும், காலாந்தரத்தி லழியு மென்னுந் துணிபு மாத்திரத்தானு மிவை சாக்கிரமாயின வென்க. இச்சுபேக்ஷைபோல, விசாரணையும், ஆசிரியன் மாணாக்க னிவர்களா லுபதேசிக்கப்படுகையு, முபதேசப் பேறு, மிவற்றிற் குரிய நூலு முண்மையாய் நிற்றலாலும், சாக்கிர மயின வென்க. இனி, தநுமானசியும, முன் சகசம் குரு சாஸ்திரங்களால் பொய்யெனக் கூறிய வாறு அயலாய் நிற்றலாலு, மதனைத் தான் வேறாய் நின்று விடுதலாலு, மவை விடப்படலாலு மிதுவுஞ் சாக்கிர மாயின வென்க.

மூன்றற்கப்பால் சொற்பனம் ஆம்: என்னை யெனின்? அச்சங்கம் விட்ட சுத்த மனதி லுண்மையறி வுண்டாக வது காரணமாக வுலக நிர்வாசநீய மாகத் தோற்றலா லிந்நிலைமை சொப்பன மாயிற் றென்க.

அதுவும் மேன்ஸ் நழுவும் அஞ்சாம் பூமியே சுழுத்தி ஆதும்: என்னை யெனின்? அவ்வாறான வான்மாநுபவத்தில் விடயபோகாநுபவ மின்மையால் மித்தையெலா மறத்தலால் சுழுத்தியா மென்க. முன்னுல கென்றதை யிதுகாறுங் கூட்டி முடிக்க. ஐந்து அஞ்செனை மருவியது. இச்சாக்கிராதியவை சுத்தாவத்தை யென்க.

அற்புதம் ஆம் சுவாநுபவம் மிதும் ஆறம்பூமி துரியம் ஆதும்: என்னை யெனின்? விடயங்களை மறந்த வவ்விருத்தியிற் றனதநுபவம் தடையின்றி விளங்கலால், நாலாவதான துரிய மாயிற் றென்க. இனி, "சுகாநுபவமிகும்" எனப் பாடங்கொண்டு, "அத்துவிதாநந்தம் வருந் திரிபுடி போம்" எனப் பொருள் கொள்ளினு மமையு மென்க. ஈண் டற்புத மென்றது, ஏனைய வாநந்தம் போ லல்லாத நிரதிசயாநந்தத்தை யென்க.

அப்பால் ஓர் கற்பனை இலாத இடம் = கூறிய கற்பனைக ளொன்று மின்றிய நிலை; அதீதம் என்று மௌனமாக காட்டும் வேதம் = இது துரி யாதீதமென்பதையும் மௌனமாக் காட்டலையு முன்கூறப்பட்டன வென்க. இது புனைந்துரை யன்றென்பதை வேதத்தின்மே லாக்கினு ரென்ற வாறு. இங்ஙனம் வேதம் பேசாமற் பேசற் குதாரணம்: "வேத வேதாந் தங்க ளுரைக்கப்பட்ட மேலான வத்துவித ஞான மாகும், நாதனும் பிர மத்தை நவிலலாமோ நாமௌனத் திருப்பதல்லா னுகத்தீரே" எனவும், "துரியாதீதம் பதினொலிற் றோன்றி யெவர்க்குந் தோன்றாத, பெரியார் தம்மைத் தானென்னும் பிரமப் பேய்க்கும் வாரீரே" எனவும் வருவன.

ஈண்டு பதினொன்கு, அஞ்ஞானபூமி யேழையு முடன்கொண்ட ஞான பூமி யேழின் முடிந்த துரியாதீத மென்க. இதனை வ்ந்நூலாசிரியரு முடன் கூறினரென் றுணர்க. (கடுஉ)

துரிய நிலந்தனிற் றுரியா தீதமெனின் மயக்கமொன்று சுருதிமே லோ, ரரிய தொரு விதேகமுத்தி யதீதமென்ப ரதுகணக்கி லா ரும்பூமி, மருவு சுழுத்தியிற் காட்சிசுழுத்தியென்பா ரென்பதுநீ மனத்திற் கொள்வாய், பெருமைதரு ஞானபூமியின் விகற்ப மின்னமுண்டு பேசக்கேளாய். (உசுக)

ஞானபூமி யேழாக வதக்துமிடத்துக் கூறிய வேழாவதான துரிய த்தை யீண் டவத்தையாகக் கூறியவைந்தி லைந்தாவதான துரியாதீத மாகக் கூறி லவத்தை வேறுபடலின் பொருளும் வேறுபடுமே யென் னு மையமு மதற்கு விடையு மிதிற் கூறுகின்றார்:—

(இ—ள்) துரீய நிலர் தனில் = முன் சத்தபூமியில் முடிந்த துரிய த்தை, துரியாதீதம் எனின் = மற்றோரவத்தை யாகிய துரியாதீத மென வகுக்கில்; மயக்கம் என்று = மாணாக்கனுக் கையப்பாடா மென்பதாகக் கருதி; (ஈண்டையப்பாடாவது, இப்பூமி துரியமோ, துரியாதீதமோ வென்ப தென்க.) சுருதி மேலோர் = சுருதியை யுணர்ந்த சிலவறிஞர்; ("சுருதி மேலோ" ரெனவும் பாடம்.) அரியது ஒரு விதேகமுத்தி = யாவருக்கு மொப்ப வமையாத விதேகமுத்தியானது; அதீதம் என்பர் = துரியாதீத மென வகுத்துக் கூறுவர்.

அது கணக்கில் = இவ்வாறு அவர் கணக்கிடுங்கால்; ஆறு பூமி = ஆறும் பூமியாகிய பதார்த்தாபாவனையை; மருவு சுழுத்தி தூல் = சீவர்களனைவரும் பொருந்தத்தக்க சாதாரண சுழுத்தி யல்லாத; காட்சி சுழுத்தி என்பர் = விசேடமான நனவிற்சுழுத்தி யென்று கூறுவர். இதனை யிங்ஙனங் கூறவே ஏழாம் பூமி துரியமெனலாயிற்று. ஆகவே, முன் மூன்று பூமி சாக்கிரமு மிடைநின்ற விரண்டுபூமியுஞ் சொப்பன மெனவுமாம். இஃது துரையிற்கோட லென்னு முத்தி யென்க. ஏனையவை யெளிதாய் நிலையான் வந்தன.

என்பதும் நீ மனத்திற் கோள்வாய் = கூறிய விவ்வர்த்தத்தைக் கருதிக்கொள் ளென்றவாறு. ஏனைய வெளி.

'ஆறும் பூமி மருவு சுழுத்தியில்' என்ற தொடரை, (ஆறும் பூமி மருவு என்றதை ஏழாம் வேற்றுமைத் தொகைநிலைத் தொடராப் பொருள் கொண்டு) 'ஆறும் பூமியின்கண் மருவாநின்ற சுழுத்தியை' எனப் பொருள் கொள்ளினு மமையு மென்க. தூல்லுருபு இரண்டாவதில் வந்த வுருபுப் போதுண்மயக்கம். முன் றுரியநிலந்தனி லென்பது மது.

மேலோராவார்: வசிட்டர் முதலியோர். அரிது—சிறுமையின்மேற்று. 'பெருமை தருத லிவ்வரிய சீவன் முத்தி'—வதேகமுத்தியை யென்க. நீ—தோன்றா வெழுவாய். பெருமையை மேலுங் கூறப்படும். (கடுக)

முன்னிலங்க ளேறியமூவரு மப்பியாசிகளா முத்தரல்லர், பின்னிலங்கள் வரன்வரியான் வரிட்டனெனுஞ் சீவன்முத்தர் பேதமாகுஞ், சொன்னநடுப் பூமிவந்தஞானிகளே பிரமவித்தாந் தூய மூத்த, ரின்னமுமப் பூமிகளின்பெருமைதனை நீயறியயான் சொல்வேனே. (உசுஉ)

"துரியாதீதத்தி லேழாம்பூமியி லிருந்தானேல்" எ—ம், "கற்பனையிலாதவிட மதீதமென்று மௌனமாக் காட்டும் வேதம்" என்றும்

முன்னும் பின்னுஞ் சிறப்பித்துக் கூறி யிடையே யேழும் ஞானபூமி யென்று கூறி யிவற்றி லியாதினை யடைந்தார் சீவன் முத்தராவா ரென்னு மையந் தோன்று மாதலா லிவ்வையங் களைதற்பொருட்டு, "ஞான பூமியின் விகற்ப மின்னமுண்டு" என்று தொடங்கியதை யவ்விகற்ப மிவையென் றிதில் விரித்துக் கூறுகின்றார்:—

(இ-ள்.) முன்னிலங்கள் ஏறிய மூவரும் அப்பியாசிகள் ஆவர்: 'மூவரும்' என்றமையா னிலமு மூன்றெனக் கொள்க. அவை, சுபேச்சை முதலிய மூன்றுமாகி நின்ற மூன்றுமாம். இவை யுண்மையறி வுதித்தற்குக் காரணமாய் நிற்றலா லவற்றி லேறியவற்றி னியலாய்ப் பழகியவர் வருதலா லென்க. இப்பழக்கத்தை, "முதலா மியோகபூமியிலே மூளைக்கு மிரண்டாவதின் மலருந்தகையு மூன்றாவதிற் பலிக்குந் தனியாரியனுக்கிர மியோகி" என்பதனானு முணர்க.

ஆகலின் முத்தர் அல்லர் = இவ ரகங்காரக்கிரந்தி விடுபட்டோ ரல்லர். இனி, பின்னிலங்கள் ஏறியவர் வரன் வரியான் வரிட்டன் எனும் சீவன்முத்தர் பேதம் ஆவர்: 'பின்னிலங்கள்' என்றதற்கு, முன்னிலங்களென்றதற் குரைத்தாங் குரைத்துக் கொள்க. இவரியல்பு மேற் கூறப்பட்டன. ஏறுதலை யனைத்திற்குங் கொள்க. 'நடுப்பூமி வந்த' வென்றதனானு மமையுமென்க. இனி, சொன்ன நடுப்பூமி வந்த ஞானிகளே தூயமுத்தர் என்றவாறு. சொன்னதாவது 'அசம்சத்தி' யென்று பெயரிட்டது. 'ஞானிக' ளெனப் பன்மையாகக் கூறியது, அப்பியாசிகள் போலாதும், வரன் முதலிய சமாதிஸ்தர் போலாதும் 'மாதவஞ் செயினுஞ் செய்வர் வாணிபஞ் செயினுஞ் செய்வர், பூதலம்புரப்ப ரையம் புகுந்துண்பர் சீவன்முத்த' ரென்ற விகற்பத்தா லென்க. இவரைத் 'தூயமுத்த' ரென்றது, மாதவஞ் செய்தல் முதலிய விகற்பமே யன்றி, பாவி, யுதாசீனன், பத்தன், கருமி, முமுட்சு, விசாரிப்போன், மகரி முதலியோர்களுக் குபயோ ராய் சனக னாதியர் போலக் கலங்கா நிலையி னிற்றலா லென்க. இதனை, யிப்பூமிகளின் சிறப்பை மேற் கூறுமிடத்துங் காண்க வென்க. இன்னும், 'தூயரென்பதை' மாபோகி முதலியோ ரிலக்கணங் கூறுதலானு மமையு மென்க. இவ்வெழுவரையுஞ் 'சாதகர், சாத்தியர்க' ளாகப் பிரித்துக் கூறலின், முன் சீவன்முத்த ரியல் கூறற்குப் புனருத்தமு மன்றென்க. ஏனைய வெளி. பெருமை—வருஞ் செய்யுட்களால் விளங்கும். (கருசு)

நாலாம் பூமியில் வருமுன் மூன்றுபூமியு மடைந்துநடந்து மாண்
டோர், மேலான பதமடைந்து பிறந்துமெள்ள மெள்ளவந்து வீடு
சேர்வார், மாலான பவத்தில் விழார் முதற்பூமி கிடைப்பதுவே

வருத்தமைந்தா, காலான முதற்பூமி கைவந்தால் முத்தியுங் கைவந்த தாமே. (உகூ௩)

"இன்னமு மப்பூமிகளின் பெருமைதனை நீயறிய யான் சொல்வே" னென்றெடுத் தப்பூமிகளின் பெருமை சொல்பவர் முன் மூன்று பூமிக்கே பெருமை கூறி யகனு லேனைய பூமிகளின் பெருமையை மாட்டறிந்தொழுகல் என்று நியாயத்தா லிதி லுடன் கூறுகின்றார்:—

(இ—ள்.) நாலாம் பூமியில் வருமுன் மூன்று பூமியும் அடைந்து நடந்து மாண்டோர் மேலான பதம் அடைந்து பிறந்து மெள்ள மெள்ள வந்து வீடுசேர்வார்; யாதினுலெனின்? "நால்வகைத்தாய சீவன்முத்தர் விதேகமுத்தியு நீகே" ளென்று சீவன்முத்தி யடைந்தோன் விதேகமுத்தனே யன்றி யவனுக்கு வேறுகதி யின்றென்று மங்ஙன மல்லாது, "முன்னிலங்களேறிய மூவரு மப்பியாசிகளா முத்தரல்லர்" என்று மிம்முத்தி யலாதாரை ஞானபூமியுள்ளுங் கூறினுங், கூறினவர்க்குக் கதி யாதோவென் றையமுண்டா மாகலான், அவ்வையத்திற்கு விடை கூறிய நான்காம்பூமியி லிவ்வதிகாரி வருவதற்கு முன்னரான சுபேட்சை முதலிய முன்னின்றதான வொன்று, இரண்டு, மூன்றையு மடையப் பெற்று, மேற்செல்லா திவற்றிற் சரித்து வரும்போது, முடிவடைந்தோர், சத்தியலோக மிறுதியாய மேம்பட்ட பதத்தை யடைந்து, மீண் டிவ்வுலகிற் பிறந்து, விட்டவிட்ட விடங்களினின்றுஞ் சிறுகச்சிறுக மேலேறி, நாலாவதற்கு வந்து, விதேகத்தை யடைவார்.

மாலான பவத்தில் வீழார் = சுவர்க்ககாமிகளைப் போலத் தேகாதிப் பிரபஞ்சங்களை யா னெனதென்னும் பாவனையாகிய வறியாமையாற் பிறவிப்படு குழியில் வீழ்ந்துவிடார்; இங்ஙனம் பிறந்தடைவோர் தேக்கனுயண மார்க்க மடைந்தோ ரென்க. உத்தராயண மார்க்க மாயின், பிரமலோகத்தே யிருந்து, பிரமனால் ஞானம் பெற்று, வீடடைவ ரென்க. இவற்றின் முறைமை முடிந்த நூலிற் காண்க. இங்ஙன மாயினும், மைந்தா, முதற்பூமி கிடைப்பதுவே வருந்தம்; என்னையெனின்? உயிர் களுநாதி தொட்டு, விடயவெள்ளத்தி லொழுகி, யவற்றின் மூழ்கிய வுள்ள முடையவ ராகலின், துர்ச்சங்க நிவர்த்து வரலும், சிவஞான விருப்ப முண்டாதலும் 'அறியுங் கடலினுகத்துளையி லியாமைக் கழுத்து புகுவதுபோற் பொறிவெம்பிறவி யனேகத்தாற் புருடன் விவேகியெனப் பிறக்கு மருமையா' லென்க ஈண்டு வருத்தம் அருமையின் மேற்று. மெள்ள மெள்ள வென்று மடுக்கு, 'அசம்பாவனுதி தோட' மிததியான் ஞானவிசாரம் நெடுங்காலம் பழகல் வேண்டுமென்று மிதனருமை தோன்றக் கூறிய தென்க.

இனி, காலான முதற்பூமி கைவந்தான் முத்தியுங் கைவந்த தாமே என்றவாறு. இக்கூற்று அநுத்தவாதமோ, கட்டுரையோ வெனின்? " திகழ்சாந்தி விசாரமொடு செறிசந்தோ டஞ்சாது சங்கமெனும் வீட்டின் வாயிற் காக்குஞ் சுதுட்டையரு முறவாகிற் றடை வேறுண்டோ, மேதினி காவலர் மனையிற் கடைகாப்பாளார் விடுவதுபோல் வீட்டிலவர் விடுவா ன்றே" என்றதனுற் கட்டுரையே யென்க ஈற்றேகார மசை. முன் னின்ற வேகாரம் ஐயம். ஒகார நின்ற நிலைக்களத்ததாகலி னென்க (கஉ௩)

இப்புவியி லிஞ்ஞானபூமி யொன்றி லிரண்டி லடைந்திருந் தா ராறு, லப்புருடர் மிலேச்ச ராயினு முத்தர்குரு பாதத்தாணை மெய்யே, தப்புரையென் றவர் கெடுவார் நடுவான மறைகளோடீ சங்கியாதே, செப்புமொழி வழிதிடமா யகம்பிரம மென் றிருந்து தெளிந்திடாயே. (உசுச)

அப்பூமிகளின் பெருமையை வேறோராற்றுற் கூறத்தொடங்கி, இத் தலைகய வுத்தரமீமாஞ்சை யதிகாரியை நோக்கி நின்றதோ? அல்லது வருணச்சிரம வபிமானங் குறித்து நின்றதோ? வென வருமைய மொழித் தற்து வருணச்சிரம வபிமான மிக்காண்டத்தினிடத் தின்றென்றற்குப் பிரதிக்கினையோடுங் கூறி யையப்பட்டோர்க்கு மையப்படாது துணிந் தோர்க்குங் கதியு மிதிற் கூறுகின்றர்: —

(இ—ள்.) இப்புவியியில் இஞ்ஞானபூமி ஒன்றில் இரண்டில் அடை ந்து இருந்தார் ஆனல் அப்புருடர் மிலேச்சர் ஆயினும் முத்தர், "நாலாம் பூமியில் வருமுன் மூன்றுபூமியு மடைந்து நடந்து மாண்டோர் மேலான புத மடைந்து மறந்து மெள்ள மெள்ள வந்து வீடுசேர்வார்" எனக் கூறி னூர்; மேல், "காலான முதற்பூமி கைவந்தால் முத்தியுங் கைவந்ததாமே" எனக்கூறி னிவ்விரண்டி லியாதுண்மை, யாது புனைந்துரை எனவரு மாணுக்க னைசங்கையைப் பரிகரிப்பான், 'காலானமுதற்பூமி கைவந்தான் முத்தியுங் கைவந்ததாமே' என்று இறுதியிற் கூறியதை வற்புறுத்தற் பொருட்டு, அம்முதற்பூமியே யன்றி யிரண்டாவது முதலியதிலுஞ் சென் றவை யடையப் பெற்று இறக்காது, இவ்வுலகி லுயிரோ டிருப்பாராயின், அப்புருடர் மிலேச்சராயினு முத்தர்; இது குருபாதத்தாணை மெய்யே. என்னை யெனின்? இந்த நான்கு மடைந்தவர்க் கறிவுண்டாகும், 'நூதன விவேகியுள்ள நுழையாது நுழையுமாகிற் பூதஜென்மங்கள் கோடி புனித னும் புருடனுமே' ஆகலி னென்க. ஒன்றி லிரண்டி லென்னு மிலேசி னுல் மூன்றுவது வருவிக்கப்பட்டது.

அடைந்திருந்த தென்றதனால், அந்நிலங்களின் முடிவு கண்டென்ற வாறு. இதனுன் முன்னும், 'அடைந்து நடந்து மாண்டோர்' என்றிற ந்த காலத்தாற் கூறினு ரென்க. நினக்கு நம்புத லுண்டாகும் பொருட்டுக் கூறிய கட்டுரையை, தப்பு உரை என்றவர் கெடுவார்; என்னை எனின்? நடுவான மறைகளை நீ சங்கியாதே; யாங் கூறிய பிரதிக்ஞையும் பய னுரையு மம்மறை மொழி யாகலி னென்க. சங்கிப்பின், அவர்போல நீயுங் கெடுவை யென்பது கருத்து. அம் மூந்நிலங்களே யங்ஙனம் பயனைத் தருமாயின், செப்பும் மொழி = அச்சுருதி கூறும் பொருளைக் கூறும்; வழி = இவ் வாற்றில்; திடமாய் = அசம்பாவனுதிக ளின்றி; அகம் பிர மம் என்று இருந்து; தெளிந்திடாய். இதுவே சந்தேகந் தெளிதல் என்றவாறு. இங்ஙன மிருக்கின், நீயே முத்த னென்பது எஞ்சி நின் றது. மறைகளை சங்கிக்கக் கூடாதென்பதைச் சாந்தோக்கியத்திற் கா ண்க வென்க. முன்னின்ற வேகாரங்க ளிரண்டுந் தேற்றம். ஈற்றே காா மசை. (கடுசு)

பொல்லாத மிலேச்சருக்கும் விதேக முத்திதரு ஞானபூமி யெ ன்று, நெல்லாகி முளைக்குமெனைத் தண்டுலமாக்கிய குருவே நீர் சொன்னீரே, இல்லானுங் குடும்பம்விட்டு சன்னியாசம் புகுந் தேகாங்கி யானே, ரல்லாமன் முத்திபெறு ரென்று சிலர்சொன் மயக்க மகற்றுவீரே. (உசுரு)

ஞப்பிரமவித்தைக்ஃகுத்காரி சாதனசதுட்டய முடையவ னென்று நூற்றேடக்கத்திற் கூறினதன்றி வருணச்சிரமங்களு ளொன்றனை யா ண்டு வ்தந்தோத வ்டம் பெறுமையா லவற்றை யிச்செய்யுண் முதல் 'பந்தமனைத் துறந்து,' என்பதிறுதியாக வுணர்த்துவான் றேடங்கி, 'அப்புருடர் மிலேச்சராயினு முத்தர் துருபாதகத்தாலை மெய்யே' என் றதை இங்ஙன நீர் வருணச்சிரம மன்றி மக்கட்பிறப்பொன்றனே விட டையககூடு மென்றதற்த மாறகச் சிலர் வருணச்சிரம விசேடங் கூறு கின்றரோ (யென்ற மாணுக்க னுசங்கையைக் கூறுகின்ற ரிதில்:—

(இ—ள்.) மிலேச்சருக்குப் பொல்லாமை யடையாயது, கோகத்தி முதலிய கொடுந்தொழில் செய்தலா லென்க. இவனுக்கு ஞானம் வந் ததை, 'கோதில் கதை முதன்மொழியாற்குச் சிலயநாட்டிற் கோவதை செய் சக்கிலியன் குறைக டவிர்ந்தடைந்தான்' என்றதனு லுணர்க. மிலேச் சருக்கு மென்ற வும்மை, ஏனையோரையுந் தழுவலி னெதாதுதழீஇய வெச்சவும்மை. முன்னும், மிலேச்சராயினும் என்ற வும்மையு மது. குருவே மிலேச்சருக்கும் விதேக முக்தி தருஞானபூமி யென்று நீர் சொ

ன்னீரே' எனக் கூட்டுக. மிலேச்சர், துருக்க ரென்னு மோர் சாதியருமா மென்க. தண்டுலம் = அரிசி; நெல்லாகி முளைக்கு மென்றமையால், உமிபோன் தண்டுல முளையாதென்ப தருத்தாபத்தியா லென்க. இல்லா ளுங் குடும்பம் விட்டு சன்னியாசம் புகுந் தேகாங்கியானே ரல்லாமல் முத்திபெற ரென்று சிலர் சொல்வது, சன்னியாசபத மந்தணருக்கே யுரித் தென்று கூறுவது. இதன் விரிவை கடாவிடைகளால் விருத்திப்பிரபா கர மெட்டாம் பிரகாசத்தில் விரித்திருத்தலி னுண்டுணர்க. இல்லாளை விடடோனுக்சக் குடும்பம் வேறின்றாயினும் இல்லா ளுயிர்ச்சார்பும், குடும் பம் பொருட்சார்பு மெனக் கொள்க. ஏனைய பொருள் வெளி. ஏகார மிரண்டு மசைகள். (கஙஎ)

சிட்டர்புகழ் மகனேநீ சங்கித்தசங் கைநன்று தெரியக் கேளாய்,
கட்டழியுந் துறவுநால் வகுப்பாகு மவைகளுக் காகும் பேர்கள்,
பட்டதுயர் கெடுகுடி சகம் பகூதக மம்ஸம் பரமாம்ஸம், விட்டக
லுந் துறவுக்கு விராகங்கா ரணமன்றி வேட மன்றே. (உகூகூ)

கூறிய வினாவிற்கு இவை விடையாகாவிடினுஞ் சன்னியாசமென்ற தொன்றனின் விராக வேறுபாட்டா லித்துணையா யிருக்கின்றன வென்ற வற்றின் பெயர் முறை யிலக்கணங்களையுங் கூறி யிவற்றி லிஞ்ஞான முண்டாமென்றுங், அங்ஙனங் கூறுவதும் பட்சத்தா லன்றி நடுநிலைமை யன்றென்றும், அந்நடுநிலைமை யிதுவென்று மிதுமுத லாறுகவியினு ளுங் கூறுபவ ரிதிற்றொடர்பாட்டா லவற்றின்றொகை நிரை பெயர் கூறி இவை யுண்டாதற்குக் காரணமுங் கூறுகின்றார்: —

(இ—ள்.) கட்டழியும் துறவு நால்வகை என்றது தொகை. அவை களுக் கக்காகும் பேர்கள் பட்டதுயர் கெடுகுடி சகம் பகூதகம் அம் ஸம் என்பன நிரையே பெயர்கள். விட்டகலும் துறவுக்கு விராகம் காரண மென்றது, அவை பிறத்தற்குக் காரணம் விராகம் அன்றி வேட மன்று என்றது, அச்சன்னியாசம் பலியாமைக்குக் காரணம். கட்டு அழி யும் துறவு = பந்த மழியும்படியான துறவு; பந்த மழிவது துறவா லென்க, பட்ட துயர் = குடும்பத்தில் பட்ட துயர்; விட்டு அகலுந் துற வுக்கு = குடும்பத்தை விட்டு நீங்கும்படியான துறவுக்கு. ஏனைய வெளி.

கட்டால் குடும்பமும், குடும்பத்தால் படுந்துயரு மாகலி னக்கட்டைய ழித்தா லன்றிக் குடும்ப மழியா; குடும்ப மழிந்தா லன்றி துயரழியா வாகலி னிரைபடக் கூறினா ரென்க. இக் கட்டழிதல் ஞானத்தா லாயினு மஞ்ஞா னம் துறவு வகையா லன்றி வாராமையின், 'கட்டழியுந்துறவு' என்றார்.

அழிக்க மென்னும் பிறவினை அழியுமென்னுந் தன்வினையாய் மயங்கிய தெனினு மொக்கும். துறவு வகையான் ஞானம் வரல் துறவறத்தாற் பாவ வொழிவும், அதனான் மனத்தூய்மையும், அதனால் சாதனசதுட்டய முண் டாதலும், அவற்றால் கேட்டல் முதலிய மூன்றும், அவற்றால் ஞானமு முண்டாதல் ஆதலின், காரணத்தைக் காரியமாக வுபசரித்தா ரென்க. இவற்றை, இந்நூற்றொடக்க முதல் காண்க வென்க. பட்டினத்தடிகளும், 'அறந்தா னியற்று மவனிலுங்கோடி யதிகமில்லந், துறந்தானவனிற் சத கோடி யுள்ளத் துறவுடையோன், மறந்தா னறக்கற்றறிவோ டிருந்திருவாத னையற், றிறந்தான் பெருமையை யென்சொல்லுவேன் கச்சியேகம்பனே' எனத் துறவு ஞானவாயிலாக வீடுபயத்தலை யருளினா ரென்க. துறவில் துறவறங் கூறு மதிகாரங்களாலுங் காண்க. துறவிற்கு விசாரங் காரண மன்றி வேட மன்றென்றதற் குதாரணம்: 'கோலஞ்சிறந்தபடியே நற்குண முஞ் சிறந்தோராகி யுனைக்கூடுமடியார்' என்வரும். 'மழித்தலும் நீட்ட லும் வேண்டா வுலகம், பழித்த தொழித்து விடின்' எனவும், 'காடே திரிந்தென்ன காற்றே புசித்தென்ன கந்தைசுற்றி, ஓடே யெடுத்தென்ன வுள்ளன்பிலாதவர் ஓங்கும் விண்ணோர், நாடேயிருப்பினு மெஞ்ஞான வீட் டின்ப மேவுவரோ' எனவும் வருவனவற்றாற் காண்க. (கூ௲அ)

மந்தமுந் தீவிரமுந் தீவிரதர முமென மூன்றுவகை விராகம், வெ ந்துயரம் வரும்பொழுது குடும்பத்தை வெறுத்துவரு விராக மந்த, மிந்தவுட லளவுமனை தனம்வேண் டாமென விடற்றீ விர மென்ப, ரந்தணர்நான் மித்தையென விடலதுதீ விரதரமா யறிந் திடாயே. (உகூஎ)

'துறவுக்கு விராகங் காரணம்' என்ற வவ்விராக மித்துணையவெ ன்று மவற்றிற் கிலக்கண மிவையென்று மிதிற் கூறுகின்றார்:—

(இ—ள்) விராகம்=கூறிய விராகமானது; மூன்று வகை; அவை மந்தமும், தீவிரமும், தீவிரதரமு மென்க; இவற்றிற்கு இலக்கணம், கூறிய மூன்றில் மந்தவிராகமாவது, குடும்பத்தில் வெந்துயரம் வரும்பொ ழுது=இவன் குடும்பியா யிருக்கும்போது மனைவி மக்கள் பொருள் முத லிய வைகளில் வறுமை பிணி மூப்புச் சாக்காடு பகைகளால் சகிக்கக்கூடாத துக்க மவனுக் குண்டாகும்போது, அவற்றை யாற்றானாய், குடும்பத்தை வெறுத்து வரும் விராகம்=அம் மனைவியாதிகளை யொழிக்க நிராசை சித்தத்தி லுண்டாவதாகிய விராகம்; குடும்பங் காரணமாக வெந்துயரம் வர லின் குடும்ப முன்னுங் கூட்டப்பட்டது. பின்வந்த குடும்பும் கூட்டின்

பொருட்டு. வெந்துயரம் வரற்கும் வெறுக்துவரற்கு மதிகாரணம் வேண்ட லின், சித்த மாயாயி நிலையான் வந்தது. இது மேலு மொக்கும். இவ்வீடணு த்திரயங் காரணமாக வெந்துயரம் வரலே. திருவருட்பா, திருப்புகழ். திரு வாசகம், திருவாய்மொழி முதலியவற்றிலுங் காண்க. இக்குடும்பத்தில் வெந்துயரம் வராவுழி இவ்விராகம் வாராமையி னிது மந்த மாயிற்று.

இனி, இந்த உடல் அளவும் = எமது வாணுள்மட்டும்; மனை தன்மீ வேண்டாம் என விடல் தீவிரம் என்பர்: என்னை? அம் மந்தவைராக்கத் திற் தரிய வறுமை யாதியவை யின்றி, அவர் வலியரா யிருக்கும் போதே யவற்றி னனித்த மசுத்தந் துக்க முதலியவை கண்டு துறந்து கடைபோக நிற்றலி னென்க. இனி, அந்தணர் நூல் = அந்தணர்க்குரிய நூலாகிய கருமகாண்டம் மித்தை என விடல் = இவை கூறுங் கருமமு மவற் றின் பயனும் பெரிய்யாகலி னிவ்வ கூறியவற்றை யகற்றலே, தீவிரதர மாயி நிற்றிடாய். என்னை யிது தீவிரதர மாயதெனின்? வாளர் துறத் தலினும் இக் கிரியையும் விட்டுச் சுபேக்ஷை பிறத்தலி னென்க. இதனை மித்தையென விடுதல், மேல் சத்தியத்தை யுணர்ந்தன்றி கூடாமையின் சுபேக்ஷை யென்றும். ஈற்றேகார மசை. இதனை, வசிட்டம் கீதை முதலியவற்றிற் காண்க. அந்தணர்நூல் தொழிற்கும் பயனுக்கு மாகலி னுதுபெயர். அந்தணனார் விடல் எனப் பாடங்கொள்வாருக்கு ஈண்டுச் சாதனம் விடுபட-லி னது பாட மன்று. (௯௪)

பாவிமந்த விராகத்திற் சன்னியா சங்க ளொன்றும் பலித்திடா தே, தீவிரத்திற் குடிசகமும் பகுதகமுமென் றிரண்டு திரங்க ளுண்டாம், நாவிருடந் திடத்திடமி லாதவர்க்குக் குடீசகமுஞ் சகங்க ளெங்கு, மேவிருடந் திடத்திடமுள் ளவர்க்குப் பகூதகமு மெனவிரித்தார் மேலோர். (௨௯௮)

கூறிய விராக மூன்றனுள் சன்னியாசத்திற்குப் பயன்படாத முன் னையதை யொழித்துப் பயனுடைய விரண்டி லிவ்வ யின்னதி லுண்டா மென் றிதிற் கூறுகின்றார்:—

(இ—ள்.) பாவிமந்த விராகத்தில் சன்னியாசங்கள் ஒன்றும் பலி த்திடாது; என்னை யெனின்? அவ்விராகம் பாவப்பயனு லுண்டாகிக் கடை போக நில்லாமையா லென்க. இதனாற் பாவிமந்தவிராக மென்றார் என்க. ஒன்றென்றது, கூறிய நான்கனு ளொன்றென்க. ஏகார மசை. சகங்க ளெங்கும் என்பதை யிரண்டிற்குங் கூட்டுக. மேல் அம்ஸனுக்குக் கூறு முத் திப்பதத்தை யுபலிலக்கணத்தா லிவருக்குங் கொள்க. இக்கரும சந்நியாசி

யின் விதாயகத்தையும் மேற்கூறும் ஞானசன்னியாசியின் விதாயகத்தையும் சூதஸம்ஹிதை ஜாபாலசுருதி முதலியவற்றிலும் விரித்துணர்க. மந்தவிராகனுக்கு சன்னியாசமே பலியாமையின், வியதிரேகத்தாற் பலனுமின்றாயிற் றென்க. ஏனைய வெளி. (கசுo)

இருவகை தீவிர தரத்தும் ஹம்ஸனென் றும்பர மாம்ஸனென்றுஞ் சொல்வார், வரும்ஹம் ஸனுக்கு முத்திஸத் தியலோகத் தன்றி வாராதென்பார், பரமஹம் ஸனுக்கு முத்தியிவ் வுலகில் ஞானத் தாற் பலிக்கு மென்பார், திரமருவு பரம ஹம்ஸன்றானு மிருவ கையாகுஞ் செப்பக் கேளாய். (உசுசு)

இதி, லேனைய தீவிரதரவைராக்கியத்திற் சித்திக்குஞ் சந்நியாசங்களின் வேறுபாடு மவற்றின் பெயரு மவைகளை யடைந்தோரின் கதியு, மவற்றிற் பரமாம்ஸத்தி னுட்பிரிவுங் கூறுகின்றார் :—

தீவிரதரத்து மிருவகையென் று பொருள் கொள்க. ஏனைய பொருள் வெளி. (கசுக)

ஜிஞ்ஞாசு ஞானவா னென்றிரண்டு பேர்க ளவரிற் சிஞ்ஞாசு, மெஞ்ஞான பூமியின் முன்மூன்று பூமியுணடக்கும் விவேகி யானோன், சுஞ்ஞான் வானென்போன் சீவன்முத்தி யடைந்திருக் குந் தூய மேலோ, னஞ்ஞான மகலுமந்தச் சிஞ்ஞாசு மிருவகை யா மதுவுங் கேளாய். [உஎo)

'பரமாம்ஸன்றானு மிருவகையாது' மென் றவர்பெயரும் நிலைமையு மிதிற் கூறுகின்றார் :—

(இ-ள்.) ஜிஞ்ஞாசு ஞானவான் என்று இரண்டு பேர்கள் : இப்பெயர்களே யவ்விருவரின் பெயர்கள்; அவரில் ஜிஞ்ஞாசு=இவன் ; முன் கூறிய, மெஞ்ஞான பூமியின் முன் மூன்று பூமியுள் நடக்கும் விவேகியானோன் ; மேல், சுஞ்ஞானவான் என்போன் சீவன்முத்தி யடைந்திருக்கும் தூயமேலோன் என்றமையாலும், அஞ்ஞானம் அகலும் அந்த சிஞ்ஞாசு என்றமையாலு மிவனுக்கு ஞானமின்றி, 'ஞாதும் இச்சேதி" என்ற தாதுவியத்தியின்படி 'ஜிஞ்ஞாசு' என்றாயிற்று. 'அறிய விருப்புடையோ' னென்றது பொருளென்க. ஆகலி னிவ ரதிகாரியும், இவரை முன்மூன்று பூமியுணடக்கும் விவேகி என்றார்.

இவர் விவேகியாகவே, மேனுன்கு பூமியினடக்குஞ் சீவன்முத்தர் நால்வரெனக் கொள்க. இவ்வகையைக் கூறிப்போந்தவற்றுள் காண்க. ஞானவான், சுஞ்ஞானவான் என்பன ஒருபொருளன. ' ஜிஞ்ஞாசும் ' என்றதிலும்மை இறந்தது தழீஇய வெச்சவும்மை. ஏனைய வெளி. (கசஉ)

பந்தமனை துறந்து சிலர்திதிகளா யிருந் தடைவர் பரமஞான, மந்தணர் மன்னவர் வணிகர் சூத்திரரா யிருந்துசில ரடைவர்ஞானமிந்தவகை சாத்திரத்து மூலகத்து நடப்பதுங்கண் டிருந்து மைந்தா, சிந்தனையின் மயக்கமென்ன சுருதியுத்தி யனுபவத்தாற் றெளிந் திடாயே. (உஎக)

'சந்நியாசம்புகுந் தேகாங்கி யானேரல்லாமன் முத்திபெறர்' என்ற வினுவிற்கு விடைகூறுபவர், ஜிஞ்ஞாசு மிருவகையா மென்றதை வகுத்துக் கூறி முடிக்கின்றார்:—

(இ—ள்) பந்தம் மனை = பந்தத்திற்குரிய மனை; மனை யுபலிலக்கண மாகலி னுயிர்ச்சார்பு பொருட்சார்பு முதலியவுங் கொள்க. துறத்தலைக் காரணமு முன் னதிகாரி கூறுமிடத்திற் காணக. அதிதியுந் துறத்தற்குக் காரணமு முன் னதிகாரி கூறுமிடத்திற் காணக. அதிதி பரதேசி. 'களாய்' என்ற பன்மையால் நால்வருக்கு முரித் தித்துறவு என்க. இதற் காசிரியவசனம்: 'வேண்டிய கல்வியாண்டு மூன்றிறவாது' என்ற மறைமொழி. இதற்குப் பொருள் நச்சினார்க்கினியத்தா லுணர்க. அன்றி, அந்தணர் மன்னவர் வணிகர் சூத்திரரா யிருந்து சிலர்அடைவர் ஞானம் என்றதனால், இவர்க்கு மிக்கூற் றுடன்பா டென்க. என்னையெனின்? இரு பிறப்பாளர் மூவரோடு நாலாமவனையு மில்லுடையானெனக் கூட்டிக் கூறினமையா லென்க.

இனி, அந்தணராதியோரை சாதிபற்றிக் கூறினது, தந்தம் வருணத்திற்குரிய வில்லொழுக்கினின்று மொழுகலை யுணர்த்தினு ரென்க. இவ்வில்லைத் துறத்தலே துற வாகலின், முன்னும் 'பந்தமனை துறந்து' என்றார். அப்பந்த மனையைத் துறத்தலு மிவற்றோடிருத்தலும் பிராரத்த வகையா லென்க. கூறிய ஞானத்திற்கேது இவ்விரண்டு மன்றென்க. இதனுன் முன்னும் 'விராகங் காரண மன்றி வேடமன்று' என்றார். இருந்த வகை சாத்திரத்தும் உலகத்தும நடப்பதுங் கண்டிருந்தும் எனறதில், சாத்திரம் சதுர்த்த வகுப்பு; உலகமென்ப துயர்ந்தோர் மேற்று; நிகழ்ச்சியவர்க்காகலான; என்றதனு னுணர்ந்தே யவொழுக்கு மென்னு மனுமானத்தா லென்க. ஆகலின், மைந்தா, சிந்தனையில் மயக்கம் என்ன = அந்தணரிலுஞ் சன்னியாசம் பெற்றே வேதாந்த சிரவணஞ் செய்யவேண்டு

மென்னும் விசாரத்தி லுண்டாகு மயக்கக மொழி. என்னவென்னும் வினா 'வினாவுஞ் செப்பே வினாவெதிர் வரினே' என்றபடி விடையின்பால தாயிற்று.

இனி, சுருதி யுத்தி யனுபவம், என்ற மூன்றனுள், சுருதியும் அனுபவமும் 'சாத்திரத்தும் உலகத்து' மென்றதனு லடங்கின. யுத்தியாவது, சன்னியாசத்தாலேயே ஞான முண்டாமாயி, னிராவணனு மருச்சுனனும் பூண்ட சன்னியாசத்தால் ஞான முண்டாயிருத்தல் வேண்டும்; அன்றியு மிப்போதும் வஞ்சவேடம் பூண்டோரிடத்தும் ஞானமின்மை யாராய்ச்சியால் காணப்படுகின்றது. இதனாற்றான் 'வலியி னிலைமையான் வல்லுருவம் பெற்றம், புலியின்றோல் போர்த்துமேய்ந் தற்று' என்றது மறை. ஆகலின், ஞானம் பயத்தற்குரிய ஜிஞ்ஞாசுத்தன்மை, அம் மந்தந் தீவிரம் தீவிரதரத்து அம்சனிடத்துங் காணுமையான் அவ்வியாத்திக்குற்றந் தங்கிற்றென்க. இதனால், அந்துவயவியதிரேகங்களுக்குந் தலை டயுண்டாயின.

இன்னும், சன்னியாசம் ஞானத்திற்குக் காரணமாயின், அக்காரணம், சமவாய மசமவாய மென்ற விரண்டிலு மமையாது. என்னையெனின்? சன்னியாசஞ் சமவாய காரணமாயின், காரியத்தோ டொனிற்றல் வேண்டும். ஞான மகத்தே யுண்டாவது, சன்னியாசவேடம் புறத்தே புள்ளது. அஃதுகவின் ருதாத்மிய மிரண்டிற்கு மின்றி சேது சீதாசலம் போல மிகச்சேய்மைய. நிமித்தகாரணமாயின், சன்னியாசஞ் சடம், ஞானஞ் சேதனம். சடம் சேதனத்தை யுண்டாக்காது. அற்றன்று, மஞ்சளுஞ் சுண்ணமுங் கலக்கச் செந்நிற முண்டாவதுபோல வுண்டா மெனின்? அக்காரண மிரண்டுஞ் சடமாதல் போல விச் செந்நிறமுஞ் சடமாகலி னவ்வேது வமைவதன்று. அந்தக்காரணமுஞ் சடமாகலி னதுகாரணமாக ஞான முண்டாமோ வெனின்? அது பூதங்களின் சத்துவகுண காரிய மாகலி னிங்கடாய வின்றென்க. (கசுஙு)

> பிறந்ததுண் டானலன்றோ பிறகுசா வதுதா னுண்டாம்
> பிறந்ததேயில் லையென்னும் பிரமமா வதுவுநானே
> பிறந்ததுநா னென்றாகிற் பிரமமென் றந்தநானே
> பிறந்ததுமி றந்ததற்ற பிரமமாம் நானேநானே. (உஎஉ)

"வித்தைக்குசு மினிமேற் சொல்லுவோம்" என்றார், ஈண்டவ் வித்தையானந்தங் கூறப்புக்கி, 'வாக்கிய மெழுந்தசுக ஞானசுகமே' என மகாவாக்கிய விசாரத்தாலேயே யுண்டாவது வித்தியானந்தமெனத் தோதத்துப் பொருள்கூறி நிறீஇயவாறே யீண்டு விரித்துக் கூறுபவர், அவ்வாக்கியம் பலவற்றுள்ளுந் தோதத்து, தாந்து வேதத்தி

லும் முடிவான நான்கு மஹா வாக்கியங்களாலிதுமுத னான் முடிவுகாறு மவ் வாநந்தத்தைக் கூறுவான் வேண்டி, இதுமுதன் மூன்று கவியினு னுஞ் சாமவேதசாந்தோக்கிய சாகையிலுள்ள தத்துவமசி யென்னு மகா வாக்கியத்தா லுண்டாகு மாநந்தத்தைக் கூறத் தொடங்கி யிதிற் றற் பத விலக்கியார்த்தத்தை யான்மா வென்பதற் றத்தி கூறுகின்றார்:—

(இ—ள்.) பிறந்தது உண்டானல் அன்றே = யாதொரு பொருளும் பிறவியைப் படினன்றே; பிறது சாவதுதான் உண்டாம்; என்னை யெனின்? பிராகபாய காரியத்திற்குத் த்வம்ஸாபாவ முண்டாமென்னு நியாயத்தா லென்க. ஆதலால், பிறவாதது இறவாதென்னு மருத்தா பத்தி யால், பிறந்ததே இல்லை என்னும் = அஜு நித்திய மாகலின் காலத்தச முதலியவற்றால் வியாப்பியப்பட்டு பிறவிப்பட்டதே யில்லை யென்று கூறும் வேதம்; பிரமமாவதுவும் நானே = அத்தன்மையான பிரமமெ னும் பெயருடையதும் நானுகின்றனன்; பெரிதாதலின் பிரமமென்னும் பெயராயிற்று. நான் பிரமமானதற்குக் காரணம், பிறந்ததும் நான் அன் றகில் = அப்பிரமம்போலப் பிறவியிற்பட்டது நானல்லவாகின்; பிரமம் என்ற அந்த நானே; பிறவாதது ஒரு வஸ்துவே யன்றி யிரண்டில்லை யென்றதனு லென்க. ஆகலின், பிறந்ததும் இறந்ததும் அற்ற பிரமம் ஆம் நானே நானே; அடுக்குக் கூறலின்மையாலும் பிறந்தது பிறந்தது மற்ற சாமானிய தருமத்தாலும் நானே பிரமமென்ற துறுதி யென்க. பிறந்தது பிறந்தது மென்று மீட்டுங் கூறியது சுட்டின்பொருட்டு. உண்மை யிறந்ததற்குங் கூட்டுக. ஏகாரங்க டேற்றம்; ஓகாரம் வினு; ஆகில்—என் றதை ஆகலி னென்றதின் விகாரமாய்க் கொள்ளினு மமையு மென்க. இக் கூற்றிற்கு மாறாகப் பொருள் கொள்வோர் கூறியது கூறன் முத லிய குற்றந் தங்கலை யுணர்ந்தா ரென்க. இப்பிறப் பிறப்பாலாகிய துக்கா பாவத்தா லானந்தரூப மான்மா வென்பது கருத்து. (கசுச)

நானென்ற பிரமமான நானேநா னறியேனென்று
ஞானென்ப தேதுபின்னை நம்முடை புந்தியென்னிற்
றுனதுமயக் கந்தன்னிற் சாவுமே சாவாதாகி
நானென நிறைந்திருந்த ஞானமாம் நானேநானே. (உஎரு)

இதிற் றுவம்பத விலக்கியார்த்தத்தை யவ்வாறே காட்டுகின்றார்:-

(இ—ள்.) நான் என்ற பிரமம் ஆன நானே = நீர் கூறியவாறே, நானென்ற சொற்குப் பொருளாயுள்ள பிரமமென்பதும் நானே மெயினே னுயினும்; நான் அறியேன் என்றல் = யுத்திக் கொவ்வினும் அனுப

வத்தி லறியேனே யென்பை யாயின்; நான் என்பது எது = அவத்தாத்திரயங்களினும் நானென்று கூறுகின்றனையே யக் கூற்றியாது? பின்னை = மேல்; நம்முடைய புந்தி என்னின் = நம தந்தக்காண மல்லவோ வென்பையாயின்; அது மயக்கம் தன்னில் சாவுமே = அந்தக்கரணமுஞ் சுழுத்தி மூர்ச்சை முதலிய காலத்தி லிறக்கின்றதே; அங்ஙன மஃதிறந்த காலத்தும், சாவாது ஆகி = இறவாதிருந்து; நான் என = நானென்ற பிரதீதியோடும் அவ் வந்தக்கரணம் போன்று பரிச்சின்னமு மின்றி; நிறைந்து இருந்த = பூரணமாக விருந்த; ஞானம் ஆம் நானே நானே = ஞான வடிவமான நானேயன்றி நானப் பிரமத்திற்கு வேறல்ல னென்ற வாறு.

நம்முடைய புத்தி, என வுளப்பாட்டுத்தன்மையாற் கூறின திருவனை யுந் தழுவுதற்பொருட்டு. ஏகார நான்கி லிரண்டாவது வினு, ஏனைய தேற்றம். தான் எதனை நோக்கி வந்தது நானே நிறைந்த தென்க. (௧௬௩)

*நிறைந்தவா றெந்தவாறு நிலைதெரிந் திலனென்றுயே*
*லறிந்ததாஞ் சுழுத்திதன் னிலானந்த மதுவேயாகுங்*
*குறைந்ததற்கா னந்தந்தான் குவலயந்தன் னிலில்லை*
*நிறைந்ததே யிந்தவான்மா நிதானமிவ் வறிவுதானே.* (௨௭௪)

இதி லவ் வருபதத்தி னைக்கியமாம் பொருளை யறியென்ற மற்றொரு பதத்தாற் கூறி இங்ஙன முணர்தலே யாநந்தமென வேதுவுஞ் சொருபமுங் கூறி முடிக்கின்றார்:—

(இ-ள்.) நிறைந்த ஆறு எந்த ஆறு நிலை தெரிந்திலன், என்றுயேல்; சுழுத்திதன்னில் அறிந்தது ஆம் = சுழுத்திதன்னில் அறியப்பட்ட வாருவது, கூறிய கருத்தத்துவமும் பரிச்சின்னத்துவமு மின்றி யகண்ட விருத்திக்கு மெட்டாத சாமான்னிய ஞப்திசொருபம் என்க. அதுவே ஆனந்த மாகும் = தனக் கொப்பு முயர்வு மில்லாமையா லதுவே யானந்த மாகும்; குறைந்ததற்கு ஆனந்தந்தான் குவலயம் தன்னில் இல்லை = இவ்வுலகில் வறியனு யிருப்போனுக்கு சுக மின்மை போல மனுடாநந்த முத லிரண்ணியகருப்பானந்த மீறானவற்றிற் கானந்தம் நிறைவின்மை யினிது நிறைவுடைமையி னென்க. இதனை முன்னுனந்த வியல்பு கூறியவிடத்திற் காண்க. குவலய மனுடானந்தத்திற் காகலி ஞருபெயர்.

ஆகவின், நிறைந்ததே இந்த ஆன்மா = அசஞ்சத்தார்த்த சாமானிய வான்மா நிறைவுடையதே; அன்றியும், நிதானம் இவ்வறிவுதானே = உலகிற்கு விவர்த்தோபாதானமாயு நிற்ற லிவ் வறிவே யென்றவாறு.

நிதான மென்றமையால் காரியவுல கவாய்நிலையான் வந்தது. உலகு மானந்தமென்றதற் குதாரணம், 'எந்தச்சத்தி லசத்தாகு மிந்தவுலகஞ் சத்தாகு, மெந்தச்சித்தி லசித்தாகு மிந்தவுலகஞ் சித்தாகும், எந்தவின்பிற் றுன்பாகு மிந்தவுலக மின்பாகு, மந்தச்சிதானந்த மதுவே நமது வடிவாகும்' என்பது.

இனி, இவ் வாக்கியத்தைப் பாயிரத்துள்ளுங் கூறி, இடையிலுபதேசித்துங் கூறி, ஈண்டுங் கூறிற் கூறியதுகூற லன்றோ? எனின், கூறியது கூறினுங் குற்ற மொன்றில்லை யாகும், வேறொரு பொருளை விளக்குமாயின் என்க. அப் பொருள் நான்முகப்பிற் கூறியது. இச் சாமவேத மஹா வாக்கியப் பிரதிபாதக வஸ்துவே சர்வதேவதா சொரூப மாகலின், அத் தேவதையை யாண்டு மங்கலிப்பட்டது. இடையி லச்சொரூப நீயேயென் றுபதேசிக்கப்பட்டது. படினுஞ் சொன்னிலை மாருக வதிகாரியின் கருத்திற்றிணங்கக் கூறினமையாலும் ஈண்டவ் வாக்கியம் பிறந்த வாற்றால் அப் பொருளையே சீவன்முத்தியின் பயனை வானந்தப்பேற்றின் பொருட்டுக் கூறி, நூலை முற்றுவித்தலாகிய வுபபத்தியாகிய லிங்கதாத்பரியங் கூற வினு னென்க. ஆதக — வேதகின்ற நிரையிற் கூறாது இவ்வாக்கியத்தை முன்னதாகக் கூறிய தியாது கருதியோ? எனின், இதற்கு விடை — முன்னுபதேசமாக வாக்கியங் கூறுமிடத்திற் கூறிய சிறப்பினு லென்க. நிறைந்த பாவத்தை சுழுத்தியில் கூடஸ்தனிடத்துத் தாதான்மியமாகக் கூறினமையால், கூடஸ்தனுக்கும் பிரமத்திற்கு முக்கியசமானுதி காணத்தா லைக்கியங் கூறினு னென்க. (௧௬௬)

மனத்தினு லெண்ணித்தானே வந்ததிவ் வுலகமாகு
நினைத்திடி லனேகலோக நிற்பதவ் வறிவிலன்றோ
அனைத்தையுங் கடந்தப்பாலு மந்தமற் றறிவிதாமென்
றெனைத்தனி விசாரித்திட்டா லேகமாய் நிறைந்தோனானே(உ௭௫)

இதுமுத லைந்து கவியினுனு மயமாத்மா பிரமமென்ற அதர்வண வேத மஹா வாக்கிய விசாரத்தாலு மானந்த முண்டென்று கூறுபவ ரிதுமுத லிரண்டு கவியினு லவ்வாக்கிய விசாரங் கூறுகின்றார்:—

(இ-ள்.) மனத்தினுல் எண்ணி தானே வந்தது இவ்வுலகம் ஆகும்; ஆகலின், உபாதான காரணத்திற்கு வேருகக் காரிய மில்லாதென்னு நியாயத்தால், நினைத்திடில் = அனுமானிக்குமிடத்து; அனேகலோகம் நிற்பது = விளங்கி நிற்பது, அவ்வறிவில் அன்றோ = அம் மனோ ரூபமான வறிவினிடத்தல்லவா? இங்ஙன மாகலின், அனைத்தையும் கடந்து = இத்

திரிசியமு மிவை தோன்றற்குக் காரணமான மன முதலியவைகளையு நிய
தித்து; அப்பாலும் அந்தம் அற்று = நியதிக்கப்பட்டவிடத்து இவ்வள
வினதென் றளவிடக் கூடாமையி னகண்டமாய்; அறிவு இதாம் என்று
= அறிவுசொரூபமான விதுவே யுள்ளதா மென்பதாக, எனை தனி விசா
ரித்திட்டால் = என்னை தனித்தவனுக வாராய்ச்சி செய்யின், ஏகமாய்
நிறைந்தோன் நானே என்றவாறு.

இது சிருட்டிதிருட்டிவாதம். 'இது' என்றது, 'அயம்' என்னும்
பதம்; 'எனை' என்பது, யானென்பதின் றிரிபாகியது. இது ஆன்மா
வென்ற பொருட்பட்டு நிற்றலின், இத்தொடர் 'அயமான்மா பிரமம்'
என்ற வாக்கிய மாயிற்றென்க. இது வாக்கியார்த்தங் கூறல். இனி
யதிக்கும் விதமும் அதி லானந்தவிளைவு மேற்கூறுகின்றார். ஓகாரம் வினை.
முன்ற வேகாரம் தேற்றமும் பிரிநிலையு மாம். ஈற்றேகாரம் தேற்
றம். (கசு௭)

அந்தவா றிருந்துகொண் டேயானந்த மனுபவிக்க
எந்தவா றிருந்துகொண் டாலெனக் கிதுதெரியுமென்னி
லிந்தமூன் றவத்தைதம் முளெழுந்திடும் விருத்திநீக்கி
யந்தவா றிருந்துநீயு மானந்த மடையலாமே. (உ௭சு)

(இதுவுமது)

(இ-ள்) அந்த ஆறு இருந்துகொண்டு ஆனந்தம் அனுபவிக்க =
திரியாதிட்டான வான்மாவே தானென் றறிந்த வண்ணம் விபரீத வையங்க
ளின்றி யொரு நிலையினின் றானந்தத்தை யனுபவிக்க, எந்த ஆறு இருந்து
கொண்டால் எனக்கு இது தெரியும் என்னில் = எந்நிலையினின்று கொளி
னெனக் கவ் வநுபவந் தெரியுமென்று கேட்டையாயின், என்பது, சீவன்
முத்திக்கு விலக்ஷணமான சுகத்தை யனுபவிக்குமாறு வினவிய படி
யென்க. திரிபியவாசனுக்ஷயமே யவ் வானந்தத்தை யனுபவத்திற்கு வாச்
செய்தலி னிந்நிலை யாறுயிற்று. அவ்வாறு, இந்த மூன்று அவத்தை தம்முள்
எழுந்திடும் விருத்தி நீக்கி, அந்த ஆறு இருந்து நீயும் ஆனந்தம் அடைய
லாமே = நீக்கினவிடத்துச் சுத்தமாகலி னச் சுத்தநிலையி னின்று நீயு மவ்
வானந்தானுபவத்தை யனுபவிக்கலா மென்றவாறு.

" இந்த மூன்று அவத்தை தம்முள் எழுந்திடும் விருத்தி நீக்கி " என்
றது, இவ் வசிபதத்திற்குரிய பரசாக்கிரம், பரசொப்பனம், பரசுழுத்தி
என்பனவற்று ளெழுகின்ற "நனவதனிற் பூதஞ்சூக்குமபூத மறியுஞான
விந்திரியங் கன்மவிந்திரிய மிவைகள், கனவதனின் மனமதிமற்றகங்கார

மூன்றுங்கருத்தொடுங்குஞ் சுழுத்தியினிற்பகுதிபா னனவி, லனபுருடன் பாகனவிற் காலபரம் வியோமம், அதீதமதிற் சிவ னனவிற் பாதத்துவ மந்தக, கனவதனின் மாயையுபசாந்த மதனிற் பின்னை கண் டிவ்வொழு ங்கி னிலகற்றிற் காணுமந்தவீடே" என்பன வென்க. ஈண்டிவ் வவத்தை களைக் கொளுமாறு, இந்தவென்று சுட்டிக் கூறினமையி னிச்சுட்டிற்குப் பொருள் சிவசாக்கிராதிக ளிங்கிலைமைக் கமையாமையி னீண்டுக் கூறு மசிபதார்த்தமே பொருளாமென்க. அன்றியும், "வந்தவியோம நீங்கி யிடில் வாக்குமிரண்டாம் பாழ்பரத்தின், றெருந்தநீங்கி லுலகம்போந் தோன் றுமா யைதானீங்கிற், பந்தமுறு மவ்வாதனைபோம் பகரவொண்ணுப் பினை நீங்கி, லந்தமூன்றும் பாழ்போகு மனைத்துமா னசிவந்தோன்றும்."

"ஏதேதகன் றததுமுன் னமியற்றுந்தொழில்க டன்னிடத்தப், போதேபகன் றவ்வனுபவத் திற்போக்கவேண்டு மெலாமகற்றி, யீதேயுள மற் றவையெல்லா மில்லவென்றே யுணர்ந்தவையு, மீதேயெனக் கண்டச் சிவத்தை யிடைவிடாதே பார்த்திருப்பார்" என வாதனைநீக்கமும், எல்லா மில்லையென் றுணர்தலு மவை சிவமெனப் பார்த்தலு மமைய வேண்டுதலி னுங் கொள்க வென்க. விருத்தி திரிபுடிக்கு மாகலி னுநபெயர் ஈற் றேகார மசை. (கசுஅ)

வாதனை வயத்தினாலே வருகிற விருத்தியெல்லா
மேதினை லடக்கலாகு மென்றுதான் விசாரஞ்செய்யின்
போதமா மிராசன்றனைப் புத்தியைம் புலன்களெல்லாந்
தாதரா யிருக்கப்பெற்றாற் சகலமு மடங்குந்தானே. (உளள)

'இந்த மூன்றவத்தைதம்மு ளொழுந்திடு விருத்தி நீக்கி' என்றாங் ஙன நீத்தமிடத்துப் பல்லூழி காலமாய்ப் பயின்ற வுலகவாதனையே மிகுத்து வருவனவாகலி னவை நீக்கு முபாய மியாதோவென்னு மாசங் கையு மதுநீத்துச் சமாதானமு மிதுமுத னுன்கு கவியானுங் கூறுபவர் தி லசீசங்கையையு மதற் சோருவமை விடையுங் கூறுகின்றார்:—

முன் முக்குண வியலு மவற்றின் பயனுங் கூறுமிடத்திற் றமத விரா சதங்களை நீக்க வேண்டுமென்று கூறினதா மாத்திர மன்றி, நீக்குமுபாயங் கூறாமையி னீண்டவை யிடைப்பிற வந்தன. ஆகலின் கூறியதுகூற லன் றென்க.

(இ-ள்.) வெளி 'வாதனைவயம்' என்று பொதுப்படக் கூறினு மேற்புழிக்கோடலால்' ஈண்டு சந்துவவாதனை யொழிந்தவைகளைக் கொள் க வென்க. போதமாம் இராசன்றனைப் புத்தியைம் புலன்களெல்லாம்

தாதாராயிருத்தல், அரசனுணைவழி யமைச்சு முதலிய குடிகளு மொழுகு மியல்பின வாறுபோல சிற்சத்தியின் சேட்டையினுலேயே காண முதலிய விந்திரியங்க டத்தஞ் செயல் புரிதலா லச்செய லனைத்து ஞானச்செயலே யென்றுணரி னவை யடங்கு மென்பதாம். இதனையுவமானத்தினுங் கண்க. இவை ஏகதேச வுருவகம். சகலமுமடங்கல் = அனைத்துஞ் சின்மாத்திர மாதல். இது தன் கூற்றாகலின், செய்யின் என வினவி, அடங்கு மென முடித்தார் என்க.

ஏகார மிரண்டனுஞ் முன்னது தேற்றமும் பிரிநிலையுர், பின்னதுந் தானு மசைகள். (கககூ)

விருத்திக ளடக்கமின்னம் விஷேதமாம் யோகத்தாலே
துருத்திபோ லூதுமூச்சைச் சுகமுட னடக்கினிற்கும்
கருத்ததற் கில்லையென்னிற் காரணச ரீரமாகிப்
பெருத்ததோ ரவித்தைதன்னைப் பிடுங்கிடி லடங்குந்தானே. ()

அதற்க்கி லிரண்டுபாயங் கூறுகின்றார். அவை பிராணுயாம மொன் றும் விசார மொன்று மாம்:—

(இ-ள்.) இன்னம் விருத்திகள் அடக்கம், விஷேதமாம் யோகத்தா லே துருத்திபோல் ஊதும் மூச்சைச் சுகமுடன் அடக்கில் நிற்கும்; விஷே தமாம் யோகம் என்றது, இயம நியம மாதிகளை யென்க. மூச்சைச் சுக முடன் அடக்கல் என்றதனுல், அடபோகம் லம்பிகா யோக முதலியவை விலக்கப்பட்டன. இம் மூச்சை யடக்க லிருவகைத்து; ஒன்று அகமும் மற்றொன்று புறமுமாம். இவற்றை புசண்டோ பாக்கியானத்திற் காண்க இந்த பக்ஷக்களால் விக்ஷேப நீங்கலின் சொருபசமாதி கூடு மென்பதாம். அதற்குக் கருத்து இல்லை என்னின் என்பது, அவ்வலி யில்லாமையை யென்க. மற்றது வருஞ் செய்யுளாற் கூறப்படும். தானே யடங்குமெனக் கொள்க வென்க. ஏகார மிரண்டும் தேற்றம். (கஎ0)

காரணசரீ ரந்தன்னைக் களைவதெவ்வா றென்றோதி
லாரணம் பொய்சொல் லாதேயதன்பொரு ளகத்திலுன்னிப்
பூரணமா குமென்மேற் புவனங்க டோற்றுமென்று
தாரணை வந்ததாயிற் றரித்திடு மவித்தையெங்கே. (உஎக)

இதி லவ்விசாரத்திற் கிலக்கணங் கூறுகின்றார்:—முன்னேது கூறி னமையா லென்க.

(இ-ள்.) காரண சரீரம் தன்னை களைவது எவ்வாறு என்பது கரு மத்தாலோ, உபாசனையாலோ, விசாரத்தாலோ என்றபடி. தன் சாரியை. ஆரணம் பொய் சொல்லாதே என்பது,முன்னர்க் கூறிய சுருதிவாக்கி யம் பொய்யன்று என்பது. அதன் பொருள் அகத்தில் உன்னி, அப்பொ ருளை மனனஞ் செய்தபடி ; பூரணம் ஆதம் எம்மேல் புவனங்கள் தோ ற்றும் என்று ; தோற்று மென்றமையால், பொய்யாய்த் தோற்றுமெனக் கொள்க. காரிய மெல்லா மித்தையாகலி னென்க. தாரணை வந்தது ஆயின் = நிச்சய முன் புத்தியி லுண்டாகுமாயின், தரித்திடும் அவித்தை பேங்கே = அஞ்ஞானமான தெவ்வாறு நிற்கு மென்றவாறு.

பூரணசொரூப மாகலின் நிபரந்திரமுடைய பொருளினிடத் தன்னிய பொரு ணிற்கா தென்றவாறு. ' ஆரணம் பொய் சொல்லா தென்பது ' பிர திக்கினை. அவித்தை நீங்கவே, சகல வாசனையு நீங்கும் ; இவை நீங்கவே, ஆனந்த மியல்பா மென்பது பெறப்பட்டது. இது விகங்கமார்க்க மாக லின், ' போதமா மிராசன்றுணெய்ப் புந்தியைம் புலன்க ளெல்லாந் தாதா யிருக்கப் பெற்றுற் சகலமு மடங்கு ' மென்பதின் வேறென்க (௧௯௪)

அப்படியிருக்கச் சித்தம லைதலால் விவகாரத்தி
லெப்படிக்கூடு மென்னிலென் னைவிட் டொன்று மில்லை
இப்படிக்கண்டவெல் லாமென் மயமென்கனுப் போற்
கற்பிதமென்றதா னேகாண்கின்ற சித்து நானே. (௨௯0)

காரிய நிற்ற லுபாதானகாரணத்தா லன்றிக் கூடாமையி னவித்தை கெட்டுஞ் சித்தசலனுதி நிற்றலி னன்னுவய வீயதிரேகங்களுக்குத் தடை யாமென்று மாசங்கைக்குச் சமாதானம் விவர்த்த பக்ஷத்தா லிதிற் கூறுகின்றார்:—

(இ-ள்.) அப்படி இருக்க = வேதாந்தத்தி னிச்சய மங்ஙன மிருக் கவும் ; சித்தம் அலைதலால் = ஜீவன்முத்தனிடத்துஞ் சித்தசலனங் காணப்படுதலால், விவகாரத்தில் = அவித்தை கெடும் ஞானத்தா லென் னும் வழக்கில், எப்படிக்கூடும் = இத் திரிசியத் தோற்ற மெவ்வாற்றால் பொருந்தும் ; இனி, இரட்டுற மொழிதலால், ' விவகாரத்தில் சித்தம் அலைதலால், அவித்தையைக் கெடுத்து, அப்படி இருக்க எப்படிகூடும் என்னின், என்ப தொன்று. இப்படி கண்ட எல்லாம் = திரிபுடியாகக் காணப்பட்ட விம்வனைத்தும், என்மயம் = எனது வடிவமே ; யாதினு லெனின் ? எச் கனுப்போல் என்பது, வியாவகாரிக சிவனே தோஷ

சகிதஞ்ய் தேசகால வஸ்துக்களாகவுந் திரிபுடியாகவும் பரிணமைப்படினுந் தனக்கவை யயலாகா வென்பது கருத்து. ஆகலின், கற்பிதம் என்று = இப்பரிணமம் பால் தயிரானது போலன்றிக் கற்பிக்கப்படுதலின், இவற்றிற்கு விவர்த்தோபாதானமான காண்கின்ற சித்து நானே. இனி ஒரு விடை.

'கற்பிதம் என்று' என்பதற்கு சாக்கிரத்தில் சொப்பனத்தின் வாசனை தோன்றலா லிவ் வாசனை கற்பிதம் என்று பொருள் கொள்வது. "காண்ப வெல்லாம் சொப்பனம் போல வெண்ணித் துணிந்தவன் ஞானியாவான்" என்றதையே மீண்டுங் கூறியது உபபந்தி யாகலி னென்க. இக் கட்டளை யால் வர்த்தமானப் பிரதிபந்த முதலியவை தீரற் குரை கூறப் புக்கியது மென்க. தான் சாரியை. ஏகார மிரண்டுந் தேற்றம். (௧௭௨)

சித்துநா னிறைந்தோனென்ற திடமற வாதிருந்தா
லெத்தனை யெண்ணினு மேதுசெய்தாலு மென்ன
நித்திரை யுணர்ந்தபின்பு நிற்கின்றகன வைப்போல
வத்தனையும் பொய்தா னேயானந்த வடிவுநானே. (௨௯௧)

இதிற் பிரஞ்ஞான மானந்தம் பிரமம் என்ற வாக்கியார்த்தங் கூறு கின்றார்:—

(இ-ள்.) நிறைந்தோன் சித்து நான் என்ற திடம் மறவாது இருந்தால் = நிறைந்தோன் நான், சித்து நான் என்றனுபவிக்கப்பட்ட வையம் விபரீத நீங்கிய நிலை மறவாதிருக்கின், எத்தனை எண்ணினும் ஏது செய்தாலும் என்ன; மறவாது நிற்றலாவது, வருணாச்சிரம முடையோருக்கு நா னின்ன வருணத்தா னின்ன வாச்சிரமத்தா னென்பனவற்றை யெப்போதுங் கருதாவிடினு மவற்றிற்கு மாறுபட்ட வருணாச்சிரம மெதிருங்காற் றன் றன் ஸ்மிருதி யுண்டாவதுபோலப், பிரமானுபவ முடைய மனது திரிசியந் தோன்றுழி யச் சம்ஸ்காரத்தோடு நிற்ற லென்க. இங் ஙன நிற்புழி, பல வெண்ணமும் பல செயலும் பயன்படா வென்றவாறு. எண்ணினுஞ் செய்தாலு மென்ற வும்மையா லவ் விரண்டு மிவனுக் குண்டாகா வென்றவாறு.

எத்தனை யெண்ணல் = பாவ புண்ணிய மிசிரங்கள், ஏது செய்தாலு மவையே யென்க. பிராரத்த வசத்தா லிவை யுண்டாயின், நித்திரை உணர்ந்த பின்பு = கனவினின்றும் நன வுண்டாயவழி, நிற்கின்ற கனவை போல = கனவின் ஸம்ஸ்காரத்தின் ஸ்மிருதி மாத்திரமாய் நின்று இந் நனவிற்கு விரோத மின்றி நிற்பதுபோல, அத்தனையும் பொய் = அவ்

வெண்ண மாதிகள் பொய்யே; நானே ஆனந்த வடிவு என்றவாறு. நானென்றதை யிரண்டிற்கு மிடையய விடை—நிறீஇயினு ரென்க. இதனானே, 'பின்னு மானந்தவடிவு நானே' என்று ரென்க. இச் சிந்தனை மாணுக்கனுக்கு மொத்தலின் உளப்பாட்டுத்தன்மையின்பா லாயது என்க. தான் சாரியை. ஏகாரங்க டேற்றம். நித்திரை யுணர்ந்தபின் னிற்கின்ற கனவாவது, கூறிய பாவ மாதிகளே யன்றி யாகார நித்திரை மைதுனாதிகளு மீண்டுப் பயன்படாமை யென்க. இங்ஙனமே யவ் வெண்ண மாதிகளும் சித்திற்கு விஷம மாகலின், பந்த மோட்சங்களைத் தாரா வென்க. சித்தென்றது, பிரஞ்ஞானமும், ஆனந்த மென்றதுவும், நிறைந்தோனென்றது, பிரமமு மாகலின், 'பிரஞ்ஞான மானந்தம் பிரம்ம' மென்ற வாக்கியார்த்தங் கூறினாராயிற் றென்க. (௧௭௩)

நானென வுடலைத்தானே நம்பினே னனேகஜென்ம<br>
மீனராய்ப் பெரியோராகி யிருந்தவை யெலாமிப்போது<br>
கானலில் வெள்ளம்போலக் கண்டுசற் குருவினாலே<br>
நானென வென்னைத்தானே நம்பியீ டேறினேனே. (உ௯௨)

இதி 'லகம்பிரமாஸ்மி' யென்ற வாக்கியார்த்த விசாரத்தாலு மானந்த முண்டென்று கூறுகின்றார்:—

(இ-ள்.) நான் என உடலை தானே அனேக ஜென்மம் நம்பினேன்; இந் நம்புதலால், ஈனர் ஆய் பெரியோர் ஆகி இருந்தவை எலாம் = சாதி வருணம் ஆச்சிரமம் வயது வித்தை வலி யழகு தொழில் பொருள் சுற்றம் நாடுநகர் புகழ் முதலிய பிறவற்றிலுந் தாழ்ந்தவ னென்று முயர்ந்தவ னென்றுங் கருதி யதுவதுவா மயமாகி யிருந்ததவை யனைத்தும், இப்போது = விவேக முண்டான விஞ்ஞான்று, சற்குருவினாலே = எமதருளிறை திருவுருக்கொண் டெழுந்தருளி யுபதேசித்த வவ் வுபதேசத்தாலே, கானலில் வெள்ளம் போலக் கண்டு = நீர் நசையு மற்ற பாலை நிலத்திற் றோன்றுங் கானலின்கண் பிராந்தியினாற் றோன்று நீரினது பெருக்கைப்போல வான்மாவாகிய வென்னிடத்துப் பிராந்தியினாற் கற்பிக்கப்பட்டதென் றுணர்ந்து, அந் நம்பிக்கைகளை விட்டு, என்னைத்தானே யான் என நம்பி = அக் கற்பிதங்கட் கதிஷ்டானமாகியவெல்லாவ வென்னையே யானென்பதாக நிச்சயித்து, ஈடு ஏறினேன் = பிறவிக்கடலினின்றும் வீடாகிய கரை யேறினேன் என்றவாறு. ஏகார மான்கனு மீற்றசை; ஏனைய மூன்றுந் தேற்றம். தான் சாரியை.

'நானென்ற தகமென்றது, என்னை என்றது,' பிரமமென்றதைக் குறித்த சொல். 'நம்பினேன்' என்றது, 'அஸ்மி' என்றதைக் குறித்தது. ஆகலி னிவற்றைத் தொடர்பு படுத்துக் கூறுங்கால் 'அகம்பிரமாஸ்மி' என முடியு மென்க. உபக்கிரமத்திற் றுவக்குதலையே யுபசம்மாரத்திலு முப பத்தியிலு முடிக்க வேண்டுதலின், 'உன்னை நீ யறிவாயாக' வென்று துவக்கி மகா வாக்கியங் கூறி முடித்த வாறே, ஈண்டு 'மென்னை யானே நம்பி' என முடித்தன ரென்க. 'உனக்கொரு கேடில்லை' யென்றபடியே, ஈண்டும், 'ஈண்டு மீடேறினே' னென்றும் பலமுங் கூறினு ரென்க. ஆயின், 'உன்னை நீயறி' என்றது முன்னிலை யாகலின், ஈண்டு 'என்னை யானம்பி' என்றது தன்மையி லாகலி னிடவழுவாம்; பிறவெனின், அற் றன்று. உன்னை நீ யறி, என்றது ஆசிரியருந் தாமுணர்ந்த நிலை யாகலினு னும் ஈண்டு மாணுக்க னிவ்வாறே யறிய வேண்டு மாகலினு னு, மிருவருக்கு மொத்திருத்தலினுனும் வழுவன் றெனக் கொள்க வென்க. இவ்வா றீண்டு வாக்கியங் கூறியது, உபதேச வாக்கியஞ், சம்மதவாக்கிய, மப்பியாசவாக் கிய, மனுபூதிவாக்கிய மென்னும் வைப்புமுறைபற்றிக் கூறினு ரென்க.

இனி, இவ் வித்தியானந்த மிவ்வாறு கூருது, துக்காபாவ முதலிய நான்காகக் கூறல், மேல், 'என்னு மாவாக்கிய நான்கு மிசைக்கும் வித்தி யானந்தம்' என நூலாசிரியர் தொகைதந் தோதிய கருத்திற்கு முரணு தலி னது கருததன் றென்க　　(களச)

என்ன புண்ணிய மோசெய்தே னேதுபாக்கிய மோகாணே
னன்னிலந்தனி லெழுந்தநா ரணன்கிரு பையாலே
தன்னியனுனே னுனுத்தரீ யத்தை வீசுகின்றேன்
தன்னியனின் னுநானே தாண்டவ மாடுகின்றேன். (உஅங)

இப்பிரமவித்தையாற் றமக்குண்டாகிய துக்காபாவஞ் சுருவகாமா ப்தி கிருதகிருத்தியம் பிராந்திப்பிராப்பிய மென்றவற்றையும், புருடனு னவ னுன்மாவை யிவனே தானென் றறிந்தாற் பின்னை யாருக்குப் போக நிமித்தமா யெந்தப்போதத்தை வேண்டி சரீரதாபப்படுவா னென்கிற பி ரகதாரண்ணிய வர்த்தப்படி தாமடைந்த துக்கநிவர்த்தி யானந்தப்பே ற்றை, "மருந்தேயாயினும் விருந்தோடுண்ணு" "விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா, மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று" என்ற கரு ணைக்கட்டுரைப்படி நமமனேருக்குப் பயன்படும் பொருட்டு நூன்முகமா கக் காட்டிய தொடங்கி மாபுவழுவின்றிக் காப்புத்தொடங்கிப் பாயிரவு றுப்பும் அதிகாரியிலக்கணமும் அவன் கொள்ளு மிலக்கணமும் ஆசிரிய னிலக்கணமும் அவன் கூறுமிலக்கணமும் தோதத்துத் தெள்ளிதிற்

கூறியும், அத்தியாரோபந் தோடங்கி விதேகமுத்தி யளவாகத் தொகுத்துத் தத்துவவிளக்கத்தை யமைத்தும், இவற்றிலுளவாமை யங்களையும் வகையாய பிரமாணத்தாலும் யுத்தியாலுந் தருக்கத்தாலு மநுமானத்தாலுங் களைதலாகிய சந்தேகந் தெளிதலாலும், நூலை முற்றுவித்தலாலுண்டாகிய பேரானந்தத்தா லிவைகளை யுண்டாக்கிய காரணங்களையும், நூன்முடிவு காறும் புகழ்ந்தும் வியந்துங் கூறுபவ ரிதிற் சிலவற்றை யவ்வாற்றாற் கூறுகின்றார்:—

*இந் நியதியினா லுரை கொள்ளும் பாடங் கருத்து சொல்வகை சொற் பொரு டொகுத்துரை உதாரணம் வினா விடை விசேடம் விரி வதிகாரந் துணிவு பயனோ டாசிரியவசன மென்பவற்றுள் வேண்டுவனவற்றாலும் எழுவகை மதமுங்கொண் டுண்மை யுரைக்கப்பட்டது. இவற்றைக் கூறிப் போந்துழிக் காண்க. "நுண்மா ணுழைபுல னில்லா னெழினலம், மண் மாண் புனைபாவை யற்று."*

(இ—ள்,) என்ன புண்ணியமோ செய்தேன் *என்றது, இல்லறந் துறவற மென்ற விரண்டிலு மாற்றும் வருணங்களுக்குரிய வறவினை தவ வினைக ளளவிறந்தனவற்றுண் முற்றுமோ, பலவோ, சிலவோ வாற்றினே னென்பது.* இவற்றால் வரும் பாக்கியம் ஏது பாக்கியமோ, *என்னை எனின்? இப்பிரமானந்த பாக்கியத்தாற் றன்னிய னாதலின், இது* பதினா *ரானந்தத்தினு* மேலான பாக்கிய *மாகலி னென்க. இவ்வாறு பயனின்மேற் கூறுதலினும், 'ஆற்றொழுக்கமாய்' என்ன புண்ணியமோ செய்தே னேதுபாக்கியமோ காணேன் நன்னிலந்தனில், நாரணன் எழுந்தருளுதற்கும் அவன் என்னிடத்து கிருபைசெய்தற்கு மக்கிருபையால் நான் இப்பிரமானந்தத்தை யடைந்து தன்னியனாதற்கு மெனக் கூறினா மையு மென்க. இப்பேரானந்தச்செல்வம் பெற்றமையால் பெருமகிழ் வடைந்து, உத்தரீயத்தை மேலே யெறிந்து பிடிக்கின்றேன்; இன்னும்* நானே தன்னியன் ஆதலால் தாண்டவ மாடுகின்றேன் *என்றவாறு.*

*இப் புண்ணியமும் பாக்கியமும் வினையோர்க்குக் கூடாத நாரணன் கிருபைக்குப் பாத்திர மாக்கினமையா லவை யையட்பாட்டில் வந்தன வென்க. நன்னில மென்ற திவ்வாசிரியர் திருவவதாரஞ் செய்த 'மதுவன' மென்னு மூர் என்க. இவ்வூர்—நாரணர்க்கு பிறிதோடியையு நீக்கிய விசேடணமாய் நின்றது. மற்றைய வூரிலும் நாரணனென்னும் பெயருடையார் பிறந்திருப்பா ராகலி னென்க. மீண்டுந் தன்னிய னென்றது, இப் பூமாவே யனைத்தினு மேலான செல்வ மாகலி னென்க. இதனைச்* சாந்தோக்கியத்தில் நாரதசனத்குமார சம்வாதத்திற் *காகண்*

வென்க. 'உத்தரீயத்தை வீசுத' லிஃதோர் வெற்றியின்பாற் பட்ட வுல கவழக்கு. இவ்வாறு வாசிட்டந்தங் கூறினர். அது, "கோளாநின்று னிவ னென்ன வொருவன் கிட்டாமையினலே தோளாலு யாக்கை யெடுத்துத் தோன்ற நின்று சொல்லுகின்றோம்" என்ப தென்க.

உத்தரீயந், தோளென்னும் பொருள் வேறுபா டிருப்பினும் உயர வெடுத்த விரண்டிற்கு மொத்தலின் மாறுகோ ளன்றென்க. தாண்டவத் திற்கும் பொருளுங் காரணமு மேற் கூறுகின்றார். இப் பிரமவித்தையா லுண்டாகு மகிழ்வைப்பற்றி, வித்தியாரண்ணியநும் 'பஞ்சதசி, திருப்தி தீபாந்தத்திற் புகழ்ந்திருக்கின்றனர். இவை வருஞ் செய்யுட்களுக்கு மொக்கு மென்க. (கஎ௫)

தத்துவ ஞானம்வந்த சந்தோஷ வதிசயத்தால்
நித்தமா டுவன்கா ணென்றநிலை முன்னமேதெரிந்த
சத்தியம தனாலன்றோ தாண்டவா வென்றழைத்தா
ரத்தனை மகிமையுள்ளோ ரன்னையும்பிதா வுந்தானே(உஅ௪)

காரணத்தி லில்லது காரியத்திற் காட்டாதென்னுந் தருக்கத்தால், "தக்கார் தகவில ரென்ப தவரவ, ரெச்சத்தாற் காணப் படு" மென் றதை யீண்டு பெயரிட்ட காரணம் பற்றியே கூறிக்காட்டுகின்றார்:—

இவ்விருவரு முடற்கு மறிவிற்கு மோராற்றாற் காரணராயுங் குரவ ராயு மாகலி னென்க.

(இ—ள்.) தத்துவ ஞானம் வந்த சந்தோஷ அதிசயத்தால், நித் தம் ஆடுவன் காண் என்ற = நா னிப்படி யாடுவது மன்றி நா னிவ்வா றுடுவ னென்ற, நிலை முன்னமே தெரிந்த அதனாலன்றோ = இவ் வியலை பிறவிகாலத்தே தெரிந்து கொண்ட வுணர்ச்சிவலியா லல்லவா; தாண்டவா என்று அழைத்தார் = எனது நாமகரண காலத்து இச்சேய்க் கிப் பெய ரென்பதாக பலரு மறிய வழைக்கவைத்தார், அத்தனை மகிமையுள் ளோர் அன்னையும் பிதாவுமே. ஆகலி னிவ்விரு குரவரு மிவ்வறிவால் மகிமையுடையோ ரென்பது சத்தியம் என்றவாறு. தாரன் அசை.

காணென்றது, முன்னிலை யேவல் வினைமுற்று. இது சுற்றத் தாரையும் மிவ ரவைக்கண்ணுள்ளோரையு மறியும்படி யேவிநிற்றலி னென்க. நித்தமாடுதல், சதானந்த நிருத்தம். இதனை, சாந்தோக்கியத் திற் றகரவித்தை கூறு மிடத்துச் சூக்குமத்தையும், சிதம்பரத்திற் சிற்சபை க்கண்ணே தூலமிருத்தத்தாலு முணர்க. பாயிரத்துட் கூறு தெஞ்சி

நின்ற வாக்கியோன் பெயரை யீண்டுடம்பொடு புணர்த்திக் கூறினா ராயி ற்று. பாயிரம் பின்னுரவுங் கூறலா மென்பதை பிரயோகவிவேகத்துட் காண்க வென்க (௧௭௪)

வந்தவோ ரிவ்வானந்த மகிழ்ந்தாரோ டேசொல்வேன்
சிந்தையி லெழுந்துபொங்கிச் செகமெலா நிறைந்து தேங்கி
யந்தமில் லாததாயிற் றப்படி குரு வேதாந்த
மந்திர மருளுமீசன் மலரடி வணங்கினேனே. (௨௮௫)

இதில் குருவையும் வேதாந்தத்தையும் இவ்வடிவமான வீசனையும் வணங்கிப் புகழ்கின்றார்:—

(இ-ள்.) வந்த ஓர் இவ் வானந்தம் மகிழ்ந்து ஆரோடே சொல் வேன், என்னை ? எனின், அது மணியின தொளியும் மலரினது நாற்ற முஞ் சாந்தின் றட்பமும்போ லுண்ணின் றெழுவதோ ரின்பவெள்ள மாகலி னிறைவுற்ற வித்தை யொருவர்க் கிதெனத் தந்துகாட்ட லாகாமையி னென்க. ஆகலின், சிந்தையில் எழுந்து பொங்கி = என் சிந்தையுள் ளேயே யெழுந்து அதனளவாக வில்லாது அதிகரித்துப் பெருகிப் பரவி, செகம் எலாம் நிறைந்து, தேங்கி = கழியாது தேக்குற்று, அந்தம் இல் லாதது ஆயிற்று ; அங்ஙனந் தேக்குற்றதற்கோ ரளவுண்டோ வெனின் ? இன்று. யாதினா லெனின் ? முடிவிட மில்லாத தாயினமையி னென்க. அப்படி = அவ்வா றகண்டானந்தமாக, அருளும், குரு = நாராயணதேசிக ரதும், வேதாந்தம் = உபநிடதங்களையும், மந்திரம் அருளும் ஈசன் = இவ் வுபநிடதங்களைப் பிரதிபாதித்தருளிய வுலக நிமித்தகாரணனை வந் தரியாமியினதும், மலர் அடி வணங்கினேன் ; எதற்காக வெனின் ? தன்னை யளித்தோனுக்குத் தான் செய்யுங் கைம்மாறு கருதி யென்றவாறு.

இவ் வணக்கத்திற் றோத்திரமு மடங்கிற்று, 'ஆரோடே' என்றது, மனைவி மக்கள் சுற்றம் நட்பு ஆட்சி முதலியோரோடேயும் என்றபடி. மாணாக்கருக் கிலக்கணங் கூறிக் காட்டலினானும், ஆசிரியன் தான் அனு பவித்த வானந்த மாகலினானும் அவ்வியாத்தி யதிவியாத்தி யின் றென்க ஏகார மிரண்டனு முன்னது தசையும், பின்னது தேற்றமும் ஆம்.

தாயை யுணர்ந்த மகவுக்கு அத் தாய், தந்தையை—யுன்றந்தை யிவ னென்றும், அத் தந்தை யுன்னளவிற்கேற்ற வாசிரிய னிவனென்றும், அவ் வாசிரியன் றானுணர்ந்து தனக்குக் கைவந்த கடவுளை யவனளவிற்குக் காட்டலு முறைபற்றி, 'முன் றாய்தந்தையரை வணங்கி யீண்டு குரு தெய்

வத்தையும் வணங்கினு' ரென்க. குரு காட்டல் நூலன்றிக் கூடாமையின், நூல் இடைப்பிற வந்தது. இவ் விரண்டு செய்யுளு மொரு தொடர். இம் மரபை, "தந்தைதா யாவானுஞ் சார்கதி யிங்காவானு மந்தமிலாவின்ப நமக்காவானு மெந்த வுயிர்தா ளுகுவானுஞ் சரணுகுவானு மருட்கோ ளுகுவானுங் குரு" என்றதனு னறிக. அருளு மென்பதை வேதாசதத்திற்குங் கூட்டுக. மந்திரம் சுட்டுப் பொரு ளுணர்த்திற்று. வேதாந்தமாகிய மந்திர மெனக் கொள்ளினு மமையு மென்க. (சஎஎ)

வித்தையா னந்தமிந்த விதமென விளம்பினேமே
பத்தியா யிருந்துநூலைப் பார்த்தனு பவித்தபேர்க
ணித்திய தருமநிட்டை நிலைதனை யறிந்துசீவன்
முத்தியை யடைந்திருந்து முனிவர ராகுவாரே. (உஅசு)

இந்நூலா லுண்டாகும் பயனை முன் பாயிரத்துள், 'அடைந்தவர் பசியிலார்' எனக் குறிப்பாற் கூறினதன்றி யீதின்னதென்று சுட்டிக் கூறாமையி னதனை யிதிற் கூறுகின்றார்:—

இன்ன தன்மையருக் கென்பது மும்பொடு புணர்த்தி யென்க. இந்த வென்ற சுட்டு சிந்தையி லெழுந்து பொங்கிச் சகமெலா நிறைந்த தற் காகலி னிது பிராந்திப் பிராப்பிய மென்னும் ஞானத்தின் பலனுமா மென்க.

(இ-ள்.) வித்தையானந்தம் இந்தவிதமென விளம்பினேமே; ஆகலி னிவ் வித்தியானந்தங் கூறுவதுட னான் முடிவு பெற்றது. பெறினு மிந்நூ லெடைக்கே பயனென்னற்க. பின்னையோ? பத்தியாய் இருந்து = இந் நூலினிடத்தே பத்தியுடையவராக விருந்து, நூலைப் பார்த்து = இருந்ததுடன் ஆசிரியன் முன்னிலையி லிந்நூலை யாராய்ச்சி செய்யும் விதத்தாற் செய்து, அனுபவித்த பேர்கள் = இதிற் கூறும் பொருளை யனுபவித்த வதிகாரிகள், நித்திய தருமநிட்டை நிலைதனை அறிந்து = அவ் வனுபவத்தா லுண்டாகுந் தமக்குரிய நித்தியதரும மாகிய சகஜானுபவ நிட்டை யியல்பையு மறிந்து, சீவன் முத்தியை அடைந்திருந்து = அறிந்த தின் பலனை சீவன்முத்தியைப் பெற்றிருந்து, முனிவரர் ஆகுவார் = ஏனைய முனிவரர்க்குட் டலைமையுடைய ராவாரே யென்றவாறு. இதி லூ யமில்லை யென்றபடி.

முன்னின்ற வேகாரம் வினைவை யவாவி நிற்றலின் வினைப்போநட் டாயது. இதனால் வினை அவாய்நிலையான் வந்தது. ஈற்றேகாரந் தேற்றம். இத்தேற்றத்தால் இச் சீவன்முத்தருக்கு மேற்கதி விதேகமுத்தியே யாக

லின், தத்துவவிளக்கப் படலத்திற் கூறியவாறு அது வமைந்தே யிருத்த லின் அது கூறுராயினர். இதனுற் 'குன்றக்கூற' லென்னுங் குற்ற மின்றென்க. இங்ஙன மமைதலி னிந் நிலையுடையோருக்குப் பதமுத்தி யின்றென்ற வாறுமா மென்க. பத்தியாயிருந்து நூலைப் பார்க்காவிடின், 'பிரபுலிங்கலீலை' "துறவற மனையறஞ் சீர் தூய்மை நற்கல்வி ... .. ... யாதரவில்லை யாயிற் பெறுவன மெய்வருத்த" மென்றபடி பய னற்ற தாகு மென்க. இதனை சாதனங் கூறுமிடத்துங் காண்க. உபலக்ஷ ணத்தா லுரைக்கு மிப் பொருள் கொள்க.

இங்ஙன மன்றி, 'நித்தியதரும' மென்ற சொற்கு 'நித்தியகரும' மெனப்பொருள் கூறினது, ஞானநூ லாராய்ச்சிக்குப பொருளாகாமையி னஃ துரைப்போலி யென்க. 'நூலாராய்ச்சி நிட்டையே' 'சீவன்முத்தி' யாயினுஞ், சீவன்முத்தி வேறு கூறியது, உபசாந்தநிலையை யென்க. இதனை வாசிட்டத்துக் காண்க. இவ் வடிக்குப் பயனுக்குப் பயனுமா மெ ன்க. அன்றி சீவன்முத்தி முக்கிய பயனும், நிட்டை யவாந்திர பயனுமா மென்க 'அனுபவித்த பேர்கள்' என்றமையால், அனுபவியாது கேவ லம் சாஸ்திர வாராய்ச்சியால் வீண்வாதம் புரிவோருக் கச் சீவன்முத்தி வாரா வென்றவாறு. (கஎஅ)

ஆரணப் பொருளாம்வித் தியானந்தம் விளங்கவேதுங்
காரணங் குறைவில்லாமற் கைவல்லிய நவநீதத்தைப்
பூரணமாக் கவேண்டிப் புருவமா நன்னிலத்தி
னாரணகுருநமக் குநவின்றனர் யோகில் வந்தே. (உஅஎ)

இந்நூ லின்ன காரணத்தா லித் திறத்தான் முடித்தேனென் றிதில் கூறுகின்றார்:—

முன், 'அந்தமு நடுவுமின்றி யாதியுமின்றி வான்போற், சந்தத மொளிருஞான சற்குரு பாதம்போற்றி ..... .. ..........வஸ்துதத்துவஞ் சொல்லுவேனே' எனவும், 'கர்த்தனை வணங்கிச்சொல்லும் கைவல்யநவ நீதம்' எனவும் கூறியிருக்க வீண்டுக் கூறல், கூறியதுகூற லன்றோ? எனின், ஆண்டு தானே வணங்கிக் கூறினதாகக் கூறலினுனு மீண்டு ஆக்கி வித்தோன்றன்மையாற் கூறலின், அன் றென்க.

(இ-ள்.) ஆரணப்பொருள் ஆம் வித்தியானந்தம் விளங்க = வே தங்களி லுள்ள மஹா வாக்கியங்களாற் கூறிய இவ் வித்தியானந்தமானது விளக்கமுறும் பொருட்டு, ஏதும் காரணம் குறைவு இல்லாமல் = எத்

துணையுங் கருவிகளிற் குறைவுபடாமல், பூரணம் ஆக்க = நிறைவுபடுத்த, வேண்டி = நான் விரும்பாதிருக்கத் தானே யிச்சை கூர்ந்து, புருவம் ஆம் நன்னிலத்தில் = சுழுமுனையென்ற புருவநடுவாகிய நல்ல நிலத்தில் எழுந்தருளி, நாரணகுரு, நமக்கு யோகில் வந்து நவின்றனர் என்றவாறு.

அவரேவினமையா னிந்நூன் முடிந்ததன்றி, எம்மா லணுத்துணையு முடிந்திலதென்பது எஞ்சியது. காரணங்களாவன, செய்யுட்குரிய வைந்திலக்கணமும் பொருளிற்குரிய வறுவகை யிலிங்கங்களு மாம். இவற்றை முன்னர் (கஎ௫)வது செய்யுளின் கருத்துக் கூறுமிடத்துக் கூறியதனாற் காண்க. இந்நூன்முற்றும் ஆரணப் பொருளாகலானும், அவையனைத்தும் இவ் வாக்கியங்களு ளடங்கலாலும், இவ் வித்தியானந்த முடிதலே இந் நூன் முற்று முடிதலின், இது மயக்க மன்று. இவ்வாறே, (கஅஅ) வது, 'வேண்டிய கல்வியாண்டு மூன்றிறவாது' என்ற தொல்காப்பியப் பொருளதிகாரச் சூத்திரத்திற்கு, இது 'ஓதுதலுந் தூதும்' என்னுஞ் சூத்திரத்திற் கூறிய ஓதற்பிரிவிற்குக் காலம் வரையறை யின்றென்பதூஉ மவ்வோத்து இதுவென்பதூஉ முணர்த்துகின்றது. இதன் பொருள்— கல்வி வேண்டிய யாண்டு இறவாது = துறவறத்தினைக் கூறும் வேதாந்த முதலிய கல்வி வேண்டிய யாண்டைக் கடவாது; மூன்று இறவாது = அக்கல்வியெல்லா மூன்று பதத்தைக் கடவாது என்றவாறு மூன்று பதமாவன, அதுவென்றும், நீயென்றும் ஆனுயென்றும் கூறும் பதங்களாம்.' அவை பரமுஞ் சீவனும். 'அவ்விரண்டு மொன்றுதலு மாதலின், இம் மூன்று பதத்தின்கண்ணே தத்துவங்களைக் கடந்த பொருளை புணர்த்து மாகமங்களெல்லாம் விரியுமா றுணர்ந்துகொள்க' என்ற நச்சினார்க்கினிய நுரையாலு முணர்க. ஆகலின், இது 'முடிவிடங்கூறலென்னு முத்தி'.

இனி, " ஆரணம் பொருளாமித்தை யானந்தம் விளங்க" எனப் பாடங்கொண்டு, 'வேதாந்தப்பொருளாகு மிந்நூலை அதிகாரிகளுக்கு ஆத்மானந்தம் விளங்கும் பொருட்டு' எனப் பொருள் கூறின், செந்நோக்குடைய தாகலின் செம்பொருளாம். ஆரணம் ஆகுபெயர். யோகஞ்செய தற்கு முக்கியத்தானம் புருவநடு வாதலி னிவ்வா றுரைக்கப்பட்டது. 'பூர்வமாம் நன்னிலத்தில் கனவில் வந்து நவின்றனர்' எனப் பாடங்கொள்ளில் பொருட்பொருத்த மின்மையின் அது பாடமன்று. இச் செய்யுளை அவையடக்க மென்பாரு முளர். கைவல்லிய நவநீதம், சுட்டின்பொருட்டு, கைவல்லிய நவநீதத்தைப் பூரணமாக்க வேண்டி, 'யோகில் வந்து நாரண குரு நமக்கு நவின்றன' வென முடிக்க. ஈற்றேகாரம் தேற்றம். ஏனை யோரை நீக்கலின் பிரிநிலையு மாம். (கஎகூ)

*அண்ணாறன் னருளினாலே யகம்புற மின்றியொன்றா*
*யெண்ணமி லிலக்கியார்த்தத் தின்பொருளது நானென்ன*
*நண்ணின சரீரமாதி நாதத்தி னுபாதியென்றே*
*கண்ணதா யனைத்துங்காணக் காட்டினன் றாண்டவேசன்.(உஅஅ)*

ஆரணப்பொருளைக் கூறச் சொன்னதுமன்றி யாரணத்திற்கு மிது வே பொருளென்றுங் கூறினா ரென்றிதிற் கூறுகின்றார் :—

*இதற்கு மாறு கூறுவாரை மறுத்தலின் றற்புகழன்று. அன்றியு மாக்கியோன் பெயரை யிதில் வெளியாகக் கூறினது மாம்.*

(இ-ள்.) அண்ணல்தன் அருளினாலே = இன்னு மப் பெரியன்றன் கிருபையினாலே, அகம் புறம் இன்றி ஒன்றாய், எண்ணம் இல் = சித்த முஞ் செல்லாச் சேட்சியதாகிய, இலக்கியார்த்தத்தின் பொருள் அது நான் என்ன = *அங்ஙன மொன்றாதலி னவ் வொன்றே யிருபத விலக்கி யார்த்தத்தின் சொரூபமானது நானே யென்பதாகவும்,* நண்ணின சரீரமாதி நாதத்தின் உபாதி என்றே = *வாச்சியமான சீவேசுரருக்கு அமைந்த தனுகரணாதிகள் நாசதத்துவத்தின் விகார மென்பதாகவும்,* கண்ணதாய் = *கண்கூடாக, அல்லது ஞானவடிவமாக,* அனைத்தும் காண = *அவை யனைத்து மதிகாரி யறியும் பொருட்டு,* தாண்டவேசன் காட்டினன் *என்றவாறு.*

*அண்ணல், பெருமையிற் சிறந்தோன். எண்ண மில்லாமை, மனத்திற் ககோசரமா யிருத்தல். வாதாசமானாதி கரணத்தாற் பொருள்கொள்ளினுங் கூடஸ்தனும் பிரமமு மொன்றாயிருத்தலின், 'பொருளது' என் றொருமையாற் கூறினா ரென்க.* நானென்றது *மீபற்றி யென்க. நாதம், ஏகதேசத்தாற் றழுஉந்தொடைப்பெயர். காட்டினன்-என்றதின் 'அன்' விகுதியை தன்மையிற் கொண்டு 'யான் காட்டினன்' என்னினு மமையும். படர்க்கைவிகுதியா லுரை கூறியது, வடநூன் மரபுபற்றித் தன்னைப் பிறன் போற் கூறுவதோ ருலகவழக் கென்க. ஏகார மிரண்டுந் தேற்றம்.(கஅ0)*

*ஆன்றபதமா மூன்றற்கு மதுரீயா னாணு மெனும்பொருளிற், சான்ற துரியா தீதமெனுந் தடையற்றிலங்குமொண் சைதன்னிய, மூன்றியுணர்ந் தோர்விகற்ப மயக்கொழித்துத் தடையுமுடறுத்துத், தோன்றித்தா னேதானவர் துலங்குந்தமக்கே சுவானுபவம்.*
*(உஅகூ)*

இவ்வா றுடிக்கடி மஹாவாக்கியவிசாரஞ் செய்யினு மனனசகாய மாய் வெவ்வேறு பொருள்படலின் கூறியது கூறலன்று.

(இ-ள்.) ஆன்ற பதமாம் மூன்றற்கும் = அனைத்தான பொருளு மிவற்றிற் பரவலமைந்த தது-துவம்-அசி யென்ற மூன்று பதங்களும், அது நீ ஆனாய் எனும் (நிலையே கூறு மிப்பதங்களின்) பொருளில், சான்ற = ஒவ்வொரு பொருள்களுக்கும் சாட்சியாயுள்ள வீச்சுரசாட்சி, சீவ சாட்சி, பரசாட்சியாயுள்ள, துரிய அதீதம் = துரியங்கட் கதீதம், எனும் தடையற்று இலங்கும் ஒண் சைதன்னியம் = என்பதாகிய வனைததிலு நிறைந்த சுத்த சைதன்னியத்தை, ஊன்றி உணர்ந்தோர் = யுத்தி சாக்கங் களா லசம்பாவனாதிக ளில்லா துணர்ந்த முமூட்சுக்கள், விகற்பம் மயக்கு ஒழித்து = சீவேச பேதமாகிய மயக்கத்தை யொழித்து, தடையும் ஊட றுத்து = பூதப் பிரதிபந்தமாதிய தடைகளை, அல்லது லயம் விக்ஷேப முத லிய தடைகளைத் தொடர்பாடின்றி யறுத்து, தானே சுவானுபவமாய்த் தோன்றி = அச் சைதன்னியமாகிய தன்வடிவம் தானாக வுண்மை யனு பவமாய்த் தோன்றி, தானவர் அவர் = அவர் ஆன்மஞானி யாவர்.

எ-தா-கு சாரியை. ஏகாரமு மது. அன்றி, அவரே தானவ ரெனப் பொருள் கொள்ளின் ஏகாரந் தேற்றமு மாம். மூன்றற்குந் துரியம் அதீத மென்றமையா லிவ்வாறு பொருளுரைக்கப்பட்டது. இக் கருத்துணரா தார் வேறு பொருள் கூறுப. இவ்வாறு கூறல் சுவானுபவ மகிழ்ச்சியா லென்க. (கஅக)

என்னுமா வாக்கியநான்கு மிசைக்கும் வித்தியாநந்தஞ்
சொன்னநா ராயணன்பாதந் தொழுதுதுதித் தோர்துகளற்றோ
ரின்னமா ணாக்கன்குருவாற் சந்தேகந்தீர்ந் திடுபதத்தே
துன்னிநி றைந்துநின்றோர்க ளேமுத்த ராகுவரே. (உகூo)

இவ் வாக்கியங்களை முடித்துக்கூறி யிப்போது வந்தவாற்றை யவர்பெருமை கூறுமுகத்தாற் கூறி மேலு மிவ்வாறே யொழுகுவோர் பயனு மிதிற் கூறுகின்றார்:—

(இ-ள்.) என்னும் = யான் கூறிய விந்நெறியால், மா வாக்கிய நான் கும் வித்தியாநந்தத்தை இசைக்கும்; ஆகலின், சொன்ன = இவ்வுண் மையை யெமக் கருளிய, நாராயணன் பாதம் தொழுது துதித்தோர் துகள் அற்றோர் ஆவர்; ஈண்டு துகளறல் மலவிக்ஷேப நிவர்த்தி. இன் னம் = இத்தோடமையாது மேலும், மாணாக்கன் = இத் தன்மையான முமூட்சு, குருவால் சந்தேகம் தீர்ந்திடு பதத்தே துன்னி, சந்தேகந் தீர்தலாவது யான் சீவனோ பரனோ வென்பதையும்; இது நின்ற வாவர ணத்தா லுண்டாகலி னிதனைக் குருவால், தீர்ந்திடு பதமாவது, கேள்வி வியரிசனம் பாவனை யென வென்க. இவற்றை சுவானுபவம் வருமளவுஞ்

செய்க வென்பார், துன்னி யென்று ரென்க. இவற்றால், நிறைந்து நின்றோர்கள் = பரிபூரண சொரூப மானவர்கள், தூய முத்தர் ஆதவரே = பரிசுத்தமான சீவன்முத்தி விதேக முத்தி யுடையோ ராவ ரென்க.

மாணுக்க னென்ற ஒருமைவிகுதிப் பெயர்க்கு, முத்தர் ஆகுவ ரென்னும் பன்மைவிகுதிப்பெயர் அப் பயனிலை யமையாமையின சீவன்முத்தர் விதேகமுத்த ரென்று மென்க. ஆதவ ரென்றது முன்னு மியைந்தது. இந் நாராயணனைத் துதித்தோர் அந் நாராயணனே குருவாக வந்து கருத்தை முற்றுவிப்ப னென்பது போந்தபொருள். ஏகார மீற்றுசை. (கஅஉ)

தத்துவ விளக்கத்தாலுஞ் சந்தேகந் தெளிதலாலு
மொத்திருள்வி டாதமாயாவுள் ளிருளிரிய வோங்குஞ்
சித்ததா மொளிவிளங்கச் செய்துபின் விருத்திபேதப்
புத்தியான்வரு மையத்தைப் புரையறத் தெளிவித்தாண்டான்.
(உகூக)

ஆண்டதே சிகனுமைய னாரண னந்தன்பாதம்
பூண்டமூ வாரோபத்தாற் மொய்மயக் காய்வந்ததை
மாண்டநல் லபவாதத்தான் மாய்த்தரு ளேக்கத்தென்றுங்
காண்டிட வைத்தளித்த காரண போற்றிபோற்றி. (உகூஉ) (உ)

குலவுசற் குருவின்பாதக் குளிர்புனற் றலைமேற்கொண்டா
லுலகினிற் றீர்த்தமெல்லா முற்றபே றடைவபோல
நலமெய் யாகியகைவல் லியநவ நீதநூலைக்கற்றோர்
பலகலை ஞானநூலை படித்தஞா னிகளாய்வாழ்வர். (உகூங) (ங)

இம் மூன்று கவியு மிந் நூலாசிரியர் மாணுக்கன்பால வாதலின்றேது தொடர்:—

இவற்றின் பொருள் வெளி.

தாண்டவன் தோன்ற வெழுவாய். தாண்டவன் தத்துவ விளக்கத்தாலுஞ் சந்தேகந் தெளிதலாலும் பொய் மயக்காய் வந்ததை அபவாதத்தான் மாய்த்து உள்ளிருளிரிய வொளி விளங்கச் செய்து பின் பேதப்புத்தியால் வரு மையத்தை புரையறத் தெளிவித் தாண்டா னென முடியும் என்க. என்னை — என்ப தவாயிநிலை. (க)

அங்ஙன மாண்டதும், தன்னை யாண்ட தேசிகனுகிய நாராயணன் பாதம் பூண்டு; பூண்டு என்னுஞ் செய்து என்னும் வாய்ப்பாட்டு வினையெச்சம் பூண்ட வெனத் திரிந்தது. பூண்ட வக் காரணத்தா னவ னருளேக்கத்தால், காண்டிட இந் நூல் வெளிப்பட வைத்து அளித்த

காரணு என முடியுமென்க. இச் செய்யுளில் பரமாசிரியரையு முடன் வணங்கப்பட்டது. (உ)

கங்கை முதலிய வறுபத்தாறாயிரங்கோடி மகா தீர்த்தங்களும் வாமன னது பாததீர்த்தமும், சந்திர ஜடாதாரியின் ஜடாதீர்த்தமு மாகலிஞ லவ் விருவருமே யிவ் விருவருமா யவதரித்து வந்தவ ராகலி னிவ் விருவரது பாதோதகமே யப் பேறனைத்துந் தரு மென்றார். இதுபோல வவ் வாசி யரன் கூறிய வேதாந்த மாகலினுனும், அப்பொருளே யிவ் விருவருங் கூறிய பொரு ளாகலினுலும், நலமேயாகிய கைவல்லிய நவநீத நூலை கற்றோர், பல கலை ஞான நூல்கள் படித்த ஞானிகளாய் வாழ் வர் என்றாரென்க

நூலீற்றிலும் வாழ்த்துக்கூறு நியதிபற்றி 'வாழ்வா' ரென்றா ரென்க. நாராணன் பாதம் பூண்டு என்னைத் தெளிவித்தானிடான்; ஆகலின், ஆண்ட தேசிகனு மையன் மாயித்து அநுஞேக்கத் தென்றுங் காண்ட வைத்தளித்த காரணு போற்றி போற்றி எனக் கூட்டுக. 'ஞானிகளாய் வாழ்வர்' என்றது நூலையு முடம்பொடு புணர்த்தி வாழ்த்துத லாயிற் றென்க. என்னை? நூல் வாழ்ந்து வந்தா லன்றி நூலைப் படித்தலு மதனுல் வாழ்வடைதலுங் கூடு மாகலி னென்க. இஃதுலகவழக் கென் பதை: —

என்றும் புலரா தியாணர்நாட் செல்லுகினு
நின்றலர்ந்து தேன்பிலிற்று நீர்மையதாய்—குன்றாத
செந்தளிர்க் கற்பகத்தின் றெய்வத் திருமலர்போற்று
மன்புலவன் வள்ளுவன்வாய்ச் சொல்.

என்ற—இறைவன் கட்டுரையா லுணர்க.

இனி, இம் மூன்று செய்யுளையு நூலாசிரியர் கூற்றென்ப.(கஅரு) (கஅச) (கஅஙி)

சந்தேகந் தெளிதற்படலம்

முடிந்தது.

கைவல்லிய நவநீதச்

சிற்றுரை.

முற்றிற்று.

